# முன்னுரை



இது சமயம் இந்தச் சிறிய புத்தகரூபமாக வெளி வரும் இதிலுள்ள கட்டுரை முதன் முதலில் உர்தூ பாஷையில், வாக்களிக்கப்பட்ட மஸீஹும், மஹ்தியும், இஸ்லாத்தின் அஹ்மதிய்யா இயக்கத்தின் ஸ்தாபகருமாகிய காலஞ்சென்ற மிர்ஜா குலாம் அஹ்மத் காதியானீ அவர்களால் எழுதப்பட்டு, லாஹூரில் (பாஞ்சாலம்) 1896-டிஸம்பரில் கூட்டப்பெற்ற மதங்களின் மாபெரும் மகாநாட்டில் அவருடைய பக்தி விசுவாசம் நிரம்பிய சிஷ்யர்களுள் ஒருவராய் விளங்கிவந்த காலஞ்சென்ற மௌலவீ அப்துல்கரீம் அவர்களால் வாசித்துக் காண்பிக்கப்பட்டது. அஃது ஆங்கில மொழியில் முதலில் "ரெவியூ ஆப் ரெலிஜியன்ஸ்" என்னும் மாஸிகையில் 1902, 1903-ல் துண்டுதுண்டாக வந்துகொண் டிருந்தது. இந்தக் கட்டுரை முஸ்லிம்களின் கொள்கைகளின் பிரகாரம் அம்மகா நாட்டைக் கூட்டிவைத்தவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து விஷயங்களையும் பற்றி விவாதிக்கின்றது. அவ்வைந்து விஷயங்களும் (1) பௌதிக உலகத்திலும், சன்மார்க்க உலகத்திலும், பாரமார்த்திக உலகத்திலும் மனிதனுடைய நிலைமைகள் என்னென்ன? (2) மரணத்திற்குப் பின்னுள்ள வாழ்க்கையில் மனிதன் நிலைமை யாதாயிருக்கும்? (3) மனிதசிருஷ்டியின் உண்மையான நோக்கமும் அதனை அடையும் மார்க்கமும், (4) இவ்வுலக வாழ்க்கையிலும் வரப்போகின்ற அவ்வுலக வாழ்க்கையிலும் அனுஷ்டான பூர்வ சட்டங்களால் விளையும் பயன் யாது? (5) ஆண்டவனை அறியும் ஞானத்தின் மூலங்கள் யாவை? என்பனவாய்க் காணப்பட்டன.

இச்சிறு கிரந்தமானது முக்கியமாக மேல்நாடுகளில் இஸ்லாத்தின் போதனைகளைப் பரத்துதற்குரிய உதவியா

யிருக்கு மென்றே கருதப்படுகிறது. இஸ்லாத்தின் கொள்கைக ளனைத்தையும் சாகோப சாகையாக விரித்துக் கூறிவிட்டதாக இக்கட்டுரை உரிமை பாராட்டிக்கொள்ள வில்லை; ஆனால், இதில் எடுத்துக் கொள்ளப்பட் டிருக்கும் ஐந்து விஷயங்க ளின்—இவைகளே சந்தேகமில்லாது எந்தமதத்திலும் மகா முக்கியமான விஷயங்களாகக் கருதப்படுகின்றன—குறுகிய எல்லைகளுக்குள்ளேயே இதனை வாசிப்போர், முஸ்லிம்களுக் கும், முஸ்லிம்க ளல்லாதாருக்கும் இன்பத்தை யூட்டக்கூடிய அனேகவிதமான சத்தியமான, ஆழ்ந்த கருத்துள்ள, மூலா தாரமான, உத்வேகத்தை யூட்டக்கூடிய விஷயங்கள் பலவற் றைக் கண்டுகொள்வார். இஸ்லாத்தின் "கறையான பக்கத் தையே" பொதுஜனங்கள் படித்துணர்ந்து அதனையே அங்கீகரித்துக் கொள்ள வேண்டுமென்னும் கெட்ட எண்ணத் துடனே கிறிஸ்துவ ஆசிரியர்களுள் ஒருவகையினரால் இம் மார்க்கம் அடிக்கடி திரித்துக் கூறப்பட்டுத் தூஷிக்கப்பட்டு வந்ததன் பயனாகப் பொதுமக்கள் தாங்கள் அறிந்து நம்பிக் கொண்டிருக்கும் அந்த மூட நம்பிக்கையையே யல்லாது வேறெந்த நன்மையையும் இம்மார்க்கத்தில் காண மறுத்து விடாப் பிடிவாதமாக இருந்துவந்த போதினும், சமீபகாலமாக நிஷ்பக்ஷபாதமுள்ள அனேக ஆசிரியர்களின் பக்ஷபாதமற்ற உழைப்பின் பயனாக இஸ்லாத்தின் சரித்திரத்தின் மீதும் இதன் போதனைகளின்மீதும் வருஷிக்கப்பட்டுவரும் பிரகாசத் தின் முன்னே பொறாமை என்னும் கார்மேகமானது சிறிது சிறிதாக மறைந்துகொண்டே வருகின்றது. :குர்ஆன்ஷரீ'பி லிருந்தே முழுக்க முழுக்க எடுத்தாளப்பட் டிருக்கும் விஷ யங்களையே நிரப்பப்பெற்றுள்ள இந்தச் சிறிய புத்தகமானது இஸ்லாத்திற்கு விரோதமாக இருந்துகொண்டு வரும் அனேக விதமான தப்பபிப்பிராயங்களை நீக்குவதற்கு இன்னமொரு

படியாயிருக்குமென்றே நம்பிக்கை வைக்கப்படுகிறது.

இக்கிரந்தத்தை வெளிக்கொணர்ந்தது காதியானிலுள்ள சத்ர் அஞ்சுமனே அஹ்மதிய்யா சங்கத்தின் பிரசார வேலையின் ஒரு முயற்சியாகவே இருந்து வருகிறது; இச்சங்கம் இதற்கு முன்னம் "ரெவியூ ஆ'ப் ரெலிஜியன்ஸ்" என்னும் மதிப்பேறப் பெற்ற மாஸிகையின் வாயிலாக இஸ்லாத்தின் போதனைகளுக்குரிய உண்மையான ஞானத்தைப் பரத்துதற்குரிய பிரயோஜனகரமான ஊழியத்தைச் செய்து கொண்டுதான் வருகிறது; இச்சங்கம் இப்படிப்பட்ட இன்னம்பல நூல்களை வெளிப்படுத்த எண்ணி யிருப்பதுடன், அதிக நிரந்தரமானவும், அதிக அவசியமானவுமான இஸ்லாத்தின் சார்பான வேலைகளையும் எடுத்துக் கொள்ள எண்ணியிருக்கின்றது. அவற்றிற்குரிய இரண்டு வேலைகள்—அவை :குர்ஆன் ஷரீ'பின் மொழிபெயர்ப்பும் விரிவான வியாக்கியானமும், மூலாதாரங்களைக் கொண்டு வரையப்படும் நபிகள் நாயகத்தின் சரித்திரமொன்றும்—முன்னமே யெடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

இந்த ஆங்கில மொழிபெயர்ப்பை மறுமுறை திருப்பிப் பார்ப்பதில் எனக்கு விலையேறப்பெற்ற பெரிய உதவிகளைச் செய்து கொடுத்த மிஸ்டர் முஹம்மத் அலெக்ஜாந்தர் ரஸ்ஸல் வெப் (நியூஜெரிஸீ யூ. எஸ். ஏ.), மௌலவி ஷேர் அலீ, பீ.ஏ., (காதியான்), மிஸ்டர் குலாம் முஹம்மத் பீ. ஏ., (ஸியால் கோட்) ஆகியவர்களுக்கு என் நன்றியைச் செலுத்தாது இந்தச் சிறு முகவுரையை நான் முடித்துக் கொள்வது கூடாது; இவர்களுக்கு என்னுடைய மஹா மேலான வந்தனங்கள் உரியனவாகுக.

காதியான் (இந்தியா)
1910, மேமாதம்.

முஹம்மத் அலீ

# மொழி பெயர்த்தோன் முகவுரை



மூமினாகிய முஸ்லிமாகிய மெய்யன்பீர்! "இஸ்லாமிய ஞானபோதம்"—The Teachings of Islam என்னும் இச்சிறு கிரந்தம் பாஞ்சால மாகாணத்தில், குர்தாஸ்பூர் ஜில்லாவிலுள்ள காதியான் என்னும் ஊரிலே கி. பி. 1838-ஆம் ஆண்டில் பிறந்து 1908-ஆம் ஆண்டில் இறந்துபோன மிர்ஜா குலாம் அஹ்மத் என்பவரால் ஒரு கட்டுரையாகவே "மத சம்பந்தமான மாபெரும் மகாநாடு" என்னும் லாஹூர் மகா நாடொன்றில் கி. பி. 1896 டிஸம்பரில் வாசித்துக் காண்பிக்கப்படும் பொருட்டே எழுதப்பட்டது. பின்னர் 1910 மேமாதத்தில், மௌலானா மௌலவீ முஹம்மதலீ, எம்.ஏ., எல்எல்.பீ., என்பவரால் (:குர்ஆன் ஷரீ'பின் ஆங்கில மொழிபெயர்ப் பாசிரியர்) ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பட்ட ஒரு புத்தகமாக வெளியிடப்பட்டது. இவ்வாங்கில நூலே எம்மால் 1922 ஏப்ரில் மாதத்தில் தமிழில் மொழி பெயர்க்க எடுத்துக்கொள்ளப்பட்டு 1928 மார்ச் மாதம் 29-ந் தேதியோடு ஒருவாறு முடிவடைந்தது. ஆறு வருடகால மாகத் தமிழில் வரையப்பட்டு வந்த இந்நூல் "தாருல் இஸ்லாத்தின்" வாயிலாகச் சிறுகச் சிறுக வெளியிடப்பட்டு வந்து, இறுதியாக இது 1931 மார்ச் மாதம் 6-ந்தேதி வெள்ளியன்று மாலை 7-5-மணிக்கு அச்சுக்கு எடுத்துக்

கொள்ளப்பட்டது; இது 1933மார்ச் 24-ந்தேதிவெள்ளியோடு ஆண்டவனருளால் ஒருவாறு முடிவடைந்து இந்தக் கிரந்த ரூபமாக வெளிவந்திருக்கிறது. இதன் அருமையையும் பெருமையையும் தாங்கள் படிக்கப் படிக்கத் தெரிந்துகொள்வீர்கள்.

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தற்குக்
கற்றனைத் தூறு மறிவு"—குறள்.

காதியான் மிர்ஜா குலாம் அஹ்மதென்பார் ஆரம்பத்திலே இஸ்லாத்தின் சார்பான சில கிரந்தங்களை எழுதி வெளிப் படுத்தியக்கால் அன்னவரை எல்லாரும் புகழ்ந்து கொண்டாடினார்கள். ஆனால், அவர் பிறகு போகப் போகத் தம்மை மஸீஹென்றும், மஹ்தீயென்றும், முஜத்திதென்றும், முஹத்திதென்றும் கூறிக்கொள்ளத் தலைப்பட்டதன் பின்னர்ப் பல வைதிகர்கள் கிளம்பி அவரைப் பலவாறாகத் தூஷித்து, 'பத்வாக்களும் பல விடுத்தனர். 1908-ல் அவர் இறந்ததன்பின் சுமார் ஆறு ஆண்டுகள் மட்டும் மௌலானா மௌலவீ ஹக்கீம் நூருத்தீன் சாஹிபவர்கள் அந்த அஹ்மதிய்யா இயக்கத்திற்குத் தலைமை வகித்து வந்தார்கள். அவருக்குப்பின்னே அவ்வியக்கம், மிர்ஜா சாஹிபின் த'ஃ'வா சம்பந்தமான விஷயத்தில் அபிப்பிராய பேதப்பட்டு, காதியான் பார்ட்டி யென்றும், லாஹூர்ப் பார்ட்டி யென்றும் இருபெரும் பிரிவாகப் பிளவுபட்டுவிட்டது. காதியான் கக்ஷிக்கு மிர்ஜா சாஹிபின் மைந்தரான மிர்ஜா பஷீருத்தீன் அஹ்மதென்பார் தலைவராவர்; லாஹூர் கக்ஷிக்கு மௌலானா மௌலவீ முஹம்மதலீ, எம். ஏ., எல்எல். பீ., என்பார் தலைவர். இவ்விரு கக்ஷியினருள் முன்னவர்கள், மிர்ஜா குலாம் அஹ்மதை நபியென்றும், மஸீஹென்றும், மஹ்தீயென்றும்,

முஜத்திதென்றும், முஹத்திதென்றும் விவாதித்து வருகின்றனர்; ஆனால், பின்னவர்கள் தங்கள் தலைவரை, எந்த விதத்திலும் அன்னவர் நபியேயல்லவென்றும், ஆயின் மஸீஹென்றும், மஹ்தியென்றும், முஜத்திதென்றும், முஹத்திதென்றும் மட்டுமே கூறிவருகின்றனர். ஆனால், எம்மைப் பொறுத்தமட்டில் யாம் மிர்ஜா சாஹிபை நபியென்றோ, மஸீஹென்றோ, மஹ்தியென்றோ, முஜத்திதென்றோ, முஹத்திதென்றோ, அல்லது வேறு இன்னவர் அன்னவர் என்றோ ஏற்றுக்கொள்ளவுமில்லை; இவ்வாறெல்லாம் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டுமென்று யாம் வேறெவருக்கும் ஸி'பாரிஷ் செய்வதும் வழக்கமில்லை.

பொதுவாக நோக்குமிடத்து, அந்த லாஹூர் மகாநாட்டார் விடுத்திருந்த ஐந்து வினாக்களுக்கும் :குர்ஆன் ஷரீ'பின் ஆதாரத்தை மட்டுமேகொண்டு இத்துணை அழகாகவும் புத்திக்குப் பொருந்தியவாறாகவும் வேறெவரும் இதுகாறும் தக்கவிடைகளை எழுதியிருப்பதாக யாம் கண்டதேயில்லை. எனவேதான், இந்நூலாசிரியரது சொந்த த'ஃ'வா என்னவாயினும், இவரால் எமது வேத ஆதார பூர்வமாக வரையப்பட்டுள்ள—அவருடைய அ':கீத'ாக்களுக்கும் இந்நூலுக்கும் யாதொருவிதமான சம்பந்தமுமில்லாத—இப்புத்தகத்தை யாம் எமக்குரிய தமிழ்மொழியில் வெளியிடத் துணிந்து முன் வந்தனம். :குர்ஆன் ஷரீ'பின் ஆதாரத்தைக் கொண்டே இவ்வாறு மிக மிகப் பொருத்தமாக அந்த ஐந்து வினாக்களுக்கும் அழகிய விடை வேறெங்கும் அளிக்கப்பட்டிருப்பதைத் தாங்களும் கண்டுகொள்ளவே மாட்டீர்கள்.

مرد باید که گیرد اندر گوش • گر نوشته است پند بر دیوار

ஆகவே, குட்டிச்சுவராயினும் அதிலொரு நல்லவிஷயம் காணப்படின், அதனை அப்படியே ஏற்றுக்கொள்ளக் கடவாய்! என்னும் முதுமொழிக் கொப்ப, இந்நூலில் ஏதேனும் இஸ்லாத்தைப்பற்றிய சிலாக்கியமான நல்ல விஷயம் ஒன்று காணப்படல் கூடுமாயின், அதனை, 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னுமாறு ஏனையோரும் ஆனந்தத் துடனே அனுபவித்துப் பார்க்கட்டுமென்னும் நல்லெண்ணத் துடனேயே யாம் இப்புத்தகத்தை நந்தமிழி லாக்கி யிருக் கின்றேம்.

سخن کز بہر دین گوئی چہ عبرانی چہ سریانی
مکان از بہر حق جوئی چہ جابلقا چہ جابرسا

"சன்மார்க்கத்தி னிமித்தம் நீ பஜிக்கும் வார்த் தைகள் இப்ரானீ பாஷையா யிருந்தா லென்ன? ஸுர்யானீ பாஷையா யிருந்தாலென்ன? அல்லது நீ சத்திய சொரூபியை நாடுமிடம் ஜாபல்காவா யிருந்தா லென்ன? ஜாபர்ஸாவா யிருந்தா லென்ன?"—ஸனயீ.

இந்நூல் முதன்முதலாக ஆங்கிலத்தி லிருந்தே தமிழில் மொழிபெயர்க்கப் பட்டாலும், இப்பால் அச்சிடப்பட்டு வருங்கால் மிர்ஜாசாஹிபால் வரையப்பட்டுள்ள உர்தூ முத னூலுடன் முழுதும் ஒப்பிடப்பட்டே, எம்மால் கூடியவரை கிரந்தகர்த்தாவின் கருத்து முழுதும் ஒருவாறாக அப்படியே நான் இதில் வெளிப்படுத்தப் பட்டுள்ள தென்பதை எம் அன்பர்க ளனைவர்க்கும் அறிவித்துக் கொள்ளுகின்றேம். யா மொன்றும் வேண்டுமென்றே முதனூலிற் காணப்படும் ஆசிரியரது கருத்தை இச்சார்புநூலில் திரித்துக் கூறியிருக்க

வில்லை. எனவே, இந் நூலிலுள்ள அபிப்பிராயங்களுக்கெல்லாம் யாமொருபோதும் சொந்தக்காரராக மாட்டோம். மிர்ஜா சாஹிபின் சொந்த த’ஃ’வாவைக் குறித்து, நமக்கேனும் நுமக்கேனும் ஒரு சிறிதும் அவற்றினை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டுமென்னும் ஆவசியகம் இது சமயம் ஏற்படத் தேவையில்லை. ஆதலின், அவரவரது அனுபவத்திற் கேற்றவாறு இச்சிறு நூலின் கண்ணே இஸ்லாத்தின் பல்வேறு சிறப்புக்களையும், பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தா ஒருவன் இருக்கிறானென்று இதில் ருஜூப்பிக்கப் பட்டுள்ள மெய்யான விஷயத்தையும் உணர்ந்து கொள்ளக் கூடுமாயின், இதனைத் தமிழிலாக்கிய எமது சிரமத்திற்கு அஃதொன்றே போதுமான கைம்மாறாக இருக்குமென்றே எதிர் பார்க்கின்றோம். இந் நூலை முழுதும் உர்தூவுடன் ஒத்துநோக்கியதிலும், ஏனைக் ஃகுர்ஆன் திருவாக்கியங்களின் உண்மைக் கருத்தை ஓர்ந்து கொள்ளுமாறு செய்த உதவியிலும் யாம் தா. இ. கூட்டாசிரியர் சோதரர் ஆலீஜனுப், மௌலானா மௌலவீ, ‘ஹா‘பி‘ஜ் மு‘ஹம்மத்’யூஸூப் சா‘ஹிப்’ (‘பா‘ஜில்) ப‘ா:கவீ அவர்கள்பாலிருந்து பெற்றுக்கொண் டிருக்கும் பேருபகாரத்திற்கு யாம் என்றென்றும் பெரிதும் கடமைப்பட் டுள்ளோம். இதற்காக யாம் அன்னாருக்கு அனந்த வந்தனமும் அனவரதமும் அளித்துக்கொள்ளுகின்றோம்.

158-B, பிராட்வே,
சென்னை.

பா. தாவூத்ஷா
தா. இ. ஆசிரியர்.

# விஷய சூசிகை



# இஸ்லாமிய
# ஞானபோதம்

---

அருளாளனும் அன்புடையோனுமாகிய
அல்லாஹுத் தஆ'லாவின் திருநாமத்தைக்கொண்டு.
நாம் அல்லா(ஹ்) வைப் புகழ்ந்து அவனது
திருத்தூதர் மீதும் வாழ்த்துக் கூறுகின்றோம்.

## அவதாரிகை



அல்லாஹுத் தஆ'லாவினால் அமைக்கப் பட்டிருக்கும் இப் பூவுலகின்கண் காணப் பட்டுவரும் வெவ்வேறு மதத்தினர்களும் மேற்கூறிய வினாக்கள் சம்பந்தப்பட்டவரை தங்கள் தங்களுடைய மதக்கொள்கைகளின் சீரையும் சிறப்பையும் பற்றித் தத்தம்மா லியன்ற மட்டும் பகிரங்கமாகப் பிரசங்கம் புரியலாமென்னும் நன்னோக்குடனே கூட்டப்பட்டிருக்கும் இச்சிறப்பு வாய்ந்த மகா நாட்டில் இஸ்லா மார்க்கத்தின் நியாயவாதியாக இருந்துவரும் நான் என் மார்க்கத்தின் மேன்மைகளைப் பற்றிப் பிரசங்கம் செய்யப்

போகின்றேன். விவாதத்தில் சம்பந்தப்பட்ட முக்கியமான விஷயத்தை ஆரம்பிக்குமுன், உங்களுடைய அனுமதியை எதிர்பார்த்து, என்னுடைய எல்லா ஆதாரங்களும் நியாய வாதங்களும் எமது குர்ஆன் ஷரீபையே அடிப்படையாகக் கொண்டு, அதினின்றுமே எடுத்துக் காட்டப்படு மென்பதை நான் உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். தம்முடைய பரிசுத்தமான வேதமானது உண்மையில் ஆண்டவனாலேயே வெளிப்படுத்தப்பட் டிருக்கிற தென்று நம்பும் ஒவ்வொருவரும் தத்தம்முடைய மதத்தைப்பற்றி வாதம் புரியும்போது தமது வேதபுத்தகத்தை விட்டு வெளியில் போகக்கூடா தென்றும், அவ்வேதத்தால் ஸ்தாபிக்கப்படும் வாதங்களை விட்டு அவற்றிற்கப்பால் வேறு வகையான விவாதங்களில் பிரவேசிக்கக்கூடாதென்றும் அவரவரும் ஒருஞன்மையான நிபந்தனையை ஏற்படுத்திக்கொள்ள வேண்டியது முக்கிய முதற்கடமையா யிருக்கிற தென்பது என்னுடைய அபிப்பிராய மாகும். ஏனெனின், இப்படிப்பட்ட விதியை ஒருவர் அனுஷ்டிக்காமற் போய்விடும்பக்ஷத்தில், அவர் நிச்சயமாகவே தாம் பின்பற்றுவதாகச் சொல்லிக்கொள்ளும் வேதத்தைக் கைவிட்டு, வேறொரு புதிய வேதத்தைச் சிருஷ்டித்துப் பகிரங்கப் படுத்துவதாகவே முடியும். ஆதலின், குர்ஆன் ஷரீபின் பெருமையையெல்லாம் மேன்மைப்படுத்திக் காட்ட வேண்டியதும், மற்றெல்லா வேதங்களைக் காட்டிலும் இவ் வேதமானது மகாசிலாக்கியமா யிருப்பது எவ்வாறென்று நிரூபித்துக் காட்டவேண்டியதும் என்னுடைய முக்கிய நோக்கமா யிருப்பதனால், மேற்கூறிய விதியை நானே அனுஷ்டித்துக் காட்டி, என்னுடைய விவாதத்துக்கெல்லாம் அந்தக் குர்ஆன்

ஷரீபிலிருந்தே ஆதாரங்களைக் காட்டுவேன் ; அவ் வேதத்தில் மிக்க வெளிப்படையாகச் சொல்லப்பட் டிருப்பனவற்றை யேனும் அல்லது அவ்வேதத்தில் காணப்படும் வார்த்தைகளி லிருந்து நியாயமாகக் கிரஹிக்கக்கூடிய அனுமானங்களை யேனும் மட்டுமே நான் மேற்கொண்டு வருவேன். மற்ற நண்பர்களும் இப்படிப் பட்ட நியாயமான முறையையே தங்களுடைய விவாதத்தில் அனுஷ்டிப்பார்களென்று எதிர்பார்க்கப் படுகிறபடியால், இக்கூட்டத்தில் நடைபெறும் வாத பிரதி வாதங்களின் நியாயா நியாயங்களை ஆழ்ந்து கவனித்து வருபவர்கட்கு, ஒவ்வொருவரும் தம் தம் வேதமே தெய்வத்தால் வெளியிடப்பட்ட தென்று சொல்லி வரும்போது, எல்லாருடைய வேதங்களின் பெருமையையும் சீர்தூக்கிப் பார்த்து, எந்த வேதமானது உண்மையாகவே ஆண்டவனிடத்திலிருந்து உதயமாயிருக்கிற தென்பது செவ்வனே புலப்படக் கூடும். இக் காரணத்தால்தான் எங்களுடைய நபிபெருமானு ரவர்களுடைய சொந்தத் திருவாக்கியங்களையும் நான் என்னுடைய விவாதத்தில் மேற்கோளாக எடுத்துக்கொள்ளாமல் ஒவ்வொரு விஷயத்துக்கும் குர்ஆன் ஷரீபிலிருந்தே ஆதாரம் காட்டப் போகின்றேன். சுருங்கச் சொல்லுமிடத்து, இன்றுதான் குர்ஆன் ஷரீபின் மேன்மையும் மகிமையும் வெளியாகக் கூடிய தினமா யிருக்கிறது ; ஆதலின், இப்பெருங் காரியத்தில் எனக்குப் பேருதவி புரியுமாறு யான் மிகப் பணிவுடன் எல்லாம் வல்ல அல்லாஹு தஆ'லாவைச் சிந்தித்து வந்திக்கின்றேன். ஆமீன் !

இதன் ஆரம்பத்தில் சிலநான்முகமான விஷயங்கள் கூறப் பட்டிருக்கின்றன ; இவையெல்லாம் நாம் எடுத்துக் கொண்ட

விளுக்களுக்குச் சம்பந்த மில்லாதவைபோல மேல்நோக்காய்ப் பார்க்கும் சிலருக்குக் காணப்படலாம்; ஆனால், நாம் எடுத்துக் கொண்ட விஷயத்தை முழுதும்நன்றாக அறியவேண்டுமாயின், நான் இதன் கீழ்க் கூறுவதுபோல் சில விஷயங்கள் முகவுரை யாக எழுதப்பட வேண்டியது ஆவசியகமாக இருப்பதனால் தான் அவற்றை எல்லாம் ஆரம்பத்தில் எழுதியிருக்கிறேன்.



## மூவ்வகை நிலை



மனிதனுடைய உடம்பைப் பற்றியும், ஒழுக்கத்தைப் பற்றியும், ஆத்மாவைப் பற்றியும் முதற் கேள்வியானது பிரஸ்தாபம் செய்கின்றது. மனிதனுடைய இப்படிப்பட்ட மூவ்வகை நிலைகளைப் பற்றி எமது குர்ஆன் ஷரீபும் மூன்று விதமான வெவ்வேறு வகை மூலத்தைக் கூறிப் பாகுபாடு செய்திருக்கின்றது. எனவே, இம் மூவ்வகை நிலைகளுக்கும் மூன்று விதமான ஊற்றுக் கண்கள் உண்டென்று நாம் கண்டுத் தெரிந்து கொள்ளுகிறோம். இவற்றுள் சரீர சம்பந்தமான முதல் நிலையானது நப்ஸே அம்மாரா என்னும் ஊற்றிலிருந்து உற்பத்தியாகின்றது; இந்த நப்ஸானது ஆத்மாவின் அடங்காப் பிடாரித் தன்மையையும் துஷ்கிருத்தியத் தன்மையையும் சுட்டிக் காட்டுகின்றது. இது மனிதனைத் தீய வழியில் செலுத்தக்கூடியதா யிருந்துகொண்டு, நியாய விரோதமான ஒழுக்கக்கேடுள்ள பாதைகளி லெல்லாம் நடக்

கும்படியாக அவனைத் தூண்டுவது மல்லாமல், அவன் தன்னுடைய சன்மார்க்க நெறியில் மேன்மை யடைந்து பரிபூரண மடையாம லிருக்கும்படியும் தடை செய்துகொண்டிருக்கிறது என்று எமது குர்ஆன் ஷரீப் வேதமானது (12: 53) إن النفس لأمارة بالسوء விளக்கிக் காட்டியிருக்கின்றது. சுருங்கச் சொல்லுமிடத்து, மனிதனுடைய தன்மையானது, தான் விருத்தியடைந்து வரும்போது சில சந்தர்ப்பங்களில் தீமையைச் செய்வதற்கும் நன்மையின் எல்லையைக் கடப்பதற்கும் நாட்டத்தைப் பெற முயல்வது சகஜமா யிருக்கிறது; மனிதன் உத்தமமான ஒழுக்கத்தைக் கடைப்பிடியானாயின், நஃப்ஸெ அம்மாராவின் தீய குணமானது மேலோங்கியே நின்றுகொண் டிருக்கும். அவன் உண்மையான ஞானப் பேரொளியின் பிரகாசம் நிறைந்த நல் வழியில் நடவாமல், கீழ்த்தரமான பிராணிகளைப்போல் இயற்கைக் குணங்களாகிய உண்ணல் குடித்தல் உறங்கல் உக்கிர ஆவேசங்கொள்ளல் ஆதிய காரியங்களைச் செய்துகொண் டிருக்கும்வரை அவன் நஃப்ஸெ அம்மாராவின் வசத்திலேயே கட்டுப்பட்டவனா யிருக்கிறான்.

ஆயினும், மிருகப்பிராயமான இப்படிப்பட்ட ஆத்திரங்களினின்றும் மனிதன் தன்னை விடுவித்துக்கொண்டு ஞானத்தையும் நல்லறிவையும் தனக்குரிய உயிர்த் துணையாகக் கொண்டு, தன்னுடைய சாமான்யமான விருப்பங்களின் வழியே தான் சென்று விடாது அவற்றைத் தனக்குக் கீழாகச் செய்துகொள்வா னாயின், அஃதாவது, அவனுடைய மனோ நிலைமையில் துர்க்குணம் போய்ச் சற்குணம் நிறைந்து, அவனுடைய தன்மையில் ஒருவகை மாறுபாடு உண்டாய்

விடுமாயின், அவன் தன்னுடைய சரீர சம்பந்தமான நஃப்ஸெ அம்மாராவின் எல்லையைத் தாண்டி நல்லொழுக்கத்துக் குரிய சரியான பிராந்தியத்தில் வந்து சேருகிறான். சரீர சம்பந்தமான நஃப்ஸெ அம்மாராவின் நிலைமையைத் தாண்டிச் சத்தொழுக்கத்துக்குரிய இரண்டாவது படியில் வந்து சேரும்போது, அந்த நிலைமைக்கு நஃப்ஸே லவ்வாமா அல்லது தன்னையேதான் குற்றங்காணும் மனோ நிலைமை (மனச் சாட்சி) என்று குர்ஆன்ஷரீபில் பெயர் சொல்லப்பட் டிருக்கிறது. அல்:கியாமா என்னும் ஸூராவில் பின்வருமாறு வரையப்பட் டிருக்கிறது:—"மேலும் (ஒவ்வொரு கடமையின் முறிச்சலின் போதும், சரிவரக் கீழ்ப்படிந்து நடவாதபோதும் தான் குற்றம் செய்துவிட்டதை யுணர்ந்து) தன்னையே தான் குற்றங் கூறிக்கொள்ளும் ஆத்மாவின் மீது நான் சத்தியம் செய்கின்றேன்."—(75:2) ولاأقسم بالنفس اللوامة ஆண்டவனுடைய ஏவலை மீறி ஒரு சிறிதும் நடப்போமாயின், உடனே நம்முடைய ஆத்மாவானது தனக்குத் தானே வேதனை யடைகின்றது. இந்த நஃப்ஸி லிருந்துதான் நம்முடைய நல்லொழுக்கத்தின் நிர்மானமான குணங்களெல்லாம் வெளிப்படுகின்றன; இந்தப் படித்தரத்தை அடைந்த மனிதன் தன்னுடைய மிருக குணங்களி னின்றும் மீட்சி பெற்றவனாயிருக்கிறான். இப்படிப்பட்ட ஆத்மாவின் மீது ஆணையிடுவதை நோக்கும்போதே, அஃது எத்துணைக் கௌரவமாகக் கொண்டாடப்பட்டு வருகிறதென்னும் விஷயம் விளக்கமாகின்றது. ஏனெனின், முழுதும் கீழ்ப்படியாத முதற்படியிலிருந்து தான் செய்த குற்றத்தை யுணர்ந்து ஒருவாறு வருந்தக்கூடிய இரண்டாவது படிக்கு வருவதானது பரிசுத்தத்தையும் பரி

பக்குவத்தையும் காட்டக்கூடியதா யிருப்பதனால், அந்த நிலை மையை ஆண்டவன் கண்ணியத்துடனேதான் கருதுகிறான். "லவ்வாமா" என்பது கடுமையாகக் கண்டிக்கக் கூடிய ஒன் றைக் குறிக்கும்; ஆகலின், "நப்ஸெ லவ்வாமா" என்னும் சொற்றொடர் தன் குற்றத்தைத் தானே உணரக்கூடிய நிலைமை யைக் காட்டுகின்றது. இந்த மனோ நிலையானது ஒருமனிதன் தீமையைச் செய்வானாயின், அவனைக் கண்டித்து, மிருகப் பிராயமான கடிவாளமற்ற தீய குணங்களை யெல்லாம் வெறுப் புடன் ஒதுக்கித் தள்ளுவதால், இந்த நிலைமைக்கு நப்ஸெ லவ்வாமா என்று பெயர் வைக்கப்பட்டிருக்கிறது. இந்த நிலைமையின் தன்மையானது தீமையை வெறுப்பதுடன் தூய்மையை விரும்பும்படியாகவும் செய்கின்றது; ஒவ்வொரு மனிதனையும் சற்குணம் நிறைந்தவனாகச் செய்து, அவ னுடைய பழக்க வழக்கங்களை யெல்லாம் ஸமரஸப்படுத்தி, அவனைச் சாந்த குணசீலனாக ஆக்கிவிடுகின்றது. அவனிடத் திலுள்ள இயற்கைக் குணங்களை யெல்லாம் மிருகங்களைப் போல் மிதமிஞ்சிப்போக விடாமல் அவற்றை யெல்லாம் ஓரளவுக்குள் கட்டுப்படுத்தி வைக்கின்றது. பஞ்சேந்திரியங்க ளெல்லாம் தாம் நினைத்த வழியில் சென்று விடாமலிருக் கும்படி அவற்றை யெல்லாம் கடிவாளம்போட்டு ஒரு நியாய மான வரம்புக்குள் வைத்திருப்பது இந்த நப்ஸெ லவ்வாமா தான். நான் மேலே சொன்னதுபோல இந்த இரண்டாவது நிலைமையானது தான் செய்துவிடும் ஒவ்வொரு தவற்றுக் காகவும் தன்னையே தான் குற்றங் கற்பித்துக் கொண்டபோதி லும், அங்கிருந் துண்டாகும் எல்லாக் குணங்களுக்கும் அஃது எஜமானு யில்லை; தன்னுடைய குணங்களை யெல்லாம்

தானே அடக்கிக்கொள்ள முடியாமற் போவதோடு, இந்த இரண்டாவது நிலைமையானது நன்மையையே எப்பொழுதும் செய்துவிடக்கூடிய சக்தியையுங்கூடப் பெறுமலிருக்கிறது. மனிதனிடத்தி லிருக்கும் மிருகத்தன்மையின் மூர்த்தன்யத்தால் ந'ப்ஸெ லவ்வாமாவானது சில வேளைகளில் தடுமாறிக் கீழே வீழ்ந்து விடுகின்றது. இந்த நிலைமையின் தன்மையை நடை பழகக் கற்றுக்கொள்ளும் ஒரு சிறு குழந்தைக்கு உவமையாகச் சொல்லலாம். அக் குழந்தையானது கீழே வீழாமல் நடக்க விரும்பிய போதினும், அதன் பலஹீனமான கால்களின் தளர்ச்சியால் அக்குழந்தை சில வேளைகளில் தடுமாறிக் கீழே வீழ்ந்து விடுவது முண்டு. ஆனல், ஒவ்வொரு முறையும் பிழை யுண்டாகும்போது அந்த மனமானது தன்னையே தான் கண்டித்துக் கொள்வதால், மீண்டும் மீண்டும் நன்மையையே கடைப்பிடிப்பதில் அது மேன்மேலும் முயன்று வருகின்றது. சுருங்கச் சொல்லுமிடத்து, இந்த இரண்டாவது நிலைமையில் நம்முடைய ஆன்மாவானது சன்மார்க்க சற்குணங்களையெல்லாம் பெறுவதற்குப் பெரிதும் பாடுபட்டுக்கொண்டு ந'ப்ஸெ அம்மாராவின் தீக்குணமாகிய கீழ்ப்படியாமை யென்னும் துர்க்குணத்தைப் போக்கி, நம்மை மிருகத் தன்மையிலிருந்து மனிதத்தன்மைக்குக் கொண்டுவருகின்றது; ஆனல், நற்குணத்தையே மிக நல்ல பொற்குணமாக விரும்பிச் செய்யும் இந்த நப்ஸானது சில சமயங்களில் தன் ஆற்றுமையின் காரணத்தால் தன்னுடைய நெறியினின்றும் தவறிவிடுவது முண்டு.

ஆத்மாவின் மேல் நோக்கான வளர்ச்சியின் இறுதி நிலையாகிய மூன்றுவது நிலைமையை அடையும் போதுதான்

பாரமார்த்திக சம்பந்தமான ஞான விகாசங்களெல்லாம் வெளியாகின்றன. எமது குர்ஆன் ஷரீபில் இந்த மூன்றுவது படித்தரத்துக்கு நஃப்ஸே முத்மஇன்ஞ என்று பயர் சொல்லப்பட்டிருக்கிறது; இதன் பொருள் சாந்தியடைந்து கொண்டிருக்கும் ஆன்மா என்பதாகும்: "ஏ சாந்தியடைந்துகொண்டிருக்கும் ஆத்மாவே! உன்னுடைய ரக்ஷகனிடத்தில் முழுத் திருப்தியையும் அடைந்துகொண்டு, நீ அவனிடத்தில் திருப்தியடைந்தும் அவன் உன்னிடத்தில் திருப்தியடைந்தும் இருக்கும்பொருட்டு உன் ரக்ஷகன்பால் திரும்புவாயாக; ஆதலின், என்னுடைய அடியார்களுடன் கலந்து என்னுடைய சுவர்க்கத்துக்குள் புகுவாயாக!"—(குர்ஆன், 89: 27—30).
يايتها النفس المطمئنة ارجعى الى ربك راضية مرضية فادخلى
فى عبادى وادخلى جنتى
இந்த நிலைமையில் ஆத்மாவானது எல்லாவிதமான குற்றங் குறைகளினின்றும் நீங்கிப் பரிசுத்தமடைகின்றது; அப்பொழுதுதான் ஞான சம்பந்தமான நல்லுணர்ச்சிக ளெல்லாம் உதய மாகின்றன. அப்பொழுது இந்த ஆன்மா ஆண்டவனுடன் பரிபூரணமாகக் கலந்து, அவனன்றி ஒரு விநாடியும் தனித்திருக்க மனங் கொள்ள மாட்டாது. நீர்த் தாரையானது ஒரு செங்குத்தான இடத்திலிருந்து கிழே வீழும்போது தன்னுடைய பலத்தினாலும், வழியில் யாதொரு தட்டுத் தடங்கலும் இல்லாத காரணத்தாலும் தடுக்க முடியாத வேகத்துடனே அதிவிரைவாகப் பாய்வதேபோல இந்த "முத்மஇன்ஞ" நிலையையடைந்த ஆத்மாவானது எல்லாவிதமான இடையூறுகளையும் களைந்துவிட்டுத் தன்னுடைய நாயனிடம் அதிகவேகமாக ஓட ஆரம்பிக்கின்றது. மேற்கூறிய ஆயத்தானது இவ்விஷயத்தைத்

தான் குறிப்பிடுகின்றது. மேலும், "தன்னுடைய ரக்ஷக னிடத்தில் முழுத் திருப்தியையும் அடைந்துகொண்டு அவனை நோக்கித் திரும்பும் ஆத்மா" என்று சொன்னதனுல் பர லோக வாழ்க்கைக்கு முன்னர் இந்த இகலோக வாழ்வி லேயே இப்படிப்பட்ட ஆத்ம பரிபக்குவமானது நமக்குக் கிடைக்கக் கூடுமென்பதை நன்குணர்ந்து கொள்ளு கிறோம்; மறுவுலகுக்குப் போகுமுன்னரே இவ் வுலகிலேயே சுவர்க்கானந்த இன்பத்தை நாம் கிட்டிவிடுதல் முடியுமென் பதையும் தெரிந்து கொள்ளுகிறோம். மேலும் நம்முடைய ஆத்மாவானது தன்னுடைய ரக்ஷகனிடத்தில் (அரபு பாஷையில் ரப்' என்று சொல்வர்) திரும்ப வேண்டு மென்று கட்டளையிடப்பட் டிருப்பதால், இந்த ஆத்மாவானது அந்த ரக்ஷகனிடத்திலேயே ரக்ஷிப்பைத் தேடக்கூடு மென்பது விளக்கமாகப் புலப்படாநின்றது. இப்படிப்பட்ட ஆத்மாவுக்கு ஆண்டவனிடத்தில் வைக்கும் விசுவாசம்தான் அதன் ஆகார மாயிருக்கும்; அந்த நாயனுடைய ஞாபகத்தை எப்பொழு தும் நுகர்ந்துகொண் டிருப்பதே அதன் தாகத்தைச் சாந்தி செய்யும். ஆதலின், அஃதொருபோதும் மரணமடைவதில்லை. இதே விதமான கருத்துத்தான் குர்ஆன் ஷரீபின் மற்றோரிடத் திலும் பின்வருமாறு விளக்கப்பட்டிருக்கிறது: "பஞ்சேந் திரிய சம்பந்தமான இவ்வுலக இன்ப நுகர்ச்சியை யெல்லாம் ஒழித்துத் தன் ஆத்மாவைப் பரிசுத்தம் செய்துகொண்டவன் காப்பாற்றப் படுகிறான்; அவன் ஒரு போதும் அழிக்கப்பட மாட்டான்; ஆனுல், இவ்வுலக சம்பந்தமான இச்சைகளில் அளவில்லாமல் ஆழ்ந்து விடுவானுயின், அவன் தன் வாழ்க்கை குறித்து நிச்சயமாகக் கைசேதப்படும்படிதா னிருக்கும்."—

(குர்ஆன், 91:10). قدأفلح من زكاها وقدخاب من دسها

சுருக்கச் சொல்லுமிடத்து, மேற்கூறிய ஆத்மாவின் மூவ்வகை நிலையானது சரீர சம்பந்தமாகவும், சன்மார்க்க சம்பந்தமாகவும், ஆத்ம ஞான சம்பந்தமாகவும் இருந்து கொண்டிருக்கிறது. இம்மூன்றுவித நிலைகளுள் முதற்படியில்தான் மனிதன் தன்னுடைய ஐம்புல ஆசைகளையும் அடைய விரும்புகிறான்; அப்பொழுது அவன் தன்னுடைய இச்சைகளைக் கடிவாளமற்ற மிருகம்போல விட்டுவிடுவானாயின், அவனுடைய தன்மையானது அதிக அபாயகரமான நிலைமைக்கு வந்து சேருகின்றது; ஏனெனின், அப்பொழுதுதான் இரண்டாவது மூன்றாவது நிலைமைகளுக்குரிய சன்மார்க்க ஒழுக்கமும் ஆத்மஞான விசேஷமும் அடியோடு அழிந்துபோகின்றன. இக் காரணத்தால்தான் இந்த முதற்படியானது கீழ்ப்படிதலில்லாத முரட்டுத்தனமுள்ள ஆன்ம நிலையென்று பொருள்படும் படியாக "ந‘ப்ஸெ அம்மாரா" என்று இதற்கு ஆண்டவன் தன் திருவேதத்தில் பெயர் வைத்திருக்கிறான்.



## அம்மூவகை நிலைகளுள் ஒன்றுக்கொன்றுள்ள சம்பந்தம்





நாம் கவனிக்க வேண்டிய அடுத்த விஷயமாவது: மனிதனுடைய சரீர சம்பந்தமான செய்கைகளைப் பற்றிக் குர்ஆன் ஷரீபானது என்ன சொல்லியிருக்கிறது? என்பதுதான். அவனுடைய சரீர சம்பந்தமான கிரியைகளை அந்தக் குர்ஆன் ஷரீப் வேதமானது எவ்வாறு அடக்கி யாண்டு வருகிறது? மனிதனுக்கு இயற்கையாகவே உண்டாகக் கூடிய இச்சைகளை அடக்கியாளும் விஷயத்தில் அத் திருவேதமானது என்ன முறைகளை அனுஷ்டிக்கச் சொல்லியிருக்கிறது? இதைப்பற்றி நாம் தீர ஆராய்ச்சி செய்யப் புகுமுன் முஸ்லிம்களின் வேத முறைப்படி மனிதர்களுடைய சரீர சம்பந்தமான கிரியைகளெல்லாம் அவர்களுடைய ஆசாரத்துடனும் ஆத்மஞானத்துடனும் அதிகமாகச் சம்பந்தப்பட் டிருக்கின்றன வென்று நாம் பொதுவாகச் சொல்லிவிடலாம். சரீர சம்பந்தமான காரியங்கள் ஒழுக்கத்துடனும் ஆத்மாவுடனும் நெருக்கமாகச் சம்பந்தப்பட்டிருப்பதால், நம்முடைய நித்தியப் பழக்கங்களாகிய ஆகாரம் அருந்துதல் தண்ணீர் குடித்தல் முதலிய சாதாரணமான செய்கைகளுங்கூட நம்முடைய ஆசாரத்துடனும் ஆத்மஞானத்துடனும் அதிகமாகப் பௌவியப் பட்டிருக்கின்றனவென்றே கூறலாம். ஆதலின், நம்முடைய இயற்கையான இச்சைகளை இஸ்லாத்தின் சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கும்படி அடக்கி வைப்போமாயின், அவையே

நல்லவிதமான நாகரிக ஒழுக்கங்களாக மாறி, நம்முடைய ஆத்மஞான சம்பந்தமான குணாதிசயங்களையும் அதிகமாகப் பண்படுத்துகின்றன. இக் காரணத்தால்தான் எல்லாவிதமான தொழுகைகளிலும் வணக்கங்களிலும், இன்னம் ஆத்மார்த்த சம்பந்தமான எல்லாக் கிரியைகளிலும், ஒழுக்க சம்பந்தமான எல்லாப் பழக்க வழக்கங்களிலும் நம்முடைய தேகத்தின் புற உறுப்புக்களும் மகா பரிசுத்தமா யிருக்க வேண்டுமென்றும், மனத்தின் ஒவ்வொருவிதமான வணக்கத்துக்கும் தக்கவிதமாக அந்தப் புற உறுப்புக்களும் இன்ன இன்ன விதமாகத்தான் இருக்கவேண்டு மென்றும் கடுமையான சட்ட திட்டங்கள் அமைக்கப்பட் டிருக்கின்றன. மனிதனுடைய புற உறுப்புக்களில் காணப்படும் செய்கைகளுக்குத் தக்கவாறு அவனுடைய அக உறுப்புக்களில் எப்படிப்பட்ட மாறுதல்கள் காணப்படுகின்றன வென்பதை நீங்கள் நன்கு நோக்குவீர்களேல், அவனுடைய சரீரசம்பந்தமான செய்கைகளுக்கும் ஆத்ம சம்பந்தமான தன்மைகளுக்கும் எத்துணை நெருங்கிய ஒற்றுமை உண்டென்பதைச் செவ்வனே தெரிந்து கொள்ளுவீர்கள். உதாஹரணமாக, அழுகை என்பதைக் கவனிப்போம். உண்மையான துக்கமில்லாமல் நடிப்புக்காக அழுதபோதினும்,மனத்துக்குள் ஒருவகை வருத்தம் காணப்படுகின்றது. இவ்வாறே சிரிக்கும்போதும், அது நடிப்புச் சிரிப்பா யிருந்தபோதினும், மனத்துக்குள் ஒருவகை ஆனந்த முண்டாகிறது. முஸ்லிம்கள் தங்கள் தொழுகையில் ஸஜ்தா செய்வதுபோல் அஷ்டாங்கமும் தரையில் படும்படி குனிந்து வணங்கும்போது, நம்முடைய ஆன்மாவானது மிகத் தாழ்மையான பணிவை அடைந்து, தன்னைப்

படைத்த இறைவனைச் சிந்தித்து வந்திக்கின்றது; ஆனால், நிமிர்ந்த தலையுடன் வணங்காமுடி மன்னன்போல ஒருவன் நடப்பானாயின், அஃது அவனுடைய மனத்தின்கண் அகங்கார மமகாரமென்னும் வீண் மமதையை உண்டு பண்ணுகின்றது. மனிதனுடைய புறச் செய்கைகளின் மாறுபாட்டால் அகச் செய்கையும் எவ்வாறு மாறுபடுகிறதென்பதை எண்பிப்பதற்கு மேற்கூறிய உதாஹரணங்களே போதுமானவையாயிருக்கின்றன. சில சமயங்களில் நாம் செய்யத்தகாத போஜனத்தையாவது அல்லது அளவுக்கு மீறிய ஆகாரத்தையாவது செய்து விடுவோமாயின், அதனால் நம்முடைய மனோ சக்தியும் மூளையும் எவ்வாறு கடுமையாகப் பாதிக்கப்படுகின்றனவென்பதை நம்முடைய சொந்த அனுபவத்தில் கண்கூடாகக் காண்கின்றோம். உதாஹரணமாக, சாக பதார்த்தங்களையே சதா பக்ஷித்துக் கொண்டுவரும் மனிதர்கள் காலக்கிரமத்தில் தங்களுடைய தைரியத்தையெல்லாம் இழந்துவிடுவதை நாம் கண்கூடாகக் காண்கின்றோம்; மாம்ச போஜனத்தை அடியோடு விட்டுவிடுவதானது மனத்துக்குப் பலஹீனத்தை உண்டுபண்ணிக் கடைசியில் மகா சேர்த்தியான குணவிசேஷமாகிய மனோ தைரியத்தை இல்லாமலே போக்கடித்து விடுகின்றது. இப்படிப்பட்ட இயற்கைச் சட்டத்தை மனிதனல்லாத மற்றப் பிராணிகளிடத்திலும் நாம் சர்வ சாதாரணமாகக் காண்கின்றோம். மாம்ச பக்ஷணிகளான மிருகங்களிடத்தில் காணப்படும் தைரியத்தில் நூற்றிலொரு பங்கையேனும் சாக பக்ஷணிகளிடத்தில் நாம் காண்பது அரிதாயிருக்கிறது; இப்படிப்பட்ட நிலைமைதான் பறவை யினத்திலும் காணப்படுகின்றது. ஆதலின், மனிதனுடைய குணவிசேஷங்களைப் பண்படுத்துவ

தில் அவனுடைய ஆகாராதிகள் அதிகமான வேலை செய்கின்றன வென்பதில் கிஞ்சித்தும் சந்தேக மில்லை. மாம்ச போஜனத்தை அடியோடு விலக்கி விடுவதால் அருமையான மனோதைரியம் அழிந்து விடுவதேபோல மிதமிஞ்சிய மாம்ச போஜனத்தாலும் எல்லோராலும் சிலாகிக்கத்தக்க அருமையான குணங்களாகிய தன்னடக்கமென்பதும் சாந்தகுண மென்பதும் அடியோடு இல்லாமற் போய் விடுகின்றன. ஆனால், இவ்விரண்டு அதிதங்களுக்கும் இடையிலுள்ள மத்திய பாகத்தை நாம் அனுஷ்டித்து வருவோமாயின், தைரியம், தயாளம் என்னும் இருவகைச் சிறந்த குணங்களையும் ஒருங்கு உடையவராக இருப்போம். இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த சட்டத்தைத்தான் எம்முடைய அருமை வாய்ந்த குர்ஆன் ஷரீபானது பின் வருமாறு குறிப்பிடுகின்றது: "(மாம்சபோஜனமா யிருந்தபோதினும் சாகபதார்த்தமா யிருந்தபோதினும்) புசியுங்கள்; ஆனால் (உங்களுடைய குணாதிசயமும் தேகாரோக்கியமும் பாதிக்கப்படாம லிருக்கும் பொருட்டு அப்படிப்பட்ட ஆகாரத்தில் யாதொன்றையும்) நீங்கள் அளவுக்கு மிஞ்சி அருந்தாதீர்கள்" كلوا واشربوا ولا تسرفوا (குர்ஆன், 7:31) இப்பொழுது நாம் மனிதனுடைய புறச் செய்கைகளால் அவனுடைய அகச் செய்கையானது எவ்வாறு மாறுபடுகிறதென்பதைத் தெரிவித்தோம்; ஆனால், இவ்வாறே நம்முடைய அந்தரங்க எண்ணங்களால் பஹிரங்கச் செய்கைகளும் மாறுபடுகின்றன வென்பதை நீங்கள் மறந்துவிடக் கூடாது. மனத்தின்கண் துக்க முண்டாகும் போது கண்ணிலிருந்து நீர்த்தாரை வடிகின்றது; இப்படியே உள்ளத்தில் கிளர்ச்சியுண்டாகும் பக்ஷத்தில் முகத்தில் மலர்ச்சி யுண்டாகின்றது. ஆகவே, நம்முடைய

சரீரத்துக்கும் ஆத்மாவுக்கும் இயற்கையான ஒருவகைச் சம்பந்தம் ஏற்பட்டிருக்கிறதென்பதை நாமிப்பொழுது செம்மையாகத் தெரிந்து கொண்டுவிட்டோம். ஆதலின், நம்முடைய ஆகாரம் தாகசாந்தி தூக்கம் நடை உடை பாவனைகளெல்லாமும் அது அதற்குத் தகுந்தாற்போன்ற மாறுபாட்டை நம்முடைய மனத்திலும் ஆத்மாவினுள்ளும் உண்டாக்கிக் கொண்டே யிருக்கின்றன. நம்முடைய புறச்செய்கையின் சாயையெல்லாம் அக வுறுப்பில் அமையாமற் போவதில்லை. நம்முடைய மூளையின் ஒருபாகத்தில் அதிர்ச்சி யுண்டாகுமாயின், அக்காரணத்தால் அவ்வேளையில் ஞாபகசக்தி முழுதுமே மறந்துபோகின்றது; அம்மூளையின் மற்றொரு பாகத்தில் அப்படிப்பட்ட அதிர்ச்சி யுண்டாகுமாயின், அதனால் பிரக்ஞாபங்கமே ஏற்பட்டு விடுகின்றது. நாம் உட்கொள்ளும் வாயுவில் பிளேக் சம்பந்தமான விஷக்கிருமிகள் காணப்படும் பக்ஷத்தில் உடனே அவை மனிதனுடைய தேகத்தைத் தாக்குகின்றன; பிறகுதான் அவனுடைய மனமானது பாதிக்கப்படுகின்றது; அதன் பின் சில மணி நேரத்துக்குள் அவனுடைய ஆகார வியவகாரங்களுக்குரிய அந்தக் கரணமும் நிலைகுலைய ஆரம்பித்துச் சிறிது நேரத்திற்கெல்லாம் அப்பரிதாபகரமுள்ள மனிதன் பைத்தியம் பிடித்தவனைப் போல மாறி மாய்ந்தொழிந்து போகிறான். இப்படிப்பட்ட உதாஹரணங்களா லெல்லாம் மனிதனுடைய சரீரத்துக்கும் அந்தக்கரணமான ஆத்மாவுக்கும் இடையில் சூக்ஷுமமான ஒருவகை ஒற்றுமை உண்டென்பதை மட்டும் மிகத்தெளிவாகத் தெரிந்து கொள்ளுகிறோம். ஆனல், அஃது எப்படிப்பட்ட சம்பந்தம் என்பதைத் தெரிந்து கொள்ளுவதுதான் மனிதனலாகக் கூடிய

காரியமாய்ப் புலப்பட வில்லை.

நாம் இப்பொழுது எடுத்துக்கொண்ட விஷயத்தைப் பற்றி இன்னம் சிறிது சொல்ல வேண்டியிருக்கிறது: மனிதனுடைய ஆத்மாவின் ஜனன ஸ்தானமாயிருப்பது அவனுடைய சரீரந்தான். ஆகாயத்திலிருந்து ஆத்மாவானது வந்து குதித்து மனிதனுடைய தேகத்திற்குள்ளே நுழைந்து கொள்ளுவதில்லை; அஃதாவது, தாயின் கர்ப்பாசயத்தில் குழந்தை விருத்தியடைந்து வரும்போது, அதன் ஆத்மாவானது வெளியிலிருந்து வந்து அதற்குள்ளே புகுவதில்லை. ஆனால், ஆத்மாவானது, மனித உற்பத்திக்குரிய வித்துள்ளேயே உடன் மறைந்து உற்பத்தியாகி, அதிலேயே ஒளிந்திருந்து, குழந்தையின் பிண்டம் வளர்ந்தோங்கி வருங்கால், அதனுடனே வளர்ந்து பருவகாலத்தில் மலரக்கூடிய ஒருவகைப் பிரகாசமா(நூரா)யிருக்கின்றது. தாயின் கர்ப்பக்குழியில் குழந்தையின் தேகமானது வளர்ந்து வரும்போது அதனுடனே அதன் ஜோதியும் வளர்ந்து வருகிறதென்று எம்முடைய குர்ஆன் ஷரீப் வேதமானது மிகமிக விளக்கமாக அறிவிக்கின்றது: ثم أنشأناه خلقا آخر فتبارك الله احسن الخالقين "பிறகு (தாயின் கர்ப்பாசயத்தில் தையாரிக்கப்பட்ட) சரீரத்தை மற்றொரு விதமான நிலைமைக்கு நாம் கொண்டு வருகிறோம்; மேலும் (ஆத்மா என்று சொல்லக்கூடிய) மற்றோரு சிருஷ்டியையும் அதினின்றே வெளிப்படுத்துகிறோம்; இதனால் தனக்கோர் இணையுமில்லாத மகா மேலான சிருஷ்டி கர்த்தாவாகிய ஆண்டவனுக்கே எல்லாப் புகழும்!"—(குர்ஆன், 23:14). "அதே சரீரத்திலிருந்தே நாம் மற்றொரு சிருஷ்டியை வெளிப்படுத்துகிறோம்," என்று ஆண்டவன் சொன்னதில் அதிக

ஆழமான இரகசிய மெல்லாம் பொதிந்து கிடக்கின்றது; ஆத்மாவின் தன்மையைப்பற்றி இஃது ஒருவாறு விளக்கிக் காட்டுகின்றது; ஆயினும், ஆத்மாவுக்கும் சரீரத்துக்கு முள்ள விவரிக்கமுடியாத பலமான பாந்தவ்யத்தையும் இவ் வாக்கியம் குறிப்பாகக் காட்டுகின்றது. தேகத்துக்கும், தேகியான ஆத்மாவுக்கு முள்ள சம்பந்தத்தின் தன்மையைப் பற்றி ஆண்டவன் இத் திருவாக்கியத்தில் கூறியிருப்பதி லிருந்து நாம் மற்றொரு முக்கியமான முடிவையும் தெரிந்து கொள்ளுகிறோம். ஒரு மனிதன் பேசும் பேச்சுக்களும், அவன் செய்யும் செய்கைகளும் ஆண்டவனுக்காகப் பேசப் பட்டு, அவனுடைய பெருமையை வெளிக் காட்டுவதற்காகச் செய்யப்பட்டு, அவை அந்த ஆண்டவனுடைய கட்டளையின் படி ஒழுங்கு படுத்தப்படுமாயின், அவையும் அந்த ஆண்டவ னுடைய அதே விதமான சட்டத்துக்கே கீழ்ப்படிந்திருக்கின் றன வென்பதை அவ்வேத வாக்கியம் விளக்கிக் காட்டுகின் றது; அஃதாவது, நம்முடைய உண்மையான எல்லாவகைப் புறச்செய்கைகளிலும் அவற்றின் அந்தராத்மாவானது, பிண்ட உற்பத்திக் குரிய வித்தில் மனிதனுடைய ஆத்மாவானது மறைந்திருப்பதே போல மறைந்திருக்கின்றது; இப்படிப் பட்ட செய்கைகளுக்குரிய சரீரமானது சிறுகச் சிறுக வளர்ந்து வருவதேபோல் சுக்கில சுரோணிதத்தில் மறைந் திருக்கும் ஆத்மாவும் சிறுகச் சிறுக வளர்ந்தோங்கியே வருகின்றது. கர்ப்பாசயத்தில் உற்பத்தியாகும் பிண்ட மானது தன் புற உறுப்புக்களை நன்றாக ஆட்டி அசைக்க ஆரம்பித்தவுடனே அதற்குள் மறைந்துகிடந்த ஆத்மாவும் உடனே திடீரென்று தன்னுடைய முழு ஜோதியுடனும்

பெருமையுடனும் பிரகாசிக்கத் தலைப்படுகின்றது; அதனை பிறகுதான் அப்பிண்டத்தில் ஆத்மாவானது நிறைந்திருப்பதை நாம் வெளிப்படையாகத் தெரிந்து கொள்ளுகிறோம். அது முதல் அப் பிண்டத்தில் உயிர்ப்பிராணியின் தன்மையைப் போன்ற அங்குமிங்கும் அசைபக்கூடிய நிகழ்ச்சியைக் கண் கூடாகக் காண்கின்றோம்; அப்பொழுதுதான் அப்பிண்டத் துக்கு உயிர் இருக்கிறதென்னும் உணர்ந்து கொள்ளுகிறோம். பிண்டமானது தன் உறுப்புக்களை யெல்லாம் அமைத்து புறச் செய்கைகளைக் காட்ட ஆரம்பித்தவுடனே அப் பிண்டத்துக் குள்ளிருந்து மின்வெட்டுவதுபோலத் திடீரென்று ஆத்மா வானது ஜ்வலிக்க ஆரம்பிக்கின்றது. இதைப்பற்றி அல்லா ஹுத் தஆலாவானவன் தன்னுடைய குர்ஆன் ஷரீபில் பின்வருமாறு உவமாலங்கார முறைப்படி கூறுகின்றான்: فاذا سويته ونفخت فيه من روحي فقعوا له ساجدين "நான் அதனு டைய சரீரத்தைப் படைத்து, அதன் சம்பந்தமான எல்லா மகிமையையும் செவ்வனே தோன்றச்செய்து, அதற்குள்ளே என்னுடைய ரூஹை (ஆவியை) ஊதியவுடனே நீங்களெல் லீரும் அதன் முன் வீழ்ந்து மரியாதையாகச் சிரவணக்கம் புரிவீர்களாக!" (குர்ஆன், 15:29). இத்திருவாக்கியமும் மேற் கூறிய அதே கருத்தைத்தான் தெரிவிக்கின்றது. அஃதாவது, நற்செய்கைகளின் சேர்க்கையெல்லாம் நன்றாக ஐக்கியமான வுடனே அப்பிண்டத்துக் குள்ளிருக்கும் ஆண்டவனுடைய ஏவலாலுண்டாகிய ஆவியானது அங்குரித்து மலர ஆரம்பிக் கின்றது. இந்த ஆவியானது தெய்விக சம்பந்தமான தன்மை யைப்பெற்றிருக்கிறதென்பதை விளக்கிக்காட்டும் பொருட்டே எல்லாம் வல்ல அல்லாஹுத் தஆலாவானவன் இதைத் தன்

னுடைய ரூஹென்று குறிப்பிடுகின்றான். ஏனெனின், சரீர சம்பந்தமான இச்சைகளை யெல்லாம் ஒடுக்கினபிறகே நம்மு டைய தேகமானது தன்னுடைய முழுப் பக்குவத்தையும் அடைகின்றது. ஆதலின், அதற்குமுன் மந்தமாகச் சோம்பிக் கிடந்த அத் தெய்விக ஜோதியானது பிறகு பரிபூரணப் பிர காசத்துடனே வெளித்தோன்ற ஆரம்பிக்கின்றது. ஆண்டவ னுடைய ரூஹானது இத்துணை மகிமையுடனே தனக்குரிய ஜோதிக் கிரணத்தைச் சொரிய ஆரம்பிக்கும்போது, ஒவ்வொரு வரும் தம்முடைய நிமிர்ந்த சென்னியை அதன்முன் சாய்க்க வேண்டியது முக்கியக் கடமையாகக் காணப்படாநின்றது. ஆதலின், ஒவ்வொருவரும் இயற்கையாகவே அந்த ஜோதியின் பக்கல் இழுக்கப்படுகின்றார்; அவர் அதன்முன் சென்றவுடனே அதற்குத் தலைகுனிந்து சிரவணக்கம் புரிகின்றார். ஆனால், அந்தகாரத்தையே ஆதாரவாகக் கொண்டிருக்கும் கெட்ட குணம் (இப்லீஸ்) மட்டுமே அந்த ஜோதியின் முன் சிர வணக்கம் புரிவதற்குத் தகரார் செய்கின்றது.

நாம் ஏற்கெனவே எடுத்துக்கொண்ட விஷயத்தைப்பற்றி மீண்டும் ஆராய்ச்சி செய்யப் புகுவோமாயின், ஆத்மாவானது கர்ப்பாசயத்துக்குள்ளே உற்பத்தியாய் வருகின்ற பிண்டத்தி னின்றுமே அங்குரிக்கக்கூடிய ஒரு வகை ஜோதியாயிருக்கின்ற தென்று தெரிந்துகொள்ளக் கடவோம். பிண்டத்தினின்றுமே ஆவியானது அங்குரிக்கின்றது என்றதனால், அப்பிண்டத்திற் குரிய மூல வித்திலேயே அதன் நுண்ணிய மூலகாரணமானது காணப்பட்டபோதினும், முதன்முதலில் இந்த ஆவியானது கண்ணுக்கு வெளிப்படையாகப் புலப்படாமல் மறைக்கப்பட் டிருப்பதுபோல் தோற்றப்படுகிறது என்பதுதான் என்னு

டைய தாத்பரியமா யிருக்கிறது; கர்ப்பத்திலுள்ள பிண்டமானது நாள்தோறும் மெல்ல மெல்ல வளர்ந்து வரும்போது, அதனுடனே ஆத்மாவும் விருத்தி யடைந்துகொண்டே வந்து, இறுதியில் வெளிப்படையாகப் புலப்படுகின்றது. வித்துடனே ஆவியானது விளக்கிக்காட்ட முடியாத வண்ணமாய்க் கலந்திருக்கும் இக் கலப்பானது ஆண்டவனுடைய விருப்பத்தின் பிரகாரமும் அவனுடைய அனுமதியின் பிரகாரமுமே அமைக்கப்பட்டிருக்கும் ஓர் ஏற்பாடென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை. ஆத்மாவானது வித்திலேயே மறைமுகமாக அமைக்கப்பட்டிருக்கும் ஒரு ஜோதியின் சத்தாயிருக்கின்றது. ஒரு வஸ்துவை நாம் எடுத்துக்கொள்வோ மாயின், அதன் ஒரு பகுதியானது மற்றொரு பகுதியின் பாகமா யிருப்பதேபோல் ஆவியானது வித்தின் பாகமா யில்லை; ஆனால், அந்த ஆவியானது அந்த வித்துக்கு வெளியிலிருந்து வந்து பிண்டத்துக்குள்ளே புகுந்துகொள்ளுகிற தென்பதும் உண்மையான சித்தாந்தமா யில்லை. இன்னம் வேறு சிலர் தவறாக எண்ணுவதே போல் ஆவியானது ஆகாயத்திலிருந்து பூமியில் வந்து குதித்து இங்குள்ள வித்துக்களுடனே மிசிரமாய் விடுகிறதென்று கூறுவதும் கூடாத காரியமாகும். சக்கிமுக்கிக் கல்லுள் தீயானது மறைந்திருப்பதேபோல் வித்துக்குள் ஆவியும் ஒளிக்கப்பட்டிருக்கிறது. தேகத்தினின்று முற்றும் வேறான ஆத்மாவானது ஆகாயத்திலிருந்து பூமிக்கு அனுப்பப்படுகிற தென்றாவது, அல்லது அது மேலேயிருந்து திடுமெனக் குதித்துக் கீழேயுள்ள வித்துடனே அகஸ்மாத்தாய்ப் புணர்ந்து கருப்பைக்குள் எப்படியேனும் நுழைகிறதென்றாவது வாதிக்கக்கூடிய சித்தாந்தத்தை ஆதரித்துப் பேசு

வதற்கு ஆண்டவனுடைய திருவேதத்தில் அணுத்துணையும் ஆதாரம் காணப்படவில்லை. இல்லை! அப்படிக் கூறுவதானது இவ்வுலகினில் காணப்படும் இயற்கைச் சட்டங்களுக்கு முற்றும் முரணாகவும், முழுதும் பொய்யாகவுமே காணப் படுகின்றது. அழுகி நாற்ற மெடுத்திருக்கும் ஆகாரப் பொருள்களிலும், அசுத்தத்துடனே அலம்பப்படாமல் அழுகி யிருக்கும் காயங்களிலும் தினம் தினம் காணப்படும் ஆயிரக் கணக்கான பூச்சிகளும் புழுக்களும் அவற்றிற்கு வெளியி லிருந்தாவது அல்லது ஆகாயத்தி லிருந்தாவது வந்து நுழைவ தில்லை; அந்த ஜீவப்பிராணிகளின் வித்தும் சத்தும் அந்தப் பதார்த்தங்களி லிருந்தே உண்டாவதை நாம் கண்கூடாகக் காண்கின்றோம். இதை நோக்கும்போது, சத்தானது வித் துக்குள்ளேயே ஆண்டவனால் சிருஷ்டிக்கப்பட்டு, அதற் கப்பால் அவ் வித்திலிருந்துண்டாகும் பிண்டத்தின் மூலமாய் அந்த ஆவியானது மீண்டும் அங்குரித்துத் தோன்ற வேண்டு மென்று (அந்த ஆண்டவனே) விரும்பி ஆக்ஞாபித்திருக்கிறு னென்று சந்தேகமறத்தெளிந்துகொள்ளுகிறோம். இதிலிருந்து, எல்லாம்வல்ல அல்லாஹுத் தஆலாவானவன் தனக்குரிய பரிபூர்ண ஞானத்தைக் கொண்டும் சர்வ சக்தித்வத்தைக் கொண்டும் வித்தினுள்ளேயே சத்தையும் சிருஷ்டித்துவைத் துள்ளா னென்றும், அத்தகைய ஆத்மாவின் பிறிதொரு தோற்றம் சரீரத்தினுள்ளிருந்தே வெளியாதல் வேண்டு மென்று நாடியமைத்துள்ளா னென்றும் நாம் நன்கு முடிவு கட்டிக் கொள்ளுகிறோம். நம்முடைய ஆவியின் இயக்கமெல் லாம் நமது தேகத்தின் இயக்கத்தின்மீதே முழுதும் சார்ந் திருக்கிறது; ஆதலின், தேகமானது ஏதேனுமொரு திசையை

நோக்கி இழுக்கப்பட்டால், தேகியும் அதன்வழியே செல்ல வேண்டி யிருக்கின்றது. மனிதனுடைய ஸ்தூல வாழ்க்கை யானது அவனுடைய ஷூக்ஷ்ம வாழ்க்கைக்கு மிகவும் அவசியமா யிருத்தலினால் ஆண்டவனுடைய உண்மை வேத மானது இவ்விஷயத்தில் முற்றும் மௌனம் சாதித்திருப்பது முடியாது. ஆதலின், அவனுடைய குர்ஆன் ஷரீபானது மனிதனுடைய ஸ்தூல வாழ்க்கை சம்பந்தமான முன்னேற்றத் துக்குரிய முறைகளை யெல்லாம் அதிகம் தன்னுள்ளே அடக் கிக்கொண் டிருக்கிறது.

மனிதனுடைய இகலோக சம்பந்தமான எல்லாக் காரி யங்களுக்கும் வேண்டிய முக்கியமான அத்தியாவசிய முறை களை யெல்லாம் அந்தத் தெய்வத் திருமறை மிக மிக நுணுக்க மாகக் கூறியிருக்கின்றது. மனிதனுடைய குடும்பம், அவனு டைய சுற்றம், இன்னம் மற்றுமுள்ள சம்பந்தா சம்பந்தம், இன்னம் அவனுக்கு வேண்டிய எல்லாக் கோரிக்கைகளையும் நிறைவேற்றிக்கொள்ள வேண்டிய மார்க்கம், மற்றும் சுகாசுக வேளைகளில் நடந்துகொள்ள வேண்டிய ஒழுக்கம் ஆகிய அத் தனை விஷயங்களுக்கு முரிய விதங்களனைத்தும் அவ்வேதத்தில் மிகத் தெளிவாக விவரிக்கப்பட் டிருக்கின்றன. இன்னம் தேக சம்பந்தமான வெளிக் காரியங்களில் ஒழுங்காகவும் பரிசுத்த மாகவும் இருப்பதானது எவ்வாறு தேகியின் சம்பந்தமான அந்தரங்கப் பரிசுத்தத்தை யெல்லாம் முன்னேற்ற மடையச் செய்யக்கூடுமென்றும் அவ்வேதமானது மிக விளக்கமாக எண் பித்துக் காட்டுகின்றது. இன்று என் வயத்திலிருக்கும் கால அளவின் சுருக்கத்தை உற்று நோக்குங்கால், இகலோக வாழ்க் கைக்குரிய சில முக்கியமான அம்சங்களை மட்டுமே மிகச்

சுருக்கமாக யான் ஈண்டுக் குறிக்க வேண்டியதிருக்கின்றது. இன்றேல் இஸ்லாத்தின் ஒவ்வோர் அம்சத்தையும் அதிக விரிவாகச் சொல்லப் புகுவோமாயின், அவற்றை யெல்லாம் விஸ்தரித் துரைப்பதற்கு அளவற்ற கால அளவு வேண்டியதா யிருக்கும்.

இந்த முக்கியமான அம்சத்தைப் பற்றி, அஃதாவது, மனிதனுடைய தேக சம்பந்தமுள்ள பகிரங்கமான காரியங் களைச் சீர்திருத்தம் செய்து, அவனை ஒரு கேவலமான மிருகப் பிராயத்தினின்றும் மனிதத் தன்மைக்குக் கொண்டுவந்து, அதற்குமேல் நாகரிகமடையும்படி செய்து ஆத்மார்த்த சம் பந்தமான மகோன்னத உச்சஸ்தானத்தை அவன் அடைதற் குரிய துறைகளைப் பற்றியும், அவற்றிற்குரிய கட்டளைகளைப் பற்றியும் அல்லாஹுத் தஆலாவானவன் என்ன சொல்லி யிருக்கிறனென்று உற்று நோக்குவோ மாயின், அவ்வேதத் தில் அடியிற் காணக்கூடிய மகா புத்திசாலித் தனமான ஒரு முறையானது காணப்படுகிற தென்று தெரிந்து கொள்வோம். முதன் முதலில் ஆண்டவன் மனிதனை அஞ்ஞான அந்தகாரத்தி னின்று வெளிக் கிளப்புகிறுன்; பிறகு அவனுடைய நித் திய வாழ்க்கைக்கு வேண்டிய செய்கைகளும் நடத்தைகளும் மற்றுமுள்ள ஆசார வியவகாரங்களும் இன்னவிதமா யிருக்க வேண்டு மென்பதற்குரிய விதி முறைகளையும் தன் திருமறை யில் விளக்கி யிருக்கின்றுன். ஆகலின், மனிதனுடைய ஆரம்ப நிலைமையி லிருந்து அதற்கப்பாலுள்ள எல்லாப் படித்தரங் களுக்கும் வேண்டிய முறைகளைக் கூறிக்கொண்டு அவ்வேத மானது தன் படிப்பினையை விளக்கிக் காட்டுகின்றது. முதன் முதலில் மக்களுக்கும் மாக்களுக்கும் இடையிலுள்ள

வேறுபாடு இன்னதெனக் காட்டி, மிருகப் பிராயத்தினின்று வேறாய மனிதன் முதற்படியில் ஒழுக வேண்டிய முறைகள் இன்ன இன்னவை யென்று அவ்வேதம் வெளிப்படுத்துகின்றது ; இவ் வாழ்க்கைக்குரிய விதி முறைகளை ஆசார வாழ்க்கையின் அம்சங்க ளென்னலாம். அடுத்தபடியில் ஏற்கனவே அடைந்திருக்கும் முதற் படியாகிய ஆசார வாழ்க்கையை மிதமான கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டு வந்து, அவற்றை யெல்லாம் மிக நுட்பமான சன்மார்க்க ஒழுக்கங்களாக மாற்றி, அவ் வொழுக்கத்திற்கான உயரிய முறையை அவ்வேதம் காண்பிக்கின்றது. ஆனால், இவ்விரண்டு வழிகளும் மனித வாழ்க்கையின் முன்னேற்றத்தில் ஒரே விதமான நிலைமையைத்தான் காட்டுகின்றன ; இவ்விரண்டுக்கு மிடையிலே அதிகமான வேறுபா டில்லை. மனிதனானவன் மிருகப் பிராயமான தன்மையிலிருந்து மனிதத் தன்மையை அடைந்து, அதற்கு மேல் படிப்படியாக முன்னேற்றத்தை யடைந்து, மகா சன்மார்க்க சீலனாக முதிர்ச்சி யடையும்படியான விதத்திலேயே எல்லாம்வல்ல அல்லாஹு-த் தஆலாவானவன் தன்னுடைய சன்மார்க்க போதனையை அத்துணை அழகாக அமைத்திருக்கின்றான்.

மனிதனுடைய முன்னேற்றத்தில் மூன்றாவது படித்தரமாயுள்ள நிலைமையை நாம் இப்பொழுது கவனிப்போம். அந் நிலைமையில் மனிதன் ஆண்டவன்பால் தனக்குள்ள அத்தியந்த விசுவாசத்தினாலும், அவனுடைய விருப்பத்தையே நிறைவேற்ற வேண்டுமென்னும் எண்ணம் மிகுந்திருப்பதனாலும் தன்னையேதான் அவனுள் ளாழ்த்தி மறைத்துவிடுகிறான். அப்பொழுது அவனுடைய முழு வாழ்க்கையையும் அவ

னுடைய எஜமானுக் கென்றே அர்ப்பணம் செய்து விடு கிறான். இப்படிப்பட்ட மூன்றாவது நிலைமையைத்தான் முஸ்லிம்களின் மார்க்கமாய "இஸ்லாம்" என்னும் பெய ரானது குறிப்பிடுகின்றது. என்னெனின், அப் பெயரானது ஆண்டவனுடைய காரியத்தில் தன்னை முழுதும் ஒப்படைத் துத் தானென்னும் தன்மையை முற்றும் மறந்து அடியோடு அவன்வயப் படுவதையே குறிக்கும். இதனால்தான் குர்ஆன் ஷரீபும் பின்வருமாறு கூறி யிருக்கின்றது: بلى من اسلم وجهه لله وهو محسن فله اجره عند ربه ولا خوف عليهم ولا هم يحزنون "அல்லாஹுத் தஆலாவின் நிமித்தம் தன்னுடைய வாழ்க்கை நலத்தையே தியாகம்பண்ணி, அவனுடைய விருப்பத்துக்குத் தான் முற்றும் கட்டுப்பட்டு நடப்பவன் எவனோ அவன், கேவலம் உதட்டினால்மட்டும் ஓதக்கூடிய பக்தியுடனே திருப்தி யடையாது சன்மார்க்கமான காரியங்களினால் அதை அனுஷ் டித்துக் காட்டக் கூடியவன் எவனோ அவன் நிச்சயமாகவே ஈடேற்றம் பெறுகிறான். இப்படிப்பட்டவன் தன்னுடைய ரக்ஷகனிடத்திருந்து நிச்சயமாகவே தன்னுடைய சன் மானத்தைப் பெறுவான். மேலும் அவர்கள்மீது அச்சம் ஒன்றும் இல்லை. இன்னம் அவர்கள் வருந்தவும் தேவை யில்லை"—(2 : 112). இதேவிதமான இன்னமோர் ஆயத்தும் காணப்படுகிறது: قل ان صلاتى ونسكى ومحياى ومماتى لله رب العلمين لا شريك له وبذلك امرت وانا اول المسلمين "சொல்வீ ராக: என்னுடைய தொழுகையும், என்னுடைய தியாகமும், என்னுடைய வாழ்க்கையும், என்னுடைய மரணமும், எவனுக்கு இணை யாரு மில்லையோ, எவனுடைய ராஜ்யாதி காரமானது சர்வ லோகங்களின்மீதும் பரவி யிருக்கிறதோ,

அப்படிப்பட்ட அல்லாஹுத் தஆலாவுக்காகவே யிருக்கும். இவ்வாறு எனக்குக் கட்டளை பிறந்திருக்கிறது; அதனால் நான் முதல் முஸ்லிமா யிருக்கிறேன். (அஃதாவது, எல்லாம் வல்ல அல்லாஹுத் தஆலாவின் பாதையில் எனது உயிர் வாழ்க்கை முழுதையும் தியாகம் செய்துவிட்டு அவனுக் காகவே முழுதும் அர்ப்பணம் செய்துகொண்ட மனிதனா யிருக்கிறேன்)”—(6 : 163, 164.) وان هذا صراطى مستقيما فاتبعوه ولا تتبعوا السبل فتفرق بكم عن سبيله “ இதுதான் என் னுடைய நேரான பாதை; மேலும் இதுதான் நேரான பாதை யாயிருக்கிறது; ஆதலின், நீங்கள் (வந்து இதைப்) பின்பற்றுங் கள்; ஆனால், வேறெந்தப் பல மார்க்கத்தையும் பின்பற்றாதீர் கள். அவ்வாறு நீங்கள் செய்வீர்களேல், அது நிச்சயமாக ஆண் டவன் பாதையிலிருந்து உங்களை அப்பாற் பிரித்துக்கொண்டு போய்விடும்” — (6 : 154). قل ان كنتم تحبون الله فاتبعونى يحببكم الله ويغفر لكم ذنوبكم والله غفور رحيم “(அவர்களுக்குச்) சொல்வீராக: நீங்கள் ஆண்டவனை விசுவசிப்பதாயின், என்னை வந்து பின்பற்றுங்கள்; அவ்வாறாயின் ஆண்டவன் உங்களை விசு வசித்து உங்களுடைய பாபங்களையும் மன்னிப்பான்; மேலும் அவன் நிச்சயமாகவே மன்னிக்கிறவனாகவும், தயாளமுள்ளவ னாகவும் இருக்கிறான்”—(3: 30).

வாழ்க்கையின் இத்தகைய மூவ்வகை நிலைமைகளைப் பற்றி யான் இப்பொழுது ஒன்றன்பின் ஒன்றாக எடுத்தெழுது வேன். ஆனால், நான் அம்மூன்றையுங் குறித்துப் பேசப் புகுமுன் மனிதனுடைய ஸ்தூல தேக வாழ்க்கைக் குரிய “கீழ்ப்படித லற்ற ஆவியானது” (ந‘ப்ஸெ அம்மாரா) அவ னுடைய சன்மார்க்க வாழ்க்கைக் குரிய நிலைமையினின்று

முற்றும் வேறானதென்று தவறாகக் கருதிவிட வேண்டா மென்று யான் என்னுடைய எச்சரிக்கையை அவசியமாக மீண்டும் வற்புறுத்த வேண்டி யிருக்கிறது. ஆண்டவனுடைய கூற்றின் பிரகாரம் ஸ்தூல தேக வாழ்க்கையானது மற்ற இரண்டு நிலைமைகளி னின்றும் வேறானதாய்க் காணப்பட வில்லை. மனிதனுடைய எல்லா இயற்கையான குணங்களும், அவனுடைய பஞ்சேந்திரியங்களின் வழியே வெளிப்படும் எல்லா விருப்பங்களும் அபிலாஷைகளும் அவனுடைய ஸ்தூல தேக வாழ்க்கையின் குணங்களா யிருக்குமென்று குர்ஆன் ஷரீபு வேதமானது கூறுகின்றது. இவற்றை யெல்லாம் சமன் செய்து சீர்தூக்கி, அது அதற்குரிய முறையில் மிதமாகப் பழக்கி, அதனதன் தன்மையில் அழகு பெறச் செலுத்துவோ மாயின், இத்தனைவிதமான ஸ்தூல தேகக் குணங்களும் சன் மார்க்க வாழ்க்கைக் குரிய சற்குணங்களாகவே மாறிவிடுதல் கூடும். இவ்வாறே சன்மார்க்க நிலைமைக்கும் ஆத்மஞான நிலைமைக்கும் இடையிலுங்கூட அதிகமான வித்தியாசமில்லை. ஆனால், சன்மார்க்க (நஃப்ஸெ லவ்வாமா) நிலைமையி லிருந்து ஆத்மஞான (நஃப்ஸெ முத்மஇன்னா) நிலைமைக்கு மனிதன் வர வேண்டுமாயின், அவன் ஆண்டவனது முன்னிலையில் தன்னு டைய நிலைமையை முழுதும் அழித்துவிடுதல் வேண்டும்; உலக சம்பந்தமான கேவலமான விருப்பங்களுக்குமேல் தன் னுடைய நாட்டத்தை உயர்த்திக்கொண்டு அல்லும் பகலும் அல்லாஹுத் தஆலாவின் தியானத்திலேயே மூழ்கியிருத்தல் வேண்டும். அந்த ஆண்டவனிடத்தில் எப்பொழுதும் அள விறந்த பக்திவிசுவாசத்துடனே நடந்துகொள்ளுதல்வேண்டும். ஆண்டவனுடைய விருப்பத்துக்கு முற்றும் கீழ்ப்படிந்து

நடக்கும்போது தன்னுடைய மனத்தின்கண் அதிகமான சாந்தியையும் சமாதானத்தையும் அடைந்திருத்தல் வேண்டும். மனிதனிடத்திலுள்ள ஸ்தூல இச்சைகளை யெல்லாம் ஒழுங்கு படுத்தி அவற்றைச் சன்மார்க்க நெறிகளாக மாற்றிக்கொள்ளாத மட்டில் அவனை ஒரு மனிதன் என்று அழைப்பது தகாது; ஏனெனின், தேக சம்பந்தமான இச்சையானது மனிதனுக்கு மட்டும் சொந்தமான குணங்க ளன்று; மிருகங்களுக்கும் இப்படிப்பட்ட இச்சைக ளுண்டு. இந்த இச்சைகளை மனிதன் ஒழுங்கு செய்துகொள்வா னாயின், பிறகு அவனுக்கும் மற்றைக் கீழ்த்தரப் பிராணிகளுக்கும் ஒன்றும் வித்தியாச மில்லாமற் போய் விடுகின்றது.

இவ்வாறே ஒருவன் சில சன்மார்க்க நெறிகளை மட்டும் உடையவனா யிருப்பின், அவனிடத்தில் ஆத்ம ஞானத்துக்குரிய குணங்களும் அமைந்து விட்டதாக எண்ணுவது தகாது; ஏனெனின், மனத்தின் கண்ணுள்ள எளியகுணமும், ஹிருதயத்திலுள்ள சாந்தியும், அஹிம்ஸா தர்மமும் சர்வ சாதாரணமான குணங்களாகவே காணப்படுகின்றன. இப்படிப்பட்ட இயற்கையான குணங்களெல்லாம் ஈடேற்றத்துக்குரிய மெய்ஞ்ஞானமே இன்னதென் றறியாத அஞ்ஞானிகளிடத்திலும் அமைந்திருக்கலாம். இவ்வுலகினில் எத்தனையோ பிராணிகள் நிரபராதிகளான சாதுக்களா யிருக்கின்றன; மற்றைப் பிராணிகளால் அவற்றிற்கு அதிகமான தீமைகளுண்டாகின்றன வல்லாமல் இவற்றால் வேறு யாருக்கும் யாதொருவிதமான உபத்திரவமும் விளைவதில்லை. இப்படிப்பட்ட பிராணிகளைப் பழக்கி விடுவோமாயின், அவை மஹா அஹிம்ஸா தர்மமுள்ள சுத்த சாதுக்களாக மாறிவிடுகின்றன;

பிறகு கசையினு லடித்தபோதினும் அவை அதையெல்லாம் சகித்துக் கொண்டு சும்மா இருந்து விடுகின்றன. நாம் செய்யும் கொடுமையைத் தடுப்பதற்கு அப்பிராணிகள் ஒன்றும் சூழ்ச்சி செய்வதில்லை. இவ்வாறிருந்தும் இப்படிப்பட்ட சாது ஜந்துக்களை மனிதர்க ளென்றுவது அல்லது அதனினும் மேலாக நல்ல மனிதர்க ளென்றுவது யாதொரு முட்டாளும் கூறத்துணியான். இவ்வண்ணமாகவே மகா ஆபாஸமான தெய்வக் கொள்கைகளை யுடையவர்களும், இன்னம் இவர்களைக் காட்டினும் மிகமிகப் பொல்லாதவர்களா யிருக்கக் கூடிய கொடிய பஞ்சமகா பாபிகளும் இப்படிப்பட்ட சாந்த குணங்களை யெல்லாம் அமையப் பெற்றிருக்கலாம். ஒருவன் தன்னுடைய தேகத்திலுண்டான காயங்களில் ஜனிக்கக்கூடிய கிருமிகளையும் கொல்வதர்க்கு மனமில்லாமல் அத்துணை த்தயாள குணமுள்ளவனுக இருக்கலாம். மற்றெருருவன் தன்னுடைய அசுத்தமான வஸ்திரத்திலும் தலை ரோமத்திலும் தானே உற்பத்தியாகும் பேனையாவது, அல்லது தன்னுடைய இரைப்பையிலும் மணிக்குடரிலும் புழுக்கக்கூடிய நாக்குப்பூச்சிகளையாவது மாய்ப்பதற்கு மனமில்லாதவனுய் அத்துணை இளகிய சித்தமுள்ளவனு யிருக்கலாம். இன்ன மொருவன் கஸ்தூரியையாவது தேனையாவது உபயோகிக்கக் கூடாதென்று எண்ணக்கூடிய அத்துணை மிருதுவான தயாளத்துவத்தை அடையும்படியான ஹிருதயத்தை யுடையவனு யிருக்கலாமென்றும் யான் ஒத்துக் கொள்ளுகிறேன்; ஏனெனின், பரிதாபகரமான தேனீக்களை விரட்டியடித்துக் கொன்ற பின்னரே தேனுனது பிழியப்படுகிறதாம்; இவ்வாறே கஸ்தூரி மானெனும் மிருகத்தைக் கொன்று அதன் குட்டிகளை விட்டுத்

தாயைப் பிரித்த பின்னரே அதன் வயிற்றிலிருந்து கஸ்தூரி யானது எடுக்கப்படுகிறதாம்; இன்னம், உயிர்ப் பிராணிகளைக் கொன்ற பின்னரே பட்டும் முத்தும் கொண்டுவரப் படுகின்றமையால், அப்படிப்பட்ட பட்டையும் முத்தையுங்கூட உபயோகிக்கக் கூடாதென்று கருதக்கூடிய அத்துணைத் தயாள சிந்தையையுடைய மனிதர்களும் சிலர் இருத்தல் கூடுமென்பதையும் யான் மறுத்தற்குத் துணியவில்லை. இன்னம், தமது தேகத்திலுள்ள இரத்தமானது அதிகப்படுங் காலையில் அட்டைகளைக்கொண்டு அந்த அதிகப்படியான இரத்தத்தை உறுஞ்சி எடுத்துவிட்டுத் தமது தேக சுகத்தை நல்ல நிலைமையில் வைத்துக் கொள்வதை விட்டு, தம்முடைய உதிரத்திலுள்ள சிறுசிறு நுண்ணிய கிருமிகளை யெல்லாம் அழிப்பது கூடாதென்று கருதித் தாமே அதனா லுண்டாகக்கூடிய அத்தனை விதமான கஷ்டங்களையும் சகித்துக் கொண்டிருக்கக்கூடிய அத்துணை மென்மையான மன இரக்கத்தையுடைய மனிதர்களும் இவ்வுலகினில் இருத்தல் சாலும். இன்னம் ஜலத்தைப் பருகினால் அதனாலும் பல உயிர்க்கிருமிகள் நாசமடையுமெனக் கருதி ஒருவன் தாகத்துக்கும் தண்ணீர் அருந்தாமல் அந்த ஜலத்திலுள்ள கிருமிகளை வதைப்பதைப் பார்க்கினும் தன்னுடைய ஆவியையே மாய்த்துக்கொள்வதே சர்வ சிலாக்கியமான காரியமெனக்கொண்டு, தன்னுடைய தாகத்தினாலேயே தபித்துத் தனது ஆருயிரைத் துறக்கக்கூடிய அத்துணைத் தயாளத்துவமான இளகிய மனத்தையுடைய மனிதனும் இருத்தல் கூடுமென்பதையும் இறுதியில் யான் தாராளமாக ஒத்துக்கொள்ளுகிறேன். இவற்றினை யெல்லாம் யான் அங்கீகரித்துக்கொள்ளுகிறேன்; ஆனால், இப்படிப்பட்ட அறியாத்

தனமான செய்கைக ளெல்லாம் சன்மார்க்க ஒழுக்கத்தை உண்டுபண்ணி விடுமென்றுவது அல்லது அச்சன்மார்க்க நிலைமைக்கு அவசிய மென்றுவது நம்பக்கூடிய யாதொரு புத்திமானேனும் இத்தரணியி லுண்டோவென்று யான் கேட்கின்றேன். ஆண்டவனைப்பற்றிய உண்மையான ஞானத்தை யடைய வொட்டாமல் தடுத்தற்குரிய அந்தரங்க அசுசித்தங்களை யெல்லாம் அடியோடொழித்து ஆத்மஞான பரிசுத்தத்தை அடைதற்குரிய வழியானது இதுதானோ? மனிதர்களிடத்தி லிருப்பதைக் காட்டிலும் சில மிருகங்களிடத்திலும் பக்ஷிகளிடத்திலும் அதிகமாகக் காணப்படும் இப்படிப்பட்ட தீங்கற்ற தன்மையும் குற்றமற்ற ஸாத்விக குணமும் கோரிய பரிபக்குவத்தை யடையக்கூடிய மார்க்கங்களாக ஒருபோதும் இருப்பது முடியா. ஆனுல், அதற்குமாறாக அச்செய்கைகளெல்லாம் இயற்கையின் விதிகளை எதிர்த்து அவற்றுடன் யுத்தம் புரிவதாகவே ஆகும். இவையெல்லாம் இயற்கையானது நமக் களித்திருக்கும் போக பாக்கியங்களின் பிரயோஜனத்தை வேண்டாமென்று உதைத்துத் தள்ளுவதேயாகும். நம்மிடத்திலுள்ள பல்வேறு வகையான சக்திகளையெல்லாம் அவ்வவற்றிற்குரிய சமயம் வாய்க்கும் வேளையில் அவ்வவற்றிற்குரிய இடத்தில் தொழில் செய்யும்படியாக நாம் அவற்றை மிதத்துடன் நடாத்தி, எல்லாம் வல்ல அல்லாஹுத் தஆலாவானவன் நமக்குக் காண்பித்துக் கொடுத்திருக்கும் மேலான பாதையில் விடாமுயற்சியுடன் அவனுடைய விருப்பத்துக்கு நம்மை முழுதும் அடிமையாக்கி ஒழுங்காக நடந்துவந்தாலொழிய ஆத்மஞான சம்பந்தமான பரிபூரணத்தை நம்மால் ஒருபோதும் அடைவது முடியாது. ஆண்டவனுடைய

பாதையில் தன்னையே தியாகம் செய்துவிடும் ஒருவன் அவ னில்லாமல் ஒரு நிஷமும் தனித்திருப்பது முடியாது. மேலும் அவன் ஆண்டவனுடைய கையினுல் குர்பானீ செய்யப்பட்ட ஒரு மச்சத்தைப்போ லிருக்கிறான்; ஆதலின், அவன் அம் மச்சத்துக்குரிய சமுத்திரமாகிய ஆண்டவனுடைய இன்ப சாகரத்தில் மூழ்கி இருப்பதையே அதிகம் விரும்புவான். ஆண்டவனுடைய நேசத்தை மறந்து அணுவளவும் அவன் பிரிந்திருக்கத் துணியான்.

நான் எடுத்துக்கொண்ட விஷயத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்ய மீளுவேணுயின், யான் ஏற்கெனவே கூறியதேபோல் மனிதனுடைய மூவ்வகைத் தன்மைக்குரிய ஆதாரங்களும் மூவ்வகைப் பட்டனவாகவே காணப்படுகின்றன ; அவை யாவன : நப்ஸெ அம்மாரா (முரண்படுகின்ற ஆத்மநிலை), நப்ஸெ லவ்வாமா (தன்னிடத்தே குற்றங் காணும் ஆத்ம நிலை), நப்ஸெ முத்மஇன்ன (சாந்திநிலையை அடைந்திருக்கும் ஆத்மநிலை) என்பனவாம். ஆதலின், இப்படிப்பட்ட மூவ் வகை நிலைமைக்குத் தக்கவாறு மனிதனுடைய பரிபக்குவமும் மூவ்வகைப்பட்ட படித்தரத்தை யுடையதாய்க் காணப்படு கின்றது. முதற் படியில் மிருகப் பிராயமான மனிதர்களை மனிதத் தன்மைக்குக் கொண்டுவர வேண்டிய ஆவசியகம் ஏற் படுகின்றது ; அவர்களுடைய தினசரியான சமூக வாழ்க் கையில் ஒருவரோ டொருவர் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்னும் ஆரம்ப விஷயங்களைக் கற்றுக் கொடுத்து அவர்களை நாகரிகத்தின் முதற்படிக்குக் கொண்டு வருதல் அத்தியாவசியமா யிருக்கிறது. ஆதலின், காட்டு மிருகாண்டி யான மனிதர்களுக்கு முதன் முதலில் கற்றுக் கொடுக்க

வேண்டிய பாடம் இதுதான். இடையில் ஆடையில்லாமல் ஆணும் பெண்ணும் வெளியில் உலாவித் திரியக் கூடாதென்றும், பிணங்களைப் பிய்த்துத் தின்னக்கூடிய நாய்களைப் போலிருக்கக் கூடாதென்றும், இன்னம் இப்படிப்பட்ட ராக்ஷஸச் செய்கைகளை யெல்லாம் செய்யக் கூடாதென்றும் ஆரம்பத்தில் அவர்களுக்குப் போதித்தல் வேண்டும்; மனிதனைச் சீர்திருத்தம் செய்வதற்கு இது தான் அடிப்படையா யிருக்கின்றது. உதாஹரணமாக, போர்ட்பிளேரின் (அந்தமான் தீவின்) காடுகளில் நாகரிக மென்பதே இன்னதென் றறியாமல் அஞ்ஞான அந்தகாரத்தில் அலைந்து திரியும் பாமரத் தன்மையுள்ள பழங்குடிகளை முதன் முதலில் இப்படிப்பட்ட எளிய முறைகளின் வழியே செல்லச் செய்து, அன்றாடம் மிகச் சாதாரணமான வாழ்க்கை பழக்கத்திலுள்ள கீழ்ப்படி இலேசான சன்மார்க்க ஒழுக்கங்களையே போதித்தல் வேண்டும். சமூக வாழ்க்கைக்குரிய இப்படிப்பட்ட இலேசான ஒழுக்கங்களில் அந்தப் பாமரன் தேர்ச்சியடைந்த பின்னர் ஆத்மாவின் இரண்டாவது நிலைமைக்குச் செல்ல அருகதையுள்ளவனாகிறான். அதன்பின் மனிதத் தன்மைக்குரிய மகாநேர்த்தியான உயர்தரமுள்ள இன்னரிய பாடங்களையெல்லாம் படித்துக் கொடுத்தல் வேண்டும். அப் பொழுது அவனுடைய சக்திகள் முழுவதையும் இன்னவிதமான ஒழுங்கில் உபயோகிக்க வேண்டுமென்றும், அப்படிப்பட்ட சக்திகளினுள்ளே இன்னவிதமான அதிசய மெல்லாம் மறைக்கப்பட் டிருக்கிறதென்றும் அவனுக்குத் தெரிவித்தல் வேண்டும். இவ்வாறு இரண்டாவது படித்தரத்தில் தேர்ச்சி யடைந்து மகா சிலாக்கியமான சற்குணங்க ளனைத்தையும் பெற்றுக் கொண்டவர்கள் மூன்றாவது

நிலைக்குச் செல்லுதற்குரிய போக்கியதையை அடைகிறார்கள். அவர்கள் வெளிப்படையான பரித்ராணத்தை அடைந்தவுடனே ஆண்டவனுடைய ஐக்கிய சம்பந்தமான ஆத்மஞான முக்தியையும் பெற்றுக்கொள்ளுமாறும் அவ்வாறு தங்களுக்குக் கிடைத்த ஆனந்தப் பெருவாரிதியுள் ஆழமாக மூழ்கிவிடுவதற்குண்டான இன்பசாரத்தையும் காட்டவேண்டும். ஆண்டவனுடைய பாதையில் அவனுடைய ஞானத்தை நாடிச் செல்லும் ஒவ்வொரு மனிதனுக்குமுரிய வழியானது இப்படிப்பட்ட மூவகை நிலைகளின் வழியேதான் செல்லவேண்டுமென்று எமது குர்ஆன் ஷரீபு வேதமானது விளக்கிக் காட்டியிருக்கின்றது.

இவ்வுலகமுழுதும் அஞ்ஞான அந்தகாரத்தின் ஆழியபாதாளத்துள் அழுந்திக்கிடந்த அக்காலத்திலேதான் எம்முடைய நபிகள் நாயகமவர்கள்[ஸல்] திருவவதாரம் புரிந்தார்கள். இதைக் குறித்துக் குர்ஆன் ஷரீபானது பின்வருமாறு கூறுகின்றது: ظهر الفساد في البر والبحر "நிலமும் நீருமாகிய இரண்டும் கெட்டுப்போய்க் கிடக்கின்றன"—(30:41). இதிலுள்ள உருவக வாக்கியத்தை வியாக்கியானம் செய்து கூறுவோமாயின், அஹ்லெகி(த்)தாபுஃ, அஃதாவது, ஆண்டவன் திருச்சமுகத்திலிருந்து அருளப்பெற்ற திருமறைகளை அழிக்காமல் வைத்திருப்பவர்களும், அஃதல்லாத ஏனையோரும், அஃதாவது, தேவஞான வெளிப்பாட்டையே எப்பொழுதும் பத்திரமாய்க் காப்பாற்றியிருப்போரும் அஃதல்லாதாரும் ஆகிய அனைவரும் அஞ்ஞான அந்தகாரத்திலேயே அலைந்து திரிந்தார்களென்று தெரிந்து கொள்வோம். ஆதலின், அப்பொழுது மரித்துக் கிடந்த இந்தத் தரணிக்குக் குர்ஆன் ஷரீபானது வந்து புத்து

யிர் கொடுக்கவேண்டுமென்னும் நன்னோக்குடனேயே ஆண்டவன் அவ்வேதத்தை அனுப்பி யருளினான்: اعلموا ان الله يحيى الارض بعد موتها “மரித்துக்கிடந்த பூமிக்குப் பிறகு ஆண்டவன் புத்துயி ரளித்துக்கொண்டு வருகிறானென்று நிச்சயமாக அறிந்து கொள்வீர்களாக”—(57:17). அக்காலத்தில் அரபுநாடு முழும் அடர்த்தியான அந்தகாரமும் அளவுக்கு மீறிய அநாகரிகமுமே நிறைந்து கிடந்தன. சமூக வாழ்க்கைக்குரிய சட்டமொன்றும் அங்கே காணப்பட்ட தில்லை. மகா அநீதமான பாதகத் தொழிலெல்லாம் அதிகமான பகிரங்கத்துடனேயே செய்யப்பட்டு வந்தன. அந்த அராபிகளோ அளவுக்கு மீறிய எண்ணிக்கையை யுடைய ஸ்திரீகளை யெல்லாம் மனையாட்டிகளாக வைத்திருந்தார்கள்; தெய்வ நீதிக்குப் பொருத்த மில்லாத சகல காரியங்களும் சட்டமாகவே நடத்தப்பட்டுவந்தன. பெண்களைக் கற்பழித்தலும், பந்துக்களைப் பெண்டாள்வதும் அந்நாட்டிலே அதி யுச்சஸ்தானத்தையே யடைந்திருந்தன; அடிக்கடி அவர்கள் தங்களுடைய மாற்றாந்தாயை மனைவியாகச் செய்துகொள்ளுவார்கள். இப்படிப்பட்ட அடாத அக்கிரமத் தொழிலை அடியோடு நிறுத்தும் பொருட்டே ஆண்டவன் அடியிற் காணுமாறு தன் திருமறையில் கூறியிருக்கிறான்: حرمت عليكم امهاتكم “மேன்மையான உங்களுடைய தாய்மார்கள் உங்களுக்கு ஹராமென்று தடுக்கப்பட் டிருக்கிறார்கள்”—(4: 23). மிருகங்களைப்போல அவர்கள் செத்த பிராணிகளைத் தின்பார்கள்; நரமாம்ச போஜனமும் அவர்களுக்கு அக்காலத்தில் அருவருப்பா யிருந்ததில்லை. அவர்களால் எதேச்சையாய் இழைக்கப்படாத யாதொரு விதமான கொடிய பழக்கமும் இவ்வுலகினில் இருந்ததில்லை. அவர்களுள்

பெரும்பான்மையோர் மரணத்துக்குப் பின்னுள்ள வாழ்க்கை யொன்று இல்லை யென்றே மறுத்து வந்தார்கள்; மற்றும் பலரோ நிரீசுவரக் கொள்கையை யுடையவரா யிருந்தனர். சிசு ஹத்தியானது அந்நாடு முழுதுமே அதிகமாக வளர்ந் தோங்கி வந்தது; கதியற்றவர்களின் பொருளைக் கவர்ந்து கொள்ளும் பொருட்டு அந்த அகதிகளைச் சற்றும் இரக்க மில்லாமலே படுகொலை புரிந்து வந்தார்கள். வெளித் தோற் றத்தில் மட்டும் அவர்கள் மனிதவுருவை அடைந்தவராகக் காணப்பட்டார்கள்; ஆனால், அந்தரங்கத்திலோ அவர்கள் மனித சுபாவத்துக்குரிய பகுத்தறி வென்பதை மெய்யாகவே சிறிதளவும் பெற்றிராத மிருகப் பிராணியாகவே யிருந்து வந் தார்கள்; இன்னம் சௌலப்பியம் சாத்விகம் முதலிய ஆண் மைக் குணங்களும் அவர்களிடத்தி லில்லை. மதுபான மென் பது அவர்களுக்குள் ஒரு மட்டிலடங்காத அமித வேட்கையா யிருந்து வந்தது; பிறர் மனை விழைத லென்பதோ யாதொரு விதமான தட்டுத்தடங்கலு மில்லாமல் எதேச்சையாய் இழைக் கப்பட்டே வந்தது. அத்தேசத்திலே அக்ஞான மென்பது அதி யுச்சத்தை யடைந்திருந்ததனால் அக்கம்பக்கத்தி லுள்ளவர்க ளெல்லாம் அந்தஅரபிகளை உம்மீகள் அஃதாவது அறியாதமாக் கள் என்றே அழைத்து வந்தார்கள். இதுதான் அக்காலத்தில் ஒருவாறு அந்த அரபிகளின் அந்தகார இலக்ஷணமா யிருந்து வந்தது; இப்படிப்பட்ட இராக்ஷஸப் பேய்களாகிய அக்ஞான மூடர்களைச் சீர்திருத்தம் செய்யும் பொருட்டே ஆண்டவ னுடைய அருள்வாக்கை ஏற்றுக்கொண்டு அந்த அரப்நாட்டுத் திருநபியவர்கள் ஸல் அல்லாஹு-த் தஆலாவினால் அத்தேசத் திற்கேஅனுப்பப் பட்டார்கள். ஆதலின், யான் ஏற்கெனவே

குறிப்பிட்டுள்ள மூவ்வகை நிலையாகிய மனிதசீர் திருத்தமானது இப்படிப்பட்ட காலத்திலே அந்த அரப் தேசத்துக்குத்தான் முதன்முதலில் ஆண்டவனுடைய அருள்வேதத்தினால் கிடைக்கக்கூடிய பாக்கியமானது கிட்டிற்று. இக் காரணத்தினால்தான் எமது குர்ஆன் ஷரீபு வேதமானது மனித கோடிகளுக்காக அனுப்பப்பட்ட ஒரு பரிபூரணமான திருமறை யென்று உரிமை பாராட்டிக் கொள்ளுகின்றது ; எல்லாவிதமான சம்பூர்ணமுள்ள சீர்திருத்த மனைத்தையும் செய்து வைக்கும்படியான அதிருஷ்டமானது இத்திருவேதத்துக்கு மட்டுந்தான் கிடைத்திருந்தது ; ஆனால், இப்படிப்பட்ட இயம்புதற்கரிய அதிருஷ்ட வசமானது இவ்வுலகிலுள்ள ஏனை மதங்களுக்குக் கிடைத்த தில்லை. குர்ஆன் ஷரீபின் முன்னே காணப்பட்ட இலக்ஷியமானது மகாசிரேஷ்டமான சீர்திருத்தமா யிருந்தது. ராக்ஷஸத் தன்மையுள்ள பாமர நிலைமையி லிருந்த மிருகப்பிராயமான இருகால் மாக்களை இவ்வேதமானது முதன் முதலில் மக்களாகச் செய்யவேண்டி யிருந்தது ; இருகால் மிருகங்களை இருகால் மனிதர்களாகச் செய்த பின்னர், அவர்களுக்குச் சன்மார்க்க ஒழுக்கங்களை யெல்லாம் கற்றுக்கொடுத்து, சற்குணசீலர்களாகச் செய்யவேண்டிய அத்தியாவசியமு மிருந்தது. அதற்குமேல் அப்படிப்பட்ட சாதுக்களை ஆத்மார்த்தமான வாழ்க்கையின் மகா உச்சத்திலுள்ள ஸ்தானத்தை அடையும்படி செய்து, அவர்களைத் தெய்வீக மனிதர்களாக மாற்ற வேண்டிய நோக்கமு மில்லாமற் போகவில்லை. இந்த முத்திறப்பட்ட நிலைமைகளுக்கு வேண்டிய மகா உசிதமான படிப்பினைகளை யெல்லாம் குர்ஆன் ஷரீபு வேதமானது அதிக விகசிதமாகவே கூறியிருக்கின்றது.

யான் எடுத்துக்கொண்ட விஷயசம்பந்தமான, அஃதாவது, மனிதர்களுடைய மூவ்வகைப்பட்ட சீர்திருத்த சம்பந்தமான விஷயம் முழுதையும் விஸ்தரித்துப் பேசப் புகுமுன் மற்றொரு முக்கியமான விஷயத்தையும் உங்களுடைய கவனத்துக்குக் கொண்டுவர வேண்டிய திருக்கிறது. மனிதனுடைய பகுத்தறிவுக்கு முரணான எப்படிப்பட்ட கொள்கையையும் எமது குர்ஆன்ஷரீபானது எள்ளளவும் போதிக்கவில்லை யென்பதை நீங்கள் ஒவ்வொருவரும் நன்றாக ஞாபகத்தில் இருத்திக்கொள்ளல் வேண்டும்; ஆதலின், ஒருவன் தன்னுடைய பகுத்தறிவின் பார்வைக்கு விரோதமான யாதொரு காரியத்தையும் செய்யவேண்டிய அவசியமானது எமது இஸ்லாமார்க்கத்தி லில்லை. புர்கானுல் மஜீதென்னும் குர்ஆன் ஷரீபு முழுதும் காணப்படும் போதனையின் சாரமனைத்தும் மனிதனை மேற்கூறிய மூவ் வகைப்பட்ட படித்தரத்திலே வைத்து முன்னுக்குக் கொண்டுவர வேண்டுமென்பதே யாகும்; இவ்வேதத்தில் காணப்படும் வேறுவிதமான ஏவல் விலக்கல்களெல்லாம் இந்த முக்கியமான நோக்கத்திற் கனுசரணையாகவே அமைக்கப்பட் டிருக்கின்றன. சரீர சம்பந்தமான வியாதிகளைத் தீர்க்கும் விஷயத்தில் வைத்திய சாஸ்திரியானவன் சஸ்திரவிகித்ஸைக்காக அறுக்கவேண்டிய காலம் இன்னதென்றும்,அதை ஆற்றவேண்டிய காலம் இன்னதென்றும்,அது அதற்குரிய அவசியமும் இன்னதென்றும் அறிந்துகொண்டு, அவ்வாறு செய்த சஸ்திரப்புண்ணை ஆற்றும்பொருட்டுத் தக்க வேளைகளில் ரணக்களிம்பு முதலிய மருந்துகளை உபயோகிப்பதேபோல் குர்ஆன்ஷரீபும் அவசியமான வேளைகளில் அவசியமான காரியத்தி னிமித்தம் பற்பல விதமான ஏவல் விலக்

கல்களை யெல்லாம் படித்துக் கொடுக்கின்றது. அவ் வேதத்தி லுள்ள எல்லாச் சன்மார்க்க போதனைகளும், எல்லாக்கொள் கைகளும் மற்றுமுள்ள எல்லா ஏவல் விலக்கல்களும் பகிரங் கத்தில் பல்வேறு வகைப்பட்டனவாய்க் காணப்பட்ட போதி னும், அவற்றின் அந்தரங்க நோக்கம் முழுதும் ஒரே இலக்ஷி யத்தை உடையதாகவே காணப்படுகின்றது: மனிதனை அவ னுடைய மிருகப் பிராயமான தன்மையிலிருந்து சன்மார்க்க நிலைமைக்குக் கொண்டுபோய், அந்தச் சன்மார்க்க சாதுத் தன்மையிலிருந்து ஆத்மஞான சம்பந்தமான ஆழிய சாகரத் துள் ஆழ்த்திவிட வேண்டு மென்பதே அந்த நோக்கமா யிருந்துவருகிறது.

மனிதன் தன்னுடைய ஸ்தூலதேக சம்பந்தமான சமூக வாழ்க்கையி லிருப்பதற்கும் அவனுடைய சன்மார்க்க நிலைமைக்கும் அவற்றின் குணவிசேஷத்தில் ஒன்றும் அதிகமான வித்தியாச மில்லை யென்று யான் முன்னரே விளக்கி யிருக்கிறேன். அஃதாவது, நம்முடைய சமூக வாழ்க் கைக்குரிய ஸ்தூல தேக சம்பந்தமான குணநிசயங்களை யெல்லாம் மிதமென்னும் அளவின்கீழ்க் கொண்டு வந்து, நம்முடைய பகுத்தறிவுக்கும் பக்குவமான ஞானத்துக்கும் முழுதும் ஒத்தவண்ணமாக அவ்வவற்றிற் குரிய அவசியமான வேளையில் அவ்வக் குணத்தை மேற்கொண் டொழுகுவோ மாயின், அப்பொழுது சன்மார்க்க நிலைமைக் குரிய படித்தரத் துக்கு வந்து சேர்கின்றோம். ஆனால், ஒருவன் தன்னுடைய நடத்தைகளை யெல்லாம் தனக்குச் சொந்தமான பகுத்தறிவும் மனச் சாக்ஷியும் உபதேசிக்கும் முறைமையின் பிரகாரம் ஒழுங்கு செய்து கொள்ளானாயின், அவனுடைய செய்கைக

ளெல்லாம் எவ்வளவு அதிகமாகச் சன்மார்க்க ஒழுக்கத்தை ஒத்திருந்த போதினும், அவையொன்றும் ஒருபோதும் சன் மார்க்க முறை யென்னும் படித்தரத்தின் கீழ்வந்து அமைய மாட்டா; அவையனைத்தும் இயற்கையான தாந்தோன்றித் தனமாக உற்பத்தியாயின வென்றே கூறப்படும். நம்முடைய செய்கைக ளெல்லாம் பகுத்தறி வென்னும் பரமாசாரியனது பார்வையின்கீழ் வந்தாலொழிய நாம் மாக்களின் நிலைமையைத் தாண்டி மக்கள் தொகுதியுள் சேர்ந்து விட்டதாகக் கூறுவது முடியாது. உதாஹரணமாக, ஒரு நாயானது தன்னுடைய எஜமானிடத்தில் காண்பிக்கும் பிரியத்தையும், அல்லது ஓர் ஆட்டுக்குட்டியானது தன்னிடத்தில் கொண்டிருக்கும் சாதுத் தன்மையையும், அல்லது வேறெந்த வீட்டுப் பிராணியேனும் தன்னுடைய சொந்தக்காரனிடத்தில் காட்டிவரும் பக்ஷத்தை யும் ஒருபோதும் சன்மார்க்க ஒழுக்கத்துக்குரிய மேலான மேதை மரியாதைகளென்று நாம் கருதமாட்டோம்; அல்லது ஓர் ஓநாயினிடத்தில் காணப்படும் இரத்தவெறியும், அல்லது ஒரு சிங்கத்தினிடத்தில் காணப்படும் துஷ்டத்தனமும் பாமரத் தன்மை யென்றாவது அல்லது காட்டுமிராண்டித்தன மென்றா வது ஒருபோதும் கூறப்பட மாட்டா. ஆனால், பகுத்தறிவின் பாகுபாட்டைக் கொண்டு பக்குவமாகச் செய்யப்படும் செய் கைகளைத்தாம் நல்லொழுக்க மென்றும், அப்படிப்பட்ட பகுத் தறிவை உபயோகிக்காமல் பாமரத்தன்மையாகச் செய்யப் படும் காரியத்தைத்தான் தீய ஒழுக்க மென்றும் நாம் பாகு பாடு செய்து கூறுகின்றோம். தக்க சமயத்திலே பக்குவமான பகுத்தறிவுடன் செய்யப்படும் நற்காரியங்களையே சன்மார்க்க ஒழுக்க மென்று எவரும் கூறத் துணிவார்; தன்னுடைய

பகுத்தறிவின் ஞானத்தைப் பக்குவமாய் உபயோகித்துக் கொள்ளாத மனிதனுடைய செய்கைகளை யெல்லாம் பகுத்தறிவின் முதிர்ச்சியைப் பெறாத ஒருசிறு குழந்தையின் செய்கைகளுக் கேனும், அல்லது பகுத்தறிவு முழுமையும் அடியோ டிழந்திருக்கும் ஒரு பயித்தியக்காரனுடைய செய்கைகளுக் கேனும் மட்டுந்தாம் ஒப்பிட்டுக் கூறலாம். ஒரு பித்தனின் அல்லது ஒரு குழந்தையின் செய்கைகளை ஒரு பக்கத்தில் வைத்துக்கொண்டு, பகுத்தறிவுள்ள ஒரு சரியான மனிதனுடைய செய்கைகளை மற்றொருபக்கத்தில் வைத்துக்கொண்டு, இவ்விரண்டுவிதச் செய்கைகளுக்கு மிடையிலுள்ள வேற்றுமை என்னவென்று ஆராயப் புகுவோமாயின், சிறுகுழந்தைகளின் செய்கைகளும் பித்தர்களுடைய செய்கைகளும் பகுத்தறிவென்னும் பரமாசாரியனுடைய பராமரிப் பில்லாமலே எல்லாம் தாந் தோன்றித்தனமாகவே நடைபெறுகின்றன வென்றும், ஆனால், நல்லமனிதனுடைய செய்கைகளனைத்தும் அந்தப் பகுத்தறிவின் பயனாகவே நடைபெற்று வருகின்றன வென்றும் செவ்வனே தெரிந்துகொள்வோம். ஆகவே, ஐயறிவுயிர்க்கும் ஆறறிவுயிர்க்கும் இடையிலுள்ள வித்தியாச முழுதும் இந்தப் பகுத்தறி வென்னும் ஆறாவது அறிவில்தான் சார்ந்திருக்கிறது. ஆனால், பிராணிவர்க்கத்துக்கு இயற்கையாயமைந்துள்ள தன்மையானது பகுத்தறிவின் செய்கையாக மாட்டாது. உதாஹரணமாக, உதரத்தினின்று அன்றுதித்த குழந்தையானது தான் பிறந்து கீழே வீழ்ந்தவுடன் இயற்கையாகவே பாலருந்தும் பொருட்டுத் தாய்முலையை நாடுகின்றது; ஆனால், கோழிக் குஞ்சொன்று தன் முட்டைக் குள்ளிருந்து வெளி வந்தவுடனே மூக்கினால் இரையைக் கொத்த

ஆரம்பிக்கிறது. இவ்வாறே அட்டையின் குணமானது அதன் சிறு பிராணியினிடத்திலே காணப்படுகிறது. இன்னம் இவ் வண்ணமாகவே சிங்கத்தின் குருளையும், சர்ப்பத்தின் குட்டியும் தன் தன்னுடைய ஜாதிக்குரிய குணத்தை இயற்கையாகவே இளமையிலேயே பெற்றுக்கொள்ளுகின்றன.

இளங் குழந்தைகள் தாம் பிறந்து வீழ்ந்தவுடனேயே மனித சுபாவத்துக்குரிய இயற்கைக் குணங்களை வெளிப் படுத்துகின்றன; நாட் செல்லச் செல்ல இப்படிப்பட்ட இயற்கைக் குணங்களெல்லாம் அதிகமாக அக்குழந்தைகளிடம் பிரதிபலிக்கத் தொடங்குகின்றன. ஆரம்பத்தி லிருந்த மெல்லிய அழுகையானது அதன் பின் உரத்த சப்தமாக மாறிவிடுகிறது; அப்பொழுதிருந்த புன்சிரிப்பும் பின்னேயொரு பெருஞ் சிரிப்பாக மாறிவிடுகின்றது. பிறகு அக்குழந்தையானது தன்னுடைய விருப்பு வெறுப்பையெல்லாம் தனக்குத் தெரிந்த தலையசைப்பாலும் கையசைப்பாலும் தெரியப்படுத்துகின்றது. ஆனால், இப்படிப்பட்ட சிரக்கம்பம் கரக்கம்பங்களெல்லாம் அக் குழந்தையின் அறிவின் காரணத்தாலே உண்டாவதில்லை; ஆனால், அந்த அசைப்புமுழுதும் இயற்கையின் குணமாகவே வெளிப்படுகின்றது. குழந்தையானது சிரிக்கும்பொழுதும் அழும்பொழுதும் விளையாடும்பொழுதும் விழும்பொழுதும்தன்னுடைய பகுத்தறிவை உபயோகித்துச் செய்வதில்லை. தன்னுடைய அறிவானது மிகச் சாதாரணமான ஆரம்பதசையி லிருக்கும்போது அப்படிப்பட்ட பாமரத் தன்மையிலுள்ள காட்டு மிருகாண்டியின் நிலைமையும் அந்தக்குழந்தையின் தன்மைபோலத்தா னிருக்கிறது. குழந்தைகளைப்போல் அம்மனிதனும் தன்னுடைய இயற்கையின் குணவிசேஷத்தாலேயே தன் செய்

கைகளை யெல்லாம் செய்து முடிக்கிறான்; அவன் தான் செய்யும் காரியங்களில் தன்னுடைய பகுத்தறிவைச் சிறிதும் உபயோகிக்காமல் தன்னுடைய மனம் போனபடி யெல்லாம் நடந்துவருவான். மனத்தின் தன்மையை அடக்கியாளக் கூடிய பகுத்தறிவென்பது அப்பாமரனுக்குச் சற்றும் தெரிய மாட்டாது; ஆதலின், அவனுடைய செய்கைகளனைத்தும் அவனிடத்திலுள்ள பகுத்தறிவின் பயனால் விளைவதில்லை. நல்லது இன்னதென்றும், கெட்டது இன்னதென்றும் அவன் தன்னுடைய பகுத்தறிவைக்கொண்டு பாகுபாடு செய்து கொள்வதில்லை. ஆனால், அவனுடைய இயற்கையான சுபாவமானது வெளியுலகத்திலுள்ள தன்மைகளுடன் கலந்தவுடனே அவையொரு செய்கையாகத் தொழின் முகத்தால் வெளிப்படுகின்றன. ஆயினும், இப்படிப்பட்ட செய்கைகளனைத்தும் அவசியமாக எப்பொழுதும் தகாத கிரியைகளாகவே யிருக்குமென்று எண்ணுவது தகாது; இச் செய்கைகளுள் சில பகுத்தறிவுள்ள நல்ல புத்திமான்களுடைய கூரிய செயல்களைப் போல் காணப்படலாம்; ஆனால், அவை மனிதனுடைய பகுத்தறிவின் ஆராய்ச்சிக்குப் பின்னே யுண்டாகும் ஆழிய அறிவின் பயனாக வாவது, அல்லது அவற்றின் குணதோஷங்களைத் தெரிந்து அவற்றிற்குத் தக்கவாறாகவாவது செய்யப்படவில்லை யென்பதைமட்டும் ஒருவராலும் மறுத்துரைப்பது முடியாது. மிருகப் பிராயமான காட்டு மிருகாண்டியின் செய்கைகளுள் சிலவற்றில் பகுத்தறி வென்னும் சாயல் ஒரு சிறிது காணப் படுதல் கூடுமென்று நாம் ஒருவாறு ஒத்துக் கொண்டபோதினும், அவனுடைய செய்கைகளை யெல்லாம் பொதுப் படையாக நல்லவை தீயவை யென்னும் பாகுபாட்டின் கீழ்க்

கொண்டுவந்து பிரிவினை செய்வது முடியாது; ஏனெனின், அவனுடைய செய்கைகளுக்கு முக்கிய காரணபூதமா யிருப் பது அவனுடைய பகுத்தறிவின் பாகமன்று; ஆனால், அவனி டத்தில் காணப்படும் இயற்கையான சில குணமாவது அல்லது அவனுடைய மனம்போன வழியெல்லாம் அவன் நடக்கத் துணியும் துணிச்சலாவது அவனுடைய செய்கைகளுக்குக் காரணமா யிருக்கின்றது.

சுருங்கச் சொல்லுமிடத்து, மிருகப் பிராயமான மாக்க ளிடத்துக் காணப்படும் செய்கைகளையும், கீழ்த்தரமான பிரா ணிகளையாவது குழந்தைகளையாவது பித்தர்களையாவது ஒத் திருக்கும் மனப்பான்மை யுள்ளவர்களின் செய்கைகளையும் நாம் ஒருபோதும் சன்மார்க்க நெறிகளென்று குறிப்பிடுவது கூடாது. சன்மார்க்க ஒழுக்கத்துக்குச் செல்லக்கூடிய ஒரு மனிதனுடைய, அஃதாவது, எவனொருவனுடைய செய்கை களை நாம் நல்லவை யென்றும் தீயவை யென்றும் நல்லொழுக்க முறைப்படி பாகுபாடு செய்யக்கூடுமோ, அவனுடைய முதற் படியானது, அவன் நற்கருமத்துக்கும் தீக்கருமத்துக்கும் இடையிலுள்ள பேதாபேதத்தையும், இரண்டு நற்கருமங்களுக் கும் அல்லது இரண்டு தீக்கருமங்களுக்கும் இடையிலுள்ள மேன்மை தாழ்மைகளையும் அவன் நன்குணர்ந்து பாகுபாடு செய்துகொள்ள வேண்டு மென்பதுதான். மனிதனுடைய பகுத்தறிவானது போதுமான வரையில் விருத்தியடைந்து, அதன் பயனாகத் தன்னுடைய ஒவ்வொரு செய்கையின் காரணகாரியப் பொருத்தத்தையும், தன்னுடைய கருமத்தின் பலனானது காலக்கிரமத்தில் என்ன விதமாக விளையுமென்ப தையும் முன்னறிந்துகொண்டு, அதற்குத்தக்கவாறு தன் செய்

கைகளைச் சீர்படுத்திக் கொள்வதுதான். அப்பொழுதுதான் மனிதன் தான் செய்ய மறந்துபோன நற்கருமத்துக்காகவும் அல்லது தான் செய்துவிட்ட ஒரு தீக்கருமத்துக்காகவும் மன வருத்தத்துடன் பச்சாதாபப்பட ஆரம்பிக்கிறான். இதுதான் அவனுடைய இரண்டாவது நிலைமையா யிருக்கிறது. இதைத் தான் குர்ஆன் ஷரீபும் நஃப்ஸே லவ்வாமா, அஃதாவது, "தன்னையே குற்றங் கற்பிக்கும் ஆத்மா" என்று குறிப்பிட் டிருக்கிறது. இதை நாம் இன்னம் விரிவாகச் சொல்லவேண்டுமாயின், இதற்குத்தான் மனச்சாக்ஷியென்று பெயர் கொடுக்கப் பட்டிருக்கிறது. ஆனால், மிருகத்தின் தன்மையிலிருக்கிற ஒரு கீழ்த்தர மனிதனை இப்படிப்பட்ட மனச்சாக்ஷிக் குரிய பச்சாதாப நிலைமைக்குக் கொண்டுவர வேண்டுமாயின், வாயினாலுபதேசிக்கக் கூடிய வெறும் உபதேசம் மட்டும் போதாதென்பதை நீங்கள் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளல் வேண்டும். அவன், தன்னை ஆண்டவன் படைத்திருப்பதானது ஒரு சர்வசாதாரணமான காரியமென்றாவது அல்லது வியர்த்தமான வீண் வேலை யென்றாவது கருதாம லிருக்கக் கூடிய அத்துணைச் சாமான்ய ஞானத்தையாவது ஆண்டவன் சம்பந்தமாக அடைந்திருத்தல் வேண்டும். அல்லாஹுத் தஆலாவின் சம்பந்தமாக இப்படிப்பட்ட ஞானத்தை மட்டுமாவது அடைந்தால் மட்டுமே யல்லாது ஒருவனுக்கு உண்மையான சன்மார்க்க ஒழுக்கத்துக் குரிய பழக்கமானது கிஞ்சித்தும் கிட்டமாட்டாது. இக் காரணத்தினால்தான் குர்ஆன் ஷரீபு வேதமானது மனிதர்களுடைய ஏவல் விலக்கல்களின் சம்பந்தமான படிப்பினைகளைக் கற்பிக்கும்போது இடை இடையே அல்லாஹுத் தஆலாவின் உண்மையான தன்மை

இப்படிப்பட்டதென்று எடுத்துக்காட்டி வருகிறது. இதனால் தான் மனிதனுடைய ஒவ்வொரு நல்ல, அல்லது கெட்ட செய்கைக்கும் இவ்வுலக வாழ்க்கையிலேயே ஆத்மார்த்த சம்பந்தமான ஆனந்தமேனும் அவஸ்தையேனும் உண்டாகக் கூடுமென்றும், மறுவுலக வாழ்க்கையிலும் இதைக் காட்டினும் இன்னம் பிரத்தியக்ஷமாகவும் தெளிவாகவும் இருக்கக்கூடிய சன்மானமும் தண்டனையும் வந்தடையுமென்றும் அந்தத் தெய்வத் திருமறையானது நன்கு விளக்கிக் காட்டியிருக்கின்றது. சுருங்கச் சொல்லுமிடத்து, மனிதன் இந்த இரண்டாவது படித்தரமான தேர்ச்சியை அடைந்தபின், அஃதாவது, பச்சாதாபத்துக்குரிய ந'ப்ஸெலவ்வாமா என்னும் நிலைமைக்கு வந்தபின் அவனுடைய பகுத்தறிவும், ஞானமும், மனச்சாக்ஷியும் அதிகமான அபிவிருத்தியை அடைந்து விடுகின்றன; அப்பொழுது அவன் தன்னுடைய தகாத செய்கைகளுக்காக அதிகமான பச்சாதாபத்தை அடைந்து, இனியெப்பொழுதும் நன்மையையே செய்ய வேண்டுமென்று அதிகமான ஆவலைக் கொள்ளுகிறான். இப்படிப்பட்ட நிலைமையிலேதான் மனிதன் சன்மார்க்க ஒழுக்கத்துக்குரிய யோக்கியதையை அடைந்து விட்டானென்று நாம் குறிப்பாகச் சொல்லலாம்.

இவ்விடத்தில் கு'ல்:க் (நல்லொழுக்கம்) என்னும் பதத்தின் இலக்ஷணத்தைக் கூறவேண்டிய அவசியம் காணப்படுகின்றது. அரபு பாஷையில் இரண்டு பதங்கள் தம்முடைய மெய்யெழுத்துக்களில் ஒத்திருக்கின்றன; ஆனால், அவ்விரண்டுக்குமிடையில் உயிரெழுத்துக்குரிய அடையாளம் ஒன்று மட்டுந்தான் வித்தியாசமாய்க் காணப்படுகின்றது. அவ்

விரண்டு பதங்களுள் ஒன்று க'ல்:க் என்பதாயிருக்கும்; இதன் பொருள் வெளிப்படையான சிருஷ்டி என்பதாகும். மற்றொரு பதம் கு'ல்:க் என்பதாகும்; இதன் பொருள் உள்வயணமான சிருஷ்டி அல்லது ஊடே பிறந்த குணம் என்பதாகும். மனிதனுடைய உள்வயணமான சிருஷ்டியின் பரிபூர்ணமானது அவனுடைய சற்குண சம்பந்தமான முன்னேற்றத்தில் சார்ந்திருக்கிறதல்லாமல் அவனுடைய துர்க்குணங்களில் ஒன்றும் சார்ந்தில்லை. ஆதலின், நல்லொழுக்க சம்பந்தமான முன்னேற்றத்தையே கு'ல்:க் என்னும் பதமானது குறித்துக் கொண்டிருக்கிறது. பொறுமையும் பணிவும் சாந்தமுமே சன்மார்க்க ஒழுக்கத்துக்குரிய நற்குணங்களென்று சாதாரணமாகக் கருதப்பட்டு வரும் அபிப்பிராயத்திலுள்ள தவறான விஷயத்தை நான் இச்சமயத்தில் நன்கு எடுத்துக் காட்டலாம். உண்மையை உசாவுங்கால், நம்முடைய ஒவ்வொரு வெளிப்படையான செய்கைக்கும் அது அதற்குரிய ஓர் உள்வயணமான குணவிசேஷம் காணப்படுகின்றது. இப்படிப்பட்ட பகிரங்கச் செய்கைகளைச் சமயோசிதம்போல் செய்து வருவோமாயின், அவற்றைச் சன்மார்க்க ஒழுக்கமென்று கூறுகிறோம். உதாஹரணமாக, நாம் அழும்போது நம்முடைய சரீரத்தில் வெளிப்படையான தொழிலைச் செய்யக்கூடியது கண்ணாயிருக்கிறது; அதனின்றும் அப்பொழுது நீர்த்தாரைகள் வடிய ஆரம்பிக்கின்றன.

ஆனால், அதே சமயத்தில் நம்முடைய மனத்தின் கண் ஓர் உருக்க முண்டாகிறது; இதனை நாம் மனவிரக்க மென்று கூறலாம். பகுத்தறிவுள்ள மனிதனொருவன் தன்னுடைய இத் தன்மைத்தாகிய மனவிரக்கத்தை இடம் பொரு ளேவ

லறிந்து தக்க சமயத்திலே உபயோகிப்பா னாயின், அதை யொரு மகா சிரேஷ்டமான குணமென்று கூறுகின்றோம். இன்னமும், எதிரிகளால் சூழப்பட்டபோது மனிதன் தன்னைக் காத்துக் கொள்ளும் பொருட்டுத் தன்னுடைய கரங்களை உபயோகிக்கின்றான். ஆனால், இவ்வாறு கைகள் அவனுக்கு வெளிப்படையான உதவியைப் புரியும்போது, அவனுடைய ஹிருதயத்தின்கண் தைரிய மென்று சொல்லக் கூடிய ஒரு வகைத் துணிச்ச லுண்டாகிறது; இப்படிப்பட்ட தைரிய மும் தக்க சமயத்திலே ஒரு சிரேஷ்டமான சற்குணமாகவே பாவிக்கப்பட்டு வருகின்றது. மனிதன் தன்னுடைய சக்திகளை யெல்லாம் சம்பூரணமடையும்படி செய்ய வேண்டுமாயின், இப்படிப்பட்ட தைரியமும் இருந்துதான் ஆக வேண்டும். இவ்வாறே ஒரு மனிதன் சில சமயங்களில் துன்பத்துக்குள் ளான ஒருவனை அத் துன்பம் செய்கிறவனுடைய பிடியி னின்று தன்னுடைய கைகளால் காப்பாற்றி விடுகிறான்; அல்லது ஆதரவற்றவர்களுக்கும் பசிப்பிணியுள்ளவர் கட்கும் ஏதேனும் கொடுக்க வேண்டுமென்று அனுதாபப்படுகிறான். அல்லது வேறெவ்விதத்தி லாவது மனிதவர்க்கத்துக்கு உதவி புரிய வேண்டுமென்று விருப்பங் கொள்ளுகிறான். ஆனா லிவை யெல்லாம் அவனுடைய மனத்தின்கண் தோன்றும் ஒரு வகை இரக்கத்தினால்தான் உண்டாகின்றன. அல்லது சில வேளைகளில் ஒரு மனிதன் தீமைசெய்த மற்றொரு மனித னைத் தண்டிக்கிறான்; வெளிப்படையான இந்தத் தண்டனைக் குக் காரணம் உள்வயணமான நியாயமுறை யன்றோ? நீதி பரிபாலனம் புரியவேண்டு மென்னும் நல்லெண்ணமே குற் றம் செய்தாருக்குத் தண்டனையைக் கொண்டு வருகின்றது.

இன்னம், பிறருடைய கையினின்றும் துன்பமடையும் ஒருவன் தனக்கு வரும் துன்பத்தையும் தடுக்காமல் அத்துன்பம் செய்தவனுக்கும் பதில் துன்பம் செய்யாமல் பொறுமையுடனே சகித்துக் கொண்டிருக்கக் கூடிய சமயங்களும் பல உள; இப்படிப்பட்ட சகிக்குங் குணமானது அவனுடைய மனத்தின் கண் தோன்றும் பொறுமை யென்னும் ஒரு புண்ணிய குணவிசேஷத்தால் தோன்றுகிறது. இவ்வாறே ஒரு மனிதன் தன்னுடைய கைகளைக் கொண்டேனும் கால்களைக் கொண்டேனும் மனத்தைக் கொண்டேனும் மூளையைக் கொண்டேனும் ஐசுவரியத்தைக் கொண்டேனும் மனிதவர்க்கத்துக்குப் பலவகைப்பட்ட நன்மைகளைச் செய்யலாம்; அப்பொழுதெல்லாம் அவனுடைய நெஞ்சில் தர்மசிந்தனை யென்னும் பரிதாபகுணமே மேலிட்டிருக்கும். நாம் முன்னமே கூறியதே போல், இப்படிப்பட்ட குணங்களெல்லாம் அவ்வவற்றிற்குரிய தக்கசமயங்களில் உபயோகிக்கப் பட்டால் மட்டுமேதான் சன்மார்க்க ஒழுக்கங்களென்று கூறப்படுகின்றன. இதனால்தான் எல்லாம்வல்ல அல்லாஹு தஆலாவானவன் தன்னுடைய சொந்தத் திருமறையாகிய குர்ஆன்ஷரீபில் நம்முடைய நபிகள் நாயகமவர்களைக் குறித்துப் பின் வருமாறு கூறியிருக்கிறான்: انك لعلى خلق عظيم

"நிச்சயமாகவே நீர் மகா மேலான நல்லொழுக்கங்களையுடையவரா யிருக்கின்றீர்." அஃதாவது, தயை, தர்மசிந்தை, தைரியம், தயாளம், நியாயம், நீதிமுறை, அருள், அன்பு, பெருந்தன்மை, பேருண்மை, முதலிய சற்குணங்களாகிய எல்லாப் பொற்குணங்களும் நம்முடைய நபி பெருமானா ரவர்களிடம் நிறைந்திருக்கின்றன என்பதுதான் இதன் தாத்பரியம். சுருங்

கச் சொல்லுமிடத்து, மனிதனுடைய மனத்தின்கண் இயற்கையாய் அமைக்கப்பட் டிருக்கும் குணங்களாகிய மரியாதை, தன்னடக்கம், கண்ணியம், தயாளகுணம், தர்மசிந்தனை,விடா முயற்சி, கற்புநிலை, பக்தி, பொறுமை, பக்ஷம் பாராட்டுதல், இரக்கம், துணிவு, சகிக்குங் குணம், சாதுத்தன்மை, அருள், அன்பு,வாய்மை, வாக்குப்பிழையாமை முதலியதன்மைகளெல்லாம்,அவ்வவற்றிற்குரிய வெளிப்படையான செய்கைகள் தக்க சமயத்தில் தொழில் செய்ய ஆரம்பிக்குமாயின், அப்பொழுது தான் சற்குணம் என்னும் நற்குணங்களாகப் பாவிக்கப் படுகின்றன. இவை யெல்லாம் மனிதனுடைய இயற்கையான தன்மைகளா யிருக்கின்றன. ஆனால், அவன் தன்னுடைய இயற்கைக் குணங்களைப் பகுத்தறி வென்னும் பரீக்ஷையின் கீழ்க் கொண்டுவந்து பக்குவமான முறைமையிலே பதப்படுத்திக்கொண்டால் மட்டுமே அவற்றை யெல்லாம் சன்மார்க்க முறையென்று கூறலாம். அபிவிருத்தி யென்பது மனிதனுக்கு இயற்கையாய் அமைந்துள்ள ஒரு விசேஷகுணமாகக் காணப்படுகின்றது; இப்படிப்பட்ட அபிவிருத்தியானது மனிதனல்லாத மற்றைப் பிராணிகளிடத்தில் காணப்படுவதில்லை. இதனால்தான் உண்மையான மதமும், நல்ல சகவாசமும், சன்மார்க்க போதனையும் மனிதனுடைய இயற்கையான மிருகத் தன்மையை மாற்றி, அவனைச் சன்மார்க்க ஒழுக்கத்திலே கொண்டுவந்து சேர்க்கின்றன வென்கின்றோம்.



## ஸ்தூல தேக நிலைமை



ஆரம்பத்திலே சொல்லவேண்டி யிருந்த இவ்விஷயங்களை யெல்லாம் சொல்லி முடித்த பின்னர், நாம் மேலே கூறிய மூவ்வகைச் சீர்திருத்தங்களுள் முதற்படியான ஸ்தூல தேக வாழ்க்கையைக் குறித்து நமது குர்ஆன் ஷரீபென்னும் புர்க்கானுல் மஜீதானது என்ன சொல்லியிருக்கிறதென்று ஈண்டுச் சிறிது கவனிப்போம். மனிதனுடைய நாகரிக அபிவிருத்தியில் இதுதான் ஆரம்பப் படியா யிருக்கிறது; இந்த நிலைமையில்தான் அதப்' என்று சொல்லக்கூடிய மரியாதையான வழக்க ஒழுக்கங்களைக் கற்றுக்கொள்ளுகிறோம். இந்த நிலையில் நம்முடைய தினசரி வாழ்க்கையின் நடத்தைகளை ஒழுங்கு படுத்துவதற்கும், நம்மை மிருகத்தன்மையி லிருந்து மனிதத் தன்மைக்குரிய சமூக வாழ்க்கைக்கு உயர்த்துவதற்கும் வேண்டிய சட்ட திட்டங்களான உண்ணல் குடித்தல் விவாகமுறையைக் கொள்ளல் போன்றவைக ளெல்லாம் மிக விளக்கமாகக் காணப்படுகின்றன. இத்தன்மையை மனிதன் கைக்கொள்வதனால், ஐவாய்ப் பிராணிகள், காட்டு மிருகங்கள், துஷ்டப் பிராணிகளுடைய வாழ்க்கைநிலைமையினின்றும் விடுதலையடைந்து மேற்பதவியை அடைகின்றான். குர்ஆன்ஷரீபானது இதனைக் குறித்துப் பின்வருமாறு கூறியிருக்கின்றது:

حرمت عليكم امهاتكم وبناتكم واخواتكم وعماتكم وخالاتكم وبنات الاخ وبنات الاخت وامهاتكم التى ارضعنكم واخواتكم من الرضاعة وامهات نسائكم وربائبكم التى في حجوركم من نسائكم التى دخلتم

بهن فان لم تكونوا دخلتم بهن فلا جناح عليكم وحلاءل ابناءكم الذين من اصلابكم وان تجمعوا بين الاختين الا ما قد سلف "உங்களுடைய தாய்மார்கள் உங்களுக்கு (விவாஹ முறையினின்றும்) விலக்கப்பட் டிருக்கிறார்கள்; இவ்வாறே உங்களுடைய குமாரிகளும், உங்களுடைய சகோதரிகளும், பிதாவின் சார்பாலான அத்தைமார்களும், உங்களுடைய மாதாவின் சார்பாலான அன்னைமார்களும், உங்களுடைய சகோதரர் சகோதரிகளின் குமாரத்திகளும், உங்களுக்குப் பால்கொடுத்து வளர்த்த போஷகத் தாய்மார்களும், போஷகத் தாயால் பால் கொடுக்கப்பட்ட சகோதரிகளும், உங்களுடைய மனைவியின் மாதாக்களும், நீங்கள் மணவாழ்க்கையால் தேகஸ்பரிஸம் செய்துகொண்ட உங்களுடைய மனைவிமாருடைய (அவர்களுடைய முதல் புருஷருக்குப் பிறந்த) குமாரிகள் உங்களுடைய பராமரிப்பி லிருக்கும்போது அப்படிப்பட்ட குமாரிகளும் (உங்களுடைய விவாக முறைமையி னின்றும் விலக்கப்பட் டிருக்கிறார்கள்); ஆனால், அப்படிப்பட்ட விதவைகளிடம் நீங்கள் மணவாழ்க்கைக் குரிய தேக சம்பந்தத்தை வைத்துக்கொண் டிராவிடின், அவர்களுடைய முதற் புருஷர் மக்களை நீங்கள் மணந்து கொள்வதில் ஒன்றும் தோஷமில்லை; மேலும், உங்களுடைய முதுகந் தண்டினின்று வெளியான குமாரர்களின் மனைவிகளும், நீங்கள் ஏக காலத்தில் இரண்டு சகோதரிகளை விவாகம் செய்து கொள்வதும் (வழக்கமாய்) ஏற்கெனவே கழிந்துபோன காரியமல்லாமல் இனிமேல் தடுக்கப்பட்டிருக்கின்றன"—(4: 23).

لا يحل لكم ان ترثوا النساء كرها "உங்களுடைய மனைவிமாரின் விருப்பத்திற்கு மாற்றமாக அவர்களுக்கு நீங்கள் வாரிஸாவது உங்களுக் கொன்றும் கூடாது."—(4:19). لا تنكحوا ما نكح

ولا تنكحوا ما نكح آباؤكم من النساء الا ما قد سلف "மேலும் உங்களுடைய பிதாமார்கள் விவாகம் செய்து கொண்டிருந்த மனைவிமார்களை மணமுடித்துக் கொள்ளாதீர்கள்; ஆனால், சென்றுபோன காரியமானது மன்னிக்கப்பட்டுவிடும். (ஏனெனின், மடமைத்தனத்தால் அதனை நீங்கள் செய்தீர்கள்)"—(4 : 22) احل لكم الطيبات ......... والمحصنات من المؤمنات والمحصنات من الذين اوتوا الكتاب من قبلكم اذا آتيتموهن اجورهن محصنين غير مسافحين ولا متخذي أخدان "நல்லவையும் பரிசுத்தமானவையுமான உணவுகள் உங்களுக்குச் சட்டப்படி உரிமையாக்கப்பட்டிருக்கின்றன...............மேலும் நன்னம்பிக்கையுள்ள மூமின்களிடத்திலிருந்து பதிவிரதைகளாயிருக்கின்ற பெண்களையும், உங்களுக்கு முன்னே வேதங்களை அருளப்பெற்ற கூட்டத்தார்களுள்ளிருந்து பதிவிரதைகளாயிருக்கின்ற பெண்களையும் நீங்கள் மனைவிகளாகச் செய்து கொள்ளும் பொருட்டு அனுமதியளிக்கப் பெற்றிருக்கின்றீர்கள்; ஆனால், அவர்களுக்குரிய சட்டப்பிரகாரமுள்ள உரிமைகளைக் கொடுத்துவிட்டு, வியபிசாரம் புரியாமலும் கள்ளத்தனமாய்க் கலந்து கொள்ளாமலும் அப் பெண்மணிகளுடன் (மணஞ்செய்து) நல்ல முறையிலே நடந்துவர வேண்டுமென்பதுதான் ஒரு நிபந்தனை"—(5: 5). ஒரு புருஷனுடைய மனைவிக்கு அப்புருஷனால் மக்கட்பே றுண்டாகாவிடின், குழந்தையைப் பெறும் நோக்கத்துடனே அவள் அன்னிய புருஷனிடம் இரகசியமாகப் போகலா மென்னும் கெட்ட வழக்கமானது அக்காலத்தில் சில அரபிகளிடத்தில் சர்வசாதாரணமாயிருந்துவந்தது. முஸா'பஹத் என்று வழங்கப்பட்டுவந்த இந்த மிருகத் தன்மையை அடியோடு ஒழிப்பதற்காகவே கீழ்க்

கண்ட ஆயத்தானது குர்ஆன்ஷரீபில் இறக்கப்பட்டிருக்கிறது: لا تقتلوا انفسكم "நீங்கள் தற்கொலை புரிந்துகொள்ளாதீர்கள்"—(4:29). لا تقتلوا اولادكم "உங்களுடைய குழந்தைகளைக் கொலை செய்யாதீர்கள்"—(17:31).

لا تدخلوا بيوتا غير بيوتكم حتى تستأنسوا وتسلموا على اهلها......
فان لم تجدوا فيها احدا فلا تدخلوها حتى يؤذن لكم وان قيل لكم
ارجعوا فارجعوا هو ازكى لكم "(காட்டு மிருகாண்டிகளைப் போல்) அனுமதியில்லாமல் உங்களுக்குச் சொந்தமல்லாத அன்னிய வீடுதிகளுக்குள் நுழையாதீர்கள்; ஆனால், உள்ளே நுழைவதற்கு அனுமதி கிடைக்கும்வரை வெளியிலே காத்திருங்கள்; மேலும், 'உங்களுக்குச் சாந்தியுண்டாகுக!' என்று அங்குள்ளிருப்பவர்களுக்கு வந்தனமளியுங்கள்......ஆனால், அவ்வீட்டில் ஒருவரும் காணப்படாவிடின், (வீட்டுக்குடையவன் வந்து) நுங்களுக்கு அனுமதி கொடுக்கும்வரையில் உள்ளே நுழையாதீர்கள். இன்னம் திரும்பிச் செல்ல வேண்டுமென உங்களுக்குச் சொல்லப் படுமேயாயின், உடனே திரும்பி விடுங்கள்; அஃது நுங்களுக்கு மிக்க நேர்த்தியான காரியமாயிருக்கிறது—(24:27,28). واتوا البيوت من ابوابها "மேலும் வீடுதிகளுக்குள் நுழையும்போது அவற்றின் சரியான வாயில்களின் வழியே நுழையுங்கள். (ஆனால், வீட்டின் சுவர்களின் மீது ஏறிக் குதிக்காதீர்கள்)"—(2:190). واذا حييتم بتحية فحيوا باحسن منها او ردوها "மேலும் உமக்கு ஒருவர் ஸலாம் சொல்லி வந்தனமளிக்கும்போது அதைக் காட்டினும் மேலான வந்தனத்தைக் கொண்டு விடையளியுங்கள்; அல்லது அதே விதமான வந்தனத்தையாவது பதிலுக்குச் சொல்லுங்கள்"—

انما الخمر والميسر والانصاب والازلام رجس من عمل الشيطان فاجتنبوه لعلكم تفلحون (4:86). "சாராயமும், சூதாடுவதும், நட்டு வைக்கப்பட்டிருக்கும் விக்கிரகங்களும், பாணங்களை விட்டுக் குறிபார்ப்பதும் ஷைத்தானுடைய காரிய சம்பந்தமான பெரும் பாதகங்களா யிருக்கின்றன. ஆதலின், நீங்கள் க்ஷேம லாப மடையும் பொருட்டு அவற்றை விலக்கிக்கொள்ளுங் கள்"—(5:90). حرمت عليكم الميتة والدم ولحم الخنزير وما اهل لغير الله به والمنخنقة والموقوذة والمتردية والنطيحة وما اكل السبع الا ما ذكيتم وما ذبح على النصب "தானே மரிக்கும் பிராணி யும், உதிரமும், பன்றியின் மாம்சமும், அல்லாஹுத் தஆலா ஒருவனைத் தவிர்த்து வேறெந்தப் பெயரையும் சொல்லிச் சேத னம் செய்யப்பட்ட எல்லா ஜந்துக்களும், குரல்வளையை நெரித் துக் கொல்லப்பட்ட பிராணிகளும், ஓரடியினாலாவது அல்லது ஒருவீழ்ச்சியினாலாவது அல்லதுமற்றொருபிராணியின் கொம்பு களினாலாவது கொல்லப்பட்ட பிராணிகளும், மாம்ச பக்ஷணி களால் தின்னப்பட்ட வஸ்துக்களும்,நீங்கள் அறுத்தவைகளைத் தவிர்த்து விக்கிரஹங்களுக்குப் பலியாக இடப்பட்டவைகளும் நீங்கள் புசிக்கத்தகாத வஸ்துக்களென்று விலக்கப்பட்டிருக்கின் றன; (ஏனெனின், இவை யெல்லாம் இறந்த வஸ்துக்களுக்குச் சமமாயிருக்கின்றன)"—(5:3). يسئلونك ماذا احل لهم قل احل لكم الطيبات "ஆனால் அவ்வாறாயின் பிறகு எதுதான் சட்ட முறைப்படி தின்னத்தக்க வஸ்துவாயிருக்கிறதென்று அவர்கள் உம்மைக் கேட்பார்களாயின்,நல்லதாயும் பரிசுத்தமுள்ளதாயும் இருக்கக் கூடிய ஒவ்வொன்றும் உங்களுக்கு அனுமதிக்கப்பட் டிருக்கிறது என்று சொல்வீராக.(ஆனால்,செத்த பிராணிகளும்,

செத்த பிராணிகளையொத்த கொடிய அசுத்தமுள்ள வஸ்துக்களுமே உங்களுக்கு விலக்கப்பட் டிருக்கின்றன.)"—(5:4).

وإذا قيل لكم تفسحوا في المجالس فافسحوا...... وإذا قيل انشزوا فانشزوا

"உங்களுடைய கூட்டத்தில் மற்றையோருக்கு இடங்கொடுங்களென்று உங்களுக்குச் சொல்லப்படின் (அவர்கள் வந்து உட்காரும் பொருட்டு) நீங்கள் இடங் கொடுங்கள்.....மேலும் 'எழுந்திருங்கள்' என்று உங்களுக்கு உத்தரவிடப்பட்டால், உடனே நீங்கள் எழுந்திருங்கள் "— (58:11). كلوا واشربوا ولا تسرفوا "(மாம்சபோஜனமா யிருப்பினும் சாக பதார்த்தமா யிருப்பினும் நல்லதா யிருக்கக்கூடிய) ஒவ்வொன்றையும் புசியுங்கள்; பருகுங்கள். ஆனால், உங்களுடைய ஆகார விஷயத்தில் மிதமா யிருந்துகொள்ளுங்கள்; கணக்குப் பிரகாரமுள்ள சரியான எல்லையைக் கடக்காதீர்கள்"—(7:31). قولوا قولا سديدا ("வீண் பேச்சில் காலத்தைப் போக்காதீர்; ஆனால், அவசியமான வேளையில்) சரியான விதத்தில் பேசுவீராக"—(33 : 70). وثيابك فطهر والرجز فاهجر "மேலும் உம்முடைய வஸ்திரங்களெல்லாம் சுத்தமா யிருக்கட்டும்; இன்னமும் உமக்குச் சொந்தமா யிருக்கின்ற (உம்முடைய தேகம், வீடு, வாயில், வீதி, தலைக்கடை, புழைக்கடை முதலிய) ஒவ்வொன்றையும் அழுக்கும் அசுத்தமும் படியாமல் பரிசுத்தமாய் வைத்துக் கொள்ளுங்கள்"—(74 : 4,5.) واقصد في مشيك واغضض من صوتك "உங்களுடைய நடையானது அதிக துரிதமாயில்லாமலும் மிக்க மந்தமா யில்லமாலும் மத்திபமான நடையா யிருக்கட்டும்; மேலும் உங்களுடைய தொனியானது (கூச்சலிட்டுப் பேசவேண்டிய அவசியமில்லாத சாதாரண வேளைகளில்)

அதிக பலமா யில்லாமலும் மிக மந்தமா யில்லாமலும் மிருது வாயிருக்கட்டும் ''— (31 : 19). وتزودوافان خيرا لزادالتقوى "மேலும் நீங்கள் பிரயாணம் புறப்படும்போது அதன் வழிக்கு வேண்டிய எல்லாவிதமான சாமக் கிரியைகளையும் சேகரம் செய்து கொள்ளுங்கள்; ஏனெனின், போதுமான சாமக்கிரியை யிருந்தால் வழியில் பிச்சை வாங்காமல் அது பாதுகாக்கும் சிறந்த மார்க்கமாகும்''—(2:197) وان كنتم جنبا فاطهروا "நீங்கள் (ஜனுபத்) அசுத்தமாய் விடும்பக்ஷத்தில் உங்களுடைய உடம்பு முழுதையும் ஸ்னனம் செய்விப்பதால் உங்களைப் பரிசுத்தமாக்கிக் கொள்ளுங்கள்''—(5:6). وفى اموالهم حق للسائل والمحروم "மேலும் உங்களுடைய பொருள்களில் (கெஞ்சிக்) கேட்பவருக்கும் வாயில்லாத பிராணிகளுக்கும் பாகமுண்டென்பதை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும்''—(51:19). وان خفتم الا تقسطوا فى اليتامى فانكحوا ما طاب لكم من النساء مثنى وثلث وربـاع وان خفتم الا تعدلوا فواحدة او ما ملكت ايمانكم ذالك ادنى الا تعولوا "உங்களுடைய பாதுகாப்பிலிருக்கும் அனாதைப் பெண்களை நீங்கள் விவாகம் செய்துகொள்வதில் ஒன்றும் தோஷமில்லை; ஆனால், அவர்களுக்கு உங்களைத்தவிர வேறு பாதுகாவலர் யாரு மில்லாததனால் அவர்கள் விஷயத்தில் நீங்கள் சில சமயங்களில் அநீதியாய் நடக்கும்படியான தூண்டுதல் உண்டாதல் கூடுமென்று உங்களுக்கு அச்சமுண்டாகுமாயின், வேறு பாதுகாவலரையுடைய மற்றை ஸ்திரீகளை விவாகம் செய்துகொள்ளலாம்; அவர்கள் விஷயத்தில் எல்லாக் காரியங்களிலும் நீங்கள் சமத்துவமாய் நடந்துகொள்ளக் கூடுமாயின், இரண்டு, மூன்று, நான்கு மனைவியரை மணந்து

கொள்ளலாம்; ஆனால், அவ்வாறு நீதத்துடன் நடந்துகொள்ள முடியாவிடின், அப்பொழுது ஒரே பெண்ணையே விவாகம் செய்து கொள்ளுங்கள்”—(4:3). குர்ஆன் ஷரீபானது முதலில் பலதார மணத்துக்கு அனுமதிகொடுத்துவிட்டுப் பின்னே அதற்கொரு நிபந்தனையையும் விதித்திருக்கின்றது. இதுதான் புத்திக்குப் பொருத்தமான வழியாய்க் காணப்படுகின்றது; ஏனெனின், முதன் முதலிலேயே மிகக்கடுமையான நிபந்தனையைக் கூறியிருப்பின், அதனால் அதிகமான அடக்கமுடியாத வியபிரசாரமே விளைந்திருக்கும். எனவேதான் இதனைக் கூறிவிட்டுக் குர்ஆன் ஷரீபானது பிறகு ஒரு நிபந்தனையைக் கற்பித்துப் பண்டைக்காலத்திலிருந்து வந்த பாமரத்தன்மையாகிய பலநூற்றுக் கணக்கான மனைவியரை விவாகம் செய்து கொண்டுவந்த ஒரு கொடிய வழக்கத்தை அடியோடொழித்தது. وآتوا النساء صدقاتهن نحلة “மேலும் பெண்களுக்கு அவர்களுடைய உரிமைப்பொருளைச் சன்மானமாகக் கொடுத்து விடுங்கள்”—(4:4).

சுருங்கச் சொல்லுமிடத்து, மனிதனைச் சீர்திருத்தம் செய்யும் பொருட்டுக் குர்ஆன் ஷரீபால் எடுத்துக் கொள்ளப்பட்ட முதற்படியானது இதுவாகத்தானிருக்கின்றது; பண்டைப் பாமரத் தன்மையுள்ள காட்டு மிருகாண்டிகளையெல்லாம் மனிதத் தன்மையுள்ள நல்ல சமூகவாழ்க்கைக்குரியவர்களாய் அன்று ஆக்கிவிட்டதாகவும், இன்று இன்னம் ஆக்கிவிடுவதாகவும் உரிமை பாராட்டுகின்ற விதிமுறைகளும் இவைதாம். நன்னடக்கைக்கும் சமூக வாழ்க்கைக்கும் அத்தியாவசியமான சில விதி முறைகளைமட்டுமே மேற்கூறிய திருவாக்கியங்கள் குறிப்பிட்டிருக்கின்றன. இங்கே கூறியவரையில், மனிதர்

களை மகா சிரேஷ்டமுள்ள சன்மார்க்கர்களாய்ச் செய்வதற் குரிய உயரிய ஒழுக்கங்களைப் போதிக்கக்கூடிய ஆயாத்துக் களைக் குர்ஆன் ஷரீபானது குறிப்பிட வில்லை. எந்த ஜாதியாருடைய முன்னேற்றத்தின் பொருட்டு நம்முடைய நபிகள் நாயகமவர்கள் முக்கியமாய் அந்த அரப் தேசத்தில் திருவவதாரம் புரிந்தார்களோ, அப்படிப்பட்ட அரபிகள் இவ்வுலகினில் வேறெந்த ஜாதியார்களைக் காட்டிலும் மகா கொடிய பாமரத் தன்மையை யுடையவரா யிருந்தார்கள்; அவர்களைத் திருத்துவதற்கு ஆதியில் இப்படிப்பட்ட முறை தான் மிகச் சிரேஷ்டமுள்ளதாய்க் காணப்பட்டது; அந்த அரபிகளுக்கும் மிருகப்பிராயமான மனிதர்களுக்கும் இது தான் வேறுபாடென்று பிரித்துக் காட்டக்கூடிய யாதொரு விதமான சட்ட முறையும் அவர்களிடத்தி லில்லை. ஆதலின், அவர்களுக்கு முதன் முதலில் கற்றுக் கொடுக்கவேண்டிய ஒழுக்கமானது ஒருவரோ டொருவர் நடந்துகொள்ளவேண் டிய சமூகாசாரம்தானென்று தெரிந்துகொண்ட அல்லாஹு த்த ஆலாவானவன் தன் குர்ஆன் ஷரீபில் அதற்கான பாடங் களையே முதன் முதலில் கற்றுக்கொடுக்கின்றான்.

இதன் சம்பந்தமாகக் கீழ்க்கண்ட விஷயமும் நாம் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய ஓர் அம்சமா யிருக்கின்றது. கி’ன்‘ஜீர், அஃதாவது, பன்றி யென்னும் பிராணியும் முஸ்லிம் கள் தின்னக் கூடாதென்று விலக்கப்பட்ட வஸ்துக்களுள் ஒன்று யிருக்கின்றது. இந்த அசுத்தமுள்ள பிராணியின் பெயரே அதன் மாம்சத்தை மனிதர் புசிக்கக்கூடா தென் பதற்கு வேண்டிய குறிப்பைத் தன்னுள்ளே அடக்கிக்கொண் டிருக்கிறது. இப் பெயரானது கி’ன்‘ஜ், அர் என்னும் இரண்

டு பதங்களைக்கொண்டு ஆக்கப்பட்ட ஒரு சொல்லா யிருக்கிறது. இவற்றுள் முதல் பதத்தின் பொருள் "மகா அசுத்தமானது" என்பதாகும்; இரண்டாவது பதத்தின் பொருள் "நான் காண்கிறேன்" என்பதாகும். ஆதலின், 'கின்'ஜீர் என்னும் பதத்தின் பொருள், "அதை நான் மகா அசுத்தமுள்ளதாகக் காண்கின்றேன்," என்பதா யிருக்கின்றது. ஆதலின், இந்த மிருகத்துக்கு ஆண்டவனால் முதன் முதலில் கொடுக்கப்பட்ட பெயரே அதன் மகா அசுத்தத்தைக் காண்பித்துக்கொண் டிருக்கிறது. ஆனால், இதைக் காட்டினும் இன்னம் ஆச்சரியமா யிருப்பது யாதெனின், ஹிந்தீ பாஷையிலும் இந்தப் பிராணியானது ஸூவர் என்னும் பெயராலேயே வழங்கப்படுகிற தென்பதுதான். ஸூவர் என்னும் வார்த்தையானது ஸூ, அர் என்னும் இரண்டு பதங்களால் சேர்க்கப்பட்ட ஒரு பெயரா யிருக்கின்றது. இதிலுள்ள பிற்பகுதியாகிய "அர்" என்னும் பதமானது அரபு வார்த்தையிலுள்ள அர் என்னும் பதத்தின் பொருளையே குறித்து நிற்கின்றது. இன்னம் ஸூ என்னும் முதல் பதமும் அரபு பாஷையிலுள்ள முதற் பதத்தின் பொருளையே முற்றும் காண்பித்துக்கொண் டிருக்கின்றது. ஹிந்தீ பாஷையிலுள்ள "ஸூவர்" என்னும் பெயரானது அரபு பாஷையிலுள்ள கி'ன்'ஜீர் என்னும் பெயரைப் போலவே, "அதை நான் மகா அசுத்தமுள்ளதாகக் காண்கிறேன்," என்னும் பொருளையே குறிப்பிட்டுக் காண்பிக்கின்றது. இந்த ஹிந்தீ மொழியின் இலக்கண முடியும் அந்த அரபுப் பதத்தின் இலக்கணத்தையே ஒத்திருக்கிறது. ஒரு ஹிந்தீ மொழியானது அரபிலக்கண முடியைப் பெற்றிருப்பது ஓர் ஆச்சரியமன்று; ஏனெனின்,

மினனுர் ர'ஹ்மான் என்னும் நூலில் நாம் விளக்கியிருப்பதேபோல் அரபு பாஷைதான் எல்லா மொழிகளுக்கும் தாய்மொழியா யிருக்கின்றது. மேலும், அந்த அரபு பாஷையிலுள்ள அநேகம் பதங்கள் வேறு எல்லாப் பாஷைகளிலும் அதிகமாகக் காணப்படுகின்றன. ஆதலின், ஸூவர் என்னும் பதமானது அரபு வார்த்தையாகவே யிருக்கிற தென்று கூறி முடிக்கலாம். ஹிந்தீ பாஷையில் இந்த மிருகத்துக்கு ப'த்' என்றும் மற்றொரு பேருண்டு. தீயது அல்லது அசுத்தமானது என்று இப்பதம் பொருள்படும்; இஃது ஸூஅர் என்னும் அரபு வார்த்தையின் மொழி பெயர்ப்பாக இருக்கிறதென்று நிச்சயிக்கலாம். உலக சரித்திரத்தின் ஆரம்ப காலத்தில் மானிடவர்க்கத்தார் கூட்டங்கூட்டமாகப் பிரியத் தொடங்கினபோது அரபு பாஷையில் அன்று முதல் இன்றளவும் ஒரேவிதமாகவே வழங்கிவரும் கி'ன்'ஜீர் என்னும் பதத்தின்பொருளையேகொண்டு அதைப்போன்ற இலக்கணமுடிவையேயுடைய ஸூவர் என்னும் பதமானது இந்தப் பன்றியாகிய மிருகத்தைக் குறிக்கும் பொருட்டே உபயோகிக்கப்பட்டு வருகிறது. இந்த ஹிந்திப் பதமானது ஆயிரக்கணக்கான வருஷங்களுக்குப் பின்னரும் இன்றைக்கும் தன்னுடைய அரபிலக்கண முடிவையும் அதன் பொருளையுமே குறித்துக்கொண் டிருக்கிறது. இதன் ஸம்ஸ்கிருத பதமானது காலக்கிரமத்தில் சிறிது மாறுபட் டிருக்கலாம்; ஆனால், அதன் தாதுவானது அரபு பாஷையிலிருந்து தோன்றியிருக்கிற தென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை. ஏனெனின், அந்தப் பாஷையில் அம்மிருகத்துக்கு ஏன் அப்படிப்பட்ட பெயர் இடப்பட் டிருக்கிறதென்பதற்குத் தகுதியான காரணம் கூறப்பட் டிருக்கின்றது.

ஆதலின், கி'ன்'ஜீர் என்னும் அரபு வார்த்தையும் அதே அபிப் பிராயத்தைத்தான் குறித்துக்கொண் டிருக்கின்றது. இந்த மிருகத்தினிடத்தில் காணப்படும் மகா அசுத்தமான செய்கை களை நோக்கும்போது, அதற்கு இப்படிப்பட்ட பொருளை யுடைய பெயரானது வைக்கப்பட் டிருக்கிறதென்பதில் ஒரு சிறிதும் சந்தேகமில்லை. இம் மிருகமானது மகா அசுத்தமா யிருந்துகொண்டு, மகா அசுத்தமுள்ள வஸ்துவையே தின்னு கிறதென்பது ஒவ்வொருவருக்கும் நன்கு தெரிந்த விஷயம் தான்; இன்னம் இவ்வுலகிலுள்ள எல்லாப் பிராணிகளுள்ளும் இம்மிருகம் ஒன்றுதான் மகா லஜ்ஜையற்றதாய்க் காணப்படு கின்றது. அன்றியும், இம்மிருகம் ரோஷமற்றதாகவும், தான் புணர்ச்சி செய்த பெண்மிருகத்தை இதர பன்றிகளிடம் கொண்டுபோய்ப் புணர்ச்சி செய்யவும் செய்கின்றது. இப் படிப்பட்ட மிருகமானது ஏன் விலக்கப்பட்டிருக்கிற தென் பதற்குக் காரணம் இப்பொழுது செவ்வனே விளங்கக் கிடக் கின்றது. இதன் மாம்சத்தைப் புசிப்போமாயின், நம்மு டைய தேகத்திலும் மனத்திலும் ஆத்மாவிலும் மகா கொடிய தீங்குக ளெல்லாம் விளைதல் கூடும். ஏனெனின், மனிதனுடைய ஆகாரமானது அவனுடைய ஸ்தூல தேகத் தைமட்டு மல்லாது ஸூக்ஷ்ம தேகத்தில் ஒரு சிறிதையும் அத்தியாவசியமாய்ப் பாதிக்கக்கூடியதா யிருக்கிற தென்று நாம் மேலே காண்பித்திருக்கின்றோம். இக்காரணம் பற் றியேதான் இஸ்லா மார்க்கம் உதயமாகுமுன்னமேயே யூனன் தேசத்திலிருந்த வைத்தியர்களும் பன்றியின் இறைச்சியா னது லஜ்ஜையற்ற குணத்தையும், கூட்டிக்கொடுக்கும் கெட்ட தன்மையையும் விளைக்கக் கூடியதென்று அபிப்பிராயப்பட்

டிருந்தார்கள். இப்படிப்பட்ட காரணங்களைக் கொண்டே தான் குர்ஆன் ஷரீபானது தானே மரித்த பிராணிகளையும் தின்னக்கூடாதென்று மறுத்திருக்கின்றது; செத்த பிராணி களின் மாம்சமானது மனிதனுடைய தேகா ரோக்கியத்தை யும் அவனுடைய சன்மார்க்க ஒழுக்கத்தையும் பாதிக்கக் கூடியதா யிருக்கிறதுடன் மனிதனுக்குள்ள உண்மையான உணர்ச்சியையும் அழித்துவிடுகிறது. கழுத்தை நெரித்தோ அல்லது அடியினால் தாக்கப்பட்டோ கொல்லப்பட்ட பிராணி களும் இயற்கையாய் மரித்த பிராணிகளின் வர்க்கத்துட னேயே சேர்க்கப்பட் டிருக்கின்றன. தாமே மரித்துப்போன உயிர்ப்பிராணிகள் அறுத்து உதிரத்தை யெல்லாம் வெளிப் படுத்தப் பட்டவற்றைப்போ லாகுமென்று எண்ணுகிறீர்கள்? இல்லை. தானே மரித்துப்போன உயிர்ப்பிராணிகளின் உதிர மெல்லாம் தேகத்துள் அப்படியே உறைந்துபோய் நாற்ற முடையதாய் மாறிவிடுகிறது. இத் துர்நாற்றத்தால் மாம்ச மெல்லாம் கெட்டுப்போய் விடுகிறது. அன்றியும் இக்கால ஆராய்ச்சியின்படி உதிரத்திலிருக்கும் குறுகடங்களெல்லாம் (Corpuscles) செத்துப்போய்த் தேகத்துள் அபாயத்துக் குரிய துர்நாற்றத்தை உண்டுபண்ணி விடுகின்றன. இப்படிப் பட்ட கொடிய வஸ்துவை எமதிஸ்லாம் எப்படித் தின்ன அனுமதிக்கப் போகின்றது?



# சன்மார்க்க ஒழுக்கம்



மனிதனுடைய சீர்திருத்தத்துக்கு வேண்டிய முதற்படிக்குரிய அம்சங்கள் சம்பந்தமான ஆணைகள் இன்ன இன்னவை யென்று குர்ஆன் ஷரீபின் ஆதாரத்தைக் கொண்டு ஒருவாறு சுருக்கியும் விளக்கியும் கூறிமுடித்த பின்னர், இரண்டாவது படித்தரமாகிய ஒழுக்கத்தை இப்பொழுது எடுத்துக் கொள்வோம். குர்ஆன் ஷரீபானது மிருகப் பிராயமான நாகரிக மற்ற மனிதர்களை மனிதத் தன்மையுள்ள பிராணிகளாகச் செய்வதற்கு வேண்டிய விதிமுறைகளை யெல்லாம் விளக்கிக் காட்டிய பின்னர் அவர்களை மிக்க நல்லவர்களாகச் செய்தற்குவேண்டிய சன்மார்க்க போதனைகளையும் உபதேசிக்கத் துணிகின்றது. இஸ்லாம் மார்க்கத்திலுள்ள சன்மார்க்க ஒழுக்கத்துக்குரிய எல்லா அம்சங்களையுமே ஈண்டெடுத்து விஸ்தரித்துப் பேசுவதாயின், அதற்கு வேண்டிய காலமும் இடமும் இவ்விடத்தில் போதாவென் றஞ்சுகின்றேன். ஆதலின், அல்லாஹுத் தஆலாவினுல் தன்னுடைய குர்ஆன் ஷரீபில் மிக அழுத்தமாகக் குறிப்பிட்டிருக்கும் சிலவித மேன்மையான ஒழுக்கங்களைப்பற்றி மட்டுமே மாதிரிக்காக யான் ஈங்கெடுத்துக் கூறப்போகின்றேன். சன்மார்க்க சம்பந்தமான எல்லாப் போதனைகளும் இரண்டுவிதமான பாகுபாட்டின்கீழேயே வந் தமைகின்றன: (1) மனிதன் தன்னைப் போன்ற வேறு மனிதர்களுக்கு எவ்விதமான தீங்கொன்றும் இழைக்காமலிருக்கும்படி அவனைத் தடுப்பதற்குரிய சக்தியைப் பெற்றுக் கொள்ளும் முறைகள் இம் முதற் பகுதியில் சாரும்; (2)

பிறகு மற்றையோருக்கு நாம் செய்தற்குரிய நன்மையைக் குறிக்கக்கூடிய தன்மையைப் பெற்றுக்கொள்ளும் முறைகள் இரண்டாவது வகையில் சாரும். மனிதன் மற்றொரு மனிதனுடைய உயிரையாவது பொருளையாவது கண்ணியத்தையாவது பாதிக்கக்கூடிய முறையில் தன்னுடைய வாயினாலேனும் கையினாலேனும் கண்ணினாலேனும் அல்லது வேறெந்த அவயவத்தாலேனும் தீமைசெய்யாமலிருக்கும்படி அவனுடைய எண்ணங்களையும் செய்கைகளையும் அடக்கியாள்வதற் குரிய சட்டதிட்டங்களெல்லாம் மேலே கூறிய முதல்வகையில் சாரும். அல்லாஹுத் தஆலாவானவன் மனிதனுக்குக் கொடுத்தருளியிருக்கும் சக்திகளைக் கொண்டும் கல்வியைக் கொண்டும் சாமர்த்தியங்களைக் கொண்டும் ஒருவன் மற்றவர்களுக்குச் செய்யும் நன்மையான காரியங்கள், அல்லது மற்றவர்களுடைய பெயரையும் புகழையும் பெருமைப்படுத்திச் சொல்லல், அல்லது குற்றவாளியொருவன் நியாய முறைப்படி அடையவேண்டிய தண்டனையினின்றும் அவனை விடுவித்தல் (நியாய முறைப்படி அவன் பெறவேண்டிய சரீர சம்பந்தமான தண்டனையிலிருந்தாவது அல்லது திரவிய சம்பந்தமான அபராதத்திலிருந்தாவது அவனுக்கு நன்மை செய்ததாகவே கருதப்படும்) அல்லது அக் குற்றவாளியை நல்ல வழிக்குக் கொண்டுவர வேண்டுமென்னும் நன்னோக்கத்துடனே அதற்கு வேண்டிய மாதிரியாக அவனைத் தண்டித்தல் ஆகிய இப்படிப்பட்ட காரியங்களுக்குரிய எண்ணங்களையும் செய்கைகளையும் அடக்கி யாள்வதற்குவேண்டிய முறைமையில் சொல்லப்பட்டிருக்கும் எல்லா விதிமுறைகளும் இரண்டாவது பிரிவில் சாரும்.

## பதி பத்தினி விரதம்

தீமையினின்றும் தப்பிக் கொள்ளுதற்குரிய மார்க்கத்தை உபதேசிக்கும்படியான நல்லொழுக்க முறைகளெல்லாம் இஸ்லாமிய சித்தாந்தப்படி நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன; இந் நால்வகையான பிரிவுகளுள் ஒவ்வொன்றுக்கும் அரபு பாஷையில் தனித்தனியான பதங்களுண்டு; அரபு பாஷையில் மனிதர்களுடைய வெவ்வேறு விதமான வெவ்வேறு வகை எண்ணங்களையும் அபிப்பிராயங்களையும் வெளிப்படுத்துவதற்கு வெவ்வேறு பதங்களை உபயோகிக்கும்படியான அத்துணை அர்த்த புஷ்டியானது அப் பாஷைக்கு மட்டுமே உரித்தாய் இருக்கிறது. முதன்முதலாக இ'ஹ்ஸான் அல்லது பதிபத்தினி விரதம் என்பதைக் கவனிப்போம். இப் பதமானது ஆண்பாலிடத்திலும் பெண்பாலிடத்திலும் காணப்படக்கூடிய சந்தான உற்பத்திக்குரிய சன்மார்க்க விரதத்தைக் காண்பிக்கின்றது. ஆண்மக னொருவன் அயல்மனை விழையாது தன்னுடைய பத்தினியிடத்தில் வைத்த சத்திய நியதியுடனே நடந்துகொள்ளுங்கால், அவனை அரபு பாஷையில் மு'ஹ்ஸின் என்று கூறுவர்; இப்படிப்பட்ட பரிசுத்த நடத்தைக்குரிய பதி விரதா தர்மத்துடனே ஒழுகிவருகின்ற ஒருபெண்மகளை மு'ஹ்ஸினு என்று கூறுவர். எப்படிப்பட்ட வியபிசாரமும் அவ் வியபிசாரத்துக்குரிய ஆரம்பச் செய்கைகளும் அப்படிப்பட்ட வியபிசாரகர்களுடைய பந்துமித்திரர்களுக்கு அவமானத்தையும் ஆத்திரத்தையும் விளைவிப்பதோடு, அந்தப் பாவிகளுக்கு இவ்வுலகினில் இணையில்லா நாசத்தையும் அவமதிப்பையும் கொடுத்து, வரப்போகின்ற அவ்வுலகத்திலும் அளவில்லா நஷ்டத்தையும் கஷ்டத்தையும் அளிக்கக்கூடியதா யிருக்கிறது. புரு

ஷனிடத்திலிருந்து பெண்சாதியையும், பிள்ளையினிடத்தி லிருந்து தாயையும் பிரித்து வைக்கக்கூடிய துன்பத்தையும் துயரத்தையும் உண்டுபண்ணி விட்டு, தன்னையும் அவளையும் பாழாக்கிக்கொண்டு, அவளுடைய தோஷமற்ற புருஷனுடைய மனத்தையும் களங்கமற்ற குழந்தைகளின் பிரியத்தையும் பாழ் படுத்தி, அக்குடும்ப முழுதுமுள்ள சாந்தியையும் சமாதானத் தையும் குலைத்து, எல்லோரையும் சந்தியில் இழுத்து விடக் கூடிய மகாதுர்த்தனுகிய காமியென்னும்கணவனைக்காட்டினும் மிகப்பொல்லாத அயோக்கியன் இவ்வுலகினில் வேறுயார் இருத் தல் கூடும்? இ'ஹ்ஸான் அல்லது பதிபத்தினி விரதம் என்று சொல்லக்கூடிய இந்தவிலைமதிக்க வொண்ணுத சிரேஷ்டகுணத் தைப்பற்றி நாம் முதன் முதலில் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டிய விஷயம் யாதெனின், ஆணைக்கண்டு பெண்ணும் பெண்ணைக்கண்டு ஆணும் மோகமடையக்கூடிய தன்மை யானது மனித வர்க்கத்துக்கு இறைவனுல் யற்கையாகவே அமைக்கப்பட் டிராவிடின், சட்டவிரோதமான ஸம்ஸர்க்கத்தி னின்றும் விலகிக் கொள்வதற்காக ஒருவருக்கும் யாதொரு விதமான கௌரவமும் கொடுக்கப்பட மாட்டா தென்பது தான். ஆதலின், "சன்மார்க்க நிலை" என்னும் சொற்றொட ரானது ஏதேனுமொரு செய்கையி னின்றும் விலக்கிக்கொள் வது என்பதை மட்டும் தெரிவிக்க மாட்டாது; மனிதனுக்குச் சாதாரணமாகத் தீமையை விளைத்தற்குரிய சக்தியானது இயற் கையாகவே அமைந் திருக்கும்போது, அப்படிப்பட்ட தீமைக் குரிய குணத்தைத் தடுத்து நல்ல வழியில் நடக்கும்போது தான் அவனை நல்லொழுக்க முள்ளவன் என்று சிலாகிக் கின்றோம். அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில், அஃதாவது, அவ

னுக்கு இயற்கையா யமைந்துள்ள இச்சைகளுக்குரிய சக்தியி னின்றும் விலகி அவன் தன்னை நல்வழியில் நடத்திக்கொள் வானாயின், அப்பொழுதுதான் அவனுடைய ஒழுக்கமானது அதிசிலாக்கிய மானதென்று பெருமை பேசுகிறோம். பால்ய தசையினு லாவது, நபுஞ்சகத்தினு லாவது, பீஜத்தைப் பிழிந் தெடுத்து விடுவதனு லாவது, வயோதிகத் தனத்தினு லாவது ஒருவன் ஸ்திரீ ஸம்ஸர்க்கத்துக்குரிய தீய வழியில் இறங்காம லிருப்பானாயின், அப்பொழுது நாம் அவனிடத்திலே பத்தினி விரதமென்னும் உத்தமகுணம் நிறைத்திருப்பதாகக் கூறுவ தில்லை. ஏனெனின், இப்படிப்பட்ட மனிதர்கள் பெண்களை விழையாம லிருப்பதில் ஒன்றும் ஆச்சரிய மில்லை ; இயற்கை யாகவே இத்தன்மையான மனிதர்கள் ஸ்திரீகளுடைய இச்சை யில்லாமலே யிருக்கின்றார்கள். இங்கொன்றும் இயற்கையான இச்சையை அடக்கியாள வேண்டிய ஆவசியக மொன்றும் உண்டாவ தில்லை. ஆதலின், அவர்களுக்கு வியபிசாரம் பண் ணும்படியான பிரமயமே ஏற்படுவ தில்லை ; அதனால், அவர்க ளிடத்தில் பிறர்மனை விழையாமைக்குரிய சிரேஷ்ட குண மொன்று அமைந்திருக்கிற தென்று யாரும் கூற முன் வருவ தில்லை. நாம் ஏற்கெனவே கூறி யிருப்பதேபோல் இதுதான் இயற்கையான தன்மைகளுக்கும் சாந்த குணமுள்ள சன்மார்க்க நிலைகளுக்கும் இடையிலுள்ள முதன்மையான வித்தியாசமா யிருக்கின்றது. இயற் கையாகவே மனிதனுக்கு ஸ்திரீகளின் மீது விருப்பம் செல் லாதபோது, அவன் தீய வழியில் இறங்குவதற்கு ஒன்றும் ஹேதுவில்லாமலே போகின்றது. ஆனால், ஸ்திரீகளைக் கண்ட மாத்திரத்திலே விருப்பத்தை யடையக்கூடிய பருவத்தை

யுடைய மனிதர்கள் தங்களுடைய சபலத்தை அடக்க முயலும்போதுதான் அவர்களுடைய மனத்தின்கண் நன்மைக்கும் தீமைக்கும் இடையில் ஒருவகை யுத்தமுண்டாய், இறுதியிலே நல்லொழுக்க மானது தீய ஒழுக்கத்தின் மீது வெற்றியடைகின்றது. ஆதலின், மேலே விளக்கியதுபோல் பருவமடையாத சிறுவர்களும், ஆண்தன்மை யிழந்த புருஷர்களும், ஸ்திரீகளை விழையாமல் வாளா இருப்பார்களாயின், அவர்களுடைய நடையை ஒருவரும் மகா சிலாக்கியமான தென்று மதிக்க மாட்டார்கள். இயற்கையிலுள்ள இச்சையைக் கட்டுப்படுத்துவதுதான் கடினமா யிருக்கும். ஆனால், சுயமே இச்சையில்லாத மனிதனுக்கு அஃதொன்றும் சிரமமா யிராது. ஆனால், இப்படிப்பட்ட மனிதர்களுடைய நடத்தையானது பத்தினி விரதத்தை யுடைய புருஷர்களின் நடத்தையைப் போலும் பதிவிரதா தர்மத்தையுடைய ஸ்திரீகளின் நடத்தையைப்போலும் வெளியில் காணப்படலாம்; ஆனால், இவர்களுடைய சாந்த குணத்தைப் பதிபத்தினி விரதமென்று கூறுவது முடியாது. ஏனெனின், இச்சையை வெல்லவேண்டிய அவசியம் இவர்களுக் கொன்றுமில்லை. ஆனால், இவர்களுடைய சுபாவமே இவர்களுக்கு வியபிசார புத்தியை உண்டுபண்ணக் கூடாததா யிருக்கின்றது.

இப்படிப்பட்ட உயர்தரமான உன்னத சன்மார்க்கத்தை அடைதற்குரிய வழிகள் இன்ன இன்னவை யென்று அல்லாஹுத் தஆலாவானவன் தன்னுடைய திருமறையின்கண் ஆண் பெண் இரு பாலாரையும் சமமாய் நோக்கிப் பின்வருமாறு விளக்கி யிருக்கிறான் :— قل للمؤمنين يغضوا من ابصارهم ويحفظوا فروجهم ذالك ازكا لهم ... وقل للمؤمنات يغضضن من

أبصارهن ويحفظن فروجهن ولا يبدين زينتهن — “உண்மையான உறுதியுடைய ஆண் மக்களுக்கு (அன்னிய ஸ்திரீகளின் மீது நோக்கத்தைச் செலுத்துவதி னின்றும்) தங்களுடைய கண்களை அடக்கிக்கொள்ள வேண்டுமென்று நீர் சொல்வீராக! (ஏனெனின், அவர்களுடைய தோற்றமானது உங்களுடைய இச்சையை எழுப்பிவிடுதல் கூடும்; அப்படிப்பட்ட வேளைகளில் அவர்கள் தங்களுடைய பார்வையைத் தரையிலே செலுத்த வேண்டும்.) மேலும், அவர்கள் பரிசுத்தத்தை அதிகமாக அனுஷ்டிக்க வேண்டுமென்றும் நீர் சொல்வீராக; (அவர்கள் அன்னிய ஸ்திரீகளின் இனிமையான குரலையும் சங்கீதத்தையும் கேட்பதினின்றும், அவர்களுடைய அழகான உருவத்தைத் தெரிந்துகொள்வதி னின்றும் தங்களுடைய செவிகளைப் பத்திரப்படுத்திக் கொள்வார்களாக. ஏனெனின், இது தான் நல்ல பார்வையையும் நல்ல மனத்தையும் கொடுக்கக் கூடிய மார்க்கமா யிருக்கிறது.) உண்மையான உறுதியுடைய ஸ்திரீகளுக்கு அன்னியபுருஷர்கள்மீது தங்களுடைய பார்வையைச் செலுத்தக்கூடா தென்றும் (அவர்களுடைய காமக் குரோதமான வார்த்தைகளைச் செவிசாய்த்துக் கேட்கக் கூடாதென்றும்) நீர் சொல்வீராக! மேலும் அவர்கள் பரிசுத்தமாக இருப்பதற்கு இது சிறந்த முறையாகும்...அவர்களுடைய வெளிப்படையான பகுதிகளை யல்லாமல் தங்களுடைய தேகத்தில் அலங்கரிக்கப்பட் டிருக்கும் பாகங்களை அன்னியரிடம் காட்டக்கூடா தென்றும்(அவர்களுடைய தலையும், செவியும், கழுத்தும், மார்பும் மறையும்படியாகத்) தங்களுடைய நெஞ்சின்மீது மேலாடையை விரித்துக்கொள்ள வேண்டுமென்றும் சொல்வீராக! நர்த்தன மாடுகிறவர்களைப் போல்

அவர்கள் தங்களுடைய பாதங்களை அடிக்காம லிருப்பார்க ளாக! இப்படிச் செய்வதானது தீமையான வழியில் இறங்கி விடாமல் அவர்களை நல்வழியில் சேர்க்கக்கூடிய ஒரு நிச்சய மான பரிகாரமா யிருக்கிறது. மேலும் அவர்கள் ஆண்டவ னிடம் திரும்பி அநியாயமான வழியி லிறங்கிவிடாமல் தங்க ளைக் காப்பாற்றித் தரும்படி பிரார்த்தனை புரியவேண்டும்! ஏ நன்னம்பிக்கை கொண்டவர்கள்! இவ்வாறு நீங்கள் நட ந்து வருவீர்களாயின், நீங்கள் ஜெயம் பெற்றவர்க ளாவீர்கள். (இதுதான் இரண்டாவது பரிகாரமா யிருக்கிறது.)" —(24:30,31). لا تقربوا الزنا انــه كان فاحشة وساء سبيلا "வியபிசாரத் துக்கருகில் நெருங்கிவிடாதீர்கள்! அஃதாவது, அப்படிப்பட்ட எண்ணங்களுக்கு இடங்கொடுக்கக் கூடிய சந்தர்ப்பங்களினின் றும் நீங்கள் விலகிக் கொள்வதோடு, இப்படிப்பட்ட பாபத் தைச் செய்யக்கூடிய துறையினின்றும் நெடுந்தூரம் ஒதுங்கிச் செல்லுங்கள்! ஏனெனின், வியபிசாரம் செய்கிறவன் மஹா கொடிய தீச்செயலைச் செய்கிறான்; மேலும் அஃதொரு தீய மார்க்கமா யிருக்கிறது. (ஏனெனின், மனிதன் அடையவேண் டிய இலக்ஷியத்தை இவ்வியபிசாரம் கெடுத்து, அதை அடைய முடியாமலும் இடையில் பல அபாய இடையூறுகளை ஏற்படு த்திவிடுகின்றது.)"—(17:32). وليستعفف الذين لا يجدون نكاحا "மேலும் தங்களுக் கொரு சரியான ஜோடியை அடையப் பெறாதவர் (நோன்பு நோற்றல், அல்லது இலேசான ஆகாரம் செய்தல், அல்லது கடினமான வேலை செய்தல் முதலிய முறை களால்) தங்களுடைய பரிசுத்தத்தைக் காப்பாற்றிக் கொள் ளக்கூடிய வேறு வழிகளை அனுஷ்டித்தல் வேண்டும்"— (24:33). ورهبانية ابتدعوها ما كتبناها عليهم .... فما رعوها حق رعايتها

"சில மனிதர்கள் ஸ்திரீ புருஷர்களுக்குரிய சம்பந்தத்தினின் றும் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு (விவா கத்தை வெறுக்கக்கூடிய) பிரம்மசரியம் அல்லது சன்னி யாசம் அல்லது பீஜத்தைப் பிளந்தெடுத்து விடுதல் ஆகிய தம்மாலே உற்பத்தியாக்கப்பட்ட சில தந்திரங்களைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஆனால், இம் முறைகளெல்லாம் மனிதர் களாலேயே உற்பத்தி செய்யப்பட் டிருக்கின்றன. இவற்றை நாம் அவர்களுக்கு உபதேசிக்கவில்லை. ஆதலின், அதன் முடி வானது, அவர்களுடைய நூதனமான முறைகளை எப்படி அனுஷ்டிக்க வேண்டுமென்று நினைத்திருந்தார்களோ, அப் படியே அவர்களால் அனுஷ்டிக்க முடியாமற் போய் விட்டது என்பதுதான்"—(52: 27).

பீஜத்தைப் பிளந்தெடுத்தல் முதலிய இயற்கைக்கு மாற்ற மான துறைகளை யெல்லாம் அல்லாஹுத் தஆலாவானவன் தானே போதிக்க வில்லை யென்று மேற்கூறிய ஆயத்தில் நன்கு விளக்கி யிருக்கின்றான். ஏனெனின், இப்படிப்பட்ட துறைக ளெல்லாம் இறைவனுடைய கட்டளையா யிருக்குமா யின், இவ்விதியை ஆண் பெண் அனைவரும் மேற்கொள் ளும்படியா யிருந்திருக்கும். அவ்வாறாயின், நெடுங்காலத் துக்கு முன்னரே இப்பூமண்டலத் தினின்று மனிதவர்க்கத் தார் ஒழிக்கப்பட்டே போயிருப்பார்கள். இப்படிப்பட்ட தீய வழக்கத்தினால் ஒழுக்கக் கேடும், சந்தான விநாசமும் உண்டாவதோடு, ஆண்டவனால் இத்தன்மைத்தாய இச்சை மனிதர்களுக்குக் கொடுக்கப் பட்டிருப்பதற்காக அந்தக் கட வுளின் செய்கையையே நாம் கண்டிப்பதாகவும் ஆய்விடும். இன்னமும், ஒரு காரியத்தைச் செய்ய முடியாம லிருப்பதில்

ஒன்றும் பெருமை யில்லை. ஆனால், ஒருவன் தனக்குத் தீமை செய்தற்குரிய சக்தி யிருக்கும்போது ஆண்டவனிடத்தில் தனக்குள்ள அச்சத்தினாலே அந்தத் தீய எண்ணத்தை யொழித்து, நல்ல எண்ணத்துடனே நடக்கும்போதுதான் அவனுக்கு எல்லாவிதமான கௌரவமும் உண்டாகின்றது. தன்னுடைய தேகத்தில் இப்படிப்பட்ட சக்தியை யுடையவன் இரண்டுவிதமான முறையிலே பெருமையை யடைகிறான்: சட்டவிரோதமில்லாத சரியான இடத்திலே அந்த இச்சையை வெளிப் படுத்துவது முதற்பெருமை; சமயமல்லாத விடத்தில் அந்த இச்சையை அடக்கிக் கொள்வதே மற்றொருவகைப் பெருமையா யிருக்கிறது. ஆனால், இச்சையென்பதையே அடியோடு இழந்துவிட்டவனுக்கு இவ்விருவகைப் பெருமையுள் ஒன்றேனும் கிடைப்பது கிடையாது. நபுஞ்சகனா யிருப்பவன் ஒருசிறு குழந்தையையே ஒத்திருக்கிறான்; அவன் தன்னிடத்தில் கிஞ்சித்துமில்லாத ஒருவகைச் சக்தியை அடக்கிக் கொண்டதற்காக அவனுக் கொன்றும் கௌரவம் கொடுக்கப் படுவதில்லை. அவனுக்கோ இச்சை யில்லை ; ஆதலின், அதை யவன் அடக்கவேண்டிய அவசியமுமில்லை; இக்காரணத்தினால் தான் அவனுக்கொன்றும் பெருமையும் கொடுக்கப்படுவதில்லை.

மேலே குறிப்பிடப்பட்ட திருவாக்கியங்களெல்லாம் பதி பத்தினி விரதத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்குரிய நேர்த்தியான போதனைகளை உபதேசிப்பதோடு, சித்த விகாரத்தை அடக்கிக் கொள்ளுதற்கு வேண்டிய ஐந்து வழிகளையும் காண்பிக்கின்றன. அவையாவன: அன்னியர்களைப் பார்ப்பதினின்றும் கண்களைப் பத்திரப் படுத்திக் கொள்ளுதல்; சித்த விகாரத்தை உண்டுபண்ணத் தக்க அன்னியரின் தொனியைக்

கேட்பதினின்றும் செவிகளைப் பத்திரப் படுத்திக்கொள்ளு தல்; அன்னிய ஸ்திரீ புருஷர்களின் காதற்குரிய கதைகளைக் கேளா திருத்தல்; வியபிசார மென்னும் தீய ஒழுக்கத்தில் இறங்கிவிடும்படியான அபாயம் நேரிடக்கூடிய ஆவசியகத்தை விலக்கிக் கொள்ளுதல்; இறுதியாக விவாகமாகாத காலத்தில் நோன்பு நோற்றல் முதலிய செய்கைகளால் சித்தவிகாரத்தை நிதானப்படுத்திக் கொள்ளுதல் ஆகிய இவைகளே யாம்.

இவ்விடத்திலே நாம் ஒரு விஷயத்தைக் குறித்து மிக அழுத்தமாகக் கூறலாம்: குர் ஆன் ஷரீபில் காணப்படும் முறையானது இஸ்லாத்துக்குரிய ஒரு விசேஷ முறையா கவே யிருக்கின்றது. பதி பத்தினி விரதத்துக்குரிய மகாமே லான ஒழுக்கங்களை யெல்லாம் ஒன்றுபடுத்திக் கூறுவதோடு, அதே யிடத்தில் பரிசுத்தமா யிருப்பதற்கு வேண்டிய பரி காரங்களையும் ஒருங்கே உபதேசிக்கின்றது ; இப்படிப்பட்ட வழக்கம் இஸ்லாத்துக்கு மட்டுமே உரியதாயிருக்கிறது. இதன் சம்பந்தமாகநாம்ஒருவிஷயத்தைமட்டுங் கூறமுற்படுகின்றோம். ஸ்திரீ புருஷ சம்பந்தமான இச்சையை எழுப்பக்கூடியதும், பரிபூரணமான நல்லொழுக்கத்தை யடைந்தாலொழிய மனித னுடைய மனத்தை விட்டு அகலாதிருக்கக் கூடியதுமாகிய இந்த இச்சையானது எப்படிப்பட்ட தன்மையுள்ள தெனின், அதற்கொரு சமயம் மட்டும் வாய்த்து விடுமாயின், உடனே காமத்தீயானது பொங்கி எழுந்து, அதன் வயப்பட்டோரை யெல்லாம் மிகக் கொடுமையாகத் தஹிக்கத் தொடங்குகின் றதேயாகும்; ஆதலின், இதன் சார்பாக அல்லாஹ¯த் தஆலா வானவன் உத்தர விடும்போது, பரிசுத்தமான நல்ல எண் ணத்துடனே நாம் நடப்பதாயிருந்தால், அப்பொழுது அன்

னிய ஸ்திரீகளையும், அவர்களுடைய அழகையும் ஆடை ஆபர ணங்களையும், அவர்களுடைய நடையையும் நொடியையும், ஆட்டத்தையும் பாட்டத்தையும் பார்க்கலா மென்றாவது, அல்லது பரிசுத்தமான மனத்துடன் நாம் நடக்கத் துணிவோ மாயின், அப்பொழுது அவர்களுடைய அழகிய சாரீரத் தைக் கேட்பதாவது அல்லது அவர்களுடைய அன்பையும் அழகையும் கதைமூலமாகவேனும் கேட்பதாவது நமக்குச் சட்ட முறைப்படி கூடுமான காரிய மென்றாவது அனுமதி கொடுக்க வில்லை; ஆனால், அன்னிய ஸ்திரீகளின்மீது எக்கா லத்திலும் எந்தச் சந்தர்ப்பத்திலும் நாம் நம்முடைய கடைக் கண் நோக்கைச் செலுத்தக்கூடா தென்பதுதான் ஆண்டவ னுடைய அழுத்தமான கட்டளையா யிருக்கின்றது. நல்ல எண் ணத்துடனாவது கெட்ட எண்ணத்துடனாவது பரிசுத்தமான ஹிருதயத்துடனாவது அபரிசுத்தமான ஹிருதயத்துடனாவது அயல் மாதர்களுடைய அழகைப் பார்ப்பதும், அவர்க ளுடைய குரலைக் கேட்பதும் சட்ட விரோதமான காரியங் களாகவே யிருக்கின்றன. பாதுகாப்புக் குரிய நிச்சயமான பாதையிலே நாம் செல்கிறோமென்னும் தைரியமில்லாதபோது யாதொரு காரியத்தையும் செய்யக்கூடாதென்பதுதான் இறை வனுடைய கட்டளையா யிருக்கிறது. எந்த நிமிடத்திலும் நம் முடைய நடத்தையை அபாயமான வழியிலே திருப்பிவிடக் கூடிய ஒவ்வொரு விதமான சந்தர்ப்பத்தையும் நாம் அறவே விலக்கிக் கொள்ளுதல் வேண்டும். அடக்கமற்ற பார்வையா னது எந்த வேளையிலும் நம்மைத் தீய வழியிலே இழுத்து விடுதல் கூடும். ஆதலின், கெட்ட எண்ண மிருப்பினும் அஃ தில்லா திருப்பினும், யாதொரு ஸ்திரீயையும் பார்க்கக் கூடா

தென்பதே நமக்கிடப்பட்டிருக்கும் கட்டளையா யிருக்கின்றது; இப்படிச் செய்வதால் நம்முடைய எண்ணமும் பார்வையும் எப்பொழுதும் பரிசுத்தமாயிருந்து, யாதொருவிதமான அழுக்கையும் அடையாம லிருக்கும். அடக்க மில்லாமல் அன்னிய ஸ்திரிகளின் மீது நம்முடைய பார்வையை அடிக்கடி செலுத்தி வருவோமாயின், ஒரு சமய மில்லாவிடினும் மற்றொரு சமயத்திலேனும் அது பலவிதமான அபாயகரமுள்ள தீமைகளுக் குள்ளெல்லாம் நம்மைக் கொண்டுபோய்ச் சேர்த்து விடும். ஆதலின், பதிபத்தினி விரதத்தை அடைவதற்கும், அதை எப்பொழுதும் காப்பாற்றிக் கொள்வதற்கும் குர்ஆன் ஷரீபில் கூறப்பட்டிருப்பதைக் காட்டினும் மேலான போதனையையும் உத்தமமான சித்தாந்தத்தையும் நாம் வேறிடத்திலே காண்பது முடியாது. பசியுள்ள முடுவலை அன்னக் குவியலின் அருகினில் விட்டு அதை அது புசிப்பதற்குக் கனவிலும் கருதக் கூடாதென்று எதிர்பார்ப்ப தானது வீண் மனோராஜ்யமாய்த்தா னிருக்கின்றது. அல்லாஹுத் தஆலாவின் அரிய வசனமானது மனிதனுடைய காமாந்தகாரத்தை அதன் வேரிலிருக்கும் இரகசியமான எண்ணங்களுடனே அடியோடு ஒழித்து, அப்படிப்பட்ட கெட்ட எண்ணத்தை அபிவிருத்தி செய்யக் கூடிய அபாயகரமான ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும்கூட விலக்கிக் கொள்ளவேண்டு மென்றும் உபதேசிக்கின்றது.

இஸ்லாமார்க்கத்தின் பெண்களை அன்னிய ஆண்களின் முன்னிலையில் வரவொட்டாமல் தடுத்து வைப்பதன் இரகசியமும் இதுதான். முஸ்லிம் மாதர்களை இவ்வாறு தடைசெய்வதால் அவர்களை ஒரு சிறைச்சாலையுள் போட்டுப் பூட்டிவைப்

பதாக எவரேனும் கூறத் துணிவாராயின், இம்மார்க்கத்தின் உயரிய சித்தாந்தத்தின் உன்னத நோக்கத்தை அவர் அறிந்து கொள்ள வேண்டியிருக்கிற தென்றே நாம் கூறுவோம். பெண்களைத் தடைசெய்வதால் அன்னிய புருஷர்களும் அன்னிய ஸ்திரீகளும் ஒருவரோ டொருவர் யதேச்சையாய்க் கலந்து கொள்ளக் கூடாதென்னும் நோக்கந்தான் அங்கே காணப்படுகின்றது. ஆண்பாலரும் பெண்பாலரும் தங்கள் தங்களுடைய அழகையும் ஆடையாபரணங்களையும் அன்னியரிடத்தில் காட்டக்கூடா தென்பதற்காகத்தான் முஸ்லிம் ஸ்திரீகளை மறைத்து வைக்கின்றோம். இதனால் ஆண் பெண் இருபாலார்க்கும் நன்மையே விளையு மென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை. அரபு பாஷையில் غض بصر என்னும் சொற்றொடராயது எதேச்சையாய் ஒரு மனிதன் ஒரு வஸ்துவை உற்று நோக்கக் கூடாத காலத்தில் அவன் தன்னுடைய கண்களைக் கவிழ்ந்து கொள்வதைக் குறிக்கும்; உசிதமான காலத்திலும் ஒருவரும் ஒரு வஸ்துவையும் உற்றுநோக்கக் கூடாதென்று இச் சொற்றொடர் தடை செய்வதில்லை. ஆயினும், மனப்பரிசுத்தத்தை அடைய வேண்டுமென்னும் அவாவையுடைய ஒவ்வொருவரும் பட்டிக்காட்டான் பட்டணம் சென்ற கதையே போல் நாலு பக்கத்திலும் மிரண்டு மிரண்டு விழிப்பது கூடாது. அவசியமான காலங்களில் அங்கு மிங்கும் தலையைத் திருப்பாமல் தரையின் மீது கண்ணைக் கவிழ்ந்துகொண் டிருப்பதுதான் சமூக வாழ்க்கைக் குரிய முக்கியமான முதல் அம்சமா யிருக்கின்றது. இப்படிப்பட்ட வழக்கமானது மனிதனுக்கு அவனுடைய சமூகவாழ்க்கையில் யாதொரு விதமான தீமையும் விளைவிக்காம லிருப்பதோடு, பதிபத்தினி விரதத்

திற்குரிய பரிசுத்த நோக்கமென்னும் இப்புண்ணிய காரியத் துக்குரிய சன்மார்க்க ஒழுக்கத்தில் மிகத் தேர்ச்சியான முதிர்ச்சியை யடையும்படியான பரிபக்குவத்தையும் அளித்து விடுகின்றது.

## கண்ணியம்

நாம் இப்பொழுது இரண்டாவது ஒழுக்கமாகிய கண் ணியம் என்னும் சன்மார்க்க நிலையைக் கவனிப்போம். இதற்கு அரபு பாஷையில் அமானத் என்று பெயர் கூறுவர். இதுதான் பிறருக்குத் துன்பம் செய்யாமல் தன்னையே காத்துக் கொள்ளும் தர்ம குணமாகும். பிறரை ஏமாற்றுமலும் அவர்களுடைய பொருளைச் சட்டவிரோதமாக அபகரிக்கா மலும் அவர்களுக்குத் துன்பம் செய்யாமலும் ஜாக்ர தையா யிருந்துகொள்ளும் நற்குணத்தைக் குறிக்கின்றது. இப்படிப்பட்ட நற் குணமானது மனிதனிடத்தில் இயற் கையாகவே அமைக்கப்பட் டிருக்கின்றது. பால் குடிக்கும் குழந்தையானது எப்படிப்பட்ட தீய குணமு மில்லாமல் சுத்தப் பரிசுத்தமா யிருக்கும்பொழுது தன்னுடைய தாயின் மார்பைத் தவிர்த்து வேறொரு ஸ்திரீயின்மார்பிலே பால் குடிக்க அருவருப்பு கொள்ளுகின்றது; அக் குழந்தைக்குச் சற்றும் ஞாபகமில்லாத காலத்தில் பழக்கப் படுத்தி விட்டால் மட்டுமே அன்னிய ஸ்திரீகளிடத்தில் பால் குடிக்க ஒத்துக் கொள்ளும். தன் தாயென்றும் அன்னிய ஸ்திரீயென்றும் வேற்றுமை யறிந்து கொள்ளக் கூடிய அத்துணை அறிவு வந்தவுடனே அக் குழந்தையானது அயல்மாதரிடம் பால் அருந்தத் துணிவ தில்லை. குழந்தை களிடத்தில் காணப்படும் இப்படிப்பட்ட இயற்கைக் குணமென்னும் மூலத்திலிருந்துதான் மனிதனை

பின்னும் பிறர் பொருளை இச்சிக்காமல் கண்ணியமாயிருக்கக் கூடிய சற்குணமானது வந்து சித்திக்கின்றது. மனிதனானவன் தன்னுடைய இடம் பொருள் ஏவலால் சுயமே கெட்டுவிட்டா லொழிய அவனிடத்தில் எப்பொழுதும் இந்த நற்குணமானது குடிகொண்டிராம லிருப்ப தில்லை. குழந்தையானது தன் தாயினிடத்தில் பால் குடிக்க அருவருப்புக் கொள்வதேபோல் நாமும் பிறருடைய பொருளை ஆசிக்காம லிருக்கும்படி அத் துணை அருவருப்பு இருந்தால் மட்டுமே நம்மிடத்திலும் கண் ணியமென்று சொல்லக்கூடிய மேற்கூறிய சற்குணத்தின் சாய லானது காணப்படுகிற தென்று கூறலாம். ஆனால்,குழந்தைகளி டத்தில் காணப்படும் இந்த அருவருக்கும் குணமானது தன் னளவிலேயே ஒரு சற்குணமா யிருக்கிறதென்று கூறுவது முடி யாது. ஏனெனின், அக்குழந்தைகளிடத் தில்இப்படிப்பட்ட தன்மையானது ஓர் இயற்கையான குணமாயிருந்து வருகிறது. நல்லது இன்னதென்றும் கெட்டது இன்னதென்றும், உசிதம் இன்னதென்றும் அனுசிதம் இன்னதென்றும் பாகுபாடு செய்துகொண்டு, அக்குழந்தைகள் தந்தாயின் பாலுக்கும் அயல் மாதரின் பாலுக்கும் வேற்றுமை செய்வதில்லை. தம் முடையதற்கும் தம்முடைய தல்லாததற்கும் என்ன வேற் றுமை யிருக்கிறதென்று அச் சிசுக்கள் உணருவதில்லை. நல் லது இன்னதென்றும் தீயது இன்னதென்றும் தெரிந்து கொள் ளக்கூடிய பகுத்தறிவானது முளைத்தாலொழிய, அக்காரியத் தை நல்லொழுக்க மென்று கூறுவது முடியாது. ஆனால், நல்லொழுக்கத்துக்குரிய மூலகாரணம் மட்டும் அதிகஸ்தூல மாகக் காணப்படுகிற தென்று சொல்லலாம். அஃதேபோல் ஒரு மனிதன் நன்மை தீமை இன்னதென் றுணர்ந்து

கொள்ளாமல் இயற்கை வசத்தினாலேயே நன்மையை மட்டும் செய்து வருவானாயின், அவனை யொரு நல்ல மனிதனென்று முற்றும் கூறுவது முடியாது. பிறர் பொருளை அபகரிப்ப தனா லுண்டாகக் கூடிய தோஷம் இன்னதென்று அறிந்து கொள்ளாதவன் கண்ணியமென்னும் குணத்தின் முழுத் தன்மையையும் உணர்ந்துகொண்டதாகக் கூறுவதற்கில்லை. அவன் எப்பொழுதும் தீமையை விலக்கி நன்மையையே செய்து வருவதை நோக்கும்போது, அவன் ஒவ்வொரு காரியத்தின் உசிதா உசிதத்தையும் நன்கு நோட்டமிட்டு, அதன் பலா பலனை ஆழ்ந்து ஆராய்ச்சி செய்திருக்கும் மனிதனைப்போல வெளித்தோற்றத்தில் காணப்பட்ட போதினும், அன்னியர் பொருளை அபகரிப்ப தானது எப்படிப்பட்ட தீமையான காரியமென்றும், அதனால் அப்படிப் பட்ட அகௌரவமான செய்கையைச் செய்யலாகா தென்றும் பகுத்துணர்ந்து கொண்டு, அதன் பின்னர் அவன் தீயதை விலக்கி நல்லதைச் செய்தாலொழிய, அவனிடத்தில் கண்ணியமென்னும் சற்குணமானது அமைந்திருக்கிற தென்று எவரும் சொல்லத் துணியார். அகௌரவத்தின் தீமையை ஒருவன் எவ்வளவுக் கெவ்வளவு நன்குணர்ந்து கொள்ளுகிறானோ, அவ்வளவுக்கவ்வளவு அவனுடைய கௌரவமும் அதிக கண்ணியமிக்கதாய்ப் பிரதிபலிக்கும். இதன் சம்பந்தமான சில ஆயாத்துக்களை நாம் :குர்ஆன் ஷரீபிலிருந்து இதன் கீழே எடுத்தோதுவோம்:—

وَلَا تُؤْتُوا السُّفَهَاءَ اَمْوَالَكُمُ الَّتِي جَعَلَ اللّٰهُ لَكُمْ قِيَامًا وَّارْزُقُوْهُمْ فِيْهَا
وَاكْسُوْهُمْ وَقُوْلُوْا لَهُمْ قَوْلًا مَّعْرُوْفًا وَابْتَلُوا الْيَتَامٰى حَتّٰى اِذَا بَلَغُوا
النِّكَاحَ فَاِنْ اٰنَسْتُمْ مِّنْهُمْ رُشْدًا فَادْفَعُوْا اِلَيْهِمْ اَمْوَالَهُمْ وَلَا تَاْكُلُوْهَا

إسرافا وبدارا أن يكبروا ومن كان غنيا فليستعفف ومن كان
فقيرا فليأكل بالمعروف فإذا دفعتم إليهم أموالهم فأشهدوا عليهم
وكفى بالله حسيبا ....... وليخش الذين لو تركوا من خلفهم
ذرية ضعافا خافوا عليهم فليتقوا الله وليقولوا قولا سديدا إن
الذين يأكلون أموال اليتامى ظلما إنما يأكلون في بطونهم نارا
وسيصلون سعيرا

“மேலும், உங்களுக்குள் பால்யர்களாகவும் அகதிகளாகவும் இருந்துகொண்டு, பகுத்துணரக்கூடிய நல்லறி வில்லாமலும் தங்களுடைய காரியங்களைத் தாங்களே நடத்திக் கொள்வதற்கு வேண்டிய பகுத்தறி வில்லாமலும் இருக்கக் கூடிய மனிதர்களிடத்தில் ஏதேனும் ஐசுவரியம் இருக்குமாயின், அவர்களுடைய திரவியத்தின் மீது நீங்கள் பாதுகாவலராக அமைந்து, முழுச் சுவாதீனத்தையும் ஏற்றுக் கொள்ளல் வேண்டும். மேலும், அவர்களுடைய வியாபாரத்தின் மூலதனமாகவும் அவர்களுடைய பராமரிப்பின் ஆதாரவாகவும் ஆண்டவன் உங்களிடத்தில் ஒப்படைத் திருப்பதை நீங்கள் அவர்களிடத்தில் கொடுத்து விடாதீர்கள்; ஆனால், அவர்களுடைய ஊணுக்கும் உடைக்கும் அவசியமாயிருக்கும் அவ்வளவை மட்டுமே அவர்களுடைய போஷணைக்காகக் கொடுங்கள்; மேலும், அவர்களுடைய உணர்ச்சியைக் கூர்மை யாக்குவதற்கும் அவர்களுடைய பகுத்தறிவைப் பக்குவப் படுத்துவதற்கும் அருகதையாயுள்ள அப்படிப்பட்ட வார்த்தைகளையே அவர்களிடத்தில் வசனிப்பீர்களாக. மேலும், அவர்களுடைய நோக்கத்திற்கு அதிக உசிதமாயிருக்கக்கூடிய அப்படிப்பட்ட தொழிலில் அவர்களுக்கு வேண்டிய எல்லாப்போதனைகளையும் செய்து

அத்தொழிலுக்கு வேண்டிய முறையில் நன்றாகப் பயிற்றுவித்தல் வேண்டும். இன்னம், அவர்களுக்கு நீங்கள் கற்றுக்கொடுப்பதை அவர்கள் அறிந்துகொண்டு மேன்மேலும் விருத்தியடைந்து வருகிறார்களா வென்பதையும் நீங்கள் செவ்வனே தெரிந்துகொள்ளும் பொருட்டு நீங்கள் சொல்லிக் கொடுப்பதில் அவர்களை அடிக்கடி பரீக்ஷை செய்யுங்கள். இன்னம், அவர்கள் (பதினெட்டுப் பிராயத்துக்குரிய) பருவமடையக் கூடிய வயதை யடைந்தவுடனே அவர்களுக்குத் தங்களுடைய காரியங்களைத் தாங்கள் சுயமே செய்து கொள்ளக் கூடிய சாமர்த்தியத்தை அடைந்து விட்டார்களா வென்று நீங்கள் தெரிந்துகொண்டு விட்டால், அவர்களுடைய ஆஸ்தியை அவர்களிடத்திலே ஒப்படைத்து விடுங்கள். மேலும், அவர்கள் தங்களுடைய சொத்தைத் திருப்பிப் பெற்றுக் கொள்வதற்கு வேண்டிய பருவகாலத்தை அதிசீக்கிரம் அடைந்து விடுவார்களென்னும் அச்சத்தினால் அவர்களுடைய பொருளை வீணான வழியில் செலவு செய்யாமலும், நீங்களே அதை விழுங்கிவிடாமலும் இருந்து கொள்ளுங்கள். பாது காவலனா யிருக்கக் கூடியவன் பணக்காரனா யிருப்பின், அவன் அந்த அகதியினுடைய ஆஸ்தியிலிருந்து யாதொருவிதமான சம்பளத்தையும் பெற்றுக் கொள்ளாமல் இருக்கக் கடவன்; ஆனால், அவன் ஏழையாயிருப்பின், நியாயமான சம்பளத்தை அவன் எடுத்துக்கொள்ளட்டும். (அரபிகளுக்குள்ளே அக்காலத்தில் ஒரு பிரபலமான வழக்கம் இருந்து வந்தது. அஃதாவது, அகதிகளுடைய ஆஸ்தியின் மீது பாதுகாவலரா யிருப்பவர்கள் தங்களுடைய ஊழியத்துக்காக ஏதேனும் ஊதியத்தைப் பெற்றுக் கொள்ள நாடினார்களானால், அவசியமான காலம் வரையில் ஒரு நியாய

மான சம்பளத்தைப் பெற்றுக் கொள்வார்கள். ஆனால், அகதிகளின் மூலப் பொருளிலிருந்து ஒன்றையும் தொடமாட்டார்கள். அப்பொருளைக் கொண்டு நடைபெறும் வியாபாரத்திலிருந்து வரக்கூடிய இலாபத்தில் ஏகதேசத்தைப் பெற்றுக் கொள்வார்கள். இப்படிப்பட்ட நியாயமான முறைமையில் சம்பளமேனும் உம்பளமேனும் பெறுவதை நம்முடைய :குர்ஆன் ஷரீபானது சரியான முறைதானென்றே அனுமதி கொடுத்திருக்கின்றது.) மேலும், அவர்களுடைய ஆஸ்தியை அவர்களிடத்தில் ஒப்படைக்கும்போது சாக்ஷிகளின் முன்னிலையிலே அதைச் செய்யுங்கள். உங்களுடைய செய்கைகளின் போதுமான கணக்கை ஆண்டவன் எடுத்துக் கொள்ளுகிறான். மேலும், தங்களுக்குப் பின்னே சிறுபிராயமும் பலஹீனமுமா யிருக்கும் குழந்தைகளை விட்டு மரித்துப் போகின்ற மனிதர்கள் தங்களுடைய குழந்தைகளின் பாத்தியதையானது பாதிக்கப்படாம லிருக்கக்கூடிய விதத்திலே தங்களுடைய மரண சாஸனத்தை எழுதிவைக்கும் படியான விஷயத்தில் ஜாக்ரதையா யிருந்துகொள்வார்க ளாக. தாய் தந்தையற்ற குழந்தைகளின் ஆஸ்தியை அநியாயமாக விழுங்குவோர் உண்மையிலே அந்த ஆஸ்தியை விழுங்கவில்லை; ஆனால், நிச்சயமாக அவர்கள் நரகத் தீயைத்தான் விழுங்குகிறார்கள். ஆதலின், இறுதியில் அவர்கள் நரகத்தீயின் துளிர் விட்டெரிகின்ற ஜுவாலையில்தான் நுழைவிக்கப் படுவார்கள்"—(குர்ஆன், 4: 5, 6, 9, 10).

அல்லாஹுத் தஆலாவானவன் மேலேகூறிய ஆயாத்துக்களில் துரோகமற்ற நம்பிக்கையும் உண்மையான கண்ணியமும் இன்ன இன்னவையெண விளக்கியிருக்கின்றான். மேலும்,

அந்த ஆயாத்துக்களிலேயே அந்த நற்குணங்களுக்கு வேண்டிய வெவ்வேறு வகையான பல்வகை அம்சங்களும் நன்கு விஸ்தரிக்கப்பட் டிருக்கின்றன. இப்படிப்பட்ட அம்சங்களுள் ஏதேனு மொன்று குறையுமாயின், அப்பொழுது அந்தக் குணத்தை மகாசிரேஷ்டமான நல்லொழுக்க மென்று கூறுவது முடியாது; ஆனால், இயற்கையாயுள்ள ஒரு ஸ்தூல குண மென்றே அதைக் கூறலாம். ஆனால், நம்பிக்கைத் துரோக மற்ற ஒரு பத்திரமான குணமென்று கூறுவது இயலாது. மற்றோ ரிடத்தில் :குர்ஆன் ஷாபானது பின்வருமாறு கூறி யிருக்கின்றது : لاتاكلوااموالكم بينكم بالباطل وتدلوابهاالى الحكام لتاكلوافريقامن اموال الناس بالاثم وانتم تعلمون "நீங்கள் ஒருவர் மற்றொருவருடைய ஆஸ்தியை அநியாயமாய் அபகரித்துத் தின்னாதீர்கள். மேலும் பிறருடைய பொருளை நியாய விரோதமான முறையிலே நீங்கள் அபகரித்துக் கொள்ளும்பொருட்டு நியாயாதிபதிகளுக்கு நீங்கள் பரிதானம் (லஞ்சம்) கொடுக்காதிருப்பீர்களாக!" (2 : 188). ان الله يامركم ان تؤدوا الامانات الى اهلها "உங்களிடத்தில் வைக்கப்பட்ட அமானத்தான பொறுப்பை அதற் குரியவர்களிடத்தில் நீங்கள் திருப்பிக் கொடுத்துவிட வேண்டுமென்று உறுதியாக ஆண்டவன் உங்களுக்குக் கட்டளை யிடுகிறான்"-(4:58). ان الله لا يحب الخائنين "ஏனெனின், அல்லாஹுத் தஆலாவானவன் நிச்சயமாகவே நம்பிக்கைத் துரோகம் செய்கிறவர்களை நேசிப்பதில்லை"— (8 : 58). اوفوا الكيل ولا تكونوا من المخسرين وزنوا بالقسطاس المستقيم ولا تبخسوا الناس اشياءهم ولا تعثوا في الارض مفسدين "சரியான அளவின் பிரகாரம் அளந்து கொடுங்கள். மேலும்,

குறைத்துக் கொடுக்கக் கூடிய நஷ்டவாளிகளுள் நீங்கள் சேரா தீர்கள். மேலும் சரியாகவும் உண்மையாகவும் இருக்கக்கூடிய நிறை கோலினால் நிறுத்துக் கொடுங்கள். இன்னம் மனிதர்களை அவர்களுடைய பொருள் விஷயத்தில் ஏமாற்றாதீர்கள். மேலும் பூமியின்மீது (திருட்டு, கொள்ளை, முடிச்சவிழ்த்தல், உபய தானம் பரிதானம் வாங்குதல், அல்லது பிறரை ஏமாற்றிப் பொருள் பறித்தல் முதலிய துர்க்கிருத்தியங்களால்) அயோக் கியத் தனத்துடன் நடக்கலா மென்னும் எண்ணத்துடனே அங்கே நீங்கள் உலாவித் திரியாதீர்கள்"—(26: 181—183). ولا تتبدلوا الخبيث بالطيب "மேலும் நல்ல வஸ்துக்களுக்கு ஈடாகவோ அல்லது மாற்றாகவோ உபயோகமற்ற வஸ்துக் களைக் கொடுக்காதீர்கள். (ஏனெனின், ஒருவன் மற்றொருவ னுடைய பொருளின் மீது தன் கையை வைப்பது எப்படிச் சட்டவிரோதமா யிருக்கிறதோ, அப்படித்தா னிருக்கிறது விலை பெறாத வஸ்துக்களையும் வீணான வஸ்துக்களையும் விற்பது; நல்லதற்கு ஈடாகக் கெட்டதைக் கொடுப்பதும் இப்ப டித்தா னிருக்கிறது)—" (4:2).

அயோக்கியமான செய்கைகளுக்குரிய எல்லாவிதமான அம்சங்களுக்கும்வேண்டிய விரிவான கட்டளைகளெல்லாம் இப் பொழுது கூறப்பட்டிருக்கின்றன. மேலும் ஒவ்வொருவிதமான நம்பிக்கைத் துரோகமும் அவ்வாயாத்துக்களில் குறிப்பிடப் பட்டிருக்கின்றது. இவ்வுலகிலுள்ள வெவ்வேறு வகையான எல்லாக் குற்றங்களும் இங்கே தனித்தனியாக விவரித்துக் கூறப்படவில்லை. ஏனெனின், அவற்றிற்குரிய அட்டவணையை இங்கே முடிப்பதாயின், அதற்காக அதிக காலமும் இடமும் வேண்டி யிருக்கும்; அப்பொழுதும் அக் குற்றங்களை யெல்

லாம் ஒன்றும் மிகுதியில்லாமல் வரையறுத்துக் கூறிமுடிப்பது ஒரு கடினமான வேலையாயிருக்கும். ஆதலின், :குர்ஆன் ஷரீப் வேதமானது இவ்வுலகிலுள்ள எல்லாவிதமான அயோக்கியச் செய்கைகளையும் வெளிப்படையாகத் தன்னுள்ளே அடக்கிக் கொண்டிருக்கக் கூடிய ஒரு பொதுப்படையான நியமத்தைக் கூறி யிருக்கின்றது. சுருங்கச் சொல்லுமிடத்து, ஒருவன் தன்னுடைய காரியங்களுள் சிலவற்றில் மட்டும் யோக்கியதை காட்டிவிட்டு மற்றைக் காரியங்களில் அவ்வாறு நடந்து கொள்ளானுயின், அவனை யொரு கண்ணிய புருஷனென்று வருணிப்பது தகாது. எவனொருவன் தன்னுடைய ஒவ்வொரு காரியத்திலும் மகா யோக்கியமான எண்ணத்தை வைக்காமலும் அதன் சம்பந்தமான ஒவ்வொரு நுண்ணிய முறையையும் அனுஷ்டிக்காமலும் தன்னுடைய பகுத்தறிவைக் கொண்டு நல்லது கெட்டது இன்னதென்று பாகுபாடு செய்து கொள்ளாமல் இயற்கை வசத்தினுலே பழக்கவாசனையைக்கொண்டு மட்டுமே குழந்தையைப்போல் நடக்கிருனே, அவன் மகா உத்தமோத்தமமான கண்ணிய புருஷனுக ஒரு போதும் ஆகமாட்டான்.

## சாந்தகுணம்

முன்னமே நாம் கூறிய முதல் வர்க்கத்தில் சேரக்கூடிய மூன்றுவதூ குண விசேஷமாகிய சாந்த குணம் என்பதைப் பற்றி ஈண்டு ஆராய்வோம். இதற்கு அரபு பாஷையில் ஹூதுனு அல்லது ஹூபின் என்று பெயர் கூறுவர். ஒருவர் மற்றொருவருக்குச் சரீர சம்பந்தமான துன்பங்களைச் செய்யாமல் இவ்வுலகினில் எல்லோரும் க்ஷேமமுடனேவாழும் படியான சமாதானத்தை உண்டு பண்ணக்கூடிய விதத்தில்

ஒருவன் பிறருக்குத் துன்பம் செய்வதினின்றும் தன்னைக் காத்துக் கொள்வானுயின், அப்பொழுது அவனிடத்தில் அதிகமான சாந்தகுண மிருக்கிறதென்று கூறுவோம். சமாதான வாழ்க்கை யென்பது சந்தேகமில்லாமலே மனிதகோடிகளுக்கொரு பெரும் பாக்கியமா யிருந்துவருகிறது; இதனுல் இத்தரணி வாசிகளுக்கு எத்துணை க்ஷேமமும் லாபமும் விளைந்து வருகின்றன வென்று யாராலும் விரல் விட்டு எண்ணுவது முடியாத காரியமாகும். மனிதர்களிடத்தில் காணப்படும் இப்படிப்பட்ட சமாதான புத்திக்குரிய மூலவேரானது சிறு குழத்தைகளிடத்தில் இயற்கையா யமைந்திருக்கும் பக்ஷம் என்னும் அபிமான குணத்திலே அமைந்திருக்கிறது. ஆனுல், மனிதர்களிடத்தில் பகுத்தறிவென்ப தொன்று இல்லாமலிருந்திருக்குமாயின், இவர்கள் சமாதான வாழ்க்கையின் சுகானந்தம் இன்னதென்றும் அசமாதான வாழ்க்கையின் அனர்த்தம் இன்னதென்றும் உணர்ந்துகொள்ள முடியாதென்பது ஒரு வெளிப்படையான விஷயமா யிருக்கிறது. ஆதலின், பக்ஷமாயிருக்கவேண்டுமென்றும் பணிவுடன்நடக்கவேண்டுமென்றும் அதிக பால்யத்திலேயே சிறு குழந்தைகளிடத்தில் காணப்படும் அந்த இயற்கைத் தன்மையானது பெரியோர்களிடத்தில் காணப்படும் சமாதான வாழ்க்கை யென்னும் பெரியதொரு சற்குணத்துக்குரிய மூலவித்தாக மட்டுமேதான் இருக்கிறதென்று கூசாமல் கூறலாம். குழந்தைகளிடத்தில் காணப்படும் இந்த இயற்கையான குணமானது பகுத்தறிவின் தூண்டுதலால் நல்லது இன்னதென்றும் கெட்டது இன்னதென்றும் பாகுபாடு செய்த பின்னர் நல்லதையே செய்யவேண்டுமென்னும் அவாவினுல் சமாதான வாழ்க்கையைக் கடைப்

பிடித்தா லொழிய, அக்குணத்தைச் சற்குணமென்று அழைப்பது சாலாது. இயற்கை நற்குணத்துடனே உத்தியும் புத்தியும் இணைந்திருக்கு மாயின், அப்பொழுது அந் நற்குணமானது சற்குணமென்னும் ஒரு பொற்குணமாகப் போற்றப்படுகிறது. இதன் சார்பாக எமது குர்ஆன் ஷரீபில் என்ன சொல்லப்பட்டிருக்கிறதென்று யாம் ஈண்டுச் சற்று ஆராய்வோம்: الصلح خير " ஒற்றுமையாய் வாழ்வதில் மெத்த நலமிருக்கிறது " — (4:128). واصلحوا ذات بينكم "மேலும் ஒருவரோ டொருவர் சமாதானத்துடனே வாழ்ந்து கொள்ளுங்கள்" — (8 : 1). وان جنحوا للسلم فاجنح لها "இன்னம் அவர்கள் சமாதானத்துக்கு இணங்குவார்க ளாயின், நீரும் அதற்கு இணங்குவீராக"—(8: 61). وعباد الرحمان الذين يمشون على الارض هونا "மேலும் அருளாளனுடைய அடியார்களா யிருப்பவர்கள் தரணியின்மீது சாந்த குணத்துடனே நடப்பவரா யிருக்கிறார்கள் "—(25 : 63). واذا مروا باللغو مروا كراما " மேலும் (சில விதமான சண்டைகளை மூட்டிவிடக்கூடிய) மாற்சரியமான வார்த்தைகள் அவர்களுடைய செவியில் படுமாயின், அவர்கள் (சிறுசிறு விஷயங்களி லெல்லாம் சண்டையைக் கிளப்பாமல்) கண்ணியத்துடனே சென்றுவிடுவார்கள்"—(25:72). நமக்கு மற்றையோரால் வெளிப்படையான தீங்கிழைக்கப்படும் வரையில் நாம் அவர்களுடனே விரோதம் பாராட்டக் கூடா தென்பதுதான் இவ்வாயத்தின் கருத்தாயிருக்கிறது. ஒருவர் சொல்லிய அல்லது செய்த ஓர் அற்ப விஷயத்தைக் கொண்டு அவர்மீது விரோதம் பாராட்டாமல் இருந்தால் மட்டுமே சமூக வாழ்க்கையில் சமாதான மென்பது உண்டாகக் கூடும். இதுதான் எல்லோருடைய ஒற்றுமைக்கும்

மூலகாரணமா யிருக்கும். இவ்வாயத்தில் உபயோகிக்கப்பட் டிருக்கும் لغو என்னும் பதத்தின் பொருளை நாம் ஈண்டுச் செவ்வனே தெரிந்துகொள்ளல் வேண்டும். ஒரு வார்த்தை யேனும் அல்லது ஒரு செய்கையேனும் குறும்புத் தனமான விஷமத் தனத்துடனாவது அல்லது விரோதமான எண்ணத் துடனாவது சொல்லப்பட் டிருப்பினும் அல்லது செய்யப்பட்டி ருப்பினும், அதனால் நமக்கொன்றும் பெரிய தீங்காவது அதிக நஷ்டமாவது உண்டாகாம லிருக்கும்போது அதை லக்வ் என்று சொல்வர். அப்படிப்பட்ட அற்ப வார்த்தைகளையும் சொற்பச் செய்கைகளையும் ஒரு பொருளாகப் பாராட்டாம லிருக்க வேண்டு மென்பதுதான் சாந்தகுணத்தின் அடை யாளமா யிருக்கின்றது. அப்படிப்பட்ட சிறு சிறு தகவல்கள் நடைபெறும் காலங்களில் பெருந்தன்மைக்குரிய கௌரவத் துடனே கவனியாதிருப்பது போல் கண்ணியமாய் நடப்பது தான் பெரிய மனிதனுக்குரிய அழகா யிருக்கிறது. ஆனால், பிறரால் நமக்கிழைக்கப்படும் தீங்கானது நம்முடைய உயிருக் காவது, பொருளுக்காவது, கௌரவத்துக்காவது, வெளிப் படையான பெரிய நஷ்டத்தை விளைவிக்கக்கூடிய விதமாய் இருந்துவிடின், அப்பொழுது அப்படிப்பட்ட அவசரத்தில் நடந்து கொள்ளவேண்டிய பெருமிதத்துக்கு மன்னிப்பு عفو என்று பெயர் சொல்லப்படும். அப்படிப்பட்ட பெரிய மன் னிப்புக்கு வெறும் சாத்விககுணமென்று மட்டும் பெயர்சொல் வதில்லை. இப்படிப்பட்ட மன்னிப்பைப் பற்றி அதற்குரிய இடத்திலே நாம் விஸ்தரித்துச் சொல்வோம். ادفع بالتي هي احسن فاذا الذي بينك وبينه عداوة كانه ولي حميم "வினைகளோ

அல்லது அற்பமாகவோ இருக்கக்கூடிய ஒருவார்த்தைக் காவது அல்லது ஒரு செய்கைக்காவது பதில் செய்யக் கூடிய வேளையிலே அதனைக் காட்டினும் மேலானதைக் கொண்டு அதைத் தடுத்துக் கொள்ளுங்கள் ; அவ்வாறாயின் அவருக்கும் உமக்கும் இடையிலிருந்த பகைமையானது மாறி, அவன் உம்முடைய மனம் குளிர்ந்த நண்பனாக ஆய்விடுவான்"-(41:34). முடிவாகக் கூறுமிடத்து, அற்ப விஷயங்களையெல்லாம் பாராட்டாம லிருக்கக்கூடிய பெருந்தன்மையும் இப்படிப்பட்ட சாத்விக குணத்தில்தான் சேர்க்கப்பட் டிருக்கிறது.

## மரியாதை

மூதன் முதலில் கூறிய முதல் வர்க்கத்தைச் சார்ந்த நான்கு முக்கிய அம்சங்களுள் இறுதி அம்சமானது மரியாதை رفق (ரி'ப்:க்) என்பதாகும் ; மனிதனிடத்தில் காணப்படக் கூடிய இந்த மரியாதைக் குரிய மூல வித்தானது குழந்தைகளிடத்தில் காணப்படுகின்ற முகமலர்ச்சியில்தான் طلاقت வேரூன்றி இருக்கிறது. குழந்தையானது பேசக் கற்றுக்கொள்ளுமுன் அதன் முகமலர்ச்சிதான், பெரிய மனிதர்களிடத்தில் காணப்படக்கூடிய பக்ஷமுள்ளவார்த்தைகளுக்குச் சமமாயிருக்கின்றது ; அக்குழந்தையின் புன்சிரிப்புள்ள முகமலர்ச்சியைக் காணுந்தோறும் அதனிடத்தில் நமக்கு அளவற்ற அபிமானம் உண்டாகிறது. இவ்வாறே பிரியவசனம் சொல்லும் பெரியோரிடத்திலும் நமக்கு அளவற்ற விசுவாசம் உண்டாகின்றது. ஆனால், பிரிய வசனமும் சமயோசிதத்துக்குத் தக்கவாறேதான் ஒரு சற்குணமாய்க் கருதப்படும். உசிதமல்லாத காலத்தில் காட்டப்படும் மரியாதையானது ஓர் உண்மையான நற்குணமாக மாட்டாது. இதைப் பற்றி நமது :குர்ஆன் ஷரீபு வேத

மானது பின்வருமாறு கூறியிருக்கிறது: وقولوا للناس حسنا "மேலும் மனிதர்களுக்கு நன்மை பயக்குவதையே பேசுங்கள்"—(2: 83.)

لا يسخر قوم من قوم عسى ان يكونوا خيرا منهم ولا نساء من نساء عسى ان يكن خيرا منهن ولا تلمزوا انفسكم ولا تنابزوا بالالقاب...... اجتنبوا كثيرا من الظن ان بعض الظن اثم ولا يغتب بعضكم بعضا...... واتقوا الله ان الله تواب رحيم

"சில மனிதர்கள் மற்ற மனிதர்களைப் பார்த்து நகைக்காமலிருப்பார்களாக; ஒருகால் அந்த மனிதர்கள் இந்த நகைத்தவர்களைக் காட்டினும் நல்லவர்களா யிருக்கலாம். இவ்வாறே பெண்டுகளும் மற்றைப் பெண்டுகளைப் பார்த்து நகைக்காமலிருப்பார்களாக; மற்றைப் பெண்டுகள் இந்த நகையாடியவர்களைக் காட்டினும் நல்லவர்களா யிருக்கலாம். நீங்கள் ஒருவருக்கொருவர் மானமழியும்படி நடந்துகொள்ளா திருப்பீர்களாக. மேலும் ஒருவரை யொருவர் பரிகாசமான பெயர்களைக் கொண்டு அழைக்காம லிருப்பீர்களாக. அடிக்கடி சந்தேகங்களை உண்டுபண்ணிக் கொள்வதி னின்றும் விலகிக் கொள்ளுங்கள். ஏனெனின், சில சந்தேகங்கள் குற்றமுள்ளவையா யிருக்கின்றன. வேறு மனிதர்களுடைய குற்றங்குறை இன்னவென்று நீங்கள் நோண்டா திருப்பீர்களாக. மேலும் உங்களுள் ஒருவர் மற்றொருவரை அவர் இல்லாத காலத்தில் இழிவு செய்யா திருப்பாராக. மேலும் ஆண்டவனிடத்தில் அச்சங் கொள்ளுங்கள்; ஏனெனின், அவன் மன்னிப்பவனாகவும் மனவிரக்க முள்ளவனாகவு மிருக்கிறான்"—(49: 11, 12).

ولا تقف ما ليس لك به علم ان السمع والبصر والفؤاد كل اولئك كان عنه مسئولا "மேலும் ஒரு மனிதனுடைய குற்றத்தை ருஜுப்பித்தற்கு வேண்டிய நிச்சயமான சாக்ஷியம் உம்மிடத்திலிருந்தாலொழிய நீர் யாதொரு மனிதன்மீதும் யாதொரு குற்றத்தையும் சுமத்தாதீர்; நிச்சயமாகவே (உம்முடைய) கேள்வியும் பார்வையும் மனமும் இதற்குச் சமாதானம் சொல்லும்படி அழைக்கப்படும்"—(17: 36).

## மன்னிப்பு

சற்குணத்தின் முதற் பிரிவாகிய முந்திய நான்கு நற்குணங்களையும், அஃதாவது, பிறருக்குச் செய்யக்கூடிய தீமைகளினின்று விலகிக் கொள்ளக்கூடிய செய்கைகள் நான்கையும் ஒருவாறு முடித்துக்கொண்ட பிறகு, இப்போது இரண்டாவது வகையாகிய அன்னியருக்கு நாம் செய்யவேண்டிய நன்மைகளைப் பற்றிச் சிறிது பேசுவாம். இவ்வாறு நாம் அயலாருக்குச் செய்ய வேண்டிய நன்மைகள் சம்பந்தமாய் நமது :குர்ஆன் ஷரீபு வேதமும் என்ன முறையிடுகிற தென்றும் யாம் ஈண்டு ஆராய்ச்சி செய்வாம். இவ்வகையில் சாரக்கூடிய சற்குணத்துள் முந்தியதா யிருப்பது மன்னிப்பு عفو என்பதாகும். ஒருவனுக்கு மற்றொருவனால் அதிகமான தீங்கு நேரிடும் போது, அவன் அந்தக் குற்றவாளியைச் சட்டத்தின் கீழ்க் கொண்டுவந்தாவது, அல்லது தானே அவனுக்குத் தக்க தண்டனையை அளித்தாவது தன்னுடைய குறையை நிவர்த்தித்துக்கொள்ள அவனுக்கு முழு அதிகாரமு மிருக்கிறது. ஆதலின், அப்படிப்பட்ட வேளையிலே அவன் தன்னுடைய பாத்தியதையை விட்டுக் கொடுத்துத் தனக்குத் தீங்கு செய்த

அந்தக் குற்றவாளியையும் மன்னித்துவிடுவானாயின், அவன் ஒரு பெரிய நல்ல காரியத்தைச் செய்தானென்றே கூறவேண்டியிருக்கிறது. இதைப்பற்றி நமது :குர்ஆன்ஷரீபானது பின்வருமாறு விளம்பியிருக்கின்றது: والكاظمين الغيظ والعافين عن الناس "தங்களுடைய கோபத்தை யடக்கிக்கொண்டு பிறரைத் தண்டிக்க வேண்டிய அவசியமான காலங்களிலும் அவர்களை மன்னிப்பவர்களே நன்மையான காரியங்களைச் செய்பவராயிருக்கிறார்கள்"—(3:133). جزاء سيئة سيئة مثلها فمن عفى واصلح فاجره على الله "தீமைக்குத் தீமையை அதன் அளவுக்குத் தக்கவாறு பதிலாகச் செய்வது நியாயந்தான்; ஆனால், ஒரு மனிதன் தனக்குச் செய்யப்பட்ட குற்றத்தை மன்னித்துவிடுவானாயின், இப்படிப்பட்ட மன்னிப்பும் அக்குற்றவாளியின் தீயகுணத்தைப் போக்கக்கூடிய அப்படிப்பட்ட சரியான காலத்தில் அளிக்கப்படுமாயின், அவன் தன்னுடைய நன்மையின் சன்மானத்தை ஆண்டவனிடத்தில் கண்டுகொள்வான்"—(42:40). இவ்வாக்கியமானது எப்படிப்பட்ட வேளையிலே மன்னிப்புச் செய்யவேண்டு மென்னும் ஒரு முக்கியமான விதியைக் கற்பிக்கின்றது. எக்காலத்திலும் எல்லோரும் எல்லா ஸந்தர்ப்பங்களிலும் ஒவ்வொரு காரியத்தையும் மன்னித்துவிட வேண்டுமென்று நமது :குர்ஆன் ஷரீபானது யாதொரு நிபந்தனையு மில்லாமல் ஒரு குருட்டுச் சட்டத்தை ஏற்படுத்திவிடவில்லை; ஒவ்வொரு சமயத்திலும் நமக்கு வரும் தீமையைத் தடுக்காமல் நாம் அதற்கு உட்பட்டிருக்க வேண்டு மென்றும் அவ்வேதம் எங்கேயும் முறையிட வில்லை. இன்னம் எப்படிப்பட்ட ஸந்தர்ப்பத்திலும் குற்றவாளிகளுக்கு யாதொருவிதமான தண்டனையும் விதிக்கவேண்டா மென்றும்

அந்தத் தெய்வத் திருமறை ஓரிடத்திலும் கூறிவிடவில்லை. ஆனால், எந்த எந்த வேளைகளில் அவனுக்குத் தக்க தண்டனையை விதிக்க வேண்டுமென்றும் அவ்வேதமானது மிக அழகாக ஒரு சட்டத்தைக் கற்றுக்கொடுத்திருக்கிறது. இது பகுத்தறிவுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் பிடித்தமா யிருக்குமென்பதில் கிஞ்சித்தும் சந்தேக மில்லை. பிறரால் தீங்கிழைக்கப் பட்ட ஒருவன் அவ்வேளையிலே தன்னுடைய எதிரியை மன்னிப்பது உசிதமாகுமா ? அல்லது அவனைத் தண்டிப்பதே சரியாகுமா ? என்று தன்னுடைய பகுத்தறிவைச் செவ்வனே செலுத்தி ஆலோசனை புரிதல் வேண்டும். அந்த ஸந்தர்ப்பத்தில் காரியசித்தி பெறுவதற்கு உசிதமாயிருப்பது எதுவென்று கண்டுகொண்டு, அதன்பிரகாரம் நடத்தல் வேண்டும். சில சந்தர்ப்பங்களில் குற்றவாளியை மன்னித்து விடுவோமாயின், அதனால் அவன் பிறகு தன்னுடைய நடையை ஒழுங்கு செய்துகொண்டு எப்பொழுதுமே நல்ல வழிக்கு வந்துவிடுதல் கூடும். ஆனால், மற்றுஞ் சில வேளைகளில் மன்னிப்பென்பது நாம் எதிர்பார்த் திருந்ததற்கு நேர்மாறான முடிவைக் கொண்டு வந்து, அக்குற்றவாளியை இன்னம் பெரிய தீமைகளையெல்லாம் புரியும்படியான துணிவுள்ளவனாக மாற்றிவிடுதலுங் கூடும். ஆதலின், எந்த ஸந்தர்ப்பத்திலும் நாம் எவர் செய்த குற்றமா யிருப்பினும், அதைக் கண்மூடித்தனமாய் மன்னித்துக் கொண்டே போக வேண்டுமென்று நமது குர்ஆன் ஷரீபானது யாதோரிடத்திலும் குறிப்பாகவேனும் கூறிப்போகவில்லை. ஒருவன் ஒரு குற்றத்தைச் செய்துவிடுவானாயின், முதன் முதலில் நாம் அதற்குரிய தண்டனையின் பலாபலனை நன்கு சிந்தித்துப்பார்த்தல் வேண்டும்; பிறகு உண்

மையில் நன்மை விளையக்கூடிய மார்க்கம் எதுவென்று கண்டு கொண்டு, அதன்படி நடக்க முற்படுதல் வேண்டும். பழிக்குப் பழிவாங்க வேண்டுமென்னும் பிடிவாதக் குணத்தினால் பல தலைமுறை வரை ஒரு சிறு விஷயத்தையும் மறவாமல் அதை அடிக்கடி அதிகமாகத் தூண்டிக்கொண் டிருக்கக்கூடிய பழி வாங்குந் தன்மையோர் பலர் இவ்வுலகினில் காணப்படுவதே போல், எப்படிப்பட்ட ஸந்தர்ப்பங்களிலும் எல்லாவிதமான தீமைகளுக்கும் உட்பட்டுக்கொண்டு தம்முடைய எதிரிகளை யெல்லாம் அடியோடு மன்னிக்கக்கூடிய அப்படிப்பட்ட மனி தர்களும் அனேகம்பேர் இத்தரணியில் இல்லாம லில்லை. தண் டனை விதிப்பதில் ஒருவன் அளவுக்குமேல் சென்றுவிடுவா னாயின், அதனால் எத்தனை விதமான துன்பங்கள் விளைதல் கூடுமோ, அஃதேபோல் ஒவ்வொருவிதமான குற்றத்தையும் அடியோடு மன்னித்து விடுவதாலும் அத்தனை விதமான தீமைகள் விளைதல் கூடும். அளவுக்கு மிஞ்சினால் அமிர்த முமம் நஞ்சாம். ஒரு மனிதன் தன்னைச் சுற்றியும் பற்பல விதமான படுபாவங்களெல்லாம் நிகழ்வதைக் கண்டும் அவற் றைக் காணாது போல் கண்ஜாடையா யிருந்துவிடலாம்; அல்லது தன்னுடைய சொந்த மானத்தையும் கண்ணியத் தையும் பிறனொருவன் தாக்கும்போது அவனை மன்னித்து விட்டுச் சும்மா இருந்துவிடலாம். இப்படிப்பட்ட வேளை களில் மன்னிப்பதானது மகா அகௌரவமான செய்கை யாய்க் காணப்படுகின்றது; ஏனெனின், ஒரு மனிதனுடைய மானமும் மரியாதையும் கௌரவமும் கண்ணியமும் தாக்கப் படும்போதும், அவன் தன்மதிப்பை இழப்பது தர்மமான செய்கை யன்று. "மான மழிந்தபின் வாழாமை முன்

னினிதே.'' ஆதலின், இப்படிப்பட்ட ஸந்தர்ப்பங்களில் மன்னிக்கக்கூடிய மன்னிப்பை யாதோர் அறிவாளியும் ஒரு சிறந்த குணமென்று சிலாகித்துப் பேசமாட்டான். இதனால்தான் எல்லா ஸந்தர்ப்பங்களிலும் மன்னிக்குந் தன்மையை ஒரே விதமாய் உபயோகிக்கக் கூடாதென்றும், காரியா காரியங்களின் உசிதா உசிதத்தை நோக்கியே அந்த மன்னிப்பைக் கொடுக்கவேண்டு மென்றும் நம்முடைய :குர்ஆன் ஷரீபானது குறிப்பிட்டுக் கூறுகின்றது; ஆதலின், பகுத்தறிவின் தன்மையைக் கொண்டு உசிதமான காலங்களில் காட்டப்படும் உண்மையான மன்னிப்பைத்தான் அவ்வேதமானது ஓர் உயரிய நற்குணமென்று சிலாகித்துக் கூறுகின்றது. ஒரு தீமையானது எத்துணைக் கொடுமையாய்க் காணப்படினும், அஃது எப்படிப்பட்ட ஸந்தர்ப்பத்தில் இழைக்கப்படினும், அதை யெல்லாம் ஒன்றும் கவனியாது அந்தக் குற்றவாளியை அடியோடு மன்னித்துவிடக்கூடிய அப்படிப்பட்ட ஸாத்விகத் தன்மையை எல்லோரும் பெற்றுக்கொள்ள முன்வரமாட்டார்; மனிதர்கள் சிலாக்கியத்துடன் ஏற்றுக்கொள்ளத் தக்க சற்குணமும் இதுவாக மாட்டாது. தனக்குப் பிறர் செய்த தீமையை யெல்லாம் மறந்துவிடக் கூடிய தன்மையானது, பகுத்தறிவும் நிதானித்துப் பார்க்கக்கூடிய சக்தியு மில்லாத சிறு குழந்தைகளிடத்திலும் காணப்படக்கூடிய ஓர் இயற்கையான குணமா யிருக்கிறது. ஆதலின், அவசியமான காலங்களில் அவசியமான முறையிலே தன்னுடைய மன்னிப்பைக் காட்டித் தன்னிடத்திலும் அப்படிப்பட்ட சிறந்த குணம் அமைந் திருக்கிறதென்று ஒருவன் வெளிக் காட்டினு லொழிய, அவனிடத்திலிருக்கக்கூடிய இயற்கையான ஒரு தன்மையைக் கொண்டே

அவனை மகாசிலாக்கியவா னென்று கூறிவிடுவது முடியாது. இதன் சார்பாக நாம் பேசும்பொழுது, ஒருவனிடத்தில் இயற்கையா யமைந்திருக்கும் சாதாரணமான ஒரு குணத்துக்கும், அவன் சமயோசிதம் தெரிந்து அவசியமான வேளையில் தன்னுடைய பகுத்தறிவின் உதவியைக் கொண்டு பிறருடைய தீமையை மனமார மன்னிக்கக்கூடிய ஓர் உயர்தர உத்தம குணத்துக்கும் இடையிலுள்ள வித்தியாசமானது இன்னதென்று நீங்கள் செவ்வனே உங்கள் மனத்தின்கண் இருத்திக் கொள்ளுதல் வேண்டும். ஒருவன் ஒரு காரியத்தைச் செய்யப் புகுமுன் அதனால் விளையக் கூடிய பலாபலனாகிய நன்மை தீமைக ளெல்லாம் இன்ன இன்னவை யென்று நன்கு நிதானித்துக் கொண்டு, அதன்பின் அவசியமான காலத்தில் அதற்குத் தக்கவாறு அக்காரியத்தைச் செய்யவோ அல்லது அதைச் செய்யாம லிருக்கவோ முற்படுவா னாயின், அப்பொழுது தான் அவனிடத்தில் இயற்கையா யமைந்துள்ள மறதி யென்னும் குணமானது மன்னிப்பென்று சொல்லக்கூடிய ஒரு மகா குணமாக மாறியதென்று நாம் கூறலாம். கீழ்த்தரமான பிராணிகளுக்குள் பலவற்றினிடத்திலே தீமையற்ற ஸாத்விக குணத்தை நாம் கண்கூடாகக் காண்கின்றோம்; அவற்றிற்கு நாம் கொடுமையை இழைக்கும்போதும் அவை யொன்றும் குறும்பு செய்வதில்லை. பசுமாடானது எத்துணையோ குற்றமற்ற ஒரு பிராணியாய்க் காணப்படுகின்றது; அஃதேபோல் ஓர் ஆட்டுக்குட்டியும் எத்துணையோ ஸாத்விகமாயிருக்கின்றது. ஆனால், மனிதனால் விரும்பப்படக் கூடிய மகோன்னத குணமாகிய மன்னிக்குந் தன்மையானது அம் மிருகங்களிடத்தில் இருப்பதாக எவரும் வாதிக்கத்துணியார். ஏனெனின், அவற்

திற்குப் பகுத்தறி வென்ப தில்லை; ஆதலின், அவை தீமையி னின்றும் நன்மையைப் பாகுபாடு செய்து கொள்வது முடியாது. ஒரு காரியத்தின் நன்மையும் தீமையும் அது செய்யக் கூடிய ஸந்தர்ப்பத்தையே சார்ந்ததா யிருக்கிறது. காரியத்தில் சுயமே யாதொரு நன்மையும் தீமையும் இருப்பதில்லை. ஸந்தர்ப்பத்துக்குத் தக்கவாறு நம்முடைய மனோநிலைமை யானது இருக்கும் தன்மையை யொட்டித்தான் ஒரு காரியத்தை நல்லதென்றும் கெட்டதென்றும் நாம் தீர்மானம் செய்கிறோம். ஆதலின், இக்காரணத்தைக் கொண்டுதான் அல்லாஹுத் தஆலாவின் அரிய திருமறையும் இப்படிப்பட்ட பகுத்தறிவின் பாகுபாட்டை ஒவ்வொரு சற்குணத்துக்கும் அவசியமா யிருக்கவேண்டிய ஒரு முக்கியமான நிபந்தனை யென்று அடிக்கடி வற்புறுத்திக் கூறுகின்றது.

## நன்மை செய்தல்

மற்றையோருக்கு நாம் செய்யக்கூடிய நன்மையின் சார்பான இரண்டாவது சற்குணமானது அ'த்'ல் عدل ஆக விருக்கின்றது. இதன் தாத்பரியம் நன்மைக்கு நன்மை செய்தல் என்பதாகும்; மூன்றாவது சற்குணம் احسان இ'ஹ்ஸான் (அஃதாவது, பக்ஷம் பாராட்டுதல்) என்பதாகும்; நான்காவது சற்குணமாவது ايتاءذي القربي பந்துக்க ளிடத்தில் பக்ஷம் பாராட்டுவதைக் குறிக்கும். இதைப்பற்றி யெல்லாம் :குர்ஆன் ஷரீபானது பின்வருமாறு கூறியிருக்கின்றது:

ان الله يامر بالعدل والا حسان وايتاءذي القربى وينهي عن الفحشاء والمنكر والبغي

"நன்மைக்குப் பதிலாக நன்மை செய்யும்படி யும், (நியாயமுறைப்படி பதிலுக்குப் பதிலாகச் செய்

யும் நன்மையின் அளவைக் காட்டினும் அதிகமான நன்மையைச் செய்யும்படியான சமயம் வாய்க்கும் போது) யாதொருவிதமான பிரயோஜனத்தையும் பெறும விருக்கும் காலையிலும் அதிகமான நன்மையைச் செய்யும்படியும், மேலும் (அவசியமான காலத்தில்) பந்துக்களிடத்தில் காட்டக்கூடிய பக்ஷம் போன்ற அபிமானத்துடனே மேலான கொடைகளைக் கொடுக்கும்படியும் ஆண்டவன் கட்டளையிடுகிறான்; இன்னம் நியாயமான வரம்பைக் கடந்து தீமையுள்ள வழியில் நன்மையைச் செய்வதையும், தகாத வஸ்துவின்மீது பரிதாபகரமான பக்ஷத்தைக் காட்டி அதற்கு அதிகமான நன்மையைச் செய்வதையும் கூடாத காரியங்களென்று அவன் தடை செய்திருக்கிறான்''—(16: 90).

நன்மையைச் செய்யக்கூடிய விஷயத்திலே மூன்றுவிதமான படித்தரங்கள் உண்டென்னும் இரகசியத்தை இத்திருவாக்கியமானது குறிப்பிட்டுக் காட்டுகின்றது: இம்மூவகை நிலைமைகளுள் முதற்படியானது, மனிதன் தனக்கு நன்மை செய்த மனிதர்களுக்குமட்டுமே நன்மை செய்வதைக் குறிக்கும். பிற மனிதர்களுடைய உபகாரமான நற்செய்கைகளின் பெருமையை உணர்ந்துகொள்ளக்கூடிய அத்துணைச் சாமான்யமான மனிதனும் இப்படிப்பட்ட முதற்படியான நற்குணத்தையடைந்து நன்மைக்குப் பிரதிப் பிரயோஜனமான நன்மையைச் செய்யக்கூடிய தன்மையிலே வந்துவிடலாம். இப்படிப்பட்ட முதற்படியிலிருந்து இரண்டாவது படிக்குச் செல்ல வேண்டுமாயின், சிறிது முன்னேறிச் செல்லல் வேண்டும்; இந்த இரண்டாவது படியில் மனிதன் தானாகவே மற்ற மனிதர்களுக்கு நன்மையைச் செய்ய முற்படுகிறான். பிறர் நம்பி

டத்தில் யாதொரு விதமான பிரதிப் பிரயோஜனத்தையும் எதிர்பார்க்கும்படியான சட்டமில்லாத காலத்திலும் நாமாகவே முற்பட்டு அன்னாருக்குச் செய்யும் நன்மைதான் இப்படிப் பட்ட இரண்டாவது வகையில் சாரும். இஃதொரு சிறந்த குணமே யாயினும், இதன் ஸ்தானமானது மத்திய ஸ்தான மாகத்தான் இருக்கிறது; இதுவே மிகச் சிறந்த குணமென்று கூறுவதற் கில்லை. ஏனெனின், பிறருடைய நன்மையை நாம் ஒன்றும் பெற்றுக்கொள்ளா முன்னரே நாம் அவர்களுக்கு நன்மையான காரியங்களைச் செய்தபோதினும், இயற்கை யாகவே நாம் அன்னாரிடம் நன்றிமறவாமை யென்னும் ஒரு பிரதிப் பிரயோஜனத்தையேனும் எதிர்பார்க்கின்றோம்; நம் முடைய உதவியை அவர்கள் சிறிதளவேனும் பாராட்டாமற் போய்விடுவார்க ளாயின், உடனே அவர்களை நாம் நன்றி கெட்டவரென்று கூறத் துணிகின்றோம். மனிதர்கள் சாதா ரணமாய்ப் பிறருக்கு நன்மை செய்யும்போது, அவர்களிடத்தி லிருந்து நன்றி மறவாமையாகிய பதிலையாவது எதிர்பார்ப்பது வழக்கம்; இதனால் அம்மனிதர்கள் அவர்கள்மீது ஒரு கடமை யைச் சுமத்தி, அவர்களால் தங்களுக்குப் பிரதிப் பிரயோஜன முண்டாக வேண்டுமென்று ஆசைப்படுகின்றனர். சாதாரண மாக நமக்குப் பிறர் செய்யத் தகாத காரியங்களை யெல்லாம், அவர்களுக்கு நாம் செய்திருக்கும் நன்மைக்குக் கைம்மாறாக, அவர்கள் நமக்குச் செய்து கொடுக்கக் கடமைப்பட் டிருக் கிறார் என்னும் எதிர்நோக்கமானது நம்முடைய மனத்தின் கண் அடிக்கடி ஊடாடுவ துண்டு. இப்படிப்பட்ட துர்க்குண மானது மனிதவர்க்கத்தா ரிடத்தில் இருப்பது கூடாதென்றே நமது :குர்ஆன் ஷரீபானது பின்வருமாறு எச்சரிக்கை செய்

திருக்கின்றது : لا تبطلوا صدقاتكم بالمن والاذى "பரிசுத்த மான எண்ணத்துடனே செய்யப்பட வேண்டிய தானத்தை, யாருக்கு நீங்கள் அதைச் செய்கின்றீர்களோ அவர்கள் உங்களிடம் நன்றி பாராட்டக் கடமைப்பட் டுள்ளா ரென்று அவர்களிடம் நீங்கள் ஞாபக மூட்டுவதாலும், அவர்களுக்கு நீங்கள் துன்பஞ் செய்வதாலும் உங்களுடைய தானத்தை வீணாக்கி விடாதீர்கள்"—(2:264). இவ்வாயத்தில் "தானம்" என்று நாம் மொழிபெயர்த்திருக்கும் ஸ'த':கா என்னும் அரபு வார்த்தையானது ஸி'த்':க் என்னும் தாதுவி லிருந்து பிறந்திருக்கிறது; ஸி'த்':க் என்பதன் தாத்பரியம் பரிசுத்தமான உள்ளெண்ணம் என்பதாகும். ஆதலின், தானம் செய்வதில் உள்ளெண்ணமானது நல்லெண்ணமா யில்லா விடின், அப்படிப்பட்ட செய்கையானது படாடோபத்துக் காகச் செய்யப்படும் வெறும் வெளிப்பகட்டான செய்கையாக மாறித் தன்னுடைய நன்மையை இழந்து விடுகிறது. சுருங்கச் சொல்லுமிடத்து, பிறருக்கு நன்மையைச் செய்யும் ஒருவன், சில சமயங்களில் அப்படிப்பட்ட நன்மையான உபகாரத்தை அடைந்து கொண்டவர்கள் தன்னிடத்தில் நன்றிசெலுத்தக் கடமைப்பட் டிருக்கிறார்களென்று அவர்களுக்கு ஞாபகம் மூட்டுவதனு லாவது, அல்லது தன்னுடைய தான தர்மத்தைக் குறித்துப் பெருமை பேசுவதனு லாவது தன்னுடைய நற் செய்கையின் பலனை இழக்கும்படி நேரிடுகிற தென்பதுதான் இதில் காணப்படும் ஒரு பெருங் குறையா யிருக்கின்றது ; பெருமையான காரியங்களை யெல்லாம் சிறுமை செய்வது இதுதான். இதனுல்தான் அல்லாஹு தஆலாவானவன் யாதொரு விதமான குற்றங் குறையு மில்லாத மூன்றுவது

வகையான மற்றொருவித நன்மையைப் பற்றித் தன்னுடைய திருமறையில் விளக்கி யுள்ளான். இப்படிப்பட்ட நன்மையை நாம் பிறருக்குச் செய்ய வேண்டு மாயின், அப்படிப்பட்ட நன்மையை நாம் ஒருவருக்குச் செய்திருக்கிறோ மென்னும் ஞாபகமே நம்முடைய மனத்தின்கண் வருவது கூடாது; அன்றியும் யாருக்கு நாம் இந்த நன்மையைச் செய்திருக்கிறோமோ, அவர் நம்முடைய நன்மையைப் பெற்றுக்கொண்டதற்காகச் சிறிது வந்தனத்தையாவது நமக் களிப்பா ரென்று எதிர்பார்ப்பது கூடாது. நாம் நம்முடைய நெருங்கிய பந்துக்களிடம் எவ்வாறு எவ்வகையான பிரதிப் பிரயோஜனத்தையும் எதிர்பாராமல் அவர்களுக்கு நன்மை செய்வோமோ, அவ்வாறே இந்த நன்மையைச் செய்யவேண்டும்; உதாஹரணமாகத் தாயானவள் தன்னுடைய சேயினிடத்தில் எவ்வாறு நடந்துகொள்ளுகிறாளோ, அவ்வாறே நாம் இம் மூன்றாவது நிலைமையில் நடந்து கொள்ளுதல் வேண்டும். நம்மிடத்தில் நன்மையைப் பெற்றுக் கொண்டவர்க ளிடத்திலிருந்து நாம் எவ்விதமான பிரதிப் பிரயோஜனத்தையும் எதிர்பார்ப்பது கூடாது; அவர்களிடத்திலிருந்து ஒரு வாய் வந்தனத்தையாவது அல்லது ஒரு தலையசைப்பையாவது நாம் எதிர்நோக்குவது தகாது. ஆண்டவனிடத்தில் நாம் வைத்துள்ள அபிமானத்தின் காரணமாக மட்டுமே பிறருக்கு நன்மை செய்தல் வேண்டும். இதுதான் ஆண்டவனுடைய சிருஷ்டிப் பொருள்களிடத்தில் நாம் காட்டக்கூடிய கருணையின் மகோன்னதமான கடைசிப் படித்தரமா யிருக்கிறது; இதைக் காட்டினும் மேலான தொன்றையும் மனிதனால் செய்து காட்டுவது முடியாது. இதுதான் பந்துக்களிடத்தில் காட்டக்கூடிய

பக்ஷத்தை யொத்த அபிமானம் إِيتَاءِ ذِي الْقُرْبَى என்று :குர்ஆன் ஷரீபில் குறிப்பிடப்பட் டிருக்கிறது. ஆனால், சாதாரணமான முதற் படியிலிருந்து மிகவும் மேலான மூன்ருவது நிலைமை வரையிலுள்ள எல்லாவிதமான நன்மைகளேயும் செய்யும்போது அவற்றிற் கெல்லாம் அவசியமான நிபந்தனை யொன்று ஆண்டவனுலேயே ஏற்படுத்தப்பட் டிருக்கிறது ; அஃதாவது, ஒவ்வொருவித நன்மையான காரியமும் அது அதற்குரிய சரியான சமயம் பார்த்துச் செய்யப் படுதல் வேண்டும் என்பதுதான் ; ஏனெனின், இப்படிப்பட்ட மகா சிரேஷ்டமான நன்மைகளெல்லாம் அதிஜாக்ரதையான எச்சரிக்கையுடனே செய்யப்பட்டு வந்தா லொழிய அவை யனைத்தும் நன்மையைப் பயக்குவதை விடுத்துத் தீமையையே விளக்குமென்று :குர்ஆன் ஷரீபே மிக விளக்கமான வார்த்தைகளால் வெளிப்படுத்தி யிருக்கின்றது. சமயத்துக்கு வேண்டிய அளவே நன்மையைச் செய்யாமற் போய்விடுவோமாயின், நன்மைக்கு நன்மை செய்யும் அ'த்'ல் என்னும் நற்குணமானது 'ப'ஹ்ஷா என்று சொல்லப்படக்கூடிய தீமையாக மாறிவிடும் ; அஃதாவது, அளவுக்கு மீறிய அதிகமான நன்மையானது நன்மையைப் பயக்குவதைக் காட்டினும் அதிகமான தீமையையே பயக்கும். இ'ஹ்ஸான் என்று சொல்லப்படக்கூடிய சாதாரணமான நன்மையானது செய்யப் படாத முறையில் செய்யப்பட்டால் முன்கராக மாறிவிடுகின்றது; அஃதாவது, பகுத்தறிவுக்கும் மனச்சாக்ஷிக்கும் நேர்மாருன வழியிலே செய்யப்படும் காரியமாக ஆய்விடும். பந்துக்களிடத்தில் காட்டப்படக்கூடிய அப்படிப்பட்ட அபிமானம் إِيتَاءِ ذِي الْقُرْبَى அளவுக்கு மீறிய தீய வழியில்

உபயோகிக்கப்படு மாயின், அது ப’:க்யி என்று சொல்லப்படு கின்ற கொடிய துன்பமாக மாறிவிடுகின்றது; ப’:க்யி என்னும் அரபுப் பதமானது தன்னுடைய மூலார்த்தப் பிரகாரம் தன் னுடைய அளவுக்குமீறியவெள்ளத்தினுல் பயிர்களை நாசமாக்கு கின்ற மழையை (அதிவிருஷ்டியை)க் குறிக்கும்; ஆதலின், அதிகமான நன்மையைப் பயத்தற்குரிய யாதொரு காரியத்தை யும் அளவுக் கதிகமாகச் செய்து அதனுல் அதிக தீங்கு விளையுமாயின், அப்பொழுது அந்த அதீதமான காரியத்துக்கு ப’:கீ என்னும் பெயர் வழங்க லாயிற்று; இவ்வாறே அளவுக் குக் குறைந்த செய்கையாலும் தீமையொன்று விளையுமாயின், அதற்கும் ப’:க்யி என்னும் பெயரே வழங்கிவருகின்றது. காலா காலத்தின் உசிதா உசிதங்களைக் கருத்திலிருத்தி, நம்முடைய பகுத்தறிவை அவ்வவற்றிற்குத் தக்கவாறு உபயோகப்படுத்தி, அது அதற்குவேண்டிய அளவின் பிரகாரம் மேற்கூறிய மூன்று விதமான நன்மைகளையும் செய்துவந்தா லல்லாது அவற் றைச் சற்குணங்க ளென்று கூறுவது கூடாதென்பதை மட் டும் நீங்கள் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுதல் வேண் டும். அஃதாவது, மீண்டும் விளக்கமாகக் கூறத் துணிவோ மாயின், இப்படிப்பட்ட நன்மையான காரியங்களைச் செய்தற் குரிய நற்குணமானது எல்லோரிடத்திலும் இயற்கையாகவே அமைந்திருக்கின்றன; ஆனுல், அவற்றைச் சரியான பகுத் தறிவின் தீர்மானத்தின்மீது சரியான காலத்திலே உபயோ கித்து வருவோ மாயின், அப்படிப்பட்ட இயற்கை நற்குண மெல்லாம் மிகச் சிறந்த சற்குணங்க ளென்னப்பட்ட பொற் குணங்களாகவே மாறிவிடுகின்றன.

இ‘ஹ்ஸான் என்று சொல்லப்படுகின்ற நன்மையின்

சார்பான விஷயத்தைப் பற்றிக் கூறும்போது நம்முடைய :குர்ஆன் ஷரீபானது இதன்கீழ்க் காணும் மற்றொரு விதமான நிபந்தனையையும் ஏற்படுத்தி யிருக்கின்றது. இ'ஹ்ஸான் சம்பந்தமான பிரஸ்தாபம் வருமிடங்களி லெல்லாம் அல் என்னும் சுட்டடை மொழியானது அதனுடனே சேர்க்கப்பட்டே யிருக்கிறது; இதனால் இ'ஹ்ஸான் செய்யவேண்டிய ஒவ்வொரு சமயத்தின் உசிதா உசிதத்தையும் நன்கு நோட்டமிட்டு, அதற்குத் தக்கவாறு அவ் வப்பொழுது நடந்துகொள்ளல் வேண்டுமென்னும் தாத்பரியத்தைத் தெரிந்து கொள்ளுகிறோம். இதைக் குறித்துப் பின்வரும் வாக்கியத்தையும் :குர்ஆன்ஷரீபில் காண்கின்றோம் :

يا أيها الذين آمنوا انفقوا من طيبات ما كسبتم...... ولا تيمموا
الخبيث منه...... لا تبطلوا صدقاتكم بالمن والاذى كالذي ينفق
ماله رئاء الناس...... احسنوا ان الله يحب المحسنين

" ஓ உறுதியான நம்பிக்கை யுடையவர்காள்! நீங்கள் சட்ட முறைப்படி சம்பாதித்துள்ள நல்ல பொருள்களிலிருந்து (அஃதாவது, திருட்டு, கொள்ளை, கள் விற்றல், லஞ்சம் வாங்குதல், பிறர் பொருளை அபகரித்தல், அல்லது பிறரைத் துன்புறுத்திப் பொருள் பறித்தல், அல்லது வேறெவ்விதமான ஆக்ஷேபகரமுள்ள, அல்லது அநீதியுள்ள முறையா லெல்லாம் சம்பாதித்தல் ஆகிய இப்படிப்பட்ட வழிகளால் சேகரம் செய்யப்படாத பொருளிலிருந்து) தானதர்மம் செய்யுங்கள்; மேலும் சட்டமுறைப்படி யல்லாமல் வேறு வழிகளால் தேடிய பொருளிலிருந்து தான தர்மம் செய்யலா

மென்னும் எண்ணமானது உங்களுடைய ஹிருதயத்தி லிருந்து அப்பால் ஒதுக்கித் தள்ளப்படட்டும்''—(2:267). ''நீங்கள் உபகாரம் செய்து உதவிபுரிந்த மனிதர்களிடத்தி லிருந்து பிரதி யுபகாரத்தை எதிர் பார்ப்பதனாலாவது அல் லது அவர்களைத் துன்புறுத்துவதனு லாவது உங்களுடைய தர்மத்தை வியர்த்தமாக்கி விடாதீர்கள்—(அஃதாவது, அவர்க ளுக்கு நீங்கள் செய்திருக்கும் உபகாரத்தை ஞாபக மூட்டுவத னுலாவது அல்லது அவர்களை வேறெவ்விதத்தினுல் தொந்தரை செய்வதனுலாவது உங்களுடைய தர்மத்தை வீணுக்கிவிட வேண்டாம்; ஏனெனின், இப்படிச் செய்வதனுல் உங்களால் செய்யப்பட்ட உபகாரமானது உங்களுக்கு எவ்விதமான நன்மையையும் தாராமற் போய்விடுகின்றது); மேலும் பிற ருடைய பார்வையில் படவேண்டு மென்னும் எண்ணத் துடனே உம்முடைய பொருளைச் செலவு செய்யாதீர்''— (2: 195). احسنوا ان الله يحب المحسنين ''மேலும் ஆண்டவ னுடைய சிருஷ்டிப் பொருள்களுக்கு நன்மை செய்வீராக! ஏனெனின், இப்படி நன்மை செய்கிறவர்களையே ஆண்டவன் அதிகம் நேசிக்கிறான்''—(2: 195).

إِنَّ الْأَبْرَارَ يَشْرَبُونَ مِنْ كَأْسٍ كَانَ مِزَاجُهَا كَافُورًا عَيْنًا يَشْرَبُ بِهَا عِبَادُ اللَّهِ يُفَجِّرُونَهَا تَفْجِيرًا ...... وَيُطْعِمُونَ الطَّعَامَ عَلَىٰ حُبِّهِ مِسْكِينًا وَيَتِيمًا وَأَسِيرًا إِنَّمَا نُطْعِمُكُمْ لِوَجْهِ اللَّهِ لَا نُرِيدُ مِنْكُمْ جَزَاءً وَلَا شُكُورًا

''நிச்சயமாகவே உண்மையான நற்கிரி யைகளைச் செய்கிறவர்கள் கா'பூரால் (கற்பூரத்தால்) கலக்கப் பட்ட ஒருவகைப் பானகத்தைப் பருகுவார்கள்; அஃதாவது,

மனத்திலுள்ள பொறாமை யென்னும் புழுக்கமும், பதைக்கப் பதைக்கத் துடிக்கும் பச்சாதாபமும், இன்னம் இவ்வுலக சம்பந்தமான எல்லாத் தீய இச்சைகளும் அவர்களுடைய ஹிருதயத்திலிருந்து ஒழிக்கப்பட்டுவிடும்"—(76:5-9). காபூ'ர் (கற்பூரம்) என்னும் பதமானது க'ப்ர் என்னும் மூலத்திலிருந்து பிறந்திருக்கிறது; க'ப்ர் என்னும் பதமானது மூடுதல் என்றும் அமுக்குதல் என்றும் பொருள்படும். எனவே, கற்பூர பானத்தைப் பருகுவ தென்பது இவ்விடத்தில் அவர்களுடைய சட்டவிரோதமான துர்க்குணங்களை அடக்குவதென்பதையே குறிக்கும்; இதனால் அன்னவரின் ஹிருதயங்களிலுள்ள ஒவ்வொருவிதமான அசுத்தமும் அடியோடு ஒழிக்கப்பட்டு, மனப்பரிசுத்தம் அதிகமாகத் தழைக்கத் தலைப்படும் என்றும், ஆண்டவனுடைய உண்மையை உணர்ந்துகொண்டதன் காரணத்தா லுண்டாகும் குளிர்ந்த தன்மையினால் அவர்கள் சிரம சாந்தி யடைந்துகொண்டிருப்பார்க ளென்றும் தெரிந்து கொள்ளுகிறோம். பின்னும் அவ் வாக்கியத்தில், "ஆண்டவனுடைய அடியார்கள், அஃதாவது, நன்மையைச் செய்கிறவர்கள் அந்த நியாயத் தீர்ப்பு நாளன்று, அவர்கள் இங்கே தங்களுடைய சொந்தக் கரங்களினால் பீறிட்டு வெளியாகும்படி செய்துகொண்டிருக்கும் நீரூற்றினின்றும் பருகுவார்கள்," என்னும் விஷயம் காணப்படுகிறது. இந்த 76: 6-வது வாக்கியம்தான் 'பிர்தௌ'ஸின் சார்பான உண்மையான தத்துவத்தின் இரகசியத்தை வெளியில் கொண்டுவரக் கூடியதாயிருக்கின்றது. இதன் இரகசியத்தை நாட விருப்பமுள்ளவர்கள் தங்களுடைய நாட்டத்தை இவ்விஷயத்திலே நன்கு செலுத்துவார்களாக. இன்னமும் இப்படிப்பட்ட ஒரு வாக்கியமும்

காணப்படுகின்றது: "மேலும் ஆண்டவன்மீது அவர்கள் வைத்த விசுவாசத்தினால் தங்களுடைய ஆகாரத்தை (அவர்களுக்கே அஃது அதிகம் வேண்டப்படினும்) ஏழைகளுக்கும் அனாதைகளுக்கும்அடிமைகளுக்கும்கொடுக்கிறார்கள். (மேலும் சொல்லுகிறார்கள்:) உங்கள்மீது நாங்களொன்றும் கடப்பாடான காரியத்தைச் சுமத்திவிடவில்லை; ஆனால், எங்களுடைய ஒரே அவாவா யிருப்பது ஆண்டவன் எங்கள்மீது திருப்தியா யிருக்கவேண்டு மென்பதுதான். எனவே, அவனுடைய முகத்திற்காகவே நாங்கள் இதைச் செய்கிறோம். இதற்காக உங்களிடத்திலிருந்து நாங்கள் வந்தனத்தை யேனும் பிரதிப் பிரயோஜனத்தை யேனும் நாடவில்லை"—(76:8,9). சிருஷ்டிகளிடத்தில் மனிதனுக்குண்டாக வேண்டிய உண்மையான காருண்யத்தினின்றும் முளைக்கக் கூடிய நற்செய்கையின் மூன்றாவது நிலைமையை இவ்வாக்கியம் குறித்துக் காட்டுகின்றது; இத்தகைய நற்செய்கையானது யாதொரு விதமான பிரதிப் பிரயோஜனத்தையும் எதிர்பார்க்கிறதில்லை; பிரதிப் பிரயோஜனம் இருக்கட்டும்; செய்ந்நன்றியை மறவாத ஒரு வந்தனத்தையேனும் எதிர்பார்க்கிறதோ வெனின், அஃதும் வேண்டாமென்றே குறிக்கப்பட்டிருக்கிறது. அஃதாவது, நாம் ஒருவருக்கு நன்மையைச் செய்யுங்கால், அதை அவர் ஒத்துக்கொண்டு நன்றிபாராட்ட வேண்டு மென்பதையும் எதிர் பார்ப்பது தகாது. واٰتی المال علی حبہٖ ذوی القربی والیتامی والمسا کین وابن السبیل والسائلین وفی الرقاب "ஆண்டவனைத் திருப்திசெய்யும் பொருட்டுத் தங்களுடைய சுற்றத்தாருக்குத் தங்கள் ஐசுவரியத்தைக் கொண்டு உதவி செய்து கொண்டும், அனாதைகளை ஆதரித்துக் கொண்டும், தாரித்திரியத்தால் பீடிக்

நப்பட்டவரைக் கண்காணித்துக் கொண்டும், வழிப்போக்கர்களுக்கும் யாசிப்போருக்கும் அள்ளிக் கொடுத்துக்கொண்டும், வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க முடியாதவரின் கடனைக் கொடுத்துக்கொண்டும், அடிமைகளைவிடுவிக்க உதவிபுரிந்துகொண்டும் இருப்பவர்களே மெய்யான சன்மார்க்கர்களாயிருக்கிறார்கள்"—(2:177). اذاانفقوالم يسرفوا ولم يقتروا وكان بين ذالك قواما "மேலும் அவர்கள் செலவு செய்யும்போது, ஊதாரித்தனமாயில்லாமலும் உலோபித்தனமாயில்லாமலும் மத்திபமான வழியையே பின்பற்றுகிறார்கள்"—(25:67). والذين يصلون ما امر الله به ان يوصل ويخشون ربهم ويخافون سوء الحساب "மேலும் இணைத்து வைக்கும்படி ஆண்டவனால் ஏவப்பட்டதை ஒன்றாக இணைத்துக்கொண்டும், தங்களுடைய நாயனிடத்தில் அச்சம் பாராட்டிக் கொண்டும், கேள்வி கேட்கப்படும் (நாளின்) தீமையை அஞ்சிக் கொண்டும் இருப்பவர்கள்"—(13: 21.) وفي اموالهم حق للسائل والمحروم "அவர்களுடைய ஐசுவரியத்தினின்றும் யாசிப்பவருக்கும் யாசிக்க முடியாமல் (வாயில்லாப் பிராணிகளாகிய எல்லாச் சிருஷ்டிகளும் உட்பட) தடையுண்டோருக்கும் ஒரு பாகம் அமைக்கப்பட் டிருக்கிறது"—(51:19). الذين ينفقون في السراء والضراء "க்ஷேமமாய் இருக்கும் காலத்தில் மட்டுமல்லாமல் க்ஷாமமா யிருக்கும் காலத்திலும் அந்தரங்கத்திலும் பஹிரங்கத்திலும் பொருளை ஈவோர்கள்"—(3:133). وانفقوا مما رزقناهم سرا وعلانية "மேலும் அந்தரங்கமாகவும் பஹிரங்கமாகவும் தருமம் செய்வோர்—(ஆடம்பரமில்லாமலிருக்கும்பொருட்டு இரகசியமாகத் தருமம் செய்வார்கள்; ஏனையோரும் தம்மைப் பார்த்துப் பின்பற்ற வேண்டுமென்று

வெளிப்படையாகவும் செய்வார்கள்)''—(13:22). انما الصدقات للفقراء والمساكين والعاملين عليها والمؤلفة قلوبهم وفي الرقاب والغارمين وفي سبيل الله وابن السبيل فريضة من الله والله عليم حكيم

"ஏழை விகிதத்தினின்று கிடைக்கும் வருவாயானது ஏழைகளையும் உதவி தேடுவோரையும் ஆதரிப்பதற்கும், அவ்வேழை விகிதத்தை வசூல் செய்யும் விஷயத்திலும் பங்கிடும் விஷயத்திலும் உழைத்துவரும் மனிதர்களின் சம்பளத்துக்கும், தீமையின் வலையிலே சிக்குண்டு போகக்கூடியவர்களைத் தடுத்துக் காப்பாற்றுவதற்கும், அடிமைகளை விடுதலை செய்வதற்கும், கடன் தொந்தரையாலும் தாரித்திரியக் கொடுமையாலும் அல்லது வேறுவிதமான உபத்திரவத்தாலும் கஷ்டப்படுவோரைக் காப்பாற்றுவதற்கும், ஆண்டவன் பாதையிலே முழுதும் ஈடுபடும் இதர காரியங்களுக்கும், வழிப்போக்கர்களுக்கு உதவி புரிதற்கும் செலவிடப்படுதல் வேண்டும். ஆண்டவனிடத்திலிருந்து இஃதொரு கட்டளையா யிருக்கிறது ; மேலும் ஆண்டவனே அறிந்தவனாகவும் ஞானவானாகவும் இருக்கிறான்''—(9:60). لن تنالوا البر حتى تنفقوا مما تحبون "நீங்கள் நேசித்திருப்பதி னின்றும் உங்களுடைய உடனொத்தவர்களின் காரியத்துக்காகச் செலவு செய்யும் வரையில் நீங்கள் ஒரு போதும் நன்மையின் பக்கல் வரமாட்டீர்கள்''—(3: 91). وآت ذا القربى حقه والمسكين وابن السبيل ولا تبذر تبذيرا " மேலும் உங்களுடைய சுற்றத்தாருக்கு அவசியமான காலத்தில் அவர்களுக்கு வேண்டுவதையும் ஏழைகளுக்கும் வழிப்போக்கருக்கும் கொடுத்துதவுங்கள்; ஆனால், உங்களுடைய பொருளை வீணான வழியில் விருதாவாகச் செய்யாதீர்கள்''—(17:26). இவ்வாக்கியத்தினால் அனாவசியமான ஊதாரித்தனம் கூடா

தென்பதையும், பெருமைக்காகவும் கௌரவத்துக்காகவும் ஐசுவரியத்தை அகாரணமாய் வீண்செலவு செய்யக்கூடாதென் பதையும் நன்கு தெரிந்துகொள்ளுகிறோம். கல்யாண காலங் களிலும், மரணச் சடங்குகளிலும், குழந்தையின் பிறவிச் சடங்குகளிலும், பின்னும் இவைபோன்ற மற்றும் பல சடங்கு களிலும் செலவிடப்படும் வீண் செலவுகளெல்லாம் இந்த வாக்கியத்திலேயே அடங்கும். وبالوالدين احسانا وبذى القربى واليتامى والمساكين والجار ذى القربى والجار الجنب والصاحب بالجنب وابن السبيل وما ملكت ايمانكم ان الله لا يحب من كان مختالا فخورا الذين يبخلون ويامرون الناس بالبخل ويكتمون ما اتاهم الله من فضله "உங்களுடைய பெற்றோர்களிடத்தும் சுற்றத்தார்களிடத்தும், அனாதைகளிடத்தும், ஏழைகளிடத் தும், உங்கள் உறவினராயுள்ள அண்டை அயலாரிடத்தும், அன்னியராயுள்ள அண்டை அயலாரிடத்தும், உங்களுடைய பழக்கமான தோழர்களிடத்தும், வழிப்போக்கரிடத்தும், பின் னும் உங்களுடைய வலக்கரத்துக்குச் சொந்தமா யிருப்பவ ரிடத்தும் (இவர்கள் உங்களுடைய அடிமைக ளாகவேனும், ஊழியக்காரர்க ளாகவேனும், குதிரைகளாகவேனும், அல்லது வேறு பிராணிகளாகவேனும் இருப்பினும் சரிதான்) ஆகிய இவர்களிடத்தெல்லாம் பக்ஷம் பாராட்டுவீர்களாக! ஏனெ னின், இதுதான் ஆண்டவனுக்குப் பிரியமா யிருக்கிறது; மேலும் வீண் பெருமைக்காரர்களையும், சுயநலப்பிரியர்களை யும் அவன் விரும்புவதில்லை. இன்னமும் தாங்கள் உலோபித் தனமாய் இருந்துகொண்டு பிறரையும் உலோபிகளாய் இருக் கச் செய்து, ஆண்டவன் தன்னுடைய கருணையினால் அவர்க ளுக்குக் கொடுத்திருப்பதை மறைத்து வைத்துக்கொண்டு



மௌலானா முஹம்மதலீ எம். ஏ., எல் எல். பீ.,
இக் கிரந்தத்தை இங்கிலீஷில் மொழிபெயர்த்தவர்.

ஏழைகளுக்கும் உதவியை நாடுவோருக்கும் 'எங்களிடம் ஒன்றுமில்லை' என்று சொல்வோரையும் அவன் விரும்புவதில்லை''—(4:36,37).

## தைரியம்

ஐந்தாவது குணமாகிய "தைரியம்'' شجاعت என்பது ஆடவரிடத்தில் காணப்படும் ஆண்மைத்தன்மையை ஒத்திருக்கின்றது. பகுத்தறிவென்பதை அடையப் பெற்றிராத சிறு குழந்தைகளை நோட்டமிட்டுப் பார்ப்போம். அவை தம்மிடத்தில் இயற்கையாய் அமைந்து கிடக்கும் துணிவான ஆண்மைத் தனத்தைக் காட்டுகின்றன; இப்படிப்பட்ட துணிச்சலினால் அவை எப்படிப்பட்ட ஒளிப்பிழம்பையும் தம்முடைய கரங்களினால் தாவிப் பிடிக்கின்றன. இதற்குக் காரணம் யாது? சிறு குழவிகள் தாம் செய்வதன் முடிபு இன்னதாகுமென்பதை உணர்ந்து கொள்ளப் போதுமான பகுத்தறிவைப் பெறு முன்னரே அவற்றின் மனத்தின்கண் இயற்கையான துணிச்சலொன்று பெருமிதமாகக் காணப்படுகின்றது. இப்படிப்பட்ட தன்மையிலுள்ள மனிதனும் சிறிதும் அச்சமில்லாமலே சிங்கங்களிடத்தும் அவை போன்ற மற்றும் பல துஷ்ட மிருகங்களிடத்தும் மிகத் துணிவுடனே எதிர்த்துச் செல்லுகின்றான்; அதுவேயுமன்றி, யுத்த காலங்களிலும் பெரும்பான்மையான முழுப் படைகளுடனும் எதிர்த்து நிற்கிறான்; இப்படிப்பட்ட வேளைகளில் அவனுக்கு அப்படிப்பட்ட தைரியமிருக்கிறதென்று மனிதர்கள் நினைக்கிறார்கள். ஆனால், யோசித்துப் பார்க்குமளவில், இத்தன்மைத்தான துணிச்சலானது ஒரு சிறந்த சற்குணமாய்க்

காணப்படுவதைக் காட்டினும் ஓர் இயற்கையான முரட்டுத் தைரியமாகவே புலப்படுகின்றது. மனிதனுடைய இப்படிப் பட்ட துணிச்சலான செய்கைகளுடனே ஒப்புநோக்குங்கால் வேட்டை நாயும், காட்டு மிருகங்களும் இவ்வண்ணமாகவே மகாதைரியத்துடனே நடப்பனவே போலத்தான் காணப்படு கின்றன. ஆனால், நாம் இவ்விடத்தில் "தைரியம்" (ஷுஜாஅ’த்) என்று கூறுவதெல்லாம் மேற்கூறிய இயற்கைத் துணிவைக் குறிக்க மாட்டாது. நம்முடைய செய்கையின் காரண காரியப் பொருத்தத்தை நன்றாகப் பரியாலோசனை செய்து, இப்படிப் பட்ட செய்கை இப்படிப்பட்ட வேளையில் அவசியந்தானா? அல்லவா? என்பதையும் நன்றாக ஆழத் தீர்மானித்த பின்னரே நம்மிடத்தில் இங்கே கூறிய தைரியம் (ஷுஜாஅ’த்) என்பது வெளியாதல் கூடும்; இடம் பொருள் ஏவல்களின் உசிதா நுசிதங்களை ஆழமாக ஆராய்ந்த பின்னர் அவசியமானபோது அவசியமான விதத்தில் வெளிக்காட்டப்படும் போதுமட்டுமே இந்தவிதமான தைரியமானது ஓர் உயரிய பெருமிதம் வாய்ந்த உத்தம சற்குணமாகக் கருதப்படும். குர்ஆன் ஷரீபானது இதைக் குறித்துப் பின்வருமாறு ஆக்ஞாபித் திருக்கின்றது: والصابرين في الباساء والضراء وحين الباس "பிணிவாய்ப் படும் போதும் துன்பமான காலங்களிலும் யுத்த வேளைகளிலும் தங்களுடைய திடசித்தத்தை இழந்துவிடாமல் உறுதியுடன் நின்று கொண்டு பொறுமையுடன் நடப்பவரே உண்மையில் தைரியமுள்ளவர்களா யிருக்கிறார்கள்" (2:177). والذين صبروا ابتغاء وجه ربهم "துன்பம் நேருங் காலங்களிலும் யுத்தங்களி லும் காட்டப்படும் அவர்களுடைய பொறுமையானது ஆண்ட வனின் நிமித்தமாகவே இருக்கிற தல்லாமல் தங்களுடைய

தைரியத்தைக் காட்டும் பொருட் டன்று"—(13: 22).
الذين قال لهم الناس ان الناس قدجمعوا لكم فاخشوهم فزادهم ايمانا وقالوا حسبنا الله ونعم الوكيل "அவர்களுக்கு விரோதமாக மனிதர்கள் திரட்டப்படுவதனால் அவர்கள் பயமுறுத்தாட்டப் பட்டு, அவர்களை நசுக்கும்பொருட்டுச் சேகரிக்கப்படும் படைகளைக் கண்டு அஞ்சவேண்டு மென்று அறிவிக்கப்படும்போது, அவர்கள் அதனால் தைரியத்தை இழந்துவிடுவ தில்லை. இச் செய்கையானது அதற்கு மாறாக அவர்களுடைய உறுதியை அதிகப்படுத்தி விடுகின்றது. இதனால் அவர்கள், 'ஆண்டவனே எங்களுக்குப் போதுமானவனா யிருக்கிறான்; மேலும் அவனே நேர்த்தியான பாதுகாவலனாயு மிருக்கிறான்' என்று சொல்லுகிறார்கள்"–(3:172). இவர்களுடைய தைரியமானது வேட்டை நாய்களிடத்தும் காட்டு மிருகங்களிடத்தும் காணப்படும் இயற்கைத் துணிவு போன்ற அசட்டுத் துணிபன்று. எனவே, இவர்களின் தைரியம் மூர்க்கத்தனத்தைப் பின்பற்றக் கூடிய வீண் துணிச்சலு மன்று; ஆதலின், இப்படிப்பட்ட தைரியமானது ஒரே முகமாய் மூர்க்கத்துள் நுழைவ தில்லை; ஆனால், இதற்கு மாறாக அவர்கள் தங்களுடைய தைரியத்தை இரண்டு விதத்திலே உபயோகப்படுத்துகிறார்கள்: இதன் உதவியைக் கொண்டு அவர்கள் சில வேளைகளில் தங்களுடைய ஸ்தூல இந்திரியங்களில் காணப்படும் வேட்கைகளை எதிர்த்து வெல்லுகிறார்கள். மேலும் தமக்குத் தீமை இழைப்போரின் தாக்குதல்களை, அவசியமான காலங்களில் எதிர்ப்பதற்காகவும் இதை உபயோகிக்கிறார்கள்; ஆனால், மிருகத்தனமான வழியைப் பின்பற்றாமல் சத்தியத்துக்கான தருமநெறியைக் கடைப்பிடித்து அதில் தங்களுடைய தைரியத்தைச் செலுத்து

கிறார்கள். மேலும் இவர்கள் தங்களையே அதிகமாக நம்பி விடுவது மில்லை; ஆனால், சோதனைக்குரிய காலங்களில் ஆண்டவன்மீதே தங்களுடைய முழு நம்பிக்கையையும் வைக்கிறார்கள். ولا تكونوا كالذين خرجوا من ديارهم بطرا و رياء الناس "தங்களுடைய இல்லங்களை விட்டுச் செருக்குடனும் மற்றை மனிதர்களால் பார்க்கப்படும் பொருட்டும் சென்றவர்களைப்போல் இராதீர்"—(8:48). ஏனெனின், மெய்யான தைரியசாலிகளா யிருப்பவர்கள் தங்களுடைய வீரியத்தைச் செருக்குடனே வெளிக்காட்ட மாட்டார்கள்; மேலும் பிறருடைய பார்வையில் பெருமையுடனே திகழவேண்டுமென்றும் செருக்குடன் இருக்கமாட்டார்கள். ஆனால், அவர்களுடைய தைரியத்தின் நோக்கமெல்லாம் ஆண்டவனைத் திருப்தி செய்வதிலேயே அல்லும் பகலும் அனவரதமும் நிலை நாட்டப்பட் டிருக்கிறது. எனவே, மேற்கூறிய வாறெல்லாம் மெய்யான தைரியமென்பது பொறுமையினின்றும் உறுதியினின்றுமே முளைத்தெழுகின்ற தென்பதை மிகச் செம்மையாக விளங்கிக் கொள்ளுகிறோம். உண்மையான தைரியசாலியா யிருப்பவன் தன்னுடைய ஆத்திரங்களையெல்லாம் பொறுமையுடனே எதிர்த்து நிற்கிறான்; மேலும் பயங்கொள்ளியைப்போல் ஏதேனுமோர் அபாயத்தைக் கண்டு ஓட்டம் பிடிப்பதில்லை. ஆனால், தான் ஓரடியை எடுத்துவைக்குமுன் தன்னுடைய செய்கையால் விளையக்கூடிய நெடுந்தூரத்துக்கப்பாலுள்ள முடிபும் என்னவாகு மென்பதைக் குறித்துத் தீர்க்காலோசனை செய்கிறான். ஒரு காட்டுமிருகாண்டியின் அசட்டுத்தனமான தைரியத்துக்கும், ஒரு நாகரிகமுள்ள மனிதனுடைய அஞ்சாத் துணிவுடன் கூடிய தைரியத்துக்கு

மிடையிலே மகா விசாலமான வேறுபாடொன்று காணப்படு கின்றது: மிருகப் பிராயமான மனிதனும் தன்னால் அடக்க முடியாத ஓர் ஆத்திரத்தின் காரணத்தினால் ஒரே முகமாய் மூர்க்கத்தனத்துடனே மிகக் கொடுமையான தாக்குதலைப் புரிகிறான். ஆனால், நாகரிகமுள்ள தைரியசாலியோ உண்மை யான அபாயங்களையும் மிக்க தைரியத்துடனே எதிர்க்கிறான். ஆனால், இவன் யுத்தகளம்போன்ற அல்லோல கல்லோலமான சமயமா யிருந்தபோதினும் தன்னுடைய நிதானபுத்தியால் தீர்க்காலோசனை செய்தே தன்னுடைய காரியத்தை இழைக்கத் துணிகின்றான். எதிரியின் கொடுமையை நீக்குவதற்குச் சரி யான உபாயம் என்னவென்பதைக் கண்டு அதையே அதிக தைரியத்துடனே செய்யத் துணிகின்றான்.

## சத்தியம்

மனிதனுடைய இயற்கையான தன்மையினின்றும் விளையக்கூடிய ஆறாவது சற்குணமானது சத்தியமாயிருக் கின்றது. பொய்யைச் சொல்லவேண்டிய ஆவசியகமொன்றும் நேரிடாதபோது மனிதன் இயற்கையாகவே மெய்யைத்தான் பேசத் துணிகிறான். அவன் தன்னுடைய ஜனன ஸ்வபாவத்தின் காரணத்தினாலேயே அசத்தியத்தை வெறுக்கிறான் ; பின்னும் எவரேனும் ஒரு வெள்ளைப்பொய்யை விளம்பியதைக் கண் டால் அப்படிப்பட்ட வெண்புளுகனை அடியோடு வெறுக் கிறான். ஆனால், இப்படிப்பட்ட இயற்கையான தன்மை யானது மகா சிறந்த சற்குணமென்று ஒருவராலும் பெருமை யாகப் போற்றப்பட மாட்டாது. சத்தியத்தி னின்று மனி தனை மாற்றக்கூடிய தாழ்மையான கீழ்மைக் குணங்களை

விட்டு அவன் பரிசுத்த மடைந்தா லொழிய அவனுடைய சத்தியமானது சந்தேகாஸ்பத முள்ளதாகவே கருதப்படும். ஏனெனின், அவனுக்கு யாதொரு விதமான துன்பமும் நேரிடக்கூடாத காரியங்களில் மட்டுமே உண்மையைப் பேசிக் கொண்டு, அவனுடைய உயிருக்கேனும் பொருளுக்கேனும் கண்ணியத்துக்கேனும் அபாயம் விளையும்படியான காலங்களில் பொய்யைச் சொல்லியேனும், மெய்யைச் சொல்லாமல் மௌனமா யிருந்தேனும் தப்பிக்கொள்வானாயின், இப்படிப் பட்டவன் குழந்தைகளைக் காட்டினும் அல்லது பித்தர்களைக் காட்டினும் மேலானவனென்று கூறுவது முடியாது. மெய்யாகவே யாதொருவிதமானநோக்கமு மில்லாமல் ஒருவரும் பொய்யைச் சொல்ல முன்வருவ தில்லை; ஆதலின், மெய்யைச் சொல்வதால் எப்படிப்பட்ட தீமையும் விளையாதெனக் கண்ட அப்படிப்பட்ட காலத்தில் மெய்யைப் பேசுவதால் அதற்கொன்றும் அதிகமான சிலாக்கியமில்லை. எனவே, சத்தியத்தின் சோதனையா யிருக்கக்கூடிய ஒரே சந்தர்ப்பம் எத்தன்மைத்தா யிருத்தல் வேண்டுமெனின், அஃது ஒருவருடைய பிராணனோ கண்ணியமோ ஐசுவரியமோ அபாயகரமான நிலைமையி லிருக்கும் போதும் அவர் மெய்யையே பேசத் துணிகின்றாரோ? என்பதை அறியக்கூடிய வேளையா யிருத்தல் வேண்டும். இதைப் பற்றிநம்முடைய :குர்ஆன் ஷரீ'பானது பின்வருமாறு கட்டளையிடுகின்றது : فاجتنبوا الرجس من الاوثان واجتنبوا قول الزور "விக்ரஹங்களின் அசுசியை விலக்கி விடுங்கள்; மேலும் பொய்ம்மொழியையும் விலக்கி விடுங்கள்"—(22:31). இவ்வாக்கியத்தில் விக்ரஹத் தொழும்பும் அசத்தியமும் விலக்கப்பட வேண்டிய விஷயமென்று ஒருங்கே சேர்த்துக்

கூறப்பட்டிருப்பதனுல், பொய்ம்மொழியும் விக்ரஹ வணக்கம்போன்ற நிலையுற்றதென்றே கருதப்படுகிற தென்பதை நன்கு அறிந்து கொள்ளுகிறோம். எனவே, பொய்யைச் சொல்லுகிறவன் ஆண்டவன்மீது நம்பிக்கை இழந்தவனுகிறுன். ஏனெனின், அசத்தியமும் ஒரு விக்ரஹமாகக் கருதப்படும்போது அதை வணங்குகிறவனும் ஆண்டவனை மறுத்தவனுகத்தானே இருத்தல் வேண்டும்? பொய்யின்முன் சிரஞ் சாய்ப்பவன் ஆண்டவனை உதாசினம் செய்தவ னுகிறுன். ولا ياب الشهد اءاذا مادعوا ولا تكتموا الشهادة ومن يكتمها فانه اثم قلبه "சாக்ஷியம் கூறுகிறவர்கள் எப்பொழுது அழைக்கப்பட்ட போதினும் அப்பொழுதெல்லாம் ஹாஜிராவதற்கு மறுக்காம லிருப்பார்களாக. மேலும் மெய்யான சாக்ஷியத்தை மறைக்காதீர்; என்னெனின், அதை மறைக்கிறவன் நிச்சயமாகவே கெட்ட ஹிருதயத்தை உடையவனு யிருக்கிறுன்" (2 : 283). واذا قلتم فاعدلوا ولو كان ذا قربى "மேலும் ஒரு வார்த்தையையேனும் ஒரு தீர்மானத்தையேனும் நீங்கள் சொல்லும்போது அதில் சம்பந்தப்பட்ட மனிதன் உங்களுடைய உறவினனுயிருப்பினும் மெய்யாகவும் நியாயமாகவும் இருந்து கொள்ளுங்கள்" (6:153). كونوا قوامين بالقسط شهداء لله ولو على انفسكم اوالوالدين والاقربين "மெய்யைப் பேசுவதானது உங்களுக்கேனும் உங்கள் பெற்றோருக்கேனும் குழந்தைகள் முதலியவர் போன்ற உங்கள் சுற்றத்தாருக்கேனும் தீமை விளைவதா யிருப்பினும், உண்மையையும் நியாயத்தையுமே கடைப்பிடிப்பீராக; உங்களுடைய சாக்ஷியமானது ஆண்டவன் நிமித்தமாகவே மெய்யாயிருக்கட்டும்; மேலும் பொய்யைப் புகலாதீர்" — (4 : 135.)

ولايجرمنكم شنآن قوم على ان لا تعدلوا "மேலும் யாரிடத்துமுள்ள வெறுப்பானது உம்மை நேர்மையுடன் நடக்கா திருக்குமாறு செய்யாம லிருக்கட்டும்"-(5:2). والصادقين والصادقات "மெய் பேசும் ஆடவரும் மெய்பேசும் பெண்டிரும் பெருமிதமான சன்மானத்தைப் பெறுவார்கள்"—(33:35). وتواصوا بالحق وتواصوا بالصبر "அவர்கள் சத்தியத்தையும் பொறுமையையும் ஒருவருக்கொருவர் உபதேசித்துக் கொள்ளுகிறார்கள்"—(103:3). ولا يشهدون الزور "பொய்யர்களின் கூட்டத்தில் அவர்கள் உட்காருவதில்லை"—(25:72).

## பொறுமை

மனிதனுடைய இயற்கைத்தன்மையினின்று முளைக்கக் கூடிய மற்றொரு நற்குணமானது பொறுமை (ஸ'ப்'ர்) என்பதாகும். மனிதவர்க்கத்தாருக்கெல்லாம் பொதுவாய் விளையக் கூடிய தாரித்திரியம், தூர்வியாதிகள், மற்றும் பல துக்கங்கள் ஆகியவற்றை இவ்வுலகில் ஒவ்வொருவரும் சற்றேறக்குறைய ஒருவாறு அனுபவித்துத்தான் தீரவேண்டும். அன்றியும் ஒவ்வொருவரும் தாம் அடையும் பெரிய துன்பத்துக்கும் துயரத்துக்கும் ஆளாயின பின்னர்த் தமக்கு நேரிட்ட துக்கத்தைக் குறித்து ஒருவாறு சமாதானமும் செய்துகொள்ளலும் வேண்டியிருக்கிறது; ஆனால், இப்படிப்பட்ட ஆறுதலினாலுண்டாகும் திருப்தியானது ஒருபோதும் ஒரு சிறந்த குணமாகக் கருதப்பட மாட்டாது. துன்பத்துக்குமேல் துன்பமாக வந்து கொண்டிருக்கும்போது, அதனால் சோர்வடைந்துவிட்ட மனிதன் இறுதியிலே தன்னுடைய நிலைமையைக் குறித்து ஆறுதலடைந்து பொறுத்துக்கொள்ள வேண்டுவதுதான் இயற்கை

யான மார்க்கமாய்ப் புலப்படுகின்றது. துன்பம் வந்தவுடனே அதன் முதல் அதிர்ச்சியினால் மனமானது உடைந்துபோவது வழக்கம்; இதனால் அமைதி யின்மையும் ஆத்திர அழுகையும் உண்டாதலும் கூடும்; ஆனால், அந்தமுதல்வேகமானது தணிய ஆரம்பித்தவுடனே அதற்கு மாறான ஓய் வென்னும் அயர்ச்சி யானது அவசியமாக உண்டாகும். ஏனெனின், அமைதி யின்மையால் மனக்கொதிப்பு அதிகமாக உண்டாயினபின் அதற்கு நேர்மாறான அசதி யென்னும் சோம்பல் தோன்று வது இயற்கையா யிருக்கின்றது. எனவே, முதலிலுண்டான துன்பத்தினாலேற்படும் மனவேதனையும், அதன்பின் ஜனிக்கும் அமைதியும் மனிதரிடத்துக் காணப்படும் இயற்கையான தன்மை யென்று இப்பொழுது செவ்வனே தெரிந்து கொண் டோம். இப்படிப்பட்ட அயர்ச்சியா லுண்டாகும் ஓய்வைப் பொறுமையென்று கூறுவது முடியாது. எப்படிப்பட்ட துன் பம் நேரிட்டபோதும் ஆண்டவனுடைய ஆணையின்படி ஒவ் வொன்றும் நடக்குமெனச் சிந்தித்து அவனுடைய நாட்டத் தின் பிரகாரமுள்ள நடவடிக்கைகளுக்கு முற்றும் தலை சாய்ப்பதுதான் உண்மையான பொறுமை யென்று கருதப் படும். உதாஹரணமாக, ஏதேனுமோர் அருமையான பொருள் தன்னிடமிருந்து தவறி விடுமாயின், யாதொரு பதஷ்டமு மின்றி அப்பொருள் ஆண்டவனுடையதென் றெண்ணி அப் படியே பொறுத்துக்கொண் டிருக்கவேண்டும். தவறிப் போன வஸ்துவைப்பற்றி நாவினா லொன்றும் நவின்று கொண் டிருப்பது தகாது. இதன் சார்பாகப் பேசும்போது :குர்ஆன் ஷரீ'பானது பின்வருமாறு கூறுகின்றது : ولنبلونكم بشيئ
من الخوف والجوع ونقص من الاموال والانفس والثمرات وبشر

الصابرين الذين إذا أصابتهم مصيبة قالوا إنا لله وإنا إليه راجعون
أولئك عليهم صلوات من ربهم ورحمة وأولئك هم المهتدون

"மேலும் ஏதோ ஒருவிதமான அச்சத்தைக் கொண்டும் பசியைக் கொண்டும் பொருள்நஷ்டத்தைக் கொண்டும் உயிர்நஷ்டத்தைக் கொண்டும் கனிகளின் நஷ்டத்தைக் கொண்டும் உங்களை நாம் நிச்சயமாகச் சோதனைசெய்வோம்; மேலும் தங்களுக்குத் துரதிருஷ்ட மொன்று விளையும்போது, 'நிச்சயமாக நாம் அல்லா(ஹ்)வின் உடைமைகளா யிருக்கிறோம்; மேலும் அவனிடத்திற்கே நிச்சயமாகத் திரும்புவோம்,' என்று சொல்லுகின்ற பொறுமையாளருக்கு நற்செய்தி கூறுக. இவர்கள்தாம் தங்களுடைய நாயனிடத்திலிருந்து ஆசீர்வாதத்தையும் தயாளத்தையும் பெறக்கூடியவர்களா யிருக்கிறார்கள்; மேலும் இவர்கள்தாம் நேரானமார்க்கத்தைப் பின்பற்றியவராயுமிருக்கிறார்கள்"-(2:155—157). சுருங்கச் சொல்லுமிடத்து, அவரவரும் தத்தம்முடைய பொறுமையின் தன்மைக்குத் தக்கவாறாகத்தான் ஆண்டவனுடைய நாட்டம்போல் ஒவ்வொன்றும் நடக்குமென்று அவனுடைய நாட்டத்துக்குத் தலைசாய்ப்பர். மற்றொரு விதமாகப் பார்க்குமிடத்தும் இப்படி நோக்குவது தான் நியாயமாகவும் காணப்படுகின்றது; ஏனெனின், ஆண்டவன் மனிதனுடைய சுகபோகங்களுக்குத் தக்கவாறான எண்ணிறந்த நற்காரியங்களைச் செய்துவைத்திருக்கிறான். இப்படிப்பட்ட இறைவன் தயாளத்தால் மனிதன் தனது வாழ்நாளில் எத்தனையோ முறை தன்னுடைய இஷ்டம்போல் காரியசித்தி பெற்றுக்கொள்ளுகிறான்; பின்னும் ஆண்டவனுடைய கருணையினால் அடியான் எத்துணையோ சுகிர்தங்களையும் பெற்றுக் கொள்ளுகிறான். இவ்வா றிருக்கும்போது, அடியானுடைய

பற்பலவிதமான நாட்டங்களுள் ஏதேனு மொன்றை அவனு டைய விருப்பம்போல் முடித்துக் கொடுக்காமல் ஆண்டவன் தன்னுடைய நாட்டம்போல் செய்துவிடுவானுயின், அதனைக் கண்ட அடியான் உடனே ஆத்திரப்படுவதும் அவ்வாண்டவன் மீது வெறுப்புக் கொள்வதும் நன்றிகெட்ட நியாய விரோத மன்றோ? இக்காரியத்தில் ஆண்டவனுடைய நாட்டத்திற்கு இணங்கி நடவாமல் அவன்மீது கோபங் கொண்டு அப்பால் முகத்தைத் திருப்பிச் சுளித்துக்கொள்வது அவன்மாட்டு நாம் காட்டும் நன்றிமறந்த செய்கையே யாகுமன்றோ?

## அனுதாபம்

மேற்கூறியவை போன்ற மற்றொருவிதமான நற்குண மானது பிறரிடத்தில் காட்டக்கூடிய தயையா யிருக்கிறது. ஒரு தேசத்தையோ அல்லது ஒரு மதத்தையோ பின்பற்றி நிற்கும் ஜாதியார் தங்களுக்குள் அபிமானத்துடனே இருந்து வருவ துண்டு. ஆனால், தங்களுடைய தேச க்ஷேமத்தையும் மத முன்னேற்றத்தையும் கருதி அவர்கள் எல்லாவிதமான மானுஷீக தருமத்தையும் கைவிட்டுப் புறமதவாதிகளையும் அன்னிய தேசத்தாரையும் ஒறுப்பதற்கு ஒருபோதும் தயங்குவதில்லை. தங்களுடைய தேசத்துக்கும் மதத்துக்கும் புறமாயிருக்கும் வேற்று மனிதர்களை யெல்லாம் மனித கோஷ் டியைச் சார்ந்தவ ரென்றே கருதுவது கிடையாது. இப்படிப் பட்ட தேசாபிமானமும் மதாபிமானமும் உண்மையான நற் குணத்தின் பயனுய் விளைகின்றன வென்று ஒருபோதும் கூறு வது முடியாது; ஆனால், இஃதோர் இயற்கையான பாச மென்றே கூறப்படுதல் வேண்டும். அப்படிப்பட்ட ஜாதியபி

மான மானது மனிதனைக்காட்டிலும் தாழ்ந்த பிராணிகளிடத்தும்காணப்படாமலில்லை. உதாஹரணமாகக் காகங்களிடத்தும் இப்படிப்பட்ட பாசம் அதிகமாகக் காணப்படுகின்றது. ஒரு காக்கை கூவி யழைக்குமாயின், உடனே ஆயிரங் காக்கைகளை அவ்விடத்தில் காணலாம். இத்தகைய குணத்தைத் தயாள குணமென்று ஒருவரும் கூறத் துணியார். தயாளமென்பதை ஒரு சற்குணமாகக் கருதவேண்டுமாயின், காலாகாலத்தையும், உசிதா உசிதத்தையும் சீர்தூக்கிப்பார்த்து, அதன்பின் வெளிக் காட்டக்கூடிய அபிமானமா யிருத்தல் வேண்டும். எனவே, இத்தகைய அனுதாபத்தைச் சுட்டிக் காட்டவே مواسات என்னும் அரபுப் பதம் உபயோகிக்கப்பட்டு வருகிறது. இப்படிப்பட்ட தயாளத்தைக் குறிக்கக்கூடிய :குர்ஆன் ஷரீ'பின் திருவாக்கியமானது பின்வருமாறு கூறுகின்றது :
تعاونوا على البر والتقوى ولا تعاونوا على الاثم والعدوان ولا تهنوا في ابتغاء القوم ولا تكن للخائنين خصيما ولا تجادل عن الذين يختانون انفسهم ان الله لا يحب من كان خوانا اثيما "உங்களுடைய ஜனங்களிடத்தில் நன்மையான காரியத்திலும் பக்தி நிறைந்தகாரியத்திலும் அபிமானத்தையும் உதவியையுங்காட்ட வேண்டும். ஆனால், தீமைக்கும் அநியாயத்துக்கும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி புரிதல் கூடாது"—(5 : 2). "மேலும் உங்களுடைய ஜனங்களிடத்தில் காட்டவேண்டிய உங்கள் அபிமானத்தின் வேகத்தில் குறையாதீர்கள். மேலும் மோசம் செய்வோருக்கு ஷிபாரிஷ் செய்யக்கூடியவரா யிராதீர். பின்னும் ஒருவரை யொருவர் ஏமாற்றுகிறவர்களுக்காக நியாயவாதம் புரியாதீர்; நிச்சயமாகவே ஏமாற்றுகிறவனையும் குற்றமுள்ளவனையும் ஆண்டவன் நேசிப்பதில்லை"–(4 : 105–108).

# கடவுளின் உண்மை





மனிதனுடைய இயற்கையுடனேயே அன்வயிக்கப்பட்டிருக்கும் அவனுடைய உள்ளத்தின்கண் நிகழும் நிகழ்ச்சிகளுள் ஒருவகை நிகழ்ச்சி யானது, அவனறியாமலே அவனுடைய ஆத்மாவை மட்டும் தன்னைக்காட்டினும் ஒரு மகா பெரிய சர்வ வல்லமையுள்ள ஒன்றனிடம் இழுத்துக் கொண்டு போவதை நாம் கண்கூடாகக் காண்கின்றோம். இப்படிப்பட்ட நிகழ்ச்சியின் முதல் தோற்றமானது குழந்தையின் ஜனனத்தின்போதே உதயமாகின்றது ; தாயின் உதரத்தினின்று குழவியானது வெளியானவுடனே அது தன்பாலுள்ள இயற்கைக் குணத்தால் தன்னுடைய தாயை நாடி ஒட்டிக்கொள்ளுகின்றது. பகுத்தறிவு வாய்ந்த மாதாக்கள் தங்களுடைய மக்களின்பால் பேரபிமானம் பாராட்டுவது அவர்களுடைய பக்ஷத்தின் காரணமா யிருக்கிறது ; ஆனால், நூதனமாகப் பிறந்த குழந்தையோ தன் தாயின் வாஞ்சை இன்னதென்பதை யறியாமலே மாதாவின் மடிக்குள்ளே நுழைந்து கொள்ளுகின்றது ; குழந்தைகள்பால் காணப்படும் ஒருவகை இயற்கையான ஆவலென்றே இதனைக் கூறலாம். குழந்தையின் வயதும் முதிர முதிர அதன்பாலுள்ள இயற்கைக் குணங்களும் பெருகி வருகின்றன ; அஃதேபோன்று அந்த ஆவலும் ஒரு தாயினிடத்தன்பாகவே முதிர்ச்சி யடைந்து வருகிறது. மாதாக்களின் பக்ஷத்திலே அக்குழந்தைகள் அதிகமான சலிகைகளைப் பாராட்டி வருகின்றன. யார்

முகத்தைப் பார்த்தபோதினும் தாய் முகத்தைப் பார்ப்பதே போல், அக் குழந்தைகளுக்கு வேறு விதமான வார்த்தை யொன்றும் அவற்றின் வேட்கையைத் தணிப்பதில்லை. தாயை விட்டுச் சேயைப் பிரித்துவிடுவோ மாயின், அதன் உற்சாகம் குன்றி முகவாட்டத்துள்ளே மூழ்கி விடுகின்றது; இப்படிப் பட்ட அனுபவத்தை மாதாவை இழந்த மக்களிடத்திலே காணலாம். தாயில்லாக் குழந்தைகளை மற்றுமுள்ள பந்து மித்திரர்கள் எத்துணைப் பிரியத்துடனும் கரிசனத்துடனும் பரிபாலித்து வந்தபோதினும் தாயில்லாச் சோடையானது அக் குழந்தைகளுக்கு எப்பொழுதுமே தீருவ தில்லை. தானென்றும் தாயென்றும் பாகுபாடு செய்யக்கூடிய அறி வென்பதோ அச்சிசுவுக் கில்லை; ஆயினும், தன்பா லுள்ள இயற்கைக் குணத்தால் தன்னுடைய தாயை அதிகம் நாடு கின்றது. அவளுடைய மடியிலிருக்கும்போது தான் அடை யும் மகிழ்ச்சியைப் போன்ற மன உல்லாசத்தை மற்றையோ ரிடத்தில் அனுபவிப்ப தில்லை. இவ்வாறு ஒரு சேயைத் தன்னுடைய தாயின் பக்கல் இழுக்கக்கூடிய ஆகர்ஷண சக்திதான் மனிதனிடத்திலும் அவனது வணக்கத்துக்கு மெய்யான உரிமை பெற்றிருக்கும் அவனுடைய சிருஷ்டி கர்த்தாவின் பக்கல் இழுத்துச் செல்லக்கூடிய இயற்கை யான ஓர் இரகசிய காந்த சக்தியாய்க் காணப்படுகின் றது; இத்தன்மைத்தாகிய ஆகர்ஷண காந்த சக்தியினால் தான் மனிதர்கள் இவ்வுலகினில் தத்தமக்குப் பிரியமான ஒவ்வொரு புறப் பொருளைப் பற்றிப் பிடித்துக்கொண் டிருக்கிறார்கள்; அதில்தான் அவர்களுக்கு ஆனந்தமு மிருக்கிறது. எனவே, இப்படிப்பட்ட ஆகர்ஷண சக்தியே

நம்முடன் உற்பத்தியாகி நம்முடனே வளர்ந்து நம்முடைய ஹிருதயத்தை அந்தக் கடவுளின் பக்கல் வலுவிலே ஈர்த்துச் செல்லுகின்றது. நாம் அன்பென்று அழைப்பதெல்லாம் — அவ் வன்பானது எவ்வகைப்பட்ட புறப் பொருளால் உண்டாயிருந்த போதிலும் — ஆண்டவன் மீது நாம் கொண்டுள்ள அன்பின் மூலத்திலிருந்தேதான் தோன்றி யிருக்கிறதென்று கண்டுகொள்ளலாம். மனிதன் மற்றொரு பொருளினிடத்துத் தன்னுடைய வாஞ்சையைச் செலுத்துவதென்பது உண்மையிலே அவ்வாஞ்சைக் குரிய உண்மைப் பொருளை அறிய முயலுவதாகவே காணப்படுகின்றது. தான் தற்போது பெயர் மறந்துவிட்ட ஏதோ ஒன்றை இழந்து விட்டவனைபோல அந்தக் காணாமற்போன பொருளைத் தேடிக்கொண்டு அங்கு மிங்கும் அலைந்து திரிந்து கொண்டே தன் கண்முன் வரும் ஒவ்வொரு வஸ்துவையும் உற்று நோக்குகிறான். ஐசுவரியத்தின் மீதுண்டாகும் ஆவலும், அழகிய பொருள்கள் மீதுண்டாகும் ஆர்வமும், கர்ணாமிர்தமான இனிய ஓசைகளின் மீதுண்டாகும் இன்பமும், பெண்ஜாதிபிள்ளைகள்மீ துண்டாகும் பேரன்பும், இவற்றிற்கெல்லாம் அப்பா லிருந்துகொண்டு எல்லோருடைய மனத்தையும் தன்வயமாக இழுக்கும் ஏதோ காணாமற்போன ஒருவிதப் பெரிய சக்தியை அறியவேண்டு மென்னும் ஆவலாகவே காணப்படுகின்றன. நம்முடைய ஆவலைப் பூர்த்தி செய்யக்கூடிய சிறந்த பெரிய பொருளானது வெளிப்படையான தோற்றங்களுக் கப்பால் மறைந்திருக்கிறதென் றுணர்ந்து, அதை நாடியே நம்முடைய ஹிருதயம் தபிக்கின்றது; ஆனால், மனிதனுடைய அறிவானது ஓர் எல்லைக்குள் கட்

டுப்பட் டிருத்தலினால், அந்த இரகசியப் பரம் பொருளைச் சாமான்யமாய் உய்த்துணர்ந்து கொள்வது முடியாது. நம்முடைய புறக் கண்களாகிய இந்த இரண்டு நயனங்களைக் கொண்டும் அந்தப் பரம ரகசியமாகிய கடந்து நின்ற பொருளைக் கண்டுகொள்வது முடியாது. மனம், வாக்கு, காயங்களுக் கெட்டாத அந்தப் பரம் பொருளானது பசுமரத்திற்குள் பெரு நெருப்பு மறைந்திருப்பதே போல் ஒவ்வோர் ஆன்மாவினுள்ளும் மறைந்திருந்து கொண்டு வெளித் தோற்றத்துக்குப் புலப்படாததே போல் இருந்து வருகிறது. ஆதலினால்தான் அவனுடைய உண்மையை உள்ளபடியே உணர்ந்துகொள்வதானது இவ்வுலகினில் மகாகடினமான காரியமாய்க் காணப்படுகின்றது. இக் காரணத்தினால்தான் இவ்விஷயத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்யப் புகுந்தவருள் பலர் பற்பல விதமான தவறுகளுக்குள் ளெல்லாம் சிக்கிக்கொண்டு விட்டனர்; இதனால் அவனுடைய உண்மையை அன்னவர் உள்ளபடியே உணர்ந்தன ரில்லை. மூட பக்தியின் காரணமாய் விளைந்த மௌட்டிய நம்பிக்கையினால்தான் பலர் தம்முடைய கண்ணுக்குப் புலப்படாக் கடவுளுக்குச் செலுத்த வேண்டிய வணக்கத்தையும் மேதை மரியாதைகளையும் அக் கடவுளைக் காட்டினும் மிகமிகத் தாழ்ந்த சிருஷ்டிகளுக்கும் அற்ப இயற்கைப் பொருள்களுக்கும் செலுத்தத் தலைப்பட்டு விட்டனர். இவ்வண்ணமாய தவறுதலைப் பற்றிக் கூறும் போது :குர்ஆன் ஷரீ'பானது ஓர் அழகிய உவமான முகத்தால் விஷயத்தை விளக்கமாகக் கூறியிருக்கின்றது. அந்த உவமையில் இவ்வுலகமானது பிரகாசமுள்ள ஆடியால் தளமிடப்பட்ட ஒரு ஸ்படிக மாளிகைக்கு ஒப்பாகக் கூறப்பட்

டிருக்கின்றது; அந்த ஸ்படிக தளத்தின்கீழே ஒரு தாவள்ய மான அதிவேக முள்ள நீர்ச்சுனை ஓடிக்கொண் டிருக்கிறது. இப்படிப்பட்ட மாளிகையைக் கண்ட மேற் போக்கான ஒருவன் ஸ்படிகத்தின் கீழுள்ள தண்ணீரின் தன்மையை உள்ளபடியே உணர்ந்துகொள்ள முடியாமல், அந்த ஸ்படிகத் தையே ஜலமெனக் கருதிவிடுகிறான்; எந்த ஸ்படிகத்தின் வழியாக அதன் கீழுள்ள நீர்ச்சுனையானது தோன்றுகிறதோ, அந்த ஸ்படிகத்தையே தண்ணீரென்று தவறாகக் கொண்டு மயங்கி விடுகிறான். ஆனால், ஸ்படிகம் மேலே இருக்கிறது; உண்மையில் ஜலமானது அதன் கீழாக ஓடுகின்றது. இவ் வாறாகத்தான் இப்பிரபஞ்சத்தில் காணப்படும் சூரியன் சந் திரன் நட்சத்திரம் போன்ற பெரிய ஆகாய கோளங்களெல் லாம் ஸ்படிகத்தின் ஸ்தானத்தி லிருக்கின்றன; இவற்றின் வழியே இவற்றிற் கப்பாலுள்ள அந்தப் பரம்பொருளை உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். மேற்கூறிய உதாஹரணத் தில் ஸ்படிகத்தையே ஜலமாகக் கருதியதேபோல் பல மனி தர்கள் தம்முடைய தவறான தீர்மானத்தினால் ஆகாயத்தி லுள்ள சூரிய சந்திர நட்சத்திரங்களையே வணங்க ஆரம் பித்துவிட்டார்கள். ஆனால், இந்த ஆகாயத்திலுள்ள "ஸ்படி கங்களே" அந்தப் பரம்பொருளா யிருப்பதில்லை. ஆனால், இவற் றிற்கப்பா லிருந்து கொண்டு இவற்றை யெல்லாம் சுழற்று விக்கும் ஸூக்ஷ்மமே உண்மைப்பொருளா யிருத்தல் முடியும். எனவே, பலதெய்வ வணக்கக்காரர்கள் அந்தப் பரம்பொரு ளால் செய்யப்படுகின்ற காரியங்களை யெல்லாம் அந்தப் பரம் பொருளின் பெருமையை வெளிக் காட்டக்கூடிய ஜடவஸ் துக்களி னிடத்தே முட்டாட்டனமாகச் சேர்த்து விடுகிறார்

9

கள். ஆனால், இந்தப் பொருள்களெல்லாம் அந்தப் பரம்பொரு
ளுக்கும் நமக்கும் இடையிலுள்ள "ஸ்படிகங்களா" யிருக்
கின்றன. ஆதலின், கீழ்க்காணும் انه صرح ممرد من قوارير என்
னும் வாக்கியத்தின் பொருள் இவ்வாறாகத்தான் காணப்படு
கின்றது :— "(நீர் அஞ்சுவது தண்ணீரன்று. ஆனால்) நிச்சய
மாக அது வழு வழுப்பான கண்ணாடியால் தளம்போடப்
பட்ட ஒரு மாளிகையா யிருக்கிறது"—(:குர். 27:44).

சுருங்கச் சொல்லுமிடத்து, கடவுளின் அந்தரங்கச்
செய்கையானது அவனுடைய சிருஷ்டிப் பொருள்களின்
மூலமாகப் பகிரங்கமாய் வெளியாக்கப் பட்டபோதினும்,
"கடவு"ளென்னும் அந்தப் பரம்பொருள்மட்டுமே நம்முடைய
பஞ்சேந்திரியங்களுக் கெட்டாமல் அப்பால் கடந்து நின்று
மறைந் துறைகின்றது. இப் பிரபஞ்சத்திலுள்ள பௌதிக
பூதங்களையெல்லாம் நாம் எத்துணை ஆழமாக ஆராய்ந்து
பார்த்தபோதினும், அவை யனைத்தும் தம்மைப் படைத்த
சிருஷ்டி கர்த்தா ஒருவன் இருக்கத்தான் வேண்டுமென்னும்
அனுமானத்தை மட்டும் நமக்குக் கொடுக்கு மல்லாது, ஆண்
டவன் ஒருவன் இருக்கிறான் என்னும் தீர்மானமான முடி
பானது ஒருபோதும் நிஸ்ஸந்தேகமாக உண்டாய்விட மாட்
டாது. இப்பிரபஞ்சத்தின் பரம பிதாவான கர்த்தாவானவன்
இவ் வண்ணம் இவ் வுருவோடு இன்ன விதமாக இருக்கிறா
னென்று ஐயமற உணர்ந்துகொள்வது ஓர் அபூர்வமான
காரியமாய்க் காணப்படுகின்றது. ஆகாயத்தில் காணப்படும்
எண்ணிறந்த உடுக்குலங்களிடத்தும், இன்னம் இவ்வுலக
இயற்கையில் அறிவுடையோரால் அனுமானிக்கப்படும் அளவி
றந்த அதிசயங்களிடத்தும் நம்முடைய வெளிக்கண்ணுக்குப்

புலப்படும் மகா நுட்பமான ஒழுங்கும், மகா பரிபூரணமான ஏற்பாடும், மனிதனுடைய மனத்தால் கசடற அறிந்து கொள்ளக் கூடிய மகா நிச்சயமான தீர்மானமாகிய தெய்விக உண்மையை, அஃதாவது, ஒவ்வோர் பரமாணுவின் மீதும் தன்னுடைய சக்தியையும் சாமர்த்தியத்தையும் அறிவையும் ஆன்மாவையும் பரிணமப் படுத்தியிருக்கும் அந்தப் பரம சக்தியாகிய ஆண்டவன் ஒருவன் உண்டென்பதை இது வரை எப்போதும் உறுதிப்படுத்திய தில்லை ; இனியும் எப் போதும் உறுதிப்படுத்த மாட்டா. இத்தகைய விஞ்ஞான ஆராய்ச்சியில் தங்களுடைய காலத்தையும் சக்தியையும் அதிக மாகச் செலவிட்டுவரும் மாபெரும் வானநூல் வல்லுநரும் விஞ்ஞான நூல் விற்பன்னரும் சிற்சில வேளைகளில் மிக்க ஆழமான சந்தேகத்துள் வீழ்ந்து ஆண்டவனுடைய உண் மையைப் பற்றியே ஐயுறத் தலைப்பட்டு விட்டனர். அன்ன வரின் அறிவு நுட்பமெல்லாம் ஆண்டவனது உண்மையைப் பற்றி ஏதேனும் அறியக் கூடுமாயின், 'ஒருகால் தெய்வ மொன்று இருத்தல் கூடும்' என்னும் அனுமானத்தைக் காட் டினும் அப்பால் செல்வது ஒருபோதும் முடியாது. சூரிய சந்திர நக்ஷத்திரங்களின் படைப்பும், ஆகாயத்தில் காணப் படும் ஆயிரக்கணக்கான கோளங்கள்பால் அமைந்துகிடக்கும் காரண முறைமையும், ககோள ஏற்பாடும், இப் பிரபஞ்சத் தையே ஒழுங்காக நடத்திவைக்கும் மகா மேலான இயற்கைச் சட்டங்களும், மனிதனுடைய ஸ்தூல ஸூக்ஷ்ம தேகங்களின் அமைப்பும், இந்தப் பிரபஞ்சத்தின் ஆட்சிமுறையில் காணப் படும் அபாரமான சக்தியும் சாமர்த்தியமும், இவற்றிற் கெல்லாம் கர்த்தாவாகிய ஒருவன் இருத்தல் வேண்டுமென்னும்

அனுமானப் பிரமாணத்தை மட்டுமே அளிக்கக் கூடியனவா யிருக்கின்றனவே யன்றி, அதற்கப்பால் அணுத்துணையும் செல்வதில்லை.

ஆனால், அனுமானப் பிரமாணமானது ஒருபோதும் பிரத்தியக்ஷப் பிரமாணமாக மாறிவிடுவது முடியாது; நம்முடைய அனுமானத்தை எத்துணை நீளமாக இழுத்துச் சென்றபோதினும், அனுமானம் அனுமான மாகவேதான் இருந்து தீரும். உண்மையை உசாவுங்கால், இத்தகைய அனு மானமானது கடவுளின் உண்மையைப் பற்றிய ஒருபரிபூரண மற்ற மிகத் தாழ்மையான அறிவாகவே கருதப்படும்; என்னெ னின், அனுமானத்துக்கும் பிரத்தியக்ஷத்துக்கு மிடையிலே அளவிறந்த காவத தூரங்களுள. எத்துணை அனுமானங்களை ஒன்றுகத் திரட்டிச் சேர்த்தபோதினும் அவையனைத்தும் ஒரு பிரத்தியக்ஷமாக மாறுவதுமுடியாது. கடவுள் ஒன்று உண்மை யில் இருக்கிறதென்னும் விஷயத்தில் ஓர் உறுதியான கடைப் பிடியும் உரமானநம்பிக்கையும் ஏற்பட்டாலல்லாது, ஐயத்தின் அந்தகாரத் திரையானது ஒருபோதும் அகற்றப்பட மாட் டாது; அன்றியும் உண்மையான ஒளியும் நம்முடைய ஹிருத யத்துக்குள்ளே எப்போதும் நுழையமாட்டாது. இப்பிரபஞ் சத்தைப்பற்றிய சட்டதிட்டங்களை ஆராய்ச்சி செய்வதனுலேற் படும் அறிவின் காரணத்தினுல் நிச்சயமான ஞானமானது ஒருபோதும் உண்டாய், மனத்தின்கண் நிகழக்கூடிய ஐயத்தை அடியோடு நீக்கி, அருளை அளித்துவிட மாட்டாது. நிச்சய மாகவே "தெய்வம் இருக்கிறது" என்னும் தேற்றமுள்ள தீர்க்க ஞானமானது இதனுலெல்லாம் விளைந்துவிடுவ தில்லை; அதனுல் ஆத்மாவும் சாந்தியடைய மாட்டாது. இப்படிப்பட்ட

அனுமானமானது, மனிதனுடைய மனத்தின்கண் நிகழக் கூடிய ஒவ்வொரு விதமான சந்தேகத்தையும் நீக்கி, அவனுடைய ஆத்மாவின்கண் ஆண்டவனைப்பற்றிய அறிவை உண்மையாகவும் பரிபூரணமாகவும் உணர்ந்து கொள்ள வேண்டுமென்று இயற்கையாய் விளையக்கூடிய வேட்கையைத் தீர்க்கக்கூடிய உத்தமமான அமிர்தவாரியாய் ஒருபோதும் இருப்பதில்லை. இயற்கையை ஆராய்ச்சி செய்வதனாலுண்டாகும் பரிபூரணமற்ற அறிவானது எப்பொழுதும் அபாயம் ததும்பியதாகவே இருந்துகொண்டிருக்கும்; ஏனெனின், இத்தன்மைத்தாகிய ஆராய்ச்சியில் விவாதந்தான் அதிகமாகக் காணப்படுகிறதே யல்லாது, உண்மையான அனுபவ ஞானம் அத்துணை அதிகமாய்க் காணப்படுவதில்லை.

சுருக்கிக் கூறுமிடத்து, சர்வ சக்தியுள்ள ஆண்டவன் தன்னுடைய இயற்கைச் சிருஷ்டியில் தனக்குச் சொந்தமான கைத்திறமையால் தனக்குரிய உண்மையை வெளியாக்கியிருப்பதேபோல், அவன் தன் திருவசனங்களைக் கொண்டு தன்னுடைய அடியார்களிடத்தில் சல்லாப சம்பாஷணை நிகழ்த்துவதனால் தனது உண்மையை வெளிக்காட்டினாலல்லாது, அவனுடைய இயற்கைச் சிருஷ்டிகளை மட்டும் ஆராய்ச்சி செய்வதனால் உண்டாகக்கூடிய அவனது உண்மையைப் பற்றிய அனுமானப் பிரமாணமானது எத்துணைமட்டும் அறிவுக்குப் பொருத்தமா யிருந்த போதினும், ஒருபோதும் ஹிருதயத்தில் பரிபூரணமான சமாதானத்தை உண்டாக்குவது கிடையாது. உதாஹரணமாக, ஒரு வீட்டின் கதவுகளெல்லாம் உட்புறத்திலே தாழக்கோல் இடப்பட்டிருப்பதாக வைத்துக் கொள்வோம்; இதனால் ஏற்படக்கூடிய அனுமானமானது

அவ் விடுதியை உட்புறத்தி லிருந்துகொண்டு யாரோ ஒருவர் அதன் கதவுகளைத் தாழ்ப்பாளிட் டிருப்பதாக மட்டுமே உணர்த்திவைக்கும். ஆனால், இவ்வண்ணமாகப் பல்லாண்டுகள் கழிந்த பின்னரும் அவ் வில்லத்துக்குள் ளிருந்து ஏதேனு மோர் குரலும் வெளியில் கேட்பதில்லை; ஆண்டாண்டுதோறும் அளவிறந்த மனிதர்கள் அதன் வெளிப்புறத்தே நின்று பல முறையும் கூவியழைத்த போதினும், அதற்குள் ளிருந்து யாதொரு மறுமொழியும் கேட்கப் படுவதில்லை. அதன்பின் அவ்வீட்டிற்குள் மனிதனொருவன் இருந்தா னென்னும் நமது அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளும்படியான அத்தியா வசியம் நேரிடலாம். ஆதலின், அதன் வாயில்கள் சார்த்தப்பட் டிருப்பதன் காரணம் நம்முடைய புத்திக்கெட்டாத வேறொன் றாகத்தான் இருக்கவேண்டு மென்று தீர்மானம் செய்து கொள்ளுகிறோம். இத்தன்மைத் தாகத்தான் இருக்கின்றது, இயற்கையின் இரகசியத்திலிருந்து இறைவனது உண்மையை உணர்ந்துகொள்ளப் பாடுபடுவதும். நம்முடைய ஆராய்ச்சி முழுதும் பிரபஞ்ச கர்த்தாவின் (கடவுளினது) உண் மையை உணர்ந்து கொள்வதற்கு வேண்டிய அனுமா னத்தை மட்டுமே அளிக்கக்கூடியதா யிருத்தலினால், இதனா லேற்படும் அறிவானது களங்கமற்ற உறுதியுள்ள உண் மையான அறிவாய்க் காணப்படாததைக் கண்டு இறுதியிலே ஏமாற்ற மடைகின்றோம். அஃதாவது, கடவுளின் உண்மை யைப்பற்றி ஆராயக்கூடிய அறிவானது, அப்படிப்பட்ட விசா ரணைக்குரிய ஒருவகைச் சாதனையைமட்டும், அஃதாவது, ஆண் டவனுடைய கைவேலையை மட்டுமே ஆராய்ந்து பார்ப்பதால் ஒருபோதும் பூர்த்தியடைந்துவிட மாட்டாது. இப்படிப்பட்ட

ஒருதலைப்பட்ட முயற்சியானது, பௌதிகப் பொருள்களாகிய வெறும் உலோகாயதக் கூட்டத்தினிடையே அவற்றின் சிருஷ்டி கர்த்தாவையும் கண்டுபிடிக்கப் பிரயத்தனப் படுவதால் இதை யொரு வீண் முயற்சி யென்றே கூறுதல் வேண்டும். ஆண்டவனுடைய சிருஷ்டியின் மகிமை யனைத்தையும் உணர்ந்துகொள்ள முடியாமல் குப்பை கூளங்களையே கிளறிப் பார்ப்பதால் ஆங்கிருந்து கிடைக்கக்கூடிய ஒரு சாதாரணமான அசேதனப் பொருளென நினைத்து ஆண்டவனை அங்கெல்லாம் தேட முயல்வது, அறிஞர்க ளெல்லாரைப் பார்க்கினும் மகா மேலான அறிஞனெனப்படும் அவ் வாண்டவையின் பெருமைக்கே சிறுமை விளைவிப்ப தாகின்றது. அவ்வாண்டவனுடைய விசுவ ஞானமும் விசுவ சக்தியும் அளவிறந்தனவாயிருக்கும்போது, அவன் தன்னுடைய சிருஷ்டிப் பொருள்களுக்குத் தன் உண்மையை விளக்க வேண்டுவதற்கு அடியார்களின் சுயப் பிரயத்தனத்தின் மீதே சார்ந்திருக்கிறானென்போமாயின், அஃதோர் அபசாரமாகவே முடியும். நம்முடைய பிரயத்தனத்தைக் கொண்டுதான் அவனைக் கண்டுபிடிக்க வேண்டுமென்பது உண்மையாயின், அதன்பின் அவன் நம்முடைய நம்பிக்கைகளுக் கெல்லாம் கொழுகொம்பா யிருக்கிறானென்பதும், நம்முடைய ஆற்றுமையான காரியங்களுக் கெல்லாம் ஆற்ற உதவி புரிபவனா யிருக்கிறா னென்பதும் வீண் எண்ணங்களாகவே சென்று வற்றும். ஆண்டவனே தன்னுடைய படைப்பினங்களுக்குத் தன் உண்மையை வெளிப்படுத்துகின்றானா? அல்லது அப் படைப்பினங்களே தம்முடைய சொந்த முயற்சியால் ஆண்டவனுடைய உண்மையைப்பற்றி உணர்ந்துகொண்டு அவனுக்கு நன்மையும் உதவி

யும் புரிகின்றனவா? என்பதுதான் எனது கேள்வி. அஃதாவது, அவன் நமக்குத் தன்னைத் தானே வெளிக்காட்டுகின்றானோ? அல்லது நாம் சுயமே தனிமையாய் அவனைத் தேடிச் சென்று கண்டுபிடிக்கிறோமா? என்பதே யாகும்.

ஆதியந்த மில்லாமல் சுத்த சுயம்புவாய் இருந்துவரும் கட்புலனாகாக் கடவுளே "நான் இருக்கின்றேன்" என்று தன்னுடைய ஐயந்திரிபற்ற மகிமை பொருந்திய திருவசனத்தால் தன்னைப் புராதன காலத்திருந்தே அடிக்கடி வெளிக் காட்டிக்கொண்டு வந்து, அத்தகைய திருவசனங்களால் தன்பால் தன்னுடைய சிருஷ்டிப் பொருள்கள் உதவி தேடிக்கொள்ளலா மென்றும் அற்பப் பிராணிகளாகிய நம்மை யெல்லாம் தன்னிடம் பரிந் தழைத்திருக்கிறான். மனிதன் தன்னுடைய சிருஷ்டிகர்த்தாவைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று அதிக சிரமத்துடனே பிரயத்தனம் எடுத்து வருவதால், அந்தக் கர்த்தாவானவன் தன்னைக் காண்பித்துக் கொள்ளுமாறு தன்னடியானுக்குக் கட்டுப்பட்டுத்தானிருக்கிறானென்று கூறத் துணிவதானது வீண் செருக்கே யாகும்; பின்னும் மனிதன் தன்னளவிலே முயற்சி எடுத்துக் கொண்டா லல்லாது, என்றுமழியாமல் எப்பொழுதும் நிலைத்திருக்கக் கூடிய பிரபஞ்ச கர்த்தாவானவன் தன்னுடைய அடியார்களின் மனத்தின்கண் அறியப்பட்டிருக்க மாட்டானென்று கூறுவதும் குறும்பு நிறைந்த வெறுங் கூற்றே யாகும். ஆண்டவன் தன்னுடைய திருவசனங்களைக் கொண்டு தன் உண்மையை உள்ளபடியே வெளியாக்கி யிருக்கிறானென்று ருஜுப்பிக்கக் கூடிய முடிபான பிரத்தியக்ஷப் பிரமாணத்தை, அவனுக்கு அடியாருடன் பேசுவதற்குரிய நாவா

னது எங்கே யிருக்கிறதென்னும் விவகாரத்தைக் கிளப்பி ஆக்ஷேபத்துடன் நிராகரிக்க முன்வருவோர் (அவ்விஷயத்தின் உண்மையை) நன்கு ஆலோசித்துப் பார்ப்பதில்லை. ஏனெனின், கடவுளைப் போன்ற ஸூக்ஷ்மப் பொருளொன்று இருக்குமாயின், அதன் உண்மைக்கு மாற்றமா யிருப்பதே போல் மேற்போக்கில் காணப்படும் சிற்சில விஷயங்களைக் கொண்டு அப்படிப்பட்ட ஸூக்ஷ்மப் பொருளை இல்லையென்று வாதிக்கத் துணிவதானது வீண் தருக்கண்மையே யாகும். ஆண்டவன் இப்பூவுலகத்தையும், இதைப் போன்ற ககோளத்தின்கண்ணுள்ள எண்ணிறந்த நக்ஷத்திர கிரகங்களையும், மற்றுமுள்ள வான சூரியர்களையும் நமக்கிருப்பதே போன்ற வெளிப்படையான கைகளில்லாமல் சிருஷ்டித்திருக்க வில்லையா? நம்முடைய கண்களே போன்ற கண்களில்லாமல் அவன் இப்பிரபஞ்ச முழுமையையும் சதா சர்வ காலமும் பார்த்துக்கொண்டிருக்க வில்லையா? மேலும் அவன் நம்முடைய ஜபதப பிரார்த்தனைகளை யெல்லாம் காதில்லாமல் கேட்கிறானென்று நம்புகிறோ மல்லவா? இப்படிச் செய்வதற்கு அவனுக்குச் செவிகள் எங்கே யிருக்கின்றன? ஈதெல்லாம் இவ்வாறிருந்து வரும்போது, வசனிப்பதற்கு மட்டும் அவனுக்கு நா எங்கே யிருக்கிறதென்று வினவுவதானது ஆழ்ந்த அறியாமையே யாகும். கையின்று செய்வதே போலும், கண்ணின்று காண்பதேபோலும், காதின்று கேட்பதே போலும் நாவின்று பேசுவது நாயனால் முடியாத செய்கையாமோ? அவனுடைய செய்கைகளுள் ஒன்றைமட்டும் விடுத்து மற்றையவற்றை யெல்லாம் ஏற்றுக்கொள்வது எவ்வாறு பொருந்தும்? இவ்விஷயத்தில் கண்ணிருந்தும்

மாக்கள் பலர் குருடராவதேனோ? சற்றும் அறிகிலேம்.

பண்டைக் காலத்திலிருந்த மானிடர்க்கு மட்டுமே ஆண்டவன் தன்னுடைய திருவசனங்களை யனுப்பித் தனது சுயப் பிரியத்தினால் தனக்குரிய உண்மையைக் காட்டிக் கொடுத்தா னென்றும், இற்றைநாளில் அவ்வாறு அவன் தன் நல்லடியார்களுடன் சம்பாஷிப்பதில்லை யென்றும் எவரேனும் கூறத் துணிவா ராயின், அவருடைய வாதமானது சற்றும் ஆதாரமற்ற வீண் வாத மென்றே கூறுவோம். புராதன காலத்தில் தன் அடியாருடன் சம்பாஷித்து வந்த அந்த மாற்றமில்லாக் கடவுள், இப்பொழுதும் தம்முடைய முழு மனத்துடனும் பூர்ண ஆத்மசக்தியுடனும் அவனுடைய உதவியை உண்மையிலே நாடுவா ராயின், (அவன்) அப்படிப்பட்ட அடியாருடனே எப்பொழுதும் சம்பாஷிப்பான். இக்காலத்திலும் அவனுடைய மெய்யடியார்கள் அவனது அருட்பெரும் ஜோதியை அதிகமாகப் பெற்றுக் கொண்டுதா னிருக்கிறார்கள்; எக்காலத்தும் எவரும் அவ்வாண்டவனின் வாயில் பேசாமல் முத்திரையிடுவது முடியாது. முற்காலத்திலே நல்லடியார்களுக்கு அவனுடைய அருட்பிரகாசம் அனுப்பப்பட்டு வந்ததேபோல் இக்காலத்திலும் அந்த அமிர்தசுரபியானது சுரந்துகொண்டுதா னிருக்கின்றது. முன்னேயிருந்த நல்லடியார்களைப்போலவே பின்னேயிருக்கும் பேரடியார்களும் ஆண்டவனுடைய திருவசனங்களை எப்பொழுதும் அருளப் பெற்றுக்கொண் டிருக்கிறார்கள். இவ்வுலக முழுமைக்கும் எக்காலத்துக்கும் எச்சாதியாருக்கும் போதுமானதா யிருக்கக்கூடிய ஞானமும் நாகரிகச் சட்டமும் ஒருமுறை சம்பூர்ணமாக வெளிப்பட்டு விடுமாயின், மீண்டும்

மற்றொரு சட்டத்திற்குரிய வேதம் அவ் வாதிகர்த்தாவின் மூலத்திலிருந்து வெளியாக வேண்டுவது அத்தியாவசிய மில்லாமலே போய் ஒழிகின்றது. இவ்வாறாகத்தான் நபிகள் நாயகம் முஹம்மத் (ஆண்டவனின் அருளும் ஆசீர்வாதமும் இவர்கள்மீது நிரம்பப் பொழிவனவாக !) அவர்கள் எல்லோருக்கும் இறுதி நபியாக அவதரித்து, இவ்வுலக முழுமைக்கும் என்றென்றைக்கும் போதுமான பிழையில்லாப் பரிபூரணச் சட்டத்தை மன்பதைக்குக் கொண்டுவந்து கொடுத்திருக்கின்றார்கள் ; எனவே, இந்த இறுதிநபி யவர்களுக்குப் பின் வேறெந்த நபியும், மற்றொரு வேதமும் ஆவசியகமாய்க் காணப்பட வில்லை. ஆயினும், ஆண்டவனுடைய அருள் மாரியைப் பெறக்கூடிய ஞானோதயத்துக்குரிய அந்தரங்கத் துறையை (இல்ஹாமை) அடையும் பொருட்டு மனிதனுக்குக் கொடுக்கப்பட் டிருக்கும் ஆத்ம சக்தியானது அந்த(இறுதி)நபிகள் நாயகத்துக்குப்பின் அடைபட்டு விட்டதென்று அறைவது ஒருபோதும் சாலாது.(இஃதுஊன்றி நோக்கற்பாலது. பா.தா.)

எங்கள் இறுதி வேதமாகிய அந்தப் பரிபூரணப் பரஞ் சோதியானது மற்றெல்லா நாடுகளையும் விட்டு அந்த அரப் நாட்டுக்குள்ளே சுடர்விட் டெரியும்படியாகச் செய்யப்பட்டதும், சர்வஞான பரிபூரணனாகிய அவ்வகண்டாகாரப் பரம பிதாவினாலேயே அதற்கு முன்னிருந்தே ஏற்பாடு செய்யப்பட் டிருந்ததேபோல் காணப்படுகின்றது. இஃது உண்மைதா னென்பதையும் நாம் சற்று நிதானத்துடன் ஆராய்ச்சி செய்வோமாயின், நன்கு தெரிந்துகொள்ளுவோம். பனீ இஸ்மாயீல் (இஸ்மவேல்) வம்சத்தார் பனீ இஸ்ராயீல் (இஸ்ரவேல்) வம்சத்தாரினின்றும் தனியாகப்

பிரிந்திருப்பதுதான் உத்தமமான காரியமெனக் கண்ட ஆண்டவன் தன்னுடைய திரிகால ஞானத்தின் உணர்ச்சியின் பிரகாரம் இஸ்மாயில் நபி யவர்களை (இவர்களுக்கு ஆண்டவன் அருள்புரிவானாக !) இக்காலத்தில் "அரேபியா" என்று சொல்லப்படும் அக்காலத்திய "பாரான்" வனாந்தரத்துள்ளே கொண்டுவந்து சேர்ப்பித்தான். "பாரான்" என்னும் பதமானது "இரண்டு அடைக்கலம் புக்கோர்" என்று பொருள்படும். இஸ்ஹாக் (இறைவன் இவரை ஆசீர்வதிப்பானாக !) என்பவருடன் இஸ்மாயில் (இறைவன் இவரையும் ஆசீர்வதிப்பானாக !) உடன்பாத்தியக்காரராய் இருப்பது கூடாதென்று வாக்களிக்கப்பட்ட வண்ணமே இப்ராஹீம் நபியவர்களால் (ஆண்டவன் இவரை ஆசீர்வதிப்பானாக !) 'பாரானில்' கொண்டுவந்து விடப்பட்ட ஹாஜராவின் திருக்குமாரரான இஸ்மாயிலின் சந்ததியாராகிய அராபியர்கள் இஸ்ராயீலின் வம்சத்தவரின் சட்ட திட்டங்களுக்குள் கட்டுப்பட்டிருத்தல் கூடாதென்பதே அவ்வாண்டவனால் முன்யோசனையுடன் தீர்மானிக்கப்பட்ட முடிபேபோல் காணப்படுகின்றது. எனவே, அனேக நூற்றாண்டுகளுக்கு முன்னரே இஸ்மாயீல் வம்சத்தவர் தங்களுடைய பின்னோதார்களான இஸ்ராயீல் வம்சத்தவரை விட்டுவிட்டுப் பிரிக்கப்பட்டுப் போய்விட்டார்கள்; அதன்பின் அந்த அராபியர்கள் மற்றெந்த ஜாதியாருடனுங்கூடக் கூட்டுறவு செய்துகொள்ளாமலும் தன்னந்தனியே இருந்து விட்டார்கள். ஆனால், அரப் நாட்டையல்லாத மற்றை நாடுகளிலேனும் ஆண்டவனுடைய நபிமார்களால் உபதேசிக்கப்பட்டுவந்த பண்டைக் கொள்கைகள், சட்டங்கள் முதலியவற்றின் அடிச்சுவடு சிறிது காணப்பட்ட

தென்பது உண்மையே; அஃதாவது, அப்படிப்பட்ட நாட்டு மக்களெல்லாம் எப்பொழுதேனும் ஒருகாலத்திலாவது ஆண்டவனுடைய அருளைப் பெற்றிருந்தார்கள். ஆனால், அரப் நாடென்னப்படுவதோ அப்படிப்பட்ட நாகரிக நல்லொழுக்கச் சட்ட திட்டங்களினின்றும் புறம்பாகவே ஒதுங்கிநின்றது. இவ்வுலகில் அவதாரம் செய்திருக்கும் ஆண்டவனுடைய நபிமார்களால் மனிதக்கோடிகளுக்கு உண்டா யிருக்கும் நன்மைகளை ஆராய்ச்சி செய்யப் புகுவோ மாயின், பனீ இஸ்மாயீல் கூட்டத்தினரே மகாமகா பிற்போக் குள்ளவர்களா யிருந்திருக்கின்றார்களென்று தெரிந்துகொள்வோம். ஆதலின், இக்காரியத்திலும் ஆண்டவனுடைய செய்கையானது ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடனே யல்லாமல் வேறுவிதமாக இருந்திருப்பது முடியாது. இஸ்ராயீல் வம்சத்தவரின் நபிமார்களை விட்டும் மற்றும் இப்பூவுலகிலுள்ள ஏனை நாடுகளை விட்டும் இஸ்மாயீலின் வம்சத்தவர் பிரித்துவைக்கப்பட் டிருந்ததன் காரணம் யாது? இவ்வினாவின் விடையை நாம் தெரிந்து கொள்ளாம லிருப்பது முடியாது. இவ்வுலகினுக்கு இறுதி நபியாயிருப்பவர் அவதரிக்கவேண்டுவது அந்நாடாகவே ஆண்டவனால் ஒதுக்கிவைக்கப்பட் டிருந்தது; அத்தேசத்தில் அவதரிக்கும் திருநபி யவர்களும் இவ்வுலகுக் கெல்லாம் பொதுவானவராகவும் நியமிக்கப்படல் வேண்டியிருந்தது. எல்லா நபிமார்களுக்கும் இறுதியாகவே இந்த நபியானவர்[ஸல்] அவதாரம் புரிந்தார். எனவே, இவ்வுலகின் எல்லா ஜாதியார்களையும் நல்வழியிற் கொண்டுவந்து அவரவர்பால் காணப்படும் குற்றங் குறைகளையும் நிவர்த்திப்பான் வேண்டி அவர் எல்லோருக்கும் பொதுவாகவே தோன்றினார். ஆதலின்,

இந்த இறுதி நபியவர்களால்[ஸல்] எல்லோருக்கும் பொதுவாகக் கொண்டுவரப்பட்ட அந்தச் சிறந்த ஞானப் பேரொளியானது எல்லா வகையாலும் பரிபூரணமுள்ளதாகவே அமைந்திருக்கின்றது. இவர்களால் கொண்டுவரப்பட்ட தேவ சட்டமானது, மனிதவர்க்கத்தாருள் எத்தகைய நிறவித்தியாசத்தையேனும் ஜாதி வித்தியாசத்தையேனும் பொருட்படுத்தாமல், எல்லாருக்கும் வேண்டிய எல்லாவற்றையும் அடியோடு சீர்திருத்தம் செய்ய வேண்டிய அப்படிப்பட்ட மாபெருங் காரியத்தைத் தன் தலைமேற் போட்டுக்கொள்ளவேண்டிய அத்துணை ஆவசியகத்தையும் ஏற்றுக் கொண்டது. அதற்கு முன்னேயிருந்த வேதங்களனைத்தும் ஒவ்வொரு குறிப்பிடப்பட்ட வர்க்கத்தாருக்கு மட்டும் ஒரு குறிப்பிடப்பட்ட காலத்துக்காக மட்டும் அனுப்பப்பட்டிருந்ததேபோல், இந்த இறுதி நபியின் உறுதியான வேதமானது ஒரு குறிப்பிடப்பட்ட காலத்திற்கு மட்டும் தேசத்திற்கு மட்டும் ஜாதியாருக்கு மட்டும் உரித்தாய் அனுப்பப்படவில்லை. எத்தன்மைத்தாகிய மனிதவர்க்கத்தின் முன்னேற்றத்திற்கும் அத்தியாவசியமான எல்லாவிதமான துறைகளும் இவ்வேதத்தில் சம்பூரணமாகக் காணப்படுகின்றன. எல்லாவிதமான மனிதர்களின் நாகரிகத்துக்கும் வேண்டிய அவசியமான ஒழுக்க முறைகளனைத்தும் இவ்வுலகினுக்குப் பொதுவாகவே வெளியிடப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு ஜாதியாரின் ஒருவகைக் குறிப்பிடப்பட்ட சிற்சில தீமைகளை மட்டும் போக்குவதே இதற்கு முன்னுள்ள வேதங்களின் நோக்கமாயிருந்து வந்தது; ஆனால், குர்ஆன் ஷரீ‘பானது எல்லாரிடத்தும் காணப்படும் எல்லாவிதமான தீமைகளையும் போக்கி, அவர்களனைவருக்கும்

வேண்டிய எல்லாவிதமான படிப்பினைகளையும் போதிக்கக் கூடிய உண்மையான தத்துவத்துடன் கூடிய இப்பெருங் காரியத்தையே தன்னுடைய முக்கிய நோக்கமாகக் கொண்டிருக்கிறது. அதுவேயுமன்றி, சர்வமானிடர்களின் சகலவிதமான சமூகமுன்னேற்றத்துக்கும், சன்மார்க்க முன்னேற்றத்துக்கும், பாரமார்த்திக முன்னேற்றத்துக்கும் அவசியமான எல்லாப் படித்துறைகளையும் இவ்வேதமானது சுட்டிக் காட்டிக்கொண்டிருக்கின்றது. முதன் முதலில் காட்டு மிருகாண்டிகளைப்போலிருந்தவர்களைச் சமூக ஒழுக்கமுள்ள சன்மார்க்கர்களாக, எமது :குர்ஆன் அதற்குரிய முறைகளைச் சொல்லி உயர்த்தியிருக்கின்றது. இவ்வாறு உயர்த்தப்பட்டவர்கள் மறுபடியும் பாரமார்த்திகத்துக்குரிய பரிபக்குவ மார்க்கத்தில் பழக்கப்படுத்தப்படும்படியும் செய்திருக்கின்றது.

மனிதனிடத்தில் இயற்கையாய்க் காணப்படும் தன்மைகள் இன்ன இன்னவை யென்றும், அவனுடைய சன்மார்க்க ஒழுக்கங்கள் இன்ன இன்னவை யென்றும், அவற்றிற் கிடையிலுள்ள உண்மையான வேறுபாடுகள் இன்ன இன்னவை யென்றும் வெளிக்குக் கொண்டுவர வேண்டியிருந்த கௌரவமும் :குர்ஆன் ஷரீ'புக்கே உரித்தா யிருக்கிறது. ஆனால், மனிதர்களுக்கு ஒழுங்கான சன்மார்க்க ஒழுக்கங்களை உபதேசித்ததோடு மட்டும் இவ்வேதம் நின்றுவிடவில்லை; அதன்பின் சன்மார்க்க ஒழுக்கத்துக்கு வந்தவர்களைப் பாரமார்த்திகத்துக்குக் கொண்டு செல்ல வேண்டுவதும் இதன் கடமையாய் விட்டது. மனிதரிடத்தில் அமைந்துகிடக்கும் அவருடைய அபார சக்திகளையும் சாமர்த்தியங்களையும் அவற்றின் உச்சஸ்தானத்தை அடையும்படி வெளிக்குக் கொண்டுவர வேண்டுவதும் இவ்

வேதத்தின் நோக்கமா யிருக்கின்றது. ஆண்டவனைப்பற்றிய பக்திரசம் நிறைந்த ஞானத்தை ஊட்டுவதற்குரிய வாயிலைத் திறந்து வைத்திருப்பதுடன், அவனுடைய உண்மையைப் பற்றியும் உறுதிப்படுத்திக்கொண்டு, அடியார்களால் எட்டக் கூடிய அவ்வளவு உயரிய உன்னதப் பதவிக்கும் ஏறக்கூடிய வன்மை யளித்துக்கொண்டு மிருக்கின்றது. மனிதப்பிறவி யுடையவரை மனிதனாகவே ஆக்கவேண்டு மென்பதுதான் :குர்ஆன் ஷரீ'பின் முக்கிய நோக்கமா யிருந்துவருகிறது ; மேலும், பக்ஷாபிரக்கணைக்கான மனிதர்களுக்கு ஐம்புலனுக் கெட்டாத அந்தப் பரம்பொருளின் சார்பான மெய்யான ஞானத்தை விளக்கிக் காட்டியதோடு நில்லாது, அப்படிப் பட்ட தெய்வத்தின் உண்மையைப் பற்றிய ஆராய்ச்சியிலும் அவர்களைத் திடங்கொண்ட உறுதிபெற்றவராக ஆக்கிவிட் டது. மனிதருடைய முவ்வகையான முன்னேற்றத்துக்குரிய மகா சிலாக்கியமான முறைகளை யெல்லாம் :குர்ஆன் ஷரீ'பா னது, இந்நூலில் இதற்குமுன் கூறியிருப்பதேபோல் விளக்கி யிருக்கின்றது. மனிதனைப் பல்வகையாலும் பரிபூரண மடை யும்படி செய்வதற்கென்று ஆண்டவனால் இறுதி வேதமாகப் பரிபூரணத்துடனே பல்லோருக்கும் பகிரங்கப் படுத்தப்பட்ட இவ்வேதமானது தன்னுடைய மேன்மையைப்பற்றியும் பரி பூரணத்தைப் பற்றியும் பின்வருமாறு கூறிக்கொள்ளுகிறது:

اليوم اكملت لكم دينكم واتممت عليكم نعمتي ورضيت لكم الاسلام دينا

"இன்று உங்களுக்காக உங்களுடைய மார்க்கத்தைப் பூர்த்தி செய்து விட்டேன் ; உங்கள்மீது என்னுடைய கிருபையை யும் இன்று சம்பூரணமாக்கி விட்டேன் ; மேலும் உங்களுக் காக இஸ்லாத்தை ஒரு சன்மார்க்கமாகத் தேர்ந்தெடுத்திருக்

கிறேன்"—(5: 3). இத்திருவாக்கியத்தினுல் நாம் மிக விளக்க மாகவும் அதிக அழுக்கமாகவும் தெரிந்துகொள்வது யாதெனின், மதமென்பது இஸ்லாம் மார்க்கத்திலேதான் (ஆண்டவனுக்கு அடிபணிந்து நடப்பதிலேதான்) வந்து பரிபூரண மடைகிற தென்பதே யாகும். அஃதாவது, இஸ்லாம் என்னும் பதத்தினுல் குறிப்பிடப்படுகின்ற தாத்பரியத்தின் பிரகாரம் ஒரு மனிதன் அந்த உச்ச நிலைமைக்கு வந்து விடுவானுயின், ஆண்டவனுடைய நாட்டத்துக்கே முற்றமுற்றத் தலைசாய்த்து விடுகிறுன். அவனுக்குத் தன்னுடைய நிலைமையையே (அஃதாவது, தன்னுடைய விருப்பங்களையும் நோக்கங்களையும்) அர்ப்பணம் செய்வதனு லல்லாமல் வேறெந்தத் துறையாலும் தன்னுடைய ஈடேற்றத்தை எதிர்பார்க்கமாட்டான்; இவ்விதமான அர்ப்பண மென்னப்படும் சுய நலத்தியாகத்தை ஒரு சித்தாந்த மாக மட்டும் இருக்கட்டுமென்று ஒத்துக்கொள்ள மாட்டான்; ஆனுல், தன்னுடைய பழக்க வழக்கங்களிலும் செய்கைகளிலும் அதனை அடிக்கடி காட்டிக்கொண்டே யிருப்பான். இப்படிப்பட்ட பரிபூரணமான சுயத்தியாகத்தைத்தான் "இஸ்லாம்" என்னும் சொல்லானது சுட்டிக் காட்டிக்கொண்டு நிற்கின்றது; இதனுல்தான் எல்லாவிதமான மேன்மையும் சிறப்பும் இவ்விஷயத்தில் சம்பூரணமடைந்து நிற்கின்றன வென்று கூறுகின்றோம்.

மேற்கூறிய இத்தகைய காரணங்களினுல்தாம் தம்முடைய வெறும் பகுத்தறிவை மட்டும் பற்றுக்கோடாகக் கொண்டு ஆராய்ச்சி செய்ய விரும்பும் தத்துவசாஸ்திரிகளின் கடவுளைக்கண்டுபிடிக்க விரும்பிச்செய்யப்படும் முயற்சியானது வீண்முயற்சியாய் விடுகின்றது. ஆண்டவனுடைய உண்மை

யைப்பற்றிய மெய்யான அறிவானது அவனால் ஞானமயமாக வெளியிடப்பட்டிருக்கும் :குர்ஆன்ஷரீ'பால்தான்உறுதிப்படுத்தப் பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட ஞானத்தைப் பெறுதற்கு இந்தப் பரிசுத்த வேதமானது இரண்டு துறைகளை வகுத்திருக்கின்றது. முதன்மையாக, அது சிருஷ்டியின் இயற்கைச் சட்டங்களிலிருந்து ஆண்டவனுடைய உண்மைக்குரிய காரண காரியப்பொருத்தங்களைக்கண்டறிவதற்கு உபயோகமாயிருந்து வரும் பகுத்தறிவானது எவ்வாறு வன்மையுடன் கூர்மையையும் பெற்றுக்கொண்டு தவறுகளுக்குள் வீழ்ந்துவிடாமல் காப்பாற்றப்படுதல் கூடும் என்பதற்கு வேண்டிய மார்க்கத்தைப் புலப்படுத்துகின்றது. இரண்டாவதாக, பாரமார்த்திகத்துக்குரிய துறையைத் துலக்குகின்றது. இதனை நாம் மூன்றுவது வினாவுக்கு விடையளிக்கும்போது விவரித்தெழுதுவாம்.

முதற் றுறையின்கீழ் இவ்வேதமானது ஆண்டவனுடைய உண்மையை மனிதருடைய பகுத்தறிவுக்குப் பொருத்திக் காட்டுதற்கு வேண்டிய தெளிவான மிகப் பொருத்தமுள்ள விவாதங்களனைத்தையும் வெளியிட்டிருக்கிறது. ربنا الذي أعطى كل شيئ خلقه ثم هدى "ஒவ்வொன்றுக்கும் அதன் (இயற்கைக்குத் தக்கவாறான ஒரு) படைப்பைக் கொடுத்து, அதன்பின் (அதற்கு வேண்டிய பரிபூரணத்தையடையும்படியாகவும்) வழிகாட்டியிருப்பவனே நம்முடைய ரக்ஷிப்புக் கர்த்தாவாயிருக்கிறான்"—(20: 50). இப்பொழுது மனிதன் முதல் எல்லாச் சிருஷ்டிப் பொருள்களின் தன்மைகளையும் சோதித்துப் பார்த்து, அவற்றின் அமைப்பையும் தோற்றத்தையும் ஆராய்ச்சி செய்து நோக்குவோமாயின், எல்லாப் பொருள்களின் சிருஷ்டியும் அவ்வவற்றின் இயற்

கைக்குத் தக்கவாறாகவே அமைக்கப்பட்டிருக்கின்றன வென்பதை மகா ஆச்சரியத்துடனே விளங்கிக்கொள்வோம். இதற்கு வேண்டிய ஏனை விவரங்களைப் பற்றியெல்லாம் எழுதப் புகுவதானது படிப்போரின் மனத்தைப் பொறுமையிழக்கும்படி செய்துவிடுமென்றே அஞ்சுகின்றோம். ஆனால், அவரவரும் இதைப்பற்றி எத்துணை வேண்டுமாயினும் மனத்தினால் நிர்மானம் செய்து ஆராய்ந்துகொள்ளலாம்.

பராபரக் கடவுளின் உண்மையைப் பற்றிய மற்றொரு விவாதமானது :குர்ஆன் ஷரீ'பில் இவ்வாறு காணப்படுகிறது: இப்பிரபஞ்சத்திலுள்ள எல்லாக் காரணங்களுக்கும் மூல முதற் காரணமாயிருப்பவன் ஆண்டவனாகவே இருக்கின்றான். وان الى ربك المنتهى "(காரண காரியத்தின் முழு ஏற்பாட்டின்) முடிபும் உம்முடைய ரக்ஷக கர்த்தாவினிடமே இருக்கின்றது"—53: 42). இந்த விவாதமானது இப்பிரபஞ்சத்தில் பரந்து காணப்படும் இயற்கையான காரண காரிய ஏற்பாட்டின்மீதே நிலைநிறுத்தப் பட்டிருக்கிறது ; இத்தகைய ஏற்பாடுதான் இப்பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வோரணுவையும் அடியோடு ஆட்டிவைக்கிற தென்னும் தத்துவத்தினால்தான் இவ்வுலகினில் காணப்படும் பற்பலவிதமான விஞ்ஞான சாஸ்திரங்களையும் கண்டு பிடித்திருக்கின்றனர் ; எனவே, இந்தக் காரண காரியப் பொருத்தத்தைக் கொண்டேதான் முக்கியமான இயற்கைச் சட்டங்களையும் அவற்றின் தத்துவங்களையும் வகுத்து வருகின்றனர். தன்னளவிலே தான் சுயமே காரணமாயில்லாத ஒவ்வொரு காரணத்துக்கும் வேறொரு காரணத்தைக் கண்டுபிடிக்கலாம் ; இவ்வாறே அக் காரணத்துக்கு மற்றொரு காரணத்தைக் கண்டு பிடிக்கலாம் ; அம்

மற்றொரு காரணத்துக்கும் பின்னொரு காரணம் கண்டுபிடிக்கப்படலாம். இவ்வண்ணமாகவே காரணத்துக்குப்பின் காரணமாகநெடுந்தூரம் சென்றுகொண்டிருக்கலாம். ஆனால், தொடக்கத்தையும் முடிவையுமுடைய இவ்வுலகினில் காரண காரியப் பொருத்த முறையானது முடிவில்லாமல் போய்க்கொண்டேயிருப்பது ஒருபோதும் முடியாது; ஏதேனு மோரிடத்தில் அது வந்து முடிந்துதான் தீரவேண்டும். எனவே, அந்த இறுதிக்காரணம்தான் இப்பிரபஞ்சத்தின் கர்த்தாவாயிருக்கிறது. இத்தன்மைத்தாகிய இறுதிக்காரணம்தான், அல்லது வேறு விதமாகச் சொல்லின், முதற்காரணம்தான் மேற்கூறிய :குர்ஆன் ஆயத்தால் விளக்கப்பட்டிருப்பது.

ஆண்டவனது உண்மையைப்பற்றிய மற்றொரு வாதமானது :குர்ஆன் ஷரீ'பால் இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது; لا الشمس ينبغي لها ان تدرك القمر ولا الليل سابق النهار وكل في فلك يسبحون "சூரியன் சந்திரனைக் கடப்பது முடியாது; (சந்திரனால் ஆளப்பட்டு வரும்) இரவானது (சூரியனால் ஆளப்பட்டு வரும்) பகலைக் கடப்பதும் முடியாது; மேலும் எல்லாக் கோளங்களும் தத்தமக்குரிய மண்டலங்களிலே நீந்திச் செல்லுகின்றன" — (36:40). ஆகாய மண்டலத்தில் காணப்படும் கோளங்களை யெல்லாம் அடக்கி யாளக்கூடிய சர்வ ஞானம் நிறைந்த சம்பூரண கர்த்தா ஒருவன் மறைவில் இல்லாமலிருப்பானாயின், அவையனைத்தும் அதிசீக்கிரத்தில் உருக்குலைந்து நிலை தடுமாறிப் போயிருக்கும். ஆகாயத்தில் அச்சுமில்லாமல் உருளையுமில்லாமல் மிகமிகப் பெரும் பெரும் கோளங்களாகிய கிரஹ நக்ஷத்திர சந்திர சூரியர்கள் ஒன்றை யொன்று தாக்காமலும் தடுக்காமலும் தகர்க்காமலும் மிகவேகமாக உருண்டு நீந்

திச் செல்வதில் ஒருவகை ஏற்பாடான மகா மேதாவித்தன மானது காணப்படா நின்றது. கோளங்களின் பருமனையும் அவற்றின் ஓட்டத்தின் சரியான கணக்கையும் உற்றுநோக்குங் கால், அவற்றை நிர்மாணம் செய்த கர்த்தா ஒருவன் அவசியம் இருக்கத்தான் வேண்டுமென்று அதிகம் செவ்வனே அறிந்து கொள்ளுகிறோம். இப்பூமி முதல் மற்றெல்லா எண்ணிறந்த கோளங்களும் நெடுநெடுங் காலமாக மனோவேகத்தைக் காட்டி னும் மிகையான ஆகாய வேகத்துடன் உருண்டுகொண் டிருந் தும், ஒன்றோடொன்று மோதிக் கொள்ளாமலும், தத்தம் முடைய மார்க்கத்தினின்றும் அணுத்துணையும் தவறிச் செல் லாமலும், தங்களுடைய இடைவிடா இயக்கத்தினால் தேய்ந்தே னும் அழிந்தேனும் போய்விடாமலும் உருண்டு வருவதை நோக்குங்கால், நமக்கு அற்புதமான ஓர் ஆச்சரியம் உண்டாக வில்லையா? இப்பிரபஞ்சத்தைப் போன்ற இத்துணைப் பெரி தாகிய மாபெரும் இயந்திரத்தை ஏதேனுமோர் தவறில்லாமல் பல்லாயிரக் கணக்கான வருடங்களாக நடத்தி வைப்பதற்கு மேதாவிகளுக்கெல்லாம் மகா மேதாவியா யிருக்கும் கடவுளின் நாட்டத்தின் பிரகாரமும் ஏற்பாட்டின் பிரகாரமும் அமைந் துள்ள சூழ்ச்சி யொன்று இல்லாம லிருந்திருக்குமாயின், இஃ திவ்வாறு இத்துணைக் காலமாக நடைபெறுவது இயலுமோ? இத்தகைய மகா மேதாவித்தனம் பொருந்திய தேவஞானத் தைப்பற்றிக் கூறும்போதுதான் சர்வசக்தி வாய்ந்த ஆண்ட வன் தன் :குர்ஆன் ஷரீ‘பில் பின்வருமாறு கூறுகின்றான்: أفي الله شك فاطر السموات والأرض "இப்படிப்பட்ட ஆச்சரிய முள்ள வான கோளங்களையும், இப்படிப்பட்ட ஆச்சரிய முள்ள பூகோளத்தையும் சிருஷ்டித்திருக்கும் கடவுளைக்

குறித்து ஏதேனும் சந்தேக முண்டோ ?" (14:10).

ஆண்டவனுடைய உண்மையைப்பற்றிய மற்றொரு நுண்ணியவாதம் :குர்ஆன் ஷரீ'பில் பின்வருமாறு கூறப்படுகின்றது: كل من عليها فان ويبقى وجه ربك ذو الجلال والاكرام "எல்லாப் பொருள்களும் ஒழிந்துபோக வேண்டியனவே. பிறகு என்றென்றும் நிலைத்திருக்கக்கூடியது உம்முடைய ரக்ஷகனும் பராக்கிரமத்துக்கும் பெருமைக்கும் நாயகனுமாகிய அவனுடைய முகமாயிருக்கிறது"—(55:26,27). நாம் வசிக்கும் இப்பூவுலகம் சூன்யமாக்கப்பட்டு, எல்லா வானகோளங்களும் அடியோடு அழிக்கப்பட்டு, இப்பௌதிகப் பிரபஞ்ச முழுதும் ஒன்றுமில்லாமல் செய்யப்பட்டுப் போய்விடும்படியான காலமொன்று வருமென்று வைத்துக்கொள்வோ மாயின், பின்னரும் யாதொன்று மில்லாமல் சுத்த சூன்யமாயிருக்கும்போது ஒருபோதும் எப்போதும் முப்போதும் அழியாமலும் மாறாமலும் ஒழியாமலும் இருக்கக்கூடிய ஏதோ ஒன்று எஞ்சியிருக்கத்தான் வேண்டுமென்று நம்முடைய பகுத்தறிவும் மனச்சாக்ஷியும் நமக்குச் சொல்லவில்லையா ? அப்படிப்பட்ட பரம்பொருள்தான் ஒன்றுமில்லாச் சூன்யத்திலிருந்து இப்பிரபஞ்ச முழுதையும் உண்டுபண்ணிய ஆண்டகையா யிருக்கின்றது.

:குர்ஆன் ஷரீ'பானது மற்றோரிடத்தில் ஆண்டவனின் உண்மையைப்பற்றி அடியிற்காணுமாறும் விவரிக்கின்றது : الست بربكم قالوا بلى "ஆத்மாக்களை நோக்கி ஆதி நாயகன், 'நான் உங்களுடைய ரக்ஷகநாயனல்லவா ?' என்று வினவியபோது, 'ஆம் ! நாங்கள் அதற்குச் சாக்ஷியம் கூறுகின்றோம்,' என்று விடை யிறுத்தன"—(7:172). இவ்வாக்கியத்தில் சர்வசக்தி வாய்ந்த ஆண்டவன் ஒரு சம்பாஷணையான முறையிலே

ஆத்மாவின் தன்மையில் அந்தர்யாமியாகப் படைத்திருக்கும் ஒருவகை விசேஷ குணத்தை வெளியிட்டிருக்கிறான். அஃதாவது, ஆண்டவன் உண்டென்னும் விஷயத்தை மறுத்தற்குரிய தன்மையானது ஆத்மாவின் இயற்கையிலேயே அமைக்கப்பட்டில்லையென்பதுதான். நிரீசுவரவாதிகள் பரம்பொருளொன்று உண்டென்பதை மறுக்கிறார்கள்; இதற்குக் காரணம் அவர்களுடைய சுபாவத்தின் குதர்க்கமன்று; ஆனால், ஆண்டவனுடைய உண்மையைப்பற்றிய வெளிப்படையான சாக்ஷியமொன்றும் தமக்குக் கிடைக்கவில்லையே யென்று எண்ணுகிறார்கள். தெய்வமே யில்லை யென்று மறுத்தபோதினும், ஒவ்வொரு காரியத்துக்கும் ஒவ்வொரு காரணம் இருத்தல் அத்தியாவசிய மென்பதை ஒவ்வொரு நிரீசுவர வாதியும் ஒத்துக் கொள்வான். உதாஹரணமாக, யாதேனுமோர் வியாதியானது ஏதேனுமோர் காரணம்பற்றி யல்லாமல் வேறுவிதமாகவும் உற்பத்தியாதல் கூடுமென்பதை எப்படிப்பட்ட அறிவுள்ள மனிதனும் ஒத்துக்கொள்ளத் துணியான். காரண காரியப் பொருத்தமான முறைமை யொன்று உண்டென்பதை மறுத்துவிடுவோமாயின், எல்லாவிதமான விஞ்ஞான சாஸ்திரங்களும் அவற்றின் சார்பான சித்தாந்தங்களும் கவிழ்ந்து விட்டன வென்றேதான் தீர்மானிக்கப்படுதல் வேண்டும். இராப்பகல் தோன்றுவதையும், சூரிய சந்திர கிரகணங்கள் உதயமாவதையும், காற்று மழை பூகம்பம் முதலியவை போன்ற இயற்கை நிகழ்ச்சிகள் ஏற்படுவதையும் முற்கூட்டியே அறிந்துகொள்ளும் பொருட்டுச் செய்யப்படும் எல்லாவிதமான கணிதக்கட்டுப் பாட்டு முறைகளும், அப்படிப்பட்ட கணிதமுறையால் அனுமானிக்கப்படும் எல்லா முன்னறிக்கைகளும்—இப் பிரபஞ்சத்

தில் ஒவ்வொரு காரியத்துக்கும் அது அதற்கேற்ற குறிப்பிட்ட காரணம் இல்லாமற் போய்விடுமாயின்—ஒருபோதும்முடியாத காரியங்களாகவே சென்று முடியும். எனவே, ஒரு நிரீசுவர வாதத்தத்துவன் ஆண்டவன் என்பான் ஒருவன் இல்லையென்று வாதித்த போதினும், காரண காரிய ஏற்பாட்டின் முழு ஒழுங்கையும் அவனால் மறுக்க முடியாதாதலின், எல்லாவற்றிற்கும் முதற் காரணமாயிருக்கக்கூடிய மூலகாரணமொன்று உண்டென்பதை மட்டும் மறுக்கத்துணியான். இஃதொன்றே ஆண்டவனுண்டென்பதை அவன் எதிர்மறை முகத்தால் ஒத்துக்கொள்வதற்குப் போதுமான சாக்ஷியமாயிருக்கின்றது. அதுவுமன்றி, கடவுளே யில்லை யென்று வாதிக்கும் ஒருவன், இவ்வுலக சம்பந்தமான நாட்டங்களேனும் ஆசைகளேனும் சற்றும் உணர முடியாம லிருக்கும்படியாயும் அவனுடைய செய்கை முழுதும் அவனைக்காட்டினும் மேலாயிருக்கின்ற ஒரு பரம்பொருளின் ஆட்சியின்கீழ் இருக்கும்படியாயும் அத்துணை ஸ்மரணையில்லால் ஆக்கப்பட்டு விடுவானாயின், அவன் அப்படிப்பட்ட மனோநிலைமையில் ஆண்டவன் உண்டென்பதை ஒத்துக்கொள்ளாம லிரான். என்னெனின், இவ்வாறு பற்பல சமயங்களில் பரீக்ஷித்து இதன் உண்மையைப் பலரும் உணர்ந்து கொண்டிருக்கிறார்கள். எனவே, மேற்கூறிய திருவாக்கியமானது மனிதனுடைய கீழ்மையான எண்ணங்கள் மேலோங்கி யிருக்கும் வரையிலேதான் அவனுடைய மனமானது ஆண்டவனை மறுக்க யத்தனிக்கிறதென்றும், ஆனால் ஆத்மாவின் பரிசுத்தமான நிலைமையில் அவன் ஆண்டவனுடைய உண்மையை ஒத்துக்கொள்ள மறுப்பதில்லை யென்றும் விவரித்துரைக்கின்றது.

# கடவுளின் குணாதிசயங்கள்

மேற்கூறிய விவாதங்கள் :குர்ஆன் ஷரீ'பால் கூறப்பட்டிருக்கும் பற்பலவிதமான கடவுளின் உண்மை சம்பந்தமான எண்ணிறந்த விவாதங்களுள் ஒருசிலவாகவே அமைந்து கிடக்கின்றன. அவ் வேதத்திலுள்ள எல்லா ஆதார ஆதேயங்களையும் எடுத்துரைப்பதென்றால் அதற்கு ஈண்டு இடம் போதாதென்றே இம்மட்டோடு நிறுத்திக் கொள்ளுகிறோம். அதன்பின் அல்லாஹுத் தஆ'லாவின் திருமறையில் கூறப்பட்டிருக்கும் வண்ணம் அந்தப் பரம்பொருளின் குணாதிசயங்களைப்பற்றிச் சற்றே ஆராயத்துணிவாம் ; அவற்றிற்கு வேண்டிய சிற்சிலவிதமான முக்கிய உதாஹரணங்களை மட்டும் ஈண்டுக் குறிப்பிடுகின்றோம்: هو الله الذي لا اله الا هو عالم الغيب والشهادة هو الرحمان الرحيم "அவனே அல்லா(ஹ்); அவனைத் தவிர்த்து (வணக்கத்துக்குரிய) தெய்வம் வேறொன்றுமில்லை; கண்ணுக்கு மறைவானவற்றையும் கண்ணுக்குப் புலனானவற்றையும் அறியக்கூடியவன் ;அவனே அருளாளன், அன்புடையோன்"—(59:22). ஆண்டவனுக்கு இணையானது வேறொன்றுமில்லையென்னும் விஷயம் ஈண்டுக் குறிப்பிடப்படுகிறது. ஏனெனின், ஆண்டவனை ஒப்பாரும் மிக்காரும் வேறு எவரேனும் இருத்தல் கூடுமாயின், அவ்வாண்டவனுடைய தெய்விகத் தன்மையானது, ஒரு காலத்தி லில்லாவிட்டபோதினும் மற்றொரு காலத்தில் அவனுடைய எதிரியின் கைவயத்தில் மாறிவிடுதல் கூடும். "அவனைக்காட்டிலும் வணக்கத்துக்குப் பாத்திரமானவர் வேறொருவருமில்லை" என்னும் சொற்களே அவ்வாண்டவன் எத்துணைப் பரிபூரண

மானவனென்னும் நீர்மையை நன்குஅறிவிக்கின்றன. என்னெ னின், அவனுடைய உயர்ந்த குணாதிசயங்களும், மேன்மை யான நீர்மைகளும், அத்தியாவசியமான அழகுகளும் மகா கம்பீரமுள்ளவையாகவும் மகா மேன்மையுள்ளவை யாகவும் அமைந்திருத்தலினால், இப்பொழுது இப்பூவுலகில் காணப்படும் உயரிய தன்மைகளிலிருந்தே ஓர்உயரிய கடவுளை நாம் சுயமே சிருஷ்டிப்பதாயினும், அல்லது கடவுளின் சிற்சில விதமான குணாதிசயங்கள் மட்டும் மகாமேன்மையான உயரிய தன்மை யுள்ள ஓர் இறைவனைச் சுட்டிக்காட்டுகின்றன வென்று தியா னித்துக் கொள்வோமாயினும் அத் தன்மைத்தாகிய கடவு ளொன்றும் :குர்ஆன் ஷரீ'பில் குறிப்பிடப்பட் டிருக்கும் எல்லாவிதமான கல்யாணகுண வைபவங்களும் நிரம்பப் பெற்ற அந்த அல்லாஹு தஆ'லா ஒருவனை நிகர்த்துவிடுதல் ஒரு போதும் முடியாத காரியமாகவே யிருக்கும். ஆதலின், அப் படிப்பட்ட ஆண்டவனுக்கு இணையான தென்று வேறெதை யும் தெய்வமாகக் கொண்டாடுவதைக் காட்டினும் மகா அக்ரம மான அநீதக் கொடுஞ்செய்கை இப்பிரபஞ்சத்தில் வேறொன் றும் காணப்படுவது முடியாததேயாகும்.

மேற்கூறிய திருவாக்கியத்தில் காணப்படும் عالم الغيب "கண்ணுக்கு மறைவானவற்றை அறியக்கூடியவன்" என்னும் அடைமொழிகள், நம்முடைய கண்களுக்குப் புலப்படா வண் ணம் அமைந்திருக்கும் பொருள்களனைத்தையும் நம்முடைய கண்களுக்குப் புலப்படா வண்ணம் அமைந்திருக்கும் அந்தக் கடவுளே அறியக்கூடியவனா யிருக்கிறானென்னும் உண்மையை உணர்த்தி நிற்கின்றன. எனவே, அவனே அவனை அறியக் கூடியவனா யிருக்கிறான். அஃதாவது, அவனுடைய நிலை

மையை அவனேயல்லாத வேறொருவரும் முற்ற உணர மாட்டார். இன்னமும் நன்கு விளக்கிக் காட்டவேண்டுமாயின், நம்மைப்போன்ற பஞ்சேந்திரிய சக்திகளால்மட்டும் கட்டுப் பட்டுக் கிடக்கும் மனிதர்களால் அவ்வாண்டவனுடைய நிலைமையை அறிந்துகொள்வது ஒருபோதும் முடியாத காரியமாகும். ஆண்டவனால் படைக்கப்பட்ட வஸ்துக்களின் நிலைமையை முழுதும் நன்றாக அறிந்துகொள்ளலாம்; உதாஹரணமாக, சூரியன், சந்திரன், நக்ஷத்திரம் முதலிய ககோளச் சிருஷ்டிகளின் அந்தரங்க நிலைமை முழுவதையும் அடியோடு அறிந்துவிடலாம்; ஆனால், ஆண்டவனை அவ்வாறு முழுமையாய் அறிவது எப்போதும் சாலாது. முற்கூறிய திருவாக்கியம் عالم الشهادة "கண்ணுக்கு மறைவானவற்றையும், கண்ணுக்குப் புலனானவற்றையும் அறியக்கூடியவன்," என்று அவனை வருணித்திருப்பதனால், ஒவ்வொன்றையும் அவன் அறிகிறானென்றும், அவனது மேற்பார்வையி னின்றும் ஒன்றும் மறைத்துவைக்கப்பட் டில்லையென்றும் செம்மையாகத் தெரிந்து கொள்ளுகிறோம். என்னெனின், அவனால் படைக்கப்பட்டிருக்கும் பொருள்களின் தன்மை முழுவதையும் அவன் அறியவில்லை யென்போமாயின், அஃது அவனுடைய சர்வக்ஞான தெய்விகப் பெருமைக்கே இழிவு செய்வதாய் முடியும். ஆண்டவன் தன்னுடைய சிருஷ்டிக் கிரமத்தில் ஒவ்வொரு பரமாணுவின் தன்மையையும் செவ்வனே உணர்ந்திருக்கிறான்; ஆனால், மனிதனால் இப்படிச் செய்வது ஒருபோதும் முடியாத காரியமாகும். இப்பொழுது இப்பிரபஞ்சத்தில் காணப்படும் இப்படிப்பட்ட சிருஷ்டிக் கிரமத்தை ஒழிக்கும் பொருட்டுப் பெரியதோர் விநாசகாலத்தை எப்பொழுது

கொண்டுவருதல் கூடுமென்பது அன்னவனுக்கே அறியக் கிடக்கின்ற தல்லாது, அந்த இரகசியத்தை அறிந்து கொள்ளக் கூடிய சக்தி வேறெவருக்கும் கொடுக்கப்பட் டில்லை. ஒவ்வொரு காரியத்தின் நிகழ்ச்சியையும் அவனே அறிந்திருக்கிறான்; எனவே, அதனதன் முடிவு காலத்தையும் அவனே உணர்ந்திருக்கிறான்.

அவன் هوالرحمان "அர்ர'ஹ்மான்" என்று சிறப்பித்துக் கூறப்பட்டிருக்கிறான். அவனுடைய சிருஷ்டிப் பொருள்கள் அவனது அனுக்கிரஹத்தை அடைவதற்கு யாதொரு விதமான யோக்கியதையையும் பெறுதகாலத்திலும், அப்படிப்பட்ட சிருஷ்டிப் பொருள்கள் இப்பிரபஞ்சத்தில் உருவாவதற்கு நெடுங்கால முன்னரே அவற்றிற்கு வேண்டிய சுகசெளகரியங்களை யெல்லாம் தன்னுடைய அனுக்ரஹத்தின் சுயதயையினால் முற்படவே தையார்செய்து வைக்கக்கூடியவனே அர்ர'ஹ்மானா யிருக்கிறான்; மனிதர்கள் பிறப்பதற்கு, அல்லது இவர்களுடைய கருமங்கள் தோன்றுவதற்குப் பன்னெடுங்கால முன்னரே அவன் இவர்களுக்கு வேண்டிய சூரிய சந்திர நக்ஷத்திர கிரகங்களையும், வானம்பூமி மலைகடல் நதிகளையும் தண்ணளியால் அவன் சுயமே தையார் செய்து வைத்திருக்கிறான். ஆண்டவன்பால் காணப்படும் அப்படிப்பட்ட தன்மைக்கு رحمانية ர'ஹ்மானிய்யத் என்னும் அருளென்று பெயர் குறிப்பர்; இப்படிப்பட்ட அருளை நிரம்பப் பெற்ற தயாள மூர்த்தியே رحمان "அர்ர'ஹ்மான்" என்று அழைக்கப்படுகிறான். ஆண்டவன்பால் காணப்படும் மற்றொரு விதமான இரங்குந் தன்மையைக்கொண்டு அவன் الرحيم அர்ர'ஹீம் என்று

அழைக்கப்படுகிறான்; தன்னுடைய சிருஷ்டிப் பொருள்களின் நற் செய்கைகளுக்குத் தக்கவாறான நன்மையை ஈவது இவன் குணமாகும்; இவன் எவருடைய பிரயாசையையும் வீணாக்குவதில்லை. இவனுடைய இத்தன்மைத்தாகிய குண விசேஷத்துக்கு رحيمية ர'ஹீமிய்யத் என்று பெயர் சொல்வர். எனவே, இப்பெற்றித்தாய இரக்க முடையவன் الرحيم "அர்ர'ஹீம்" என்று அழைக்கப்படுகிறான்.

மீண்டும் ஆண்டவன் مالك يوم الدين (நியாயத் தீர்ப்பு நாளின் எஜமான்) என்று வருணிக்கப் படுகிறான். அஃதாவது, அவனே இப் பிரபஞ்சத்தின் காரியா காரியங்களின் நன்மை தீமைகளுக்குரிய ஏக நாயகனாய் விளங்குகிறான். அவன் தன்னுடைய சிருஷ்டிப் பொருள்களுடன் யாதொரு விதமான சம்பந்தமும் வைத்துக் கொள்ளாமல், வானங்களையும், பூமியையும் படைத்து வேறொருவரின் ஆட்சியின்கீழ் விட்டு வைக்கவில்லை; இன்னமும், சிருஷ்டிப் பொருள்களின் நன்மை தீமைகளைப் பாகுபாடு செய்து அவற்றிற்குரிய சன்மான தண்டனைகளை அளித்தற்குரிய அதிகாரத்தையும் வேறொருவர்பால் விட்டுக்கொடுத்து விட்டுத் தான் வெறுமனே உட்கார்ந்து கொண்டு விடவில்லை. இப் பிரபஞ்சத்தைக் காத்து ரக்ஷிப்பதும், அவ்வவ் வாத்மாக்களுக்குரிய நன்மை தீமைகளின் தீர்மானத்தை யளிப்பதும் அந்த ஒரே எஜமானின் தொழில்களாகவே காணப்படுகின்றன.

அல்லாஹுத் தஆ'லாவானவன் الملك القدوس (எப்படிப்பட்ட குற்றமேனும் குறையேனும் கறையாகப் பெறாத அரசன்) என்றும் அழைக்கப்படுகிறான். ஆண்டவனுடைய ராஜ்யமானது இவ் வுலகத்தில் காணப்படும் மானிட ராஜ்

யங்களைப் போலில்லை; ஏனெனின், இவ்வுலகத்திலுள்ள ராஜ்யங்கள் ஒருவர் கையைவிட்டு மற்றொருவர் கையில் சதா மாறிக்கொண்டேயிருக்கும்; அன்றியும் மானிட ராஜ்யத்தில் ஏதேனுமொரு குற்றங்குறை யில்லாமலிருப்பதும் முடியாது. அதன்பின் ஒரு காலத்தில் அடியோடு அழிந்துவிடுதலும் கூடும். ஒரு சமயம் ஒரு ராஜ்யத்திலுள்ள குடிமக்கள் எல்லோரும் தங்கள் தேசத்தையும் ராஜ்யத்தையும் துறந்துவிட்டு அன்னியநாட்டுக்குள் சென்று அடைக்கலம் தேடிக்கொள்ளுதலும் கூடும். அப்பொழுது முதல் ராஜ்யத்தின் மன்னனுக்கு ஆட்சிபுரிதற்குய குடிபடைகளே இல்லாமற் போய்விடுகின்றன; அல்லது க்ஷேமமாகஇருக்கும் தேசத்துக்குள் கொடியபஞ்சம் வந்து நுழைந்து கொள்ளுமாயின், அப்பொழுதும் அவ்வரசனுடைய நிலைமையானது ஒரு பிச்சைக்காரனுடைய பரம கதியினும் இழிய கதிக்கேவந்துவிடும். இன்னமும், ஒருதேசத்தின்குடிமக்களனைவரும் தங்கள் அரசனுக்கு விரோதமாய் ஏகோபித்துக் கிளம்பி அவனுக்கிருந்துவரும் அதிகாரத்தைத் தாக்கத் துணிவார்களாயின், அதன்பின் அவன் தன்னுடைய ராஜ்யாதிகாரத்தை விட்டுக் கொடுக்கும்படியான அத்தியாவசியமே வந்துசேரும். ஆனால், இப்படிப்பட்ட பலஹீனங்களெல்லாம் ஆண்டவனுடைய சர்வாதிகாரத்தில் காணப்படுவதில்லை. இப்பொழுதுள்ள எல்லாச் சிருஷ்டிகளையும் அடியோடொழித்துவிட்டு, இவற்றின் ஸ்தானத்திலே வேறு சிருஷ்டிகளைக் கொண்டு வந்து நிலைநிறுத்தக்கூடிய சக்தியும் சாமர்த்தியமும் அவனுக்கில்லாமற் போகவில்லை. அவன் மட்டும் சர்வசக்தி வாய்ந்தவனாக இல்லாமற்போய் விடுவானாயின், அவன் தன்னுடைய சிருஷ்டிகளின் விஷயத்தில் பக்ஷபாத முள்ளவனாகவே இருக்

திருப்பான். ஏனெனின், சர்வசக்தியில் எவ்வளவுக் கெவ்வளவு ஒருவருக்குக் குறைவுண்டாகிறதோ அவ்வளவுக் கவ்வளவு அவர் அநீதத்துக்குள்ளே ஆழ்வதற்குரிய அவசியமுண்டாய் விடுகிறது. ஆண்டவன் தன்னுடைய முதன் முதலான சிருஷ்டிப் பொருள்களை யெல்லாம் மன்னித்து அவற்றிற்கு மோக்ஷத்தைக் கொடுக்க நாடுவானாயின், அவன் சர்வ சக்தியுள்ளவனாக இல்லாதிருப்பின், அவன் மீண்டும் அக்ரமமாக அச்சிருஷ்டிக ளனைத்தையும் இப் பூவுலகினுக்கு அனுப்ப வேண்டிய அவசியம் நேரிடும். ஏனெனின், புதிய ஆன்மாக்களைச் சிருஷ்டிக்கும் சர்வசக்தி அவன்பால் இல்லாமற் போகுங்கால், முதன் முதலுண்டான படைப்புக்களுக்கு மன்னிப்பை யளித்து அவற்றிற்கு மோக்ஷத்தை யளித்துவிட்டபின் இப் பூவுலகம் வேறு படைப்புக்களில்லாமல் வெறுமையாய்ப் போய்விடும்; அல்லது இவ்வுலகுக்கு உயிர்ப்பிராணிகளை யனுப்ப வேண்டுமாயின், அவன் முன்னே மோக்ஷ மடைந்திருக்கும் ஆன்மாக்களை மீண்டும் அக்ரமமாக இவ்வுலகுக்கு அனுப்பிவைத்தல் வேண்டும். இவ்வாறெல்லாம் செய்வது ஆண்டவனுடைய பரிபூரணத்துக்கு மாற்றமாய்க் காணப்படவில்லையா? அப்பொழுதுதான் அவ்வாண்டவனுக்கும், இத்தரணியிலுள்ள வேறு அறைகுறையான அற்பப் பிராணிகளாம் அரசர்களுக்கும் இடையிலிருக்கும் வேற்றுமை ஒழிந்து போம். பூலோக ராஜ்யங்கள் தங்களுடைய காரியங்களை நடத்திக்கொள்ளும் பொருட்டு ஏற்படுத்தியிருக்கும் எல்லா விதமான சட்ட திட்டங்களும் உண்மையில் அறைகுறையானவையாகவே அமைந்திருக்கின்றன ; இந்த ராஜ்யங்கள் தங்களுடைய சுயநயத்தின் பொருட்டுக் கொடுங் கோன்மையை

யும் அநீதியையும் கைக்கொள்ளத் துணியுங்கால், தங்களுடைய தேசத்தின் சமாதானத்துக்காகவும் நியதிக்காகவுமே அப்படிப் பட்ட துறைகளில் இறங்கவேண்டுவது அத்தியாவசியமெனக் கூறிச் சமாதானம் செய்து கொள்ளுகின்றன. இத்தரணியி லுள்ள ராஜ்யங்களில் ஒரு பெரிய அபாயத்தைத் தடுத்துக் கொள்ளும் பொருட்டுச் சிறிய அபாயமொன்றைச் செய்து முடிப்பது தோஷமில்லை யென்று அவை கருதுகின்றன. உதா ஹரணமாக, ஒரு சிறு படகினால் ஒரு பெரிய கப்பலுக்கு நாசம் வருவதாயின், அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் அந்தப் படகை அதிலுள்ள ஆட்களுடனே நீருக்குள் மூழ்கச் செய்வ தைச் சட்டவிரோதமான காரியம் அன்றென்றே கருதி யிருக்கி றார்கள். ஏனெனின், அச்சிறுபடகைத் தாழ்த்தி விடுவதால் பெரிய மரக்கலத்துக்கும் அதிகமான பொருட் செலவுக்கும் நஷ்டம் விளைவதைக் காப்பாற்றியதாகக் கருதுகிறார்கள். ஆனால், ஆண்டவனுடைய தர்பாரில் இவ்விஷயம் நியாயமாய்க் கருதப்பட மாட்டாது. இரண்டு சங்கடங்கள் நேரிடப்போ கும் தருணத்தில் அவற்றுள் சிறியதை அழித்துப் பெரிய தைக் காப்பாற்றுவ தென்னும் அத்தியாவசியமானது ஆண்ட வனுக்கு ஒருபோதும் உண்டாதல் கூடாது. எனவே, ஆண் டவனுக்குச் சர்வ சக்தித்துவம் இல்லாமற் போய்விடுமாயின், அஃதாவது, ஒன்றும் இல்லாமையிலிருந்து எல்லாவற்றின் உண்மையையும் உண்டுபண்ணக்கூடிய சர்வ சக்தியைப் பெறாம லிருந்திருப்பானாயின், அவனைப் பூலோகத்திலுள்ள ஓர் அறைகுறையான அரையனுக்கே ஒப்பிட்டுக் கூறலாம். அப்பொழுது அவன் தன்னுடைய தெய்விகத்தை நிலைநாட்டும் பொருட்டுக் கொடுங் கோன்மையைக் கைக்கொள்ளுதல்

வேண்டும்; அல்லது நியாயத்தைக் கைக்கொள்வா னாயின், தன்னுடைய ஆட்சிக்குரிய உலகமொன்று இல்லாமற் போய் விடுதல் வேண்டும். ஆனால், சர்வ சக்திவாய்ந்த அல்லா(ஹ்) வின் அதிகாரமானது எப்படிப்பட்ட குறைகளாலும் தாக் குண்டு கிடப்பதில்லை. அவனுடைய சர்வாதிகார மென்னும் பெருந் தெப்பமானது நியாயத்தினாலும் சத்தியத்தாலும் நிரம்பப்பெற்ற சமுத்திரத்தின்மீது மிதந்துகொண் டிருக் கிறது. இதுதான் அவனது மஹாத்தியம். இதுதான் அவ னது மகிமை. என்னே இறைவனின் பெருமை!

அல்லாஹ¯த் தஆ'லாவின் மற்றொரு குணாதிசயமானது அவனுடைய "அஸ்ஸலாம்" என்னும் திருநாமத்திலே பொதிந் திருக்கிறது; இப்பெயரின் தாத்பர்யம் சாந்திக்குரிய இறை வன் என்பதாகும். மேலும் தானும் எப்படிப்பட்ட குறையி னின்றும், ஆபத்தினின்றும், அதிருஷ்ட ஹீனத்தினின்றும் அதிக பத்திரமாகவும் சர்வ ஜாக்கிரதையாகவும் தப்பிக்கொண் டிருப்பதுடன், தன்னுடைய அடியார்களுக்கும் பத்திரத்தை யும் பாதுகாப்பையும் அளிக்கக்கூடியவனா யிருக்கிறான். இப் பெயரின் சம்பந்தமான குறிப்பானது மிகப்பிரத்தியக்ஷமாய்க் காணப்படாம லில்லை. ஏனெனின், ஆண்டவனே துன்பத்துக் கும் துரதிருஷ்டத்துக்கும் அடிமைப்பட்டும், மனிதர்களால் அலைக்கழிக்கப்பட்டும், துன்புறுத்தப்பட்டும், துயரத்துள் ஆழ்த்தப்பட்டும், அவஸ்தைப்படுவானாயின், அல்லது தன் னுடைய விருப்பம்போல் நாடிய காரியத்தைச் செய்து முடிக்க இயலாமற் போய்விடுவானாயின், அடியார்களான மனி தர்கள் தங்களுடைய துயரத்தின் போதும் துக்கத்தின்போ தும் கவலையின்போதும் கஷ்டத்தின்போதும் விடுதலை பெறும்

பொருட்டு அந்த ஆண்டவனிடம் ஒருபோதும் தம்முடைய முகங்களைத் திருப்ப மனந்துணியார். எனவே, அவன் பொய்யான தெய்வங்களைக் குறித்து இவ்வாறு கூறியிருக்கிறான்:—
ان الذين تدعون من دون الله لن يخلقوا ذبابا ولو اجتمعوا له وان يسلبهم الذباب شيئا لا يستنقذوه منه ضعف الطالب والمطلوب ما قدروا الله حق قدره ان الله لقوي عزيز "நிச்சயமாக அல்லா(ஹ்)வை யன்றி நீங்கள் வணங்குகிறவர்கள், அவர்களெல்லோரும் அதற்காக ஒன்றுசேர்ந்த போதினும் (ஓர்) ஈயையேனும் படைக்க மாட்டார்கள்; இன்னம் அந்த ஈயானது ஏதேனுமொன்றை அவர்களினின்றும் எடுத்துக்கொண்டு விடுமாயின், அதை அவர்கள் அதனிடத்திலிருந்து திரும்பப் பெற்றுக் கொள்ள முடியாதவரா யிருக்கிறார்கள்; பூஜிப்பவரும் பூஜிக்கப் பட்டவரும் பலஹீனர்களா யிருக்கிறார்கள். (இப்படிப்பட்ட பலஹீனமுள்ள வஸ்துக்கள் கடவுளரா யிருப்பது முடியாது. ஆனால், உண்மையான தெய்வமோ எப்படிப்பட்ட திறமைசாலியைக் காட்டினும் அதிகமான திறமைசாலியாய் விளங்கா நிற்கின்றது.) அல்லா(ஹ்)வை அவனுக்குரிய கண்ணியத்திற்குத் தக்கவாறான முறையிலே அவர்கள் கணித்துப் பார்க்கவில்லை. நிச்சயமாக அந்த ஆண்டவனே எல்லாப் படைப்புக்களின் மீதும் ஆண்மை பெற்றவனாய் விளங்குகிறான். எனவே, அவனை ஒருவரும் பிடித்துத் தொழுவில் அறைந்து விடுவது முடியாது; கழுவிலேற்றுவதும் முடியாது. இப்படிப்பட்ட தெய்வமல்லாத வேறு தெய்வங்களை வணங்குவோரெல்லாம் தீதான மார்க்கத்தில்தான் சேர்ந்தோராவார். ஏனெனின், அவர்கள் ஆண்டவனை அவனுக்குரிய அளவின் பிரகாரம் அளந்து பார்த்துத் தங்களுடைய மதிப்பை ஏற்படுத்திக்

கொள்வதில்லை''—(:குர்ஆன், 22: 73, 74).

ஆண்டவனின் மற்றொரு குணாதிசயத்தை அறிய விரும்புவீர்களாயின், "அல்மூமின்" என்னும் திருநாமத்தின் சார்பான தாத்பர்யத்தை உற்று நோக்குவீர்களாக. இப்பெயரின் விசேஷமானது, தன்னுடைய ஒருமைத் தன்மைக்கும் இணையற்ற மேன்மைக்கும் அத்தியாவசிமான ஆதாரங்களைக்காட்டி எல்லோருக்கும் பாதுகாப்பை யளிப்பவன் என்று கருத்துக் கொள்ளும். இந்தத் திருநாமத்தின் விசேஷத்தால் உண்மையான தெய்வத்தின்மீது உறுதிகொண்டிருப்பவர் தம்முடைய ஒவ்வொரு நல்ல காரியத்திலும் அவன்மீதே சார்ந்திருப்பதற்குரிய தைரியத்தை அடைந்துகொள்ளுகிறார். தம்மை ஆண்டவன் ஒருபோதும் கைவிடமாட்டா னென்னும் மகாதிடமான நம்பிக்கை இருந்துவரும்போது அவர் ஏன் சந்தேகத்துள் ஆழ்தல் வேண்டும்? இப்படிப்பட்டவர் மற்றமனிதர்களின் முன்னும் வெட்கப்படத் தேவையில்லை. என்னெனின், இவர் தம்முடைய நம்பிக்கைக்குப் போதுமான ஆதாரங்களையும் அவனிடத்திலிருந்தே கற்றுக்கொண்டிருக்கிறார். இன்னவர் ஆண்டவன் முன்னும் அச்சத்துடன் லஜ்ஜையால் தலைகுனிந்து நாணப்படவேண்டிய அவசியமும் ஏற்படமாட்டாது. ஆனால், ஒருவன் அந்த உண்மையான ஆண்டவனை விடுத்துத் தன்னுடைய மனப்போக்கின் பிரகாரம் ஒரு தெய்வத்தை உண்டுபண்ணிக்கொண் டிருப்பானாயின், அவன் எப்பொழுதும் ஆபத்துக்குள்ளேயே ஆழ்ந்து கிடக்கிறான். ஏனெனின், அவன் தன்னுடைய மனோராஜ்யக் கட்டுப்பாடான தெய்வத்தை மெய்யான தெய்வமென்று நிரூபிக்க முடியாதவனாய்த் துன்பப்பட்டுக்கொண் டிருக்கிறான். அவன் மனித புத்திக்குப்

பொருத்தமில்லாத விவாதங்களை நிலைநிறுத்த முன்வரும்போது அவற்றில் கூடார்த்தமான மர்மங்கள் மலிகிக் கிடக்கின்றன வென்று நொண்டிச் சமாதானம் செய்து கொள்ளுகிறான்; ஆதலின், பகுத்தறிவுக்கு நேர் மாற்றமான காரியங்களை யெல்லாம் அவன் கூடார்த்தத்தின்கீழ்க் கொண்டுவந்து, அவை யனைத்தும் மனித புத்திக்கு எட்டாத அத்துணைப் பாரமார்த் திக இரகசியங்களென்று கூறிவிடுகிறான்.

மேற்கூறிய அல்குர்ஆனின் சம்பந்தமான ஆயத்தில் ஆண் டவன், المهيمن العزيز الجبار المتكبر "எல்லாவிதமான ஆண் மைகளையும் வென்றுகொள்ளும் சக்திவாய்ந்து எல்லோர்மீதும் காவல் புரிபவனென்றும், ஒவ்வோர் உடைவதையும் செப்பஞ் செய்யக் கூடியவனென்றும், ஒவ்வொரு நஷ்டத்தையும் பரிக ரிக்கக்கூடியவ னென்றும், எப்படிப்பட்ட தேவைக்கும் அப் பால் இருக்கக்கூடியவனென்றும்" அறையப்படுகிறான்—(:குர். 59: 23). இன்னமும், الخالق البارى المصور له الاسماء الحسنى "அவன்—ஆண்டவன், சரீரங்களை அமைப்பவனாகவும், ஆத் மாக்களைச் சிருஷ்டிப்பவனாகவும், கர்ப்பாசயத்துள் சிசுக்களின் அவயவங்களை ஒழுங்கு செய்பவனாகவும் இருக்கிறான்; மனித னால் தியானிக்கப்படக் கூடிய எல்லாவிதமான நல்ல நாமங்க ளும் அவனுக்கே உரியனவாய்க் காணப்படுகின்றன"— (59:24). يسبح له ما فى السموات والارض وهو العزيز الحكيم "கோ ளங்களில் வசிப்பவர்கள் அவனுடைய பரிசுத்தத்தையும் தூய் மையையும் புகழ்கிறார்கள்; பூலோகத்தி லுள்ளவர்களும் இவ் வாறே செய்கிறார்கள். அவனே வன்மை பெற்றவனாகவும், ஞானம் நிரம்பியவனாகவும் இருக்கிறான்" (59:24). இத் திரு வாக்கியத்தினால் ஆண்டவனுடைய ஆணையின்படி அடிபணிந்து

நடக்கக்கூடியவர்கள் வான மண்டலங்களில் வசித்து வருகிறார்களென்று நன்கு தெரிந்துகொள்ளுகிறோம்.

இன்னமும் :குர்ஆன் ஷரீபானது ஆண்டவனைப்பற்றிக் கூறும்போது, على كل شيئ قدير "அவனுடைய அதிகாரமானது எல்லாவற்றின் மீதும் செல்லுகின்றது," என்று வருணித்திருக்கிறது. இதனால்தான் ஆண்டவனை நோக்கி வணக்கம் புரியும் அடியார்களுக்கு ஒருவிதமான ஆறுதல் உண்டாகின்றது ; என்னெனின், ஆண்டான் மட்டும் ஆண்மையற்றவனாயிருப்பின், அடியானின் நம்பிக்கையானது என்ன விதமாய்ப் போய் முடியும் ? :குர்ஆன் ஷரீபின் மற்றோரிடத்திலிருந்து, رب العالمين الرحمان الرحيم مالك يوم الدين "சர்வ லோகங்களுக்கும் நாயகனாயிருப்பவன் அவற்றை வளர்த்துப் பாதுகாத்து ரக்ஷித்து உச்சத்துக்குக்கொண்டு செல்லக் கூடியவனா யிருக்கிறானென்றும், அருளாளனும் அன்புடையோனுமா யிருக்கிறானென்றும்,நியாயத் தீர்ப்புநாளின் அதிபதியா யிருக்கிறானென்றும்," اجيب دعوة الداع اذا دعان "அடியார்களின் பிரார்த்தனைகளுக்குச் செவிசாய்த்து அவற்றிற்கு வேண்டிய விடையை அளிப்பவனா யிருக்கிறானென்றும், அஃதாவது, அடியார்களின் பிரார்த்தனைகளை அங்கீகரிப்பவனா யிருக்கிறானென்றும்" (2:186) தெரிந்து கொள்ளுகிறோம். மற்றோரிடத்தில் ஆண்டவன், الحي القيوم "எப்பொழுதும் ஜீவித்திருப்பவ னென்றும், எல்லா உயிர்களுக்கும் மூலஸ்தானமாயிருப்பவனென்றும், எல்லோரையும் காப்பாற்றுபவ னென்றும்" வர்ணிக்கப்படுகிறான். ஆண்டவன் இவ்விடத்தில் ஆதியந்த மில்லாதவனென்றும், எப்பொழுதும் ஜீவித்திருப்பவ

னென்றும் கூறப்படுவதி லிருந்து அவன் ஒரு காலத்தில் ஒழிந்துபோய் விடுவானென்று பக்தகோடிகள் அஞ்சவேண் டியதில்லை யென்றும் நன்கு உணர்ந்து கொள்ளுகிறோம்.

قل هو الله احد الله الصمد لم يلد ولم يولد ولم يكن له كفوا احد

"அவன் ஈடு இணையில்லாத ஒரே ஆண்டவனு யிருக்கிறான். அவன் தன்னையேதான் சார்ந்தவனு யிருக்கிறான். அவனுக் கொருவரும் குமாரரில்லை. அவனும் ஒருவருக்கும் குமாரனு மில்லை. மேலும் அவனை ஒப்பாரும் மிக்காரும் ஒருவரு மில்லை"—(:குர்ஆன், அத்தி. 112).

மயிரிணைக்க மேலும் தவறிய கொள்கையில் சென்று விடாமல் அத்துணை ஒழுங்குடனே ஏகதெய்வக் கொள்கை என்னும் மெய்யான தத்துவத்தை இத்தரணியின் மீது உறுதிப் படுத்த வேண்டுவதுதான் அந்தப் பரம்பொருள் சார்பான முக்கியமான சீதமாயிருக்கிற தென்பதை நாம் ஒருவரும் மற ந்துவிடுதல் கூடாது. இதற்குமுன் கூறப்பட்டிருக்கும் ஒழுக்க சம்பந்தமான படிப்பினைகளெல்லாம் :குர்ஆன் ஷரீ'பால் குறிப்பிடப்பட் டிருக்கும் பாரமார்த்திக சம்பந்தத்துடன் தொடர்பு வைத்துக்கொள்ளாமல் இருப்பதில்லை. ஆனுல், அங்கே குறிப்பிடப்பட் டிருக்கும் ஒழுக்க வியவகாரங்க ளெல்லாம் அளவுக்குக் குறைந்துவிடாமலும் அதற்குமேல் அதீதமாகப் போய்விடாமலும் ஒரு மட்டுத் திட்டமான அளவுக்குள்ளே அமைக்கப்பட் டிருக்கின்றன. என்னெனின், ஒருவகை ஒழுக்கமானது அதற்கென்று குறிப்பிடப்பட் டிருக்கும் சரியான எல்லைகளுக்குள் அமைக்கப்பட்டிருந்தா லல்லாமல் அதையொரு சற்குணமென்று :குர்ஆன் ஷரீ'ப் கூறுவதில்லை. ஏனெனின், மத்திபமான மார்க்கந்தான் எப்

பொழுதும் எக்காரியத்திலும் நேரான சன்மார்க்கமென்பதை எவரே மறுக்கத் துணிவார்? அஃதாவது, கடைக்கோடியான இரண்டு முனைகளுக்கும் நடுமையத்தில் இந்த நேரான மார்க்கம் அமைந்திருப்பதைக் கண்டுகொள்வீர்கள். எனவே, எவனொருவன் அப்பக்கமும் இப்பக்கமும் சாயாமல் நடுநிலையான நேர்கோட்டின்மீது நடந்து செல்லுகிறானோ அவனே தான் கோரிய இடத்துக்குப் போய்ச் சேருகிறான்; அதுவே சன்மார்க்கமென்னும் நன்மார்க்கமுமாம். சரியானகாலத்தில் மத்திபமான வழியைப் பின்பற்றி மேல்நோக்கிச் செல்பவரே தம்முடைய லக்ஷியத்தில் சித்தி பெறுகின்றார். காலத்தின் கணக்கிலும் நடு மையத்தை ஏற்றுக்கொள்பவரே இறுதியில் வெற்றிபெறுவார். எவ்வாறெனின், சரியான காலத்துக்குமுன்னேனும் அல்லது காலதாமதத்துக்குப் பின்னேனும் கழனிக்குச்சென்று விதைகளைத் தெளிக்கும் குடியானவன் தன்னுடைய வித்தையெல்லாம் வீணாகச் சொரிந்தவனே யாவான். எனவே, சன்மார்க்கமும் நன்மார்க்கமும் ஞானமார்க்கமும் மத்திபமான நேர்கோட்டின் மீதேதான் அமைந்திருக்கின்றனவென்று அறிந்துகொள்ளுகிறோம். உரிய காலத்தில் உரிய பாதையில் நடந்து செல்பவனே உரிய இடத்துக்குப் போய்ச் சேர்வான். இவ்வாறே உண்மை என்பதும் இரண்டு கடைக்கோடிகளுக்கும் நடுமையத்திலேயே அமைந்திருக்கிறது. என்னெனின், உரிய காலத்தில் உரியவண்ணம் உண்மையைப் பேசுவதுதான் நேர்மையான வெற்றியைத் தரும். காலமல்லாத காலத்தில் உண்மையைச் சற்றுக் குறைத்தேனும் சற்று மிகைபடுத்தியேனும் கூறுவது சத்தியமாகாது.

ஆண்டவனை அறிந்துகொள்ளும் விஷயத்திலும் மற்றக்

காரியங்களில் விசாரணை புரிவதேபோல் நடுமையான மார்க்கத்தினின்றே விசாரணை புரிதல் வேண்டும். இவ்வாறு விசாரணை புரியப் புகுங்கால், ஆண்டவனுடைய குணாதிசயங்களை யெல்லாம் ஒதுக்கிவிட்டு அது வேறு ஏதோ ஒருவிதமான தெய்வமென்று கொள்வதும் கூடாது; அல்லது அவனை ஒரு சர்வ சாதாரணமான பஞ்சேந்திரியங்களுடன் கூடிய நம்மைப் போன்ற பிராணி என்றும் தீர்மானித்து விடுவது கூடாது. சிலர் கூறுவதேபோல் அவன் முற்றும் நிர்க்குணனாகவும் அமைந்தில்லை; அல்லது வேறு சிலர் கூறுவதேபோல் முழுதும் சகுணத்தின் உருவமேதான் தெய்வமாயும் இருப்பதில்லை. எனவே, இறைவனுடைய லக்ஷணத்தைப் பற்றிக் கூறுங்கால் :குர்ஆன் ஷரீ‘பானது இவ்விரண்டுக்கு மிடையிலுள்ள மத்திமமான மார்க்கத்தையே மேற்கொண்டிருக்கிறது. ஏனெனின், அல்லாஹு—த் தஆ’லாவானவன் காண்பவனென்றும், கேட்பவனென்றும், அறிபவனென்றும், பேசுபவனென்றும், மற்றும் பலவாறாகவும் கூறப்படுகிறான். ஆனால், இப்பிரபஞ்சத்தில் நம்முடைய ஞானேந்திரியம் உட்பட எப்படிப்பட்ட இந்திரியங்களாலும் அறியப்படக் கூடிய எந்தப் பொருளும் அவனுக்கு நிகராய் நிற்பதில்லை. ஏனெனின், அல்லாஹு—த் தஆ’லாவைப் போன்றதைப் போன்றதொன்றும் இப்பிரபஞ்சத்தில் இல்லையென்று எமது :குர்ஆன் ஷரீபு உறுத்திக் கூறுகின்றது. فلا تضربوا لله الأمثال "ஆண்டவனுடைய தோற்றத்திலும் குணாதிசயத்திலும் வேறொருவரும் பங்கெடுத்துக்கொள்வது முடியாது"—(42: 11). ليس كمثله شيئ "அவனுடைய படைப்புக்களுள் எதனுடனும் அவனை ஒப்பாக்குவது முடியாது"—(16:74). ஆண்டவன் தன்

னுடைய சிற்சிலவிதமான செய்கைகளில் நம்மையொத்திருக்கிறான்; ஆயினும், அவனைப்போல் நாம் அமைந்தில்லை. ஆண்டவன் எவ்விதமான ஒப்புயர்வு மில்லாத அத்துணைப் பரிசுத்தவானென்று எமது வேதம் அறைகின்றது. ஆனால், சுருங்கச் சொல்லுமிடத்து, இஸ்லாமார்க்கம் தன்னுடைய எல்லாவிதமான போதனைகளிலும் இடைநடுவான நேர் கோட்டையே பற்றி நிற்கின்றது. :குர்ஆன் ஷரீ'பின் ஆரம்ப அத்தியாயமானது தன்னுடையபெயர்போன பிரார்த்தனையில் பின்வருமாறு நம்மனைவர்க்கும் போதித்து நிற்கின்றது: اهدنا الصراط المستقيم صراط الذين انعمت عليهم غير المغضوب عليهم ولا الضالين "எங்களை நேரான வழியில் (சீராக) நடத்துவாயாக! எவருக்கு நீ அருட்கொடை யளித்தனையோ அவருடைய வழியில்; கோபத்துக் குள்ளானவர்களுடைய வழியிலும், வழிவிலகிச் சென்றோர்களுடைய வழியிலு மன்று." இத்திருவாக்கியங்களில் மூன்று விதமான மனிதர்கள் குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள்: ம:க்லூபி' அ'லைஹிம்—"கோபத்துக் குள்ளானவர்கள்" என்பவர்கள் முதன்முதலில் ஆண்டவனுக்கு விரோதமாய்க் கோபமான காரியத்துள் பிரவேசிக்கிறார்கள்; இதனால் தங்களுடைய மனம் போன போக்கிலெல்லாம் சென்று ஆண்டவனுடைய கோபத்துக்கே ஆளாய்விடுகின்றார்கள். இரண்டாவதாக,ல'ால்லீன்—"வழிவிலகிச் சென்றவர்கள்" தங்களுடைய மிருக சுபாவத்தையும் தங்கள் மனோராஜ்யத்தையும் பின்பற்றினவர்களாய், நேரான பாதையைவிட்டு நெடுந்தூரம் விலகிச் சென்றவர்களாகிறார்கள். இவ்விருவகையான மனிதர்களின் மார்க்கங்களுக்கிடையில் நேரான மத்திப வழியில் நடந்து செல்பவர்களையே குர்ஆன் ஷரீ'பானது "அன்அ'ம்·த அ'லைஹிம்"—என்று

கூறுகின்றது. எனவே, சுருங்கச் சொல்லுமிடத்து, மனிதர்களை மத்திபமான நேர்வழியின்மீது செலுத்துவதே :குர்ஆன் ஷரீ'பின் முக்கிய நோக்கங்களுள் முதன்மையாய்க் காணப்படாநின்றது. மூஸாநபி[அலை] பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்று உபதேசித்தார்கள். ஈ'ஸா நபி[அலை] எதிரிகளை முற்றும் மன்னித்துவிட வேண்டுமென்று உபதேசம் புரிந்தார்கள். ஆனால், :குர்ஆன் ஷரீ'போ அவ்விரு உபதேசங்களையும் இடத்துக்கேற்றவாறு மேற்கொள்ள வேண்டுமென்று மத்திபமாக உபதேசம் செய்கின்றது. இவ்வேதத்தின் மற்றோரிடத்தில் இவ்வாறு காணப்படுகிறது: وكذالك جعلناكم امة وسطا "நாம் உங்களை மத்திப மார்க்கத்தில் செல்லும்படி செய்து, மற்றெல்லாக் காரியங்களிலும் நடுமையமானதையே மேற்கொள்ளும்படி கற்றுக் கொடுத்திருக்கிறோம்" (2: 143). இப்படிப்பட்ட மத்திப வழியை மேற் கொள்பவரே மேன்மை பெற்றவராய் விளங்குகிறார்கள். ஏனெனின், ஓர் அரபிப் பழமொழி கூறுவதே போன்று எப்பொழுதும் நடுமையமான மார்க்கமே அதிக சிலாக்கியமானதாய்க் காணப்படுகின்றது.



# பாரமார்த்திக நிலை





நாம் இப்பொழுது மனிதனுக்குரிய அபிவிருத்தி
யின் மூன்றாவது படித்தரமாகிய ஆத்மார்த்த
சம்பந்தமான நிலைமைகளைப் பற்றிச் சிறிது
ஆராயக் கடவோம். நாம் இந்நூலின் ஆரம்
பத்திலேயே ஆன்மநிலைக்குரிய மூலாதாரமானது ந'ப்ஸே
முத்மஇன்னா என்னும் சாந்தியடைந்திருக்கும் பரிசுத்த
ஸ்தான மென்று ஒருவாறு குறிப்பிட்டிருக்கிறோம்; இத்தன்
மைத்தாகிய சாந்திநிலையிலுள்ள ஆத்மாவே அம்மனிதனை
அவனுடைய நல்லொழுக்க நிலையினின்றும் பாரமார்த்திகத்
துறையுள் நேரே கொண்டு சென்று, அவனைத் தெய்வத்தின்
சாயலைப் பெற்ற உண்மையுள்ள அடியானாக மாற்றிவிடுகின்
றது; அஃதாவது, சுருங்கச் சொல்லுமிடத்து, அவனை ஒழுக்க
நிலையினின்றும் உயர்த்திக் கொண்டுபோய் ஆன்மநிலையுள்
சேர்ப்பிக்கின்றது. இதனைக்குறித்து :குர்ஆன் ஷரீ'பானது
பின்வருமாறு தனது அத்தியாயம் 89, திருவாக்கியம் 27
முதல் 30 வரையுள்ள விடத்தில் மிக அழகாக விவரித்திருக்
கின்றது : يا ايتها النفس المطمئنة ارجعي الى ربك راضية مرضية
فادخلي في عبادي وادخلي جنتي "ஏ சாந்தியடைந்து கொண்
டிருக்கும் ஆத்மாவே! உன்னுடைய ரக்ஷகனிடத்திற்கு, நீ
அவனோடு திருப்தியடைந்து கொண்டும், அவன் உன்னோடு
திருப்தி யடைந்துகொண்டும் மீளுவாயாக; ஆதலின், என்
னுடைய அடியார்களுள் சேர்ந்துகொள்; மேலும் என்னு

டைய சுவர்க்கத்துக்குள் புகுந்துகொள்." ஆத்மாவின் முத்ம இன்னுவுக் குரிய இம் மூன்ருவது நிலைமையைப்பற்றி வியவ கரிக்கத் துணியுங்கால், இங்குக் கூறிய :குர்ஆன் திருவாக்கி யங்களின் கருத்துக்களைச் சற்று ஆழமாகக் கிரகித்துக் கொள் ளுதல் வேண்டும்: இவ்வுலகின்கண் மனிதன் ஆசிக்கக்கூடிய ஆத்மார்த்த சம்பந்தமான மகா உயரிய நிலைமையானது, அவ் வடியான் ஆண்டவனையின் தீர்மானத்தின்மீது முழுப் பொருத் தமும் காட்டியவனுய், அவனது நாட்டமே தன்னுடைய திருப்தி யென்றும், அவனது விருப்பத்தின்படி நடப்பதே தனக்குரிய பேரானந்த மென்றும் கருதியும், அவனையே தான் முற்றும் சார்ந்தவனுக மேற்கொண்டு நடந்துகொண்டும் பணி வுடனே தலைவணங்கி யிருப்பதாகும். இதைத்தான் பூலோக சுவர்க்கமென்று அறிஞர்கள் கூறுகிறபர். அடியானின் பரி சுத்தமான பூர்த்தியுள்ள முழுநம்பிக்கையும், அவனுடைய மெய்யான கபடமற்ற உண்மைத் தன்மையும் எல்லாம் வல்ல இறைவனருளால் இவ்வாருகத்தான் ஒரு பூலோக சுவர்க்கமாக நன்கொடை யளிக்கப் பெறுகின்றன. மற்றை மதவாதிக ளெல்லாம் மரணத்துக்குப்பின் வைகுந்தம் அல்லது மோக்ஷம் சேருவதற்கு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்போது, உண் மையான முஸ்லிம் பக்தன் மட்டும் இவ்வுலக வாழ்க்கையி லேயே அப்படிப்பட்ட சுவர்க்கானந்தத்தைப் பெற்றுக்கொள் ளுகிறுன். அப்படிப்பட்ட சாந்தி நிகேனத்துக்குள் நுழைந்த வருக்கு, அதற்கு முன் அன்னவருக்கொரு சுமையாகவும் அர்த்தம் விளங்காத வெறும் சம்பிரதாய மந்திரங்களாகவும் இருந்து வந்த இயம நியம வணக்கங்களெல்லாம் இப்பொழுது அவனுடைய ஆத்மாவுக்கே புத்துயிரளிக்கக்கூடிய முக்கிய

போஷணை சாதனங்களா யிருக்கின்றன; இதுதான் பிறகு அவனது ஆத்மார்த்தத்துக் குரிய அஸ்திபாரமாகவும் அமைந்து விடுகின்றது. இரவு பகலான வணக்கமும் தியானமுமே அதன்பின் அன்னவனின் அன்னபானாதிகளாய் அமைந்து விடுகின்றன. மரணமான பின்னரே இப்படிப்பட்ட ஆத்ம சாந்தியை அடையவேண்டு மென்னும் கட்டுப்பாடு அவனுக் கொன்றும் இல்லாமற் போய்விடுவதைக் கண்டுகொள்ளுகிறான். ஆத்மாவின் ஆரம்ப நிலைமையில் அஃது இவ்வுலகத்தி லுள்ள எல்லாப் பொருள்களையும் தன்னுடையன வென்றே பேராவல் கொண்டது. அதன் இரண்டாவது நிலையில் தன்னுடையது இன்னதென்றும், பிறருடையது இன்னதென்றும் பகுத்துணர்ந்து கொண்டபோதினும், உயிர் வாழ்க்கையின் தவறுகளுக்காக அவனைக் கடிந்துகொண்ட போதினும், துராசை என்னும் கொடிய நோயைத் தடுப்பதற்கேனும் அல்லது அடியோடு ஒழிப்பதற்கேனும் அதற்கு வலிமை உண்டாவதில்லை. மனிதனை மிக்க உறுதியுடன் கூடிய ஒரு சன்மார்க்கனாகச் செய்து விடுவதுமில்லை. நிஷ்காமிய கருமியாய்த் தொழில் செய்யக்கூடிய அப்படிப்பட்ட பற்றற்ற சாந்தியின் நிலைமையானது இந்த மூன்றாவது படித்தரமாகிய முத்ம இன்னாவின் நிலைமையிலேதான் உண்டாதல் கூடும்; இந்நிலையிலேதான் சித்த விகார உணர்ச்சிகளெல்லாம் சுயமே அடியோடு மடிந்து போகின்றன. எனவே, ஆத்மாவென்பது தவறுதலொன்றும் இழைக்காது உறுதிபெற்று நிற்கத் துணிகின்றது. ஆண்டவனது பாரமார்த்திகக் கடாக்ஷத்தால் தைரியமடைந்துவிடும் அந்த நல்லடியான் தன்னுடைய பண்டைத் தவறுகளைக் கண்டு நாணத்தால் தலைகுனிகிறான். நன்மைக்கும் தீமைக்

கும் இடையில் பெரும் போராடிக்கொண்டிருந்த அந்த ஆத்மா வானது இந்த மூன்றாவது நிலைமைக்கு வந்தவுடன் திருப்தி யுடனே பூரணச் சாந்தி யடைந்து விடுகின்றது. அப் பொழுது அம் மனிதனே பழைய மனிதனினின்றும் வேறான புது மனிதனாகக் காணப்படுகிறான். அன்றுமுதல் அம்மனி தன் முன்னிருந்த மாதிரியாகத் தோற்றப்படுவ தில்லை. அவ னுடைய நடை, உடை, பாவனைகளெல்லாம் முற்றும் மாற்ற மடைந்தே காணப்படுகின்றன. சுருக்கிச் சொல்லு மளவிலே அவனுடைய உயிர்வாழ்க்கையே ஒரு நூதன வாழ்க்கையாகத் திருந்தி விடுகின்றது. அவன் தன் ஆத்மாவின்மீது படர்ந் திருந்த களிம்பு, துரு முதலிய மாசு மறு பாசிகளை யெல் லாம் களைந்துவிட்டு, ஆண்டவனுடைய அன்புக்கே அஃ தோர் உறைவிடமாய் விடுகின்றது. அடியானின் உள்ளத்தின் கண்ணுள்ள சகலவிதமான அழுக்குக்களையும் ஆண்டவனே தன் திருக்கரங் கொண்டு பரிசுத்தம் செய்துவிடுகிறான். அவனே தன் அடியான் ஹிருதயத்துள் சன்மார்க்க நன்மைக ளனைத்தையும் நிரப்பி விடுகிறான். அதன்பின் உண்மையின் திரளே அவனது உள்ளத்தை மொய்க்க ஆரம்பிக்கின்றது; அதனுடன் செவ்விய வாழ்க்கை என்பதே அவனுடைய ஹிருதயத்திற்குரிய எல்லாவிதமான சக்திகளையும் தன்வயப் படுத்திக் கொள்ளுகிறது. அப்பொழுதுதான் மெய்ம்மை என் பது வெற்றிக்கொடி நாட்டுகின்றது; பொய்ம்மை என்பது தன் ஆயுதங்க ளனைத்தையும் எறிந்துவிட்டுப் புறமுதுகு காட்டி ஓடத் தலைப்படுகின்றது. அதன்பின் ஆண்டவனது திருக்கரமே அடியானது உள்ளத்தை அப்படியே நடத்தி வைக்கின்றது. அந்தவிதமான அருள் நிறைந்த சுக்கானைப்

பற்றிக் கொண்டே அடியானும் தன் ஒவ்வோர் அடியையும் எடுத்து வைத்து நடக்கத் துணிகின்றான். இவ்வாறான மானஸ சன்மார்க்க சாந்தி நிகேதனத்துக்குரிய தன்மையைப் பற்றியே கீழ்வரும் ஆயாத்துக்களும் தமது கருத்தைச் செலுத்துகின்றன:—

أولئك كتب في قلوبهم الايمان وايدهم بروح منه + حبب اليكم الايمان و زينه في قلوبكم وكره اليكم الكفر والفسوق والعصيان أولئك هم الراشدون فضلا من الله ونعمة والله عليم حكيم*

"அவர்களுடைய ஹிருதயங்களுக்குள்ளே அல்லாஹுத் தஆ'லாவானவன் நன்னம்பிக்கையை உறுதியாக நிலைப்படுத்தித் தன்னுடைய பரிசுத்த ஆவியைக் கொண்டு அவர்களைப் பலப்படுத்தி யிருக்கிறான்"—(58: 22). "ஏ நன்னம்பிக்கை கொண்டவர்காள்! ஆண்டவன் உங்களுக்கு நன்னம்பிக்கையை மிக்க விருப்பமுள்ளதாகச் செய்திருக்கிறான்; மேலும் அதன் அழகுகளையும் மேன்மைகளையும் உங்கள் ஹிருதயங்களில் நன்கு பதியச் செய்துள்ளான். இன்னம் நன்னம்பிக்கையை நிராகரிப்ப தென்பதும் வழிவிலகிச் செல்லும் தீய ஒழுக்க மென்பதும் கீழ்ப்படியாமை என்பதும் உங்களுக்கு மிக்க வெறுப்பைக் கொடுக்கக் கூடியனவாகவும் அமைத்திருக்கிறான்; மேலும் உங்கள் ஹிருதயங்களை எல்லாத் தீய நெறிகளையும் வெறுக்குமாறு செய்தருளி யுள்ளான். நேரான மார்க்கத்தைப் பின்பற்றுகிறவர்கள் அவர்களே யாவார்கள்; (இவை யெல்லாம்) அல்லா(ஹ்)வினிடத்திலிருந்து உண்டாகக்கூடிய அனுக்கிரகமாகவும் அருட்கொடையாகவுமே அமைந்திருக்கின்றன. மேலும் ஆண்டவன் அறிந்தவனாகவும் ஞானமுள்ளவனாகவும் விளங்குகிறான்" — (49: 7, 8). இன்னமும்,

قل جاء الحق وزهق الباطل ان الباطل كان زهوقا "சொல்வீராக: மெய்யானது வந்து விட்டது; பொய்யானது மறைந்துவிட்டது; நிச்சயமாகப் பொய்யானது மறைந்து போகக்கூடியதாயிருக்கிறது"—(17: 81).

சுருங்கச் சொல்லுமிடத்து, ஆத்மாவுக்குரிய மூன்றுவது நிலையின் சார்பான தன்மையைப் பற்றிக் :குர்ஆன் ஷரீ'பானது இவ்வாறுகத்தான் வருணித்திருக்கின்றது. ஆனால், இத்தகைய மேனு நிலைமையைக் கைவரப் பெருதவன் உண்மையான ஒளியைப் பெற்ற நேத்திரங்களை வாய்க்கப் பெற்றவனென்று ஒருபோதும் ஓதுவது கூடாது. "அவர்களுடைய ஹிருதயங்களுக் குள்ளே அல்லாஹுத் தஆ'லா வானவன் நன்னம்பிக்கையை உறுதியாக நிலைப்படுத்தித் தன்னுடைய பரிசுத்த ஆவியைக் கொண்டு அவர்களைப் பலப்படுத்தி யிருக்கிறுன்," என்னும் திருவாக்கியத்தின் கருத்தை ஆழச் சிந்தித்துப் பார்ப்பீர்களாக. என்னெனின், ஆண்டவனே அடியானுடைய ஹிருதயத்துக்குள் தன்னுடைய நன்னம்பிக்கையை (ஈமானை) உறுதியாக நிலைப்படுத்துகிறுன்; மேலும் தன்னுடைய பரிசுத்த ஆவியைக் கொண்டே, அஃதாவது, தனக்குரிய அருட்பெருஞ் சோதியைக் கொண்டே பலப்படுத்தியிருக்கிறுன். இப்படிப்பட்ட வார்த்தைகளி லிருந்து நாம் ஆண்டவனுடைய அருட்பிரகாச மில்லாமல் உண்மையான பரிசுத்தமும் ஒழுக்கமான நேர்மையும் பெறுவது முடியாதென்பதை மிகச் செம்மையாகத் தெரிந்து கொள்ளுகிறோம். ஆத்மாவின் இரண்டாவது நிலையாகிய லவ்வாமாவின் காலத்தில் நம்முடைய மனத்தின்கண் நன்மை தீமைகளுக்கிடையிலே ஒருவிதமான போராட்டம் நிகழ்ந்துகொண்

டே யிருக்கின்றது. ஓர் அடியான் தன்னுடைய நன்மையின் சார்பான தூண்டுதல்களைச் சிறிதுநேரம் பெற்றுக்கொள் வானாயின், மறுபடியும் அவனுடைய தீக்குணங்களின் தன் மையே அவனது நன்மையின் குணத்தை மேலாடித் தானே மிகைத்து நிற்கின்றது. அப்பொழுது அவன் தன்னுடைய வீழ்ச்சியை நன்குணர்ந்து கொள்ளுகிறான்; தன்னுடைய ஆத்மாவை எவ்வாறு பக்குவப்படுத்தக் கூடுமென்றும் சிற்சில வேளைகளில் திகைத்து நிற்கிறான். அந்த இரண்டாவது நிலை மையில் அவன் தன்னுடைய தீக்குணத்தின்மீது ஒரு நிமிஷ மேனும் முழுவெற்றியையும் அடைய முடியாம லிருப்பதற் காக அதிகம் வருந்துகிறான். ஆனால், அந்நிலைமையில் அவ னுடைய நன்மை தீமையின் போராட்டம் முடிவடைந்த வுடனே ஆண்டவனுடைய தண்ணளியால் அவனுடைய ஞானஜோதி விளக்கமாகின்றது. அந்த உணர்ச்சிக்குரிய ஞானோதயம் வெளிப்பட்டவுடனே அவனுடைய ஆத்மாவின் கண் ஓர் ஆச்சரியகரமான மாறுதல் காணப்படுகின்றது; அப் பொழுது தனக்குத் தெரியாமலே ஒரு பலமுள்ள, ஆனால் மறைவான கரமொன்று இருந்துகொண்டு தன்னை அப்புறம் இழுத்துச் செல்வதை நன்குணர்ந்து கொள்ளுகிறான்.

அதன்பின் ஒரு நூதன உலகமே அந்த அடியானின் காட்சியில் தோற்றமாகத் தலைப்படுகின்றது; அதன் பிறகே அந்த நல்லடியான் ஆண்டவனது உண்மையை நேரே உணரு கிறான். அப்பொழுது அவனுடைய நேத்திரங்களினின்றும் ஒருவகை நூதன ஜோதி பிரகாசிக்கத் தொடங்குகின்றது; அதன்பின் அதற்குமுன் தெரியாத விஷயங்களை யெல்லாம் தெரிந்துகொள்ளும் ஆற்றலைப் பெறுகிறான். ஆனால், மனிதன்

இப்படிப்பட்ட பாதையை எப்படிக் கண்டுபிடித்தல் கூடும்? இத்தகைய ஞானஜோதியையும் அவன் பெற்றுக் கொள்வது எவ்வாறு சாலும்? இப் பிரபஞ்சத்தில் காரணம் ஒன்று மில்லாமல் காரியம் ஒன்றும் சித்திப்பதில்லை. ஆதலின், பெறுதற்குரிய வழியொன்று மில்லாது அப்பேற்றுக்குரிய இலக்ஷியம் ஒன்றையும் பெற்றுக்கொள்வது முடியாது. எனவே, மேற்கூறிய ஞானமார்க்கத்துக் குரிய நேரிய வழியினூடே ஏறிச் செல்லாம லிருக்கும்வரை அத்தகைய ஞானத்தைப் பெறுவதும் ஒருபோதும் இயலாத காரிய மாகும். இயற்கையின் சட்டங்களை முறிப்ப தென்பது சாத்தியமான காரியமன்று. நாம் இப்பிரபஞ்சத்தின் இயற்கையைக் கண்ணுறுந்தோறும் ஒவ்வொன்றையும் பெறுதற்குரிய ஒவ்வோருவிதமான பிரத்யேக மார்க்கம் உண்டென்பதையே நன்கு தெரிந்து கொள்ளுகிறோம். ஆதலின், அது அதற்குரிய மார்க்கத்தைப் பின்பற்றிச் சென்றாலல்லாது, அது அதற்குரிய இலக்ஷியத்தைப் பெற்றுக்கொள்வதும் ஒருபோதும் முடியாது. நாம் ஓர் இருட்டறைக்குள் இருந்துகொண்டு சூரிய வெளிச்சத்தை விரும்புவோமாயின், அதற்குரிய சரியான வழியானது, சூரியனுக்கு எதிர்முகமாயுள்ள ஜன்னல்களைத் திறந்து விடுவதே யாகும்; அதன் பிறகே அந்தச் சூரிய வெளிச்சமானது நமது இருட்டறைக்குள்ளே நுழைந்து எல்லா மூலை முடுக்குக்களையும் பிரகாசிக்கச் செய்கின்றது. இவ்வாறே ஆண்டவனது அனுக்கிரகம் நிறைந்த அருட் பெருஞ் சோதியை அடைவதற்கும் அதற்குரிய வாயிலொன்றும், அதற்கு வேண்டிய ஆத்ம பரிபக்குவத்தைப் பெறுதற்குரிய முறையொன்றும் அமைந்திருத்தல் வேண்டும். நம்மு

டைய உலக சம்பந்தமான லௌகிக காரியங்களில் மேன்மை பெறும்பொருட்டு அவற்றிற்குரிய வழிவகைகளை யெல்லாம் அல்லுபகலாகத் தேடித்திரிவதில் நமது பெரும்பான்மையான காலத்தைக் கழித்துவருவதேபோல் பாரமார்த்திக சம்பந்தமான ஆத்மார்த்த வளர்ச்சிக்குரிய துறைகளும் முறைகளும் இன்ன இன்னவையென்றும் துருவிக் கண்டுபிடிக்க வேண்டுவது நமது முக்கியக் கடமையே யாகும். ஆனால், அதற்குரிய ரஸ்தாவானது நம்முடைய சாதாரணப் பகுத்தறிவின் பலஹீனமான முயற்சிகளைக் கொண்டு மட்டுமே கண்டுபிடிக்கப் பட முடியுமோ என்பதுதான் ஒரு கேள்வி. இன்னமும் நம்முடைய சொந்த அறிவை மட்டும் துணையாகக்கொண்டு புத்திசாலித்தனமாக ஆண்டவனுடைய ஐக்கியத்தை நிச்சயமாகப் பெறுவது முடியுமோ என்பதுதான் மற்றொரு கேள்வியாகும். அடியார்மாட்டுள்ள அன்பினால்மட்டுமே ஆண்டவன் தன்னுடைய திருக்கரத்தைக் கொண்டு அந்தப் பெருங்கதவைத் திறக்கிறானென்று அனுபவசாலிகளான அறிஞர்க ளெல்லோரும் கூறுநிற்குங் காலையில், நமது கலாசாலையின் தர்க்கசாஸ்திரத்தையும் தத்துவசாஸ்திரத்தையும் மட்டுமே துணையாகக் கொண்டால் அது திறக்கப்பட்டு விடுமோ?

இப்படிச் செய்வதால் ஒருபோதும் ஆண்டவனது கபாட பந்தனத்தை அப்புறம் நகர்த்திவிடுதல் முடியாது. சாதாரணமான வெறுமையான மனிதப் பிரயத்தனத்தால் மட்டுமே அந்த உயிருள்ள மெய்யான பரம் பொருளின் பெருஞ்சோதியை ஒருபோதும் கண்டு கொள்வது முடியாது. ஆண்டவனால் சூசிப்பிக்கப் பட்ட அந்தச் சன்மார்க்கத்தினூடே மிகப்பணிவுடனே தலைவணங்கி நடந்து சென்று, நாம்

நம்முடைய சக்தி முழுதையும் சாமர்த்திய முழுதையும் அடியோடு அந்தக் கடவுளின் நாட்டத்தின் முன் அடிமைகளாக ஆக்கி வைத்தல் வேண்டும். அதன்பின் ஓயாமலும் ஒருகாலும் ஊக்கங் குன்றாமலும் ஆண்டகையின் ஐக்கியத்தைப் பெற்றுக்கொள்ள அல்லும் பகலும் அனவரதமும் விடாமல் முயற்சி செய்துவருதல் வேண்டும். அதன் பின்னரே அந்த ஆண்டகையின் அருளுதவியைக் கொண்டே அவனது மெய்ம்மையை அறிந்து கொள்ளுதல் சாலும். இதற்கு வேண்டிய மகா மகா நேர்த்தியான துல்லியப் பிரார்த்தனையொன்று, தனக்குரிய சரியான பரிசுத்தம் நிறைந்த எவ்வகைக் குற்றங் குறையுமில்லாத அழகிய வார்த்தைகளால் மனித சுபாவத்திற்கு முற்றும் ஏற்றவாறு அமைக்கப்பட்டிருக்கும், ஃகுர்ஆன் ஷரீ'பின் ஆரம்ப ஸூறாவாகிய "திறப்பு" அத்தியாயமே யாகும். அந்தப் பிரார்த்தனையில் அன்பு பூண்ட அடியார்களின் ஆர்வம் நிறைந்த பிரார்த்தனையின் நோக்கமுழுதும் நிறைந்திருக்கின்றது; அஃது இவ்வாறு காணப்படுகின்றது: بسم الله الرحمان الرحيم "அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லா(ஹ்)வின் திரு நாமத்தைக்கொண்டு ஆரம்பம் செய்கின்றேம்." الحمد لله رب العلمين "சகலவிதமான தூய்மை நிறைந்த புகழ்ச்சிகளனைத்தும், சர்வ லோகங்களையும் படைத்துக் காத்துரக்ஷித்து உச்சத்துக்குக் கொண்டுவரக்கூடிய அந்தப் பரமமகாப் பிரபுவுக்கே உரியனவாகும்." الرحمان الرحيم "அவனே அருளாளன்; அவனே அன்பு நிறைந்தவன்." அஃதாவது, நாம் சற்றும் அருகதையைப் பெறுமுன்னமே நமக்கு வேண்டியனவற்றை யெல்லாம் தன் சுயக்கருணையால் கொடுத்தளிப்பவன்; நாம் செய்யும் நற்

கருமங்களுக்குப் பன்மடங்காகச் சன்மான மளிப்பவன். مالك يوم الدين "இறுதித் தீர்ப்புநாளின்மீது சகலவிதமான உரிமைகளையும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற எஜமான்." அஃதாவது, தனது நியாயத்தைப் பற்றியும் மன்னிப்பைப் பற்றியும் வேறொரு வருக்கும் சமாதானங்கூறச் சற்றும் கட்டுப்பட்டிராதவன். اياك نعبد واياك نستعين "இத்தகையோனாகிய உன்னையே வணங்குகிறோம்; உன்னிடத்திலேயே எங்கள் எல்லாக் காரியங்களுக்கும் உதவி தேடுகிறோம்." இப் பிரார்த்தனையில் "நாம்" என்னும் பன்மைச்சொல் வழங்கப்பட்டிருப்பதன் தாத்பர்யம், நம்முடைய சர்வாங்கமும், அதன் உறுப்புக்களும், அவற்றின் சர்வ சக்திகளும் அந்த நாய னொருவனையே வணங்குகின்றன வென்பதைச் சுட்டிக் காட்டுதலே யாகும்; மனிதனும், அவனுடைய அங்க அவயவங்களும், அவற்றின் சர்வசக்திகளும் அவன்முன் அடியோடு பணிந்து கிடக்காமல் அவன்பால் பிரார்த்தனை புரிவதென்பது ஒரு சிறிதும் முடியாது. அடியானின் எல்லாவிதமான சக்திகளையும் சாமர்த்தியங்களையும் ஆண்டவன்முன் பணியக் கிடத்துவதே "இஸ்லாம்" என்னும் பதத்தின் மெய்யான கருத்தைக் கொடுக்கும். اهدنا الصراط المستقيم صراط الذين انعمت عليهم "எங்கள் தலைவனே! எங்களை நேரானவழியில் சீராகச் செலுத்தி, உன் பக்கல் அடையச் செய்வாய்; அப்படிச் செல்வதால் அவ்வழியிலேயே ஸ்திரமாக நிறுத்தி, உன்னுடைய அருட்பெருங் கருணைக்குப் பாத்திரமாகிய நல்லடியார்களின் ரஸ்தாவிலே எங்களைச் சேர்த்து வைக்கக் கடவாய்." غير المغضوب عليهم ولا الضالين "ஆண்டவனே! உன்னுடைய கோபத்துக்குப்

பாத்திரர்களாகிய கொடியோர்களின் வழியிலும், உன்னுடைய ஆணையை மீறிச் சென்ற தவற்றொழுக்க முடையோருடைய வழியிலும் நாங்கள் சென்றுவிடாமல் எங்களைத் தடுத்தாட்கொண்டு ரக்ஷிக்கக் கடவாய். (ஆமீன்)—ஆண்டவனே! அப்படியே ஆகக்கடவது!" இதுதான் எங்கள் பிரார்த்தனை.

மேற்கூறிய வேத வாக்கியங்களி லிருந்து, ஆண்டவனுடைய அருட்கொடையானது, அஃதாவது, அவனுடைய கருணைமாரியானது, தங்களுடைய உடல், பொருள், ஆவி அனைத்தையும் அவனது வழியிலே அர்ப்பணம் செய்து, அவனுடைய நாட்டத்துக்கே முற்றும் தலை சாய்த்து, அவனது ஆணையே தங்களுடைய யோக க்ஷேமத்திற்குரிய வழியெனக்கொண்டு, மனிதனால் அடையப்படக்கூடிய அருட்பெருஞ் சோதி யென்னும் ஆண்டவனுடைய சாமீபமும், சாயுச்யமும், சம்பாஷணையும், அவனால் விளிக்கப்படுதற்குரிய கிருபா கடாக்ஷமும் கிடைக்க வேண்டுமென்னும் பேராவலுடனே அதற்கு வேண்டிய ஆத்மார்த்த முன்னேற்றங்களை யெல்லாம் அளித்தருள வேண்டுமென்று அவன்முன் அடியார்கள் முற்றமுற்றத் தலைவணங்கிப் பிரார்த்தனை புரிய வேண்டுமென்பதை மிகச் செம்மையாகத் தெரிந்துகொண்டோம். அப்படிப்பட்ட அடியார்கள் தங்களுடைய சக்திகளனைத்தையும் அந்த ஆண்டவன்முன் பணியக்கிடத்தி வணக்கம் புரிந்து, தம்பாலுள்ள கீழ்ப்படியாமை என்னும் எல்லா விதமான அகங்கார மமகாரங்களையும் ஒழித்து, அவன்முன் அஷ்டாங்கயோகத்தில் சிரங்குனிந்து பிராயோபவேசமாய்க் கிடக்கின்றார்கள்; அவர்கள் தங்களா லியன்றமட்டும் எல்லா

விதமான தீமைகளையும் ஒழித்துவிட்டு, ஆண்டவனுடைய கோபத்திற்குச் சற்றும் பாத்திரமாகாமல் தங்களைப் பத்திரப் படுத்திக்கொள்ளுகிறார்கள். அவர்கள் ஆண்டவனது அனுக்ர ஹத்தை உண்மையான பக்தியுடனும் உயரிய ஒழுக்கத் துடனுமே பெற விரும்புகிறார்கள். ஆதலின், அத்தகைய அடி யார்களின் மெய்யான முயற்சியனைத்தும் நல்லவிதமான பலனையே கொண்டுவந்து சேர்க்கின்றன; அப்படிப்பட்ட வர்களே ஆண்டவனுடைய சர்வஞானபானத்தினின்றும் ஒரு மிடறைப் பருகிக்கொள்ளும்படி அனுமதியளிக்கப் படுகின்றார் கள். மேலும் மேற்கூறிய திருவாக்கியங்கள் ஆண்டவன் பாதையிலே ஒரேமுகமாய் நிற்பதற்குவேண்டிய உறுதியையும் அளிக்க வல்லனவாக அமைந்திருக்கின்றன. எனவே, அடி யான் தனக்குண்டாகும் எப்படிப்பட்ட கடுமையான சோதனைகளின் காலத்திலும் தளராத ஊக்கத்துடனும் தாழ்மையுறுத பக்தியுடனும் ஒழுகிவந்தா லல்லாது ஆண் டவனது அனுக்ரஹத்தால் விளையக்கூடிய ஆத்மார்த்த நிலைமை யானது பரிபூர்ணமாக உண்டாய் விடுவதில்லை யென்று ஈண்டு நன்கு தெரிந்துகொள்ளுகிறோம். ஆண்டவன் மாட்டு அடியா னுக் குண்டாகும் பக்தி மேலீடானது வாளாயுதங்களால் சற்றும் துண்டிக்கப்பட முடியாததாகவும், அக்கினியினாலும் தகிக்கப்படக் கூடாததாகவும், மற்றெந் துன்பமும் இவ்வன்புக் கிடையூறொன்றும் உண்டுபண்ணக் கூடாததாகவும் அத்துணை ஆழமாக வேரூன்றி நிற்றல் வேண்டும். அத்தன்மைத்தாகிய அடியானை எத்தன் மைத்தாகிய வறுமையும் துன்பமும் ஒரு சிறிதும் அசைத்துவிட மாட்டா; தனக்கு மிக்க நெருக்கமா யுள்ள பந்துக்களின் பெரிய மரணமும் அவனைஒன்றும் செய்து

விடமாட்டாது; தன் மனத்துக்கினிய அருமையான வஸ்துக்கள் தன்னைவிட்டுப் பிடுங்கப்பட்டபோதினும் அதற்காக அவன் சற்றும் மனங்கலங்கான்; அதிபயங்கரமான முறையால் கொல்லப்படுவதாயினும் அவன் தன்னுடைய பக்தியில்சிறிதும் தளர்வுறமாட்டான். ஆனால்,அத்தகைய நிஸ்சலனமான நிலைமையை அடைதற்குரிய வாயிலானது மிகக்குறுகலாகவே அமைந்திருக்கிறது; அந்த வாயிலுக்குள் நுழைந்து செல்வதும் மஹாசிரம சாத்தியமான காரியமாகும். ஆஹா! என்னவிதமான கடின வழியென்று நினைக்கின்றீர்கள்!

இதைக் குறித்துத்தான் :குர்ஆன் ஷரீ‘பில் பின்வரும் வாக்கியமும் இவ்வாறு வியவகரித்திருக்கிறது. قل ان كان اباءكم وابناءكم واخوانكم وازواجكم وعشيرتكم واموال اقترفتموها وتجارة تخشون كسادها ومساكن ترضونها احب اليكم من الله ورسوله وجهاد في سبيله فتربصوا حتى ياتيهم الله بامره والله لا يهدى القوم الفاسقين “அவர்களுக்குச் சொல்வீராக : உங்களுடைய தந்தைமாரும், உங்களுடைய தனயர்களும், உங்களுடைய சகோதரர்களும், உங்களுடைய மனைவிமாரும், உங்களுடைய உற்றார் உறவினரும், அளவற்ற பிரயாசையுடனே நீங்கள் சம்பாதித்திருக்கும் ஐசுவரியமும், இலாபம் தராமல் நஷ்டத்துக்குள் வந்துவிடுமோவென்று நீங்கள் அஞ்சுகின்ற உங்கள் வர்த்தகமும், உங்களுக்குத் திருப்தியையளிக்கும் உங்கள் விசாலமான விடுதிகளும் ஆண்டவனைக் காட்டினும் அவனது திருத்தூதரைக் காட்டினும் அவனது பாதையில் உழைப்பதைக் காட்டினும் உங்களுக்கு அதிகப் பிரியத்தைக் கொடுக்கக்கூடுமாயின், பிறகு ஆண்டவன் தன் கட்டளையை வெளிப்படுத்

தும்வரை காத்திருப்பீர்களாக. ஏனெனின், ஆண்டவன் எல்லை கடந்து செல்வோரை ஒருநாளும் நேர்வழிக்குக் கொண்டுவர மாட்டான்"—(9:24). இந்தத் திருவாக்கியத்திலிருந்து, ஆண்டவனுடைய நட்பைக்காட்டினும் தங்கள் ஐசுவரியங்களையும் பந்து மித்திரர்களையும் அதிகம் நேசிப்பவரெல்லாம் அந்த ஆண்டகையின் பார்வையில் வழிவிலகி எல்லைகடந்து செல்பவரென்றே தெரிந்துகொள்ளுகிறோம். அவர்கள் ஆண்டவன் சார்பான காரியங்களைக் காட்டினும் மற்றச் சொந்த விஷயங்களில் அதிகமான அபிமானம் பாராட்டியதால் அவர்களுக்கு விளையக்கூடியது விநாசகாரியமாகவே காணப்படாநின்றது.

மேற்கூறியவாறு எப்படிப்பட்ட இடுக்கண்களாலும் இடையூறுகளாலும் சிறிதும் துளங்காமல் திண்ணிய மனத்துடனே முதிர்ந்த பக்தி விசுவாசத்தை யுடையவர்களே ஆத்மார்த்த விஷயத்தின் மூன்றாவது படித்தரத்தை அடைந்தவராய்க் காணப்படுகின்றார்கள். இப்படிப்பட்ட மூன்றாவது நிலைமையை எட்டியவர்கள், ஆண்டவன்மீது தாங்கள் கொண்டுள்ள அபிமானத்தின் காரணத்தினால் எல்லாவிதமான கஷ்டநிஷ்டூரங்களையும் மான அவமானங்களையும் பொறுமையுடன் சகித்துக்கொண்டு, அவனன்றி மற்றைய வெல்லாம் ஒரு பொருளே அன்றென்னும் விரக்தியுடனே அப்படிப்பட்ட ஒரே பக்தியுடனும் உண்மையுடனும் அவன் பக்கல் திரும்பி நின்று அவனது கருணைப்பெருங் கடலிலேயே கணக்கில்லாது மூழ்கி யிருப்பாராயின், அப்பொழுதுதான் தெய்வ மனிதர்களென்னும் தேவனடியாராக முற்றமுற்ற மாறிவிடுகிறார்கள். ஆனால், நம்முடைய இச்சைகளின்மீதும் ஆசைகளின்மீதும் முழுமரணமும் சம்பவித்தா லல்லாமல் அதற்குமுன் அந்த

உயிருள்ள தெய்வத்தை உண்மையாகவே ஒருபோதும் கண்டு கொள்வது முடியாதென்பதே மெய்யான அனுபவமாகும். என்று முதல் நம்முடைய இகலோக வாழ்க்கையின் மீது நமக்கு மரணம் சம்பவிக்கின்றதோ, அன்று முதலே நமது பாரமார்த்திகத் துறைக்குரிய ஆத்மார்த்த ஞானமும் உதயமாயிற் றென்று செப்பலாம். நம்முடைய புறக்கண்கள் மூடப் பட்டா லல்லாமல் அகக்கண் திறப்பதில்லை; என்னெனின், பஞ்சேந்திரியங்களின் சக்திகளெல்லாம் நமக்குள் ஒடுங்கினால் மட்டுமே அதன் அந்தக்கரணம் ஞானோதயம் அரும்பப் பெறுகின்றது; ஆண்டவனுடைய கரத்தின்கீழ் நாம் மரணமடைந்தாலல்லாது அகக்கண் ஞானத்தின் ஒளியைப் பெறுவது இயலாது. நம்முடைய வதனமானது ஆண்டவனின் சன்னிதானத்தை நோக்கித் திருப்பப்பட்டா லல்லாமல் நாம் நமது வழியில் குறுக்கிடும் இடையூறுகளையும் இடுக்கண்களையும் மற்றும் பஞ்சேந்திரிய இச்சைகளையும் எதிர்த்துச் செல்வது முடியாது; அதற்குரிய துணிவொன்றே நம்பஞ்சேந்திரியங்களின் இச்சைகளை யெல்லாம் தாண்டிச் செல்லக்கூடிய தைரியத்தை நமக்குக் கொடுத்தளிக்கின்றது. بلى من أسلم وجهه لله وهو محسن "அவ்வாறில்லை! ஆயினும் எவரொருவர் அல்லா(ஹ்)வுக்கு முற்றமுற்றத் தலைசாய்த்து (மனிதர்களுக்கு) நன்மை செய்கிறவரா யிருக்கின்றாரோ, அவரே நன்மை செய்யக் கூடியவரா யிருக்கின்றார்."—(2:112) என்னும் திருவாக்கியமும் அதைத்தான் சுட்டிக் காட்டுகின்றது. அஃதாவது, நாம் நமது முயற்சியில் ஆண்டவைக்கு முற்றமுற்ற நமது சென்னியைத் தாழ்த்தி விடுதல் வேண்டும். நம்முடைய எல்லா இந்திரியங்களும்,

நமக்குரிய எல்லாவிதமான சக்திகளும் சாமர்த்தியங்களும் முற்ற முற்ற ஆண்டவனுக்கே கீழ்ப்படிந்து, நமது ஜீவித வாழ்க்கையும் சாகின்ற மரணமும் அந்த ஆண்டகையின் திருப்திக்காகவே யல்லாமல் வேறொன்றுக்காகவும் இருப்பதில்லை யென்னும் அப்படிப்பட்ட உன்னத உயரிய நிலையை அடைந்தாலல்லாமல் இப்படிப்பட்ட மேன்மையைப் பெற்றுக்கொள்வது முடியாது. இக் காரணத்தினாலேதான், قل إن صلاتي ونسكي ومحياي ومماتي لله رب العالمين "சொல்வீராக: என்னுடைய தொழுகையும், என் வணக்கமும், என் வாழ்க்கையும், என் மரணமும், எல்லாம் அந்த உலக ரக்ஷகனான ஆண்டவன் ஒருவனுக்காகவே அமைந் திருக்கின்றன"—(6:163) என்று கூறும்படி அந்த ஆண்டவனே நமக்குக் கட்டளை யிட்டிருக்கிறான். ஆண்டவன் மீதுள்ள அடியானின் பக்தியானது அளவு கடந் தெழுந்து, அவனுடைய வாழ்க்கையும் மரணமுங்கூட அந்த ஆண்டவனுக்காகவே யல்லாமல் மற்றொரு விதத்திலும் தனக்குச் சொந்தமல்லாமல் போகும் காலத்திலேதான், தன்மாட்டு அன்புள்ள அடியார்மாட்டு அருள் பாலிக்கும் ஆண்டவனும் அவ்வடியான்மீது வழக்கப் பிரகாரம் தனது அன்பு மயமான அருள் நிறைந்த கருணைமாரியைக் கணக்கில்லாது சொரியத்தலைப்படுகிறான். இப்படிப்பட்ட அடியானின் பக்தியாலும், ஆண்டானின் அருளினாலும் மிசிரமாய் வெளிப்படும் ஐக்கியத்தினின்றும் தலைகாட்டும் ஜோதியானது இத்தகையின தென்பதை இவ்வுலகத்தையே பற்றிக்கொண்டு கிடக்கும் சாதாரண மக்களால் ஒருசிறிதும் கண்டு கொள்வதும் அல்லது உணர்ந்து கொள்வதும் முடியாது; இத்தரணியின் எல்லைக்கு மேல் ஏறி நின்றவர்க்கே அப்படிப்பட்ட ஞானஜோதிவெளிப்படுதல்கூடும்.

அத்தகைய உத்தமோத்தம மகாபுருஷ மண்டலேசுவரர்களின்
உண்மையான உயரிய சிரேஷ்டத்தை ஒரு சிறிதும் அறிந்து
கொள்ள முடியாமையினாலேயே, இவ்வுலகத்தையே சதமெனப்
பற்றிக்கொண்டு குப்புற்றுக்கிடக்கும் சாதாரண மக்களால் அத்
தகையினோராகிய அளவிறந்த மகான்களும் மகாத்மாக்களும்
அனாவசியமாகவும் அக்கிரமமாகவும் கொல்லப்பட் டிருக்கிறார்
கள். இத்தரணியையே கௌவிக்கொண்டு கிடப்போருக்கு அந்
தச் [illegible] சிற் பறக்கும் செவ்விய தாசர்களின் பெருமையை எவ்
[illegible] ணர்ந்துகொள்ளுதல் சாலும்? அவ்விதமான உத்த
[illegible] பக்திமான்களை யெல்லாம் பேராசை பிடித்தோ
[illegible]ம், ஏமாற்றத்துக்குரியவ ரென்றுமே இம் மண்ணுலகத்
[illegible] தீர்மானித்தனர். ஏனெனின், இம் மண்ணுலகானது
அவ்விண்ணுலக வாசிகளின் உண்மையான உயரிய ஜோதியை
ஒரு சிறிதும் உணர்ந்து கொள்ள முடியாமல் தத்த
ளித்து நிற்கின்றது. இதைப்பற்றிக் :குர்ஆன் ஷரீ‘பானது
இவ்வுலகமாக்களுக்கு அமையப் பெறாத ஆத்மஞானக் குருட்
டுத்தனத்தை இவ்வாறு கண்டித்திருக்கிறது: يَنظُرُونَ إِلَيْكَ وَهُمْ لَا يُبْصِرُونَ
"நன்னம்பிக்கையற்று நிராகரித்தவர்கள் உன்னை
நோக்கியே பார்க்கிறார்கள்; ஆயினும் அவர்கள் உன்னைப் பார்க்
காமலே யிருக்கின்றனர்"—(7:197).

சுருங்கச் சொல்லுமிடத்து, ஆண்டவனுடைய அனுக்
கிரகத்தால் ஞானஜோதியை அடைந்துவிடுங்கால் இவ்வுலகத்
திலுள்ள ஒரு மனிதன் தேவலோகசிருஷ்டி யேபோல் மாறி
விடுகிறான். இகலோகத்திலுள்ள அந்தப் பரலோக மனித
னுடன் சர்வவியாபியான அந்தர்யாமி சம்பாஷணை புரியத்
தலைப்பட்டுத் தனக்குச் சொந்தமான தெய்விக ஜோதி

யைக் கொண்டு அவ்வடியானைப் பிரகாசிக்கச் செய்கின்றான். தன்னுடைய தெய்விகத் தலைவனது கருணைமாரியால் கரை புரண் டோடப்பெற்ற ஹிருதயத்தையுடைய அவ்வடியானுடைய உள்ளமே ஆண்டவனுக்குரிய உறைவிடமாகவும், அவனுடைய மகாத்தியம் மிக்க பெருமைக்கெல்லாம் ஒரு சிம்மாசனமாகவும் அமைந்து விடுகின்றது. இத்தகைய பரிசுத்தத்துக்குரிய புதிய மாறுபாட்டை யடைந்து, அவ்வடியான் புனருத்தாரணம் பெற்று மேன்மையுற்ற நிமிடமுதல் ஆண்டவனும் அவனது பார்வையில் ஒருவகைப் புதிய உணர்ச்சியுடன்தான் காணப்படுகிறான். ஏனெனின், அதன் பின் ஆண்டவனுடைய சட்ட திட்டங்களும், அவன் தன்னை நடத்திவைக்கும் பான்மையும் முற்றமுற்றப் புதுமையாகவே காணப்படுகின்றன. ஆண்டகையேனும் அவனுடைய சட்ட திட்டங்களேனும் இப்பொழுது நூதனமாகப் புதியனவாய் மாறிவிட்டனவென்று எண்ணிவிட வேண்டாம்; ஆனால், அவ்வடியானது இப்புதிய அனுபவத்தில் அப்பழைய சட்டதிட்டங்களெல்லாம் புத்தப் புதியனவேபோல் காணப்படுகின்றன; மேலும் மற்ற மனிதர்களிடம் காணப்படும் தெய்விக சட்ட திட்டங்களுக்கும் மேற் கூறிய நல்லடியார்களின் முன் காணப்படும் அப்படிப்பட்ட சட்டதிட்டங்களுக்கும் அதிகமான வேறுபாடே காணப்படுதல்கூடும். அந்த மெய்யடியார்களின் உண்மை அனுபவத்தைப்போன்ற அனுபவம் ஒன்றையும் இத்தரணியின் மீதுள்ள எப்படிப்பட்ட உயர்தர ஞானமுள்ள புத்திசாலியும்(பலாஸிபரும்)அனுபவித்திருக்கமாட்டான். அத்தன்மைத்தாய மாறுதலைக்குறித்துத்தான் :குர்ஆன் ஷரீ'பிலுள்ள இந்தத்திருவாக்கியமானது பின்வருமாறு புகன்று நிற்கின்றது:

"மே وَمِنَ النَّاسِ مَن يَشْرِي نَفْسَهُ ابْتِغَاءَ مَرْضَاتِ اللَّهِ وَاللَّهُ رَءُوفٌ بِالْعِبَادِ
லும் மனிதர்களுள் (ஆண்டவனது இன்பசாகரத்தை நாடித் திரிவதில் தங்களையே முற்றமுற்றப் பரித்தியாகம் செய்து கொள்ளக் கூடிய அப்படிப்பட்ட) அடியார்களும் காணப்படுகிறார்கள்; இவர்கள் ஆண்டகையின் பேரின்பத்தை அடையும் பொருட்டுத் தங்களையே விற்றுவிடுகிறார்கள்; இவர்கள்தாம் ஆண்டவனுடைய அனுக்கிரகத்துக்கும் சுபசோபனத்துக்கும் அருகர்களாக விளங்காநிற்பர்"—(2:207).

இதுதான் ஆத்மஞானத்தின் அதி பக்குவமுள்ள அந்த உச்சஸ்தானத்தை அடைந்தவரின் நிலைமையாய்க் காணப்படாநின்றது. அவர்கள் ஆண்டவன் பாதையில் தங்களையே முற்ற முற்றத் தியாகம் பண்ணிக்கொள்ளுகிறார்கள். மேற்கூறிய திருவாக்கியத்தினால் ஆண்டவனுடைய அனுக்கிரகமும் கருணை மாரியும் அவ்வடியான்மீது சொரியப் படுகின்றன வென்று நன்கு தெரிந்துகொண்டோம். ஆதலின், அப்படிப் பட்டவன் எல்லாவிதமான துன்பங்களினின்றும் துயரங்களினின்றும் விடுவிக்கப்படுகிறான். அவன் ஆண்டவன் பாதையில் அவனது அனுக்கிரகத்தைப் பெறும்பொருட்டுத் தன்னையே முற்றும் தியாகம் செய்துகொள்வதனால் அத்தகைய தியாகத்தைக் கொண்டே தனக்கு அவ் வாண்டகையின்பாலுள்ள பிரத்தியேகமான பக்தி விசுவாசத்தை முழுதும் வெளிப்படுத்துகிறான். அவன் ஆண்டவனுக்குக் கீழ்ப்படியும் பொருட்டும், அவனுடைய படைப்புக்களிடத்து அபிமானத்துடன் நடந்துகொள்ளும் பொருட்டுமே யல்லாது மற்றெக்காரியத்துக்காகவும் தான் படைக்கப்பட வில்லை யென்று நன்குணர்ந்து கொள்ளுகிறான். எனவே, அவன் தன்னுடைய

விருப்பத்தையும் அபிப்பிராயத்தையும் ஆண்டவனது நாட்டத்துக்கு முற்றும் கீழ்ப்படியுமாறு செய்துகொண்டவுடன் அவ்வடியானது ஒவ்வோரு முயற்சியும் பரிசுத்தமான நன்மைகளைச் செய்வதிலேயே செலவு செய்யப்படுகிறது; அவன் நன்மையான காரியங்களைப் புரியத் தொடங்குங்கால் வெறும் சம்பிரதாயத்துக்குரிய ஐதிகத்துக்காக மட்டுமே செய்யத்துணிகிறனென்று எண்ணிவிடவேண்டாம்; அவன் தன்னுடைய ஒவ்வொரு காரியத்தையும் அதிக ஊக்கத்துடனும் உணர்ச்சியுடனும் அளவற்ற மனத்திருப்தியுடனுமேதான் செய்ய முற்படுகிறான். தன்னால் செய்யப்படும் பணிவச்ச மென்னும் முகம் பார்க்கும் கண்ணாடியில் தன்னுடைய எஜமானின் ரூபத்தையே நேரில் கண்டு நடப்பவனேபோல் அத்துணை பக்திவிசுவாசத்துடனே ஒவ்வொன்றையும் செய்து முடிக்கிறான்; தன் கண்முன் இருக்கும் தலைவனுக்கு அடங்கி நடப்பதேபோல்தான் தனது எல்லாக் காரியத்திலும் அளவுகடந்த அச்சத்துடனும் பணிவுடனும் நடந்துகொள்ளுகிறான். அதன் பின் ஆண்டவன் நாட்டமே அவ்வடியானின் நாட்டமாக மாறிவிடுகின்றது; ஆதலின், அந்த ஆண்டவனுக்கு முற்றும் அடிபணிந்து நடப்பதையே அவ்வடியானும் தனக்குரிய ஒரே நோக்கமாகக் கொண்டுவிடுகிறான். அவன் நன்மையான கருமங்களைப் புரியுங்கால் அவற்றின் நன்மைக்காகவே அவ்வாறு செய்யத் துணிவதில்லை; ஆனால், அவனது இயற்கையே அப்படிப்பட்ட மார்க்கத்தில் ஈர்க்கப்படுகின்றது. அவ்வாறு நற்கருமங்களைப் புரிவதிலேயே தன்னுடைய மகோன்னத இன்பத்தையும் மகா மேலான பேரானந்தத்தையும் பெற்றுக் கொள்ளுகிறான். இதுதான் அத்தகைய ஆத்மார்த்த சுகிர்தம்

நிறைந்த அடியானுக் களிக்கப்படும் பூலோக சுவர்க்கமாய்க் காணப்படா நின்றது. ஆதலின், மறுஉலக வாழ்க்கையில் அவனுக்குக் கிடைப்பதாய்க் கூறப்படும் அந்த ஆத்மார்த்த சுவர்க்கானந்தமென்பது இந்தப்பூலோகசுவர்க்கத்தின் மற்றோர்அம்சமாகவே இதன் சாயலாய்க் காணப்படுகின்றது. அவ்வடியான் இத்தரணியின்மீது அனுபவிக்கும் ஆத்மார்த்த சுகானந்தங்களெல்லாம் ஒன்றாகத் திரண்டுருண்டு அப் பரலோக வாழ்க்கையில் ஒருவகைப் பிரதிபிம்பமேபோல் மாறி ஒருவகை மெய்யான ஸ்வரூபத்தைப் பெற்றுக்கொண்டு பஹிரங்கமாக வெளிக்கிளம்பி விடுகின்றன.

இதைப்பற்றியே நமது திருமறையானது பின்வருமாறு தன்னகத்தே கூறியிருக்கின்றது: ولمن خاف مقام ربه جنتان + وسقاهم ربهم شرابا طهورا ÷ ان الابرار يشربون من كاس كان مزاجها كافورا عينا يشرب بها عباد الله يفجرونها تفجيرا + ويسقون فيها كاسا كان مزاجها زنجبيلا عينا فيها تسمى سلسبيلا . انا اعتدنا للكفرين سلاسلا واغلالا وسعيرا ÷ ومن كان في هذه اعمى فهو في الاخرة اعمى واضل سبيلا "மேலும் தன்னுடைய தலைவனிடம் அச்சத்துடன் நடந்துகொண்டு, அவனுடைய பெருந்தகைமை யென்னும் திவ்ய மகாத்தியத்தின் முன் மிக்க பணிவச்சத்துடன் நிற்பவனுக்கு இருவகைச் சுவர்க்கங்கள் கொடுக்கப்படும்; ஒன்று இவ்வுலக வாழ்க்கையிலும், மற்றொன்று மறுவுலக வாழ்க்கையிலும் அளிக்கப்படும்—" (55:46). "ஆண்டகையின் பெருந் தகைமையைப் பற்றித் தியானம்புரிவதிலேயே தங்களை அர்ப்பணம் செய்து கொண்டவர்களுக்கு அவர்களுடைய தலைவன் அவர்கள் ஹிருதயங்களையும், அவர்

கள் எண்ணங்களையும், அவர்கள் நாட்டங்களையும் பரிசுத்த மாக்குதற்குரிய ஒருவகைப் பானத்தைக் கொடுக்கின்றான்"— (76:21). "நிச்சயமாகவே அத்தகைய சன்மார்க்கர்கள் கற்பூரத் தால் (கா'பூர்) மிசிரமாக்கப்பட்ட ஒருவகைப் பானகத்தைப் பருகுகிறார்கள்; அவர்கள் தங்களுடைய சொந்தக் கரங்களினா லேயே பீறிட்டு ஓடும்படி செய்துகொண்ட ஒருவகை ஊற்றி னின்றும் பருகுகிறார்கள்" — (76 : 5,6). மேற்கூறிய நீதி மான்களின் நிலைமையைக் குறித்துப் பேசப்படுங்கால், அத் திரு வாக்கியத்தில் கா'பூர் என்னும் பதம் உபயோகிக்கப் பட்டிருக்கிறது; கா'பூர் என்பதன் மூலப்பதமாகிய (கு'ப்ர்) كفر என்பது 'மூடுதல்' அல்லது 'அழுத்தல்' என்பதைக்குறிக் கும். எனவே, இவ்வுலக சம்பந்தமான எல்லாவித இச்சை களையும் அடியோடு ஒழிப்பதை அது குறிக்கும் ; ஆண்டவனு டைய அருள்மயமான பானத்தினின்றும் ஒருசிறிதே பருகிய அடியான் தன்னுடைய உலக இன்பங்களை யெல்லாம், மற் றெல்லாப் பற்றுக்களுடன்கூட அடியோடு வெறுத்து, அவ் வாண்டவையின் நாட்டத்தின் முன் தன்னை முற்றிலும் பணியக் கிடத்தி விடுகிறான் ; அவன் வேறு எத்தகைய தொடர்புகளினின்றும் உண்மையாகவே தன்னை விடுவித்துக் கொண்டு பரிபூரண சுவர்க்கானந்தத்துள் முற்ற முற்ற மூழ்கி விடுகிறான்.

உண்மையிலே அவாவென்பது அந்தக்கரணத்தி னின் றுமேதான் ஜனித்து வளர்கின்றது. ஆதலின், நம்முடைய ஹிருதயத்தை எல்லாவிதமான தீய எண்ணங்களினின்றும் நெடுந்தூரத்தில் விலக்கிவைத்துக் கொள்வோமாயின், அதன் பின் அவாவென்னும் பேராசையானது சிறுகச் சிறுகக்

குறைந்து கொண்டே வந்து இறுதியிலே அடியோடு நசித்து விடுகின்றது. ஆண்டவன் பாதையிலே அடியா னொருவன் எத்துணைக்கெத்துணை நெருங்குகிறானோ அத்துணைக்கத்துணை அவன் தன்னுடைய ஐம்புல ஆசைகளினின்றும் அதிகதூரம் அகன்றுவிடுகிறான். ஆதலின், தங்களுடைய உதவிக்காக ஆண்டவன்மீதே முழுதும் சார்ந்திருக்கும் அத்தகைய சன் மார்க்க நெறியுள்ளோர் இவ்வுலக சம்பந்தமான துராசைகளி னின்றும் தங்கள் ஹிருதயங்களை முற்றும் பரிசுத்தமாக்கிக் கொள்ளுகிறார்கள். எனவே, பூலோக சம்பந்தமான எல்லா விதப் பஞ்சேந்திரிய இச்சைகளும் அந்தக் கா'பூர் என்னும் கற்பூரதிரவத்தால் முழுதும் விஷச் சக்தியேபோல் அழுத்தி வைக்கப்படுகின்றன.

மேற்கூறிய திருவாக்கியமானது மேலும் சென்று கூறு கின்றதாவது: "(அவர்கள் கா'பூருடன் மிசிரமாக்கப்பட்ட பானகத்தைப் பருகியபின்) 'ஜஞ்ஜபீ'ல் (இஞ்சி) என்னும் சரக் கால் மிசிர மாக்கப்பட்ட மற்றொரு பானத்தை, ஸல்ஸபீ'ல் என்னும் ஊற்றினின்று பருகும்படி செய்யப்படுகிறார்கள்"—(76: 17,18). இத் திருவாக்கியத்திலுள்ள 'ஜஞ்ஜபீ'ல் என் னும் பதத்தைக் குறித்து ஈண்டு ஒருசிறிது விவரம் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். 'ஜஞ்ஜபீ'ல் என்பது 'ஜனு என்ப தும் ஜப'ல் என்பதும் சேர்ந்து பிறந்த கூட்டுச் சொல்லாகும். இவற்றுள் 'ஜனு என்பதன் சார்பான பொருளானது 'மேலே ஏறுதல்' என்பதையும், ஜப'ல் என்பது 'மலை' என்பதையும் குறித்துக் காட்டும். எனவே, 'ஜஞ்ஜபீ'ல் என்னும் கூட்டு மொழியானது 'மலைமீது ஏறினான்' என்று கருத்துக்கொள் ளும். விஷ சம்பந்தமான வியாதிகளால் தாக்கப்பட்ட

மனிதனொருவனை வியாதியினின்றும் வெளிப்படுத்தியபின், பூரண தேகாரோக்கிய நிலைமைக்குக் கொண்டுவர வேண்டு மாயின், அவனுக்குச் செய்யவேண்டுவன இரண்டு காரி யங்களாகும்: முதன்முதலில் அவனது வியாதியில் காணப் படும் விஷ சம்பந்தமான கிருமிக ளனைத்தும் அடியோடு நாசமாக்கப்படுதல் வேண்டும். உடனே அவ்வியாதியின் கொடுமை மட்டுப்பட்டு, அவனது உயிரைப் பயமுறுத் தாட்டிய அபாயமும் வழி விலகிச் செல்கின்றது. ஆனால், அவ்வியாதியால் ஏற்பட்டிருக்கும் பலஹீனமென்பது மட்டும் இந்த விஷக் கிருமிகளின் மரணத்துடனே தீர்ந்து விடுவ தில்லை. அவ்வியாதியஸ்தன் மரணத்தினின்றும் தப்பிக் கொண்டபோதினும் பூரண தேகாரோக்கிய ஸ்திதிக்குக் கொண்டு வரப்பட்டா லல்லாது, அவன் முழுதும் நல்ல நிலை மைக்கு வந்துவிட்டானென்று கூறுவது முடியாது. அவன் மரணத்தினின்றும் தப்பிக்கொண்டான்; ஆனால், இன்னம் பலஹீனத்தினின்றும் விடுபடாமல் தட்டுத்தடுமாறிக் கீழே வீழப்பார்க்கிறான். எனவே, அவன்பாலிருந்த வியாதிக்குரிய விஷக் கிருமிகளை ஒழிப்பது முதற்படியாகும்; பிறகு அவ னுடைய பலஹீனத்தை யெல்லாம் போக்கிப் பூர்வ சுகத் துக்குக் கொண்டுவருவது இரண்டாவது படியாகும். அதன் பிறகுதான் அவனது சரீரம் மிகப் பலத்துடனே பூரண சுகத் துக்குத் திரும்புகின்றது. பிறகு ஒரே சமமான தரைமீது மட்டும் பலமான கால்களுடனே அவன் நடத்தற்குரிய சக்தி யையும் சாமர்த்தியத்தையும் பெற்றுக்கொள்வ தல்லாமல், செங்குத்தான மலைகளின்மீதும் எவ்வகை அச்சமுமில்லாமல் அதிக சந்தோஷத்துடன் ஏறிச் செல்லக்கூடிய சாமர்த்தி

யத்தையும் பெற்றுவிடுகிறான். இதைத்தான் அடியான் தன்னுடைய ஆத்மார்த்த நிலையின் மூன்றாவது படித்தரத்தில் பெற்றுக்கொள்ளுகிறான். இத்தகைய நிலைமையைப் பற்றிப் பேசப் புகும்போதுதான் அந்த ஆண்டவன் தன்னுடைய சன்மார்க்க நெறியொழுகும் நல்லடியார்களுக்கு 'ஜஞ்ஜபீ'லின் கலப்பையுடைய பானகத்தைப் பருகக் கொடுக்கின்றான். முதன்முதலில் கற்பூரதிரவத்தால் விஷக் கிருமிகளையெல்லாம் ஒழித்துக்கொண்ட நல்லடியார்கள், பிறகு 'ஜஞ்ஜபீ'லின் பானத்தைக் கொண்டு தங்கள் பலத்தை விருத்தி செய்து கொள்ளுகிறார்கள். அதன்பின் அத்தகைய நல்லோர்கள் முழு ஆத்மார்த்த பரிபக்குவத்தையும் அடைந்து கொண்டபின் அந்தப் பாரமார்த்திகத்துக்குரிய எல்லாவிதச் செங்குத்தான கற்பாறைகளின்மீதும் நேரே ஏறிச்செல்லத்தக்க தைரியத்தையும் தாருட்யத்தையும் பெற்றுக்கொள்ளுகிறார்கள்; ஆத்ம சூன்யமான மற்றெவராலும் முடித்தற்கரிய எத்தகைய அருமையான காரியங்களையும் அவர்கள் சாதித்து விடுகிறார்கள். அதுவேயுமன்றி, தங்கள் தலைவனுக்குரிய பாதையிலே மற்றெல்லோரும் கண்டு ஆச்சரியம் கொள்ளும்படியான அத்துணைப் பெரிய அரிய தியாகங்களை யெல்லாம் அளவற்ற சந்தோஷத்துடனே செய்து முடிக்கத் துணிந்துவிடுகிறார்கள்.

இவ்விஷயத்தைப் பற்றி நாம் வைத்திய முறைமையின்படி வியவகரிக்கும்போது, 'ஜஞ்ஜபீ'ல் அல்லது இஞ்சிவேர் என்பது உடம்பிலுள்ள இயற்கையான உஷ்ணத்தை அதிகப்படுத்தக்கூடிய ஒருவகை உபயோக முள்ள உயரிய மருந்தா யிருக்கிற தென்பதை ஒருபோதும் மறந்துவிடுதல் கூடாது. அன்றியும், இது வயிற்றுப்போக்கையும் போக்கி

விடுகிறது. இச்சரக்குக்கு அரபு பாஷையில் கொடுக்கப் பட்டிருக்கும் நாமதேயமே இப்படிப்பட்ட பிரயோஜன கரமான குணத்தை அந்த இஞ்சிவேர் அடைந்திருக்கிற தென்பதை நன்கறிவித்துக் காட்டுகின்றது; எவ்வாறெனின், செங்குத்தான மலைகளின் மீதெல்லாம் ஏறித்திரிதற்குவேண் டிய தைரியத்தை ஊட்டுவதனால், எப்படிப்பட்ட பலஹீன முற்ற சரீரத்துக்கும் அந்த மருந்தானது இயற்கைப் பலத் தைக் கொடுத்து, அதற்கு வேண்டிய உஷ்ணத்தையும் அதிகப் படுத்துகின்றது. கா'பூர் என்பதும் 'ஜஞ்ஜபீ'ல் என்பதும் பிரஸ்தாபிக்கப் பட்டிருக்கின்ற அந்த இரண்டு திருவாக்கியங்க ளும், இவ்வுலக இச்சை யென்னும் அடிமைத்தனத்தின் கீழ் அகப்பட்டுக்கொண்டு அவஸ்தையுறுகின்ற மானிடத்தன் மையை நல்லொழுக்கமும் நற் சீலமும் நிரம்பப்பெற்ற உன் னத ஸ்தானத்தின் மீது உயர்த்தி வைக்கக்கூடிய இரண்டு வித மான ஆன்ம நிலைகளைப் பற்றி நமக்கு ஞாபக மூட்டுகின்றன. மனிதன் மேலே எழும்பொருட்டு முதன் முதலில் பிரயத்த னப் பட்டவுடனே அவன்பால் காணப்படக்கூடிய அந்த நிலை மையில் அவன் உள்ளத்திலுள்ள எல்லா விதமான விஷக் கலப்புள்ள கெட்ட வஸ்துக்களும் ஒழிக்கப் படுகின்றன ; அப் பொழுது இச்சைகளின் வெள்ளமும் தானே தணியத் தலைப் படுகின்றது. இப்படிப்பட்ட முதல் நிலைமையைக் கா'பூர் நிலையென்று நாம் வருணிக்கலாம்; ஏனெனின், இந்த நிலைமை யில், கா'பூர் என்பது விஷசம்பந்தமான கொடிய தன்மையை மாற்றிவிடுவதேபோல், ஆத்மாவின் சார்பான விஷங்களெல் லாம் ஒருவாறு இதனால் மாற்றி ஒழிக்கப்படுகின்றன. ஆனால், அதன்பின் தோன்றக்கூடிய எல்லாவிதமான கஷ்டங்களையும்

தாண்டிச் செல்லுதற்குரிய பலம் முழுதும் இந்த இரண்டா வது நிலைமையிலேதான் உற்பத்தி யாகின்றது; இக்காரணத்தி ஞல்தான் இதற்கு 'ஜஞ்ஜபீ'யின் (அல்லது பலங்கொடுக்கும்) நிலைமை யென்று பெயரிட் டிருக்கின்றோம். ஆத்மார்த்தத் துறையில் அவ்வாத்மாவுக் குரிய பலங்கொடுக்கும் மருந்தாகிய 'ஜஞ்ஜபீ'ல் என்பது, ஆன்மாவுக்கு நல்லவிதமான போஷணை யைக் கொடுக்கக்கூடிய ஆண்டகையின் அழகும் பெருமையு மாகவே வெளிப்படுகின்றது. இத்தகைய ஞானவெளிப் பாட்டைப் பெற்றுக்கொண்ட அடியான் எப்படிப்பட்ட கடுஞ் சுரமாகிய வெப்பம் நிறைந்த பாலை வனங்களையும் கடந்து சென்று, ஒவ்வொரு நல்லடியானும் அடைதற்குரிய அந்த உன்னத ஸ்தானத்திலுள்ள இலக்ஷியத்தைப் பெற்றுக்கொள் ளுதற்கு வேண்டிய செங்குத்தான மலைமீதெல்லாம் ஏறிச் செல்லுதற்குரிய ஆத்ம வன்மையை அடைந்து விடுகிறுன். அதன்பின் அவனுல் தியாகம் செய்யப்படக்கூடிய சுயநயப் பரித்தியாகங்களின் மகாஆச்சரியகரமான செய்கைகளை யெல் லாம் கண்டு, ஆண்டவனது அருளைப் பெறுத சாதாரண மனிதனொருவன் ஏக்கத்தினுல் ஒன்றும் புலப்படாமல் இறும் பூதெய்தி நிற்கிறுன். இப்படிப்பட்ட இரண்டுவிதமான ஆத் மார்த்த நிலைகளையும் சாதாரண மக்களுக்கு அறிவிக்கும் பொருட்டே நம் :குர்ஆன் ஷரீ'பில் இரண்டுவிதமான வார்த் தைகள் உபயோகிக்கப்பட் டிருக்கின்றன. அவையாவன: கா'பூர் அல்லது விஷக் கலப்புள்ள பொருள்களை யெல்லாம் முறிக்கக்கூடியது. 'ஜஞ்ஜபீ'ல் அல்லது எல்லா விதமான கஷ்டங்களையும் தாண்டிச்சென்று செங்குத்தான மலைகளின் மீதும் ஏறிச் செல்லக்கூடிய தாருட்யத்தைத் தரக்கூடியது.

மேற்கூறிய திருவாக்கியங்கள் இன்னமும் இவ்வாறு கூறியிருக்கின்றன: "நிச்சயமாகவே உண்மையை ஒத்துக் கொள்ள மறுத்தவர்களுக்காகச் சங்கிலிகளும் காரைகளும் எரிகின்ற அக்கினியும் தையார் செய்திருக்கின்றோம்"-(76:4). இத் திருவாக்கியத்திலிருந்து, உண்மையை உணரவேண்டுமென்னும் உள்ளெண்ணத்துடனே ஆண்டவனை அறியத் திரும்பாதவர்களுக்கு, அந்த ஆண்டவையின் சட்டங்களைக் கொண்டே அவர்களுக்குவேண்டிய தண்டனையானது கொடுக்கப் படுமென்பதை அறிந்துகொள்ளுகிறோம். அவர்கள் தங்களுடைய உலக காரியங்களுள் அகப்பட்டுக்கொண்டு அவஸ்தைப்படுங்கால், தங்களுடைய அடியை அப்பால் இப்பால் எடுத்துவைக்க முடியாது அவையே அத்துணைப் பலமான சங்கிலிகளாக அமைந்து விடுகின்றன; அவர்கள் இவ்வுலக காரியமான இழிய விஷயங்களில் அதிகதூரம் ஆழ்ந்து தாழ்ந்து கிடப்பதனால் தங்களுடைய சிரங்களை ஆகாயத்தை நோக்கி அண்ணாத்த முடியாவண்ணம் அக்காரியங்களே அன்னவரின் கழுத்தைச் சுற்றியுள்ள காரைகளாக மாறிவிடுகின்றன; அவர்களுடைய ஹிருதயங்களும் உலக இச்சையான பேராசையினாலே தணல் விட்டு எரிய ஆரம்பிக்கின்றன. சித்தவிகாரமான எண்ணங்களும், ஐசுவரிய சம்பந்தமான ஆவல்களும் தங்களுக்கு எதிரியாய் விளங்கும் மனிதர்களைத் தோற்கடிக்க வேண்டுமென்னும் பேராசையைக் கிளப்பி அவர்களுடைய அந்தரங்க அக்கினியை அதிகம் மூட்டிவிடுகின்றன. அடியார்கள் தங்களுடைய கீழ்மையான எண்ணங்களுள் தாழ்ந்து போய் ஆத்மார்த்தத்திற் குரிய மேலான உயரிய நடத்தைகளில் ஈடுபட முன்வராததனால், ஆண்டவன் சங்கிலிகளும்

காரைகளும் அக்கினிகளுமாகிய மூவகைத் தொந்தரைகளை அவர்களுக்குரிய இடைவிடாத தோழர்களாக அமைத்து விடுகிறான். மேற்கூறிய ஆயத்தில் மற்றொருவிதமான குறிப்பும் தொனிக்காமலில்லை: அடியான் இழைக்கும் ஒவ்வொரு செய்கைக்கும் பொருத்தமான மற்றோர் எதிர்காரியத்தை ஆண்டவன் அமைத்து வைக்கிறான். உதாஹரணமாக, அடியான் தன்னுடைய அறையின் கதவுகளையெல்லாம் இறுகச் சார்த்திக்கொள்வானாயின், அதன்பின் அக் காரியத்தின் பயனாக விளையும் இருளென்பது அந்த ஆண்டவனாலேயே உண்டுபண்ணப் படுகின்றது. என்னெனின், நம்முடைய சிலவிதமான செய்கைகளின் இயற்கையான முடிபுகளென்று கூறப்படுவன வெல்லாம் உண்மையிலே ஆண்டவனுடைய காரியங்களாகவே காணப்படுகின்றன ; இன்னமும், எல்லா விதமான காரணங்களுக்கும் மூல முதற் காரணமாய் விளங்குபவன் அவ்விறைவனாகவே அமைந்திருக்கிறான். ஒரு மனிதன் பாஷாணத்தைச் சுயமே உட்கொண்டு விடுகிறான் ; அஃது அவனுடைய சொந்தக் காரியமே யாயினும், அதன் காரணமாக இறுதியில் விளையும் மரணமானது ஆண்டவனால் அனுப்பப்படும் ஒரு சிக்ஷையாகவே காணப்படுகிறது. ஸ்தூல சம்பந்தமான இப்பஹிரங்க உலகில் காணப்படும் சட்டமுறைகளே ஸூக்ஷ்ம சம்பந்தமான அவ்வந்தரங்க உலகிலும் அமைந்திருக்கின்றன: ஒரு செய்கையின் காரியமாய் அதற்குரிய முடிவானது வெளியுலகில் வந்து விளைவதே போலத்தான் அவ்வான்ம உலகிலும் ஒவ்வொரு செய்கைக்குமுரிய பலாபலன்கள் அத்தியாவசியமாக வந்து மூண்டு கொண்டே யிருக்கின்றன. இவ்விதமான இயற்கைச் சட்டத்

தைக் குறித்து நம் பரிசுத்தக் :குர்ஆன்ஷரீ‘பும் பின்வருமாறு இரண்டிடங்களில் வருணித் திருக்கின்றது: والذين جاهدوا فينا لنهدينهم سبلنا + "தங்களால் இயன்ற மட்டும் நம்மை அடைதற்குப் பெரு முயற்சி எடுத்துக்கொண்டவர்களுக்கு நாமும் அவர்களுடைய செய்கைகளின் அவசியமான முடிபாகவே நம்முடைய நேர்வழிகளில் சீராகச் செலுத்தி வைப்போம்"—(29: 69). ஆனால், فلما زاغوا ازاغ الله قلوبهم "வழிவிலகிச் சென்று நேர்வழியில் நடந்து செல்லாதவர்கள்" இங்கிருப்பார்களாயின், "நாமும் அவர்களுடைய ஹிருதயங்களை உண்மையான கடமையினின்றும் வழிவிலகிச் செல்லும்படியே செய்துவிடுகிறோம்"—(61:5). இவ்விஷயம் இன்னம் நன்றாக அடியிற் காணுமாறு :குர்ஆன் ஷரீ‘பில் முன்னமே கூறப்பட்டுள்ள ஆயத்தில் குறிப்பிடப்பட் டிருக்கின்றது: من كان في هذه اعمى فهو في الاخرة اعمى واضل سبيلا "இவ்வுலகில் குருடாயிருப்பவன் அவ்வுலகிலும் குருடாகவே யிருப்பான்; இல்லை! குருடனைக் காட்டினும் இழிந்தவனா யிருப்பான்"—(17:72). இத் திருவாக்கியத்திலிருந்து நாம் ஒரு விஷயத்தை நன்கு அறிந்துகொண் டிருக்கிறோம்: அஃதாவது, ஸன்மார்க்க ஒழுக்க முடையவர்கள் இவ்வுலக வாழ்க்கையிலேயே ஆண்டவனுடைய காட்சியைப் பெற்றுக் கொள்ளுகிறார்கள்; ஆகலின், ஆண்டகையின் தரிசனமும் அடியானுக்கு இப்பூமியின் கண்ணேயே கிட்டிவிடுகின்றது. ஆண்டவன் தனக்குரிய எல்லாவிதமான மாட்சிமைகளுடனும் மஹாத்மியங்களுடனும் அவ்வடியான் முன் தோன்றுகிறான். சுருங்கச் சொல்லுமிடத்து, அவ்வான்ம உலகுக்கு வேண்டிய சுவர்க்க வாழ்க்கை யென்

பது இவ்வுலக வாழ்க்கையிலேயே நிதரிசனமாக உண்டாய் விடுகின்றது. இவ்வாறே அவ்வுலகுக்கு வேண்டிய நரகத் தீயின் அஸ்திபாரமும் இவ்வுலகத்தின் தீய காரியங்களிலே அமைக்கப் பட்டிருக்கிறது; இவ்வுலகவாழ்க்கையில் குருட்டுத் தனத்தை யுடைய, பாரமார்த்திகத் துறையில் இறங்கத் தவறியவர்களுக்கு அளிக்கப்பட வேண்டிய நரகத்தீயானது இவ்விடத்திலேயே பற்றிக்கொள்ளுகிறது.

இதைப்பற்றிய மற்ருெரு திருவாக்கியத்தில் பின்வருமாறு ஒரு விஷயம் காணப்படா நின்றது: وبشرالذين آمنوا وعملوا الصالحات ان لهم جنات تجری من تحتها الانهار "நன்னம்பிக்கைகொண்டு நன்மையான காரியங்களைச் செய்பவர்கள் அடிப்புறமாய் நீரருவிகள் ஓடப்பெற்ற உத்தியான வனங்களைப் பெற்றுக் கொள்வார்க ளென்று அவர்களுக்குச் சுபசெய்தி அறிவிப்பீராக"—(2:25). இவ்வாக்கியத்தில், ஆண்டவன் நன்னம்பிக்கையை நீரருவிகள் ஓடப்பெற்ற உய்யானத்துக்கே ஒப்பிட்டிருக்கிருன். இத் திருவாக்கியத்திலுள்ள வசனங்கள் அடியார்களின் நன்னம்பிக்கைக்கும் அவர்களுடைய நற்செய்கைகளுக்கும் இடையிலுள்ள ஓர் ஆழ்ந்த இரகசியமான தொடர்பையே விளக்கிக் காட்டுகின்றன. எவ்வாறெனின், மரங்கள் நீர் பாய்ச்சப் பெருவிடின் உலர்ந்து போவதேபோல் நன்னம்பிக்கை யென்பது நற்செய்கைக ளென்னும் நீரைப் பெற்றுக்கொள்ளாவிடின் வாடி வதங்கி உலர்ந்துபோகின்றது. எனவே, செய்கையில் கொண்டுவரப்படாத வெறும்நம்பிக்கையானது பிரயோஜனமற்றதாகவே காணப்படுகிறது; இவ்வாறே நன்னம்பிக்கையால் தூண்டப்படாத நற்கருமங்களும் வெறும் வெளிவேஷமாகவே மாறிவிடுகின்றன. ஆதலின், இஸ்லாத்தில்

வரையப்பட்டிருக்கும் சுவர்க்கமென்பது இவ்வுலகத்தில் காணப்படும் நன்னம்பிக்கையினை யுடையதும் நற்செய்கை களை யுடையதுமான உயரிய வாழ்க்கையின் உண்மையான பிரதிபிம்பமாகவே அமைந்திருக்கிறது. எனவே, அவனவனுக் குரிய சுவர்க்கபோக மென்பது அவனவனுடைய இகலோக வாழ்க்கையின் பிரதிபிம்பமாகவே முற்றிலும் அமைந்திருக் கின்றது. இந்தச் சுவர்க்கமென்பது வெளியிலிருந்து வந்து குதிக்காமல் அடியானின் உள்ளுக்குள்ளிருந்தே உதித்து வரு கின்றது. அவனுடைய சொந்த நன்னம்பிக்கையும் சொந்த நற்செய்கைகளுமே திரண்டுருண்டு அவனுக்குரிய சுவர்க் கானந்தத்தை இழைக்கக் கூடியனவாக இருத்தலினால்தான் அவ்வடியான் அத்தகைய சுவர்க்கானந்தத்தின் முன்ருசியை இவ்வுலக வாழ்க்கையிலேயே அறிந்துகொள்ளுகிறா னென்று நமது திருமறையானது பன்முறையும் வற்புறுத்தி யிருக் கின்றது. நன்னம்பிக்கை யென்னும் விருக்ஷமும், நற்கரு மங்களென்னும் நீரருவிகளும் இவ்வுலக வாழ்க்கையிலேயே, அதிக ஸ்பஷ்டமாய்க் காணப்படாமற் போயினும், ஒருவாறு ஸூக்ஷ்மமாகவேனும் அறியக் கிடக்கின்றன வென்றே செப் பலாம்.

ஆனால், மறு உலகத்திலோ, அவற்றை இவ்வுலகத்தில் மறைத்து வைத்திருந்த திரைகளெல்லாம் நீக்கப்பட்டு விடு மாதலின், அவற்றின் இயற்கைத் தன்மையானது அதிக ஸ்பஷ்டமாகக் காணப்படும். ஆண்டவனது பரிபூரணத் திரு வேதத்தின் அந்தரங்கத் தாத்பரியத்தை ஆழஅறிந்துகொண்ட வர்கள், உண்மையான பரிசுத்தம் மிக்க உறுதியுள்ள பரி பூரண தெய்வ நம்பிக்கையும், அவனுடைய திருக் குணாதி

சயங்களும், அவனுடைய தெய்விக நாட்டமுமே நல்ல பல னைத் தரக்கூடிய சுவர்க்கத்தின் விருக்ஷங்களாகக் கருதப் படுகின்றன வென்று கருத்துக்கொண் டிருக்கிறார்கள்; அவ் வாறே அவ்வடியான் செய்துவரும் நற்கருமங்களே உண்மை யிலே அத்தோட்டத்தில் பாய்ந்துகொண்டு, அந்த மரங்க ளுக்கு உயிரையும் உயரிய பலனையும் கொடுக்கக்கூடிய நீரரு விகளாய்க் கருதப்படுகின்றன. இவ்விஷயமே :குர்ஆன் ஷரீ ‘பின் மற்றோரிடத்தில் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது: مثلا كلمة طيبة كشجرة طيبة اصلها ثابت وفرعها في السماء تؤتي أكلها كل حين "ஒவ்வொருவிதமான அதீதத்தினின்றும் தவறுதலி னின்றும் குறைபாட்டினின்றும் பொய்யினின்றும் பரிகாசத்தி னின்றும் நீங்கி யிருக்கக்கூடிய பரிசுத்தமான நல்லெண்ணங் குடிகொண்ட நல்வார்த்தை யென்பது, பூமியின் கீழ்ப் பலமாக ஊன்றப்பட்ட வேர்களையுடையதாயும், ஆகாயத்தை நோக்கி வளர்ந்திருக்கும் கிளைகளின்மீது எப்பொழுதுமே வறண்டுபோகாமல் பலனளித்துக்கொண் டிருக்கக்கூடிய பழங் களை யுடையதாயும் இருந்துவருகின்ற ஒரு நல்ல மரத்துக்கே நிகராகக் கருதப்படும்"—(14:24). உறுதியுள்ள நல்ல மனத் தினின்றும் வெளியாகும் ஒரு நல்ல வார்த்தையானது எப் பொழுதும் பலன்தரக்கூடிய ஒருநல்ல மரத்துக்கு ஒப்பிடப் பட்டிருக்கிறது; இதில் ஆண்டவன் மூன்று விதமான விஷ யங்களைக் குறிப்பிட்டுக் காட்டியிருக்கிறான்:

(1) அவ்விருக்ஷத்தின் வேரானது பூமியின்மீது நன்றா கப் பதிக்கப்பட் டிருத்தல் வேண்டும்; இதில்தான் அவ்விரு க்ஷத்தின் விசேஷ மனைத்தும் பொதிந்திருக்கிறது. இதுதான் அடியானின் உள்ளத்துக்கு ஒப்பாக்கப்பட்டிருக்கிறது. இவ்

வேரானது அதிக பலமாக ஊன்றி யிருக்கிறதென்பது, உறுதி யான உள்ளெண்ணத்தின் உண்மையுள்ள சத்தியத்தையும் அதன் தர்மத்தையும் அடியானின் மனச்சாக்ஷியானது இயற் கையாகவே ஏற்றுக்கொள்ளக்கூடிய ஆழத்தின் தன்மையைக் காட்டுகின்றது.

(2) இரண்டாவதாக அவ்விருக்ஷத்தின் கிளைகள் வானத்தை நோக்கி வளர்ந்திருக்கின்றன வென்பதன் தாத்பரி யம், அடியானின் பகுத்தறிவானது அவ்வுண்மையை ஒப்புக் கொண்டு, ஆண்டவனின் செய்கையா யிருத்தலினால் அவ னுடைய இயற்கைச் சட்டங்களனைத்தும் ஒன்றுக்கொன்று ஏறுமாறு யில்லாமல் பகுத்தறிவிற்கு முற்றும் பொருத்த மாகவே அமைக்கப்பட் டிருக்கின்றன வென்பதை அங்கீகரித் துக் கொள்வதைக் குறிக்கும். அஃதாவது, அதன் சத்தியத் தைப்பற்றிய தத்துவத்தை ஆராய்ச்சி செய்யப் புகுங்கால், அஃது இயற்கையின் சட்டங்களுக்கு முற்றிலும் ஒத்தவண்ண மாகவே அமைந்திருத்தல் வேண்டும்; அஃதாவது, அந்தக் காரண காரியப் பொருத்தங்களெல்லாம் வானத்தின்மீதே அமைந் திருப்பனவேபோல் அத்துணை நிராக்ஷேபகரமாய்க் காணப்படுதல் வேண்டும்.

(3) அவ்விருக்ஷத்தின் மற்றோர் அம்சம் யாதெனின், அஃது எக்காலத்திலும் ஓய்வில்லாமலே பலனளிக்கக் கூடிய தாக அமைந்திருக்கிறதென்பதுதான். அஃதாவது, அதன் ஆதிக்யமும் அனுக்கிரஹமும் ஒருபோதும் துண்டிக்கப்படுவ தில்லை; ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு தேசத்திலும் அதன் பலனானது பெறப்பட்டுக் கொண்டே வருகிறது. மற் றைச் சாதாரண விருக்ஷங்களேபோல் அவ்விருக்ஷத்தின் பலனு

னது ஒரு காலத்தில் மட்டுமே காணப்பட்டு, மற்றக் காலங்க ளில் காணப்படுவதில்லை யென்னும் குறைபாட்டுக்கு இடந் தருவதில்லை. :குர்ஆன் ஷரீ'பின் மற்றோரிடத்திலும் இவ்வாறு காணப்படுகிறது: ومثل كلمة خبيثة كشجرة خبيثة اجتثت من فوق الارض ما لها من قرار "கெட்ட வார்த்தையானது பூமியின் மேல்மட்டத்திலிருந்து பிடுங்கி எறியப்பட்ட ஒரு தீய விரு க்ஷத்துக்கே ஒப்பாக்கப்பட்டிருக்கிறது. (அஃதாவது, அது மனிதனுடைய இயற்கையாலும் மனச்சாக்ஷியாலும் ஒதுக் கப்பட் டிருக்கிறது;) ஆதலின், அம்மரம் சுயமே நிற்ப தற்குரிய பலத்தைப் பெறுவதில்லை. (அஃதாவது, நியாய வாதத்தாலேனும் தெய்வத்தின் இயற்கைச் சட்டங்களாலே னும் நிரூபிக்கப் படாமல் வெறும் சாரமற்ற வார்த்தைகளா கவும் பொய்யான கட்டுக் கதைகளாகவுமே காணப் படுகின் றன)"—(14: 26).

ஆதலின், :குர்ஆன் ஷரீ'பில் நல்ல பரிசுத்த வார்த்தைகள் இனிமையான பழங்களைத் தரக்கூடிய, அஃதாவது, திராக்ஷை மாதுளை முதலியவை போன்றவைகளை அளிக்கக்கூடிய நல்ல மரங்களுக்கு ஒப்பிடப்பட் டிருக்கின்றன. அஃதாவது, இவ் வுலக வாழ்க்கையில் ஆத்மார்த்தத் துறையில் அதி ஸூக்ஷ்ம மாக அனுபவிக்கப்படுகின்ற அப்படிப்பட்ட இன்பங்களே அவ்வுலகில் இவ்வாறு நல்ல இனிய பழங்களென்று வரு ணிக்கப்படுகின்றன. இவ்வண்ணமாகவே நம்பிக்கை மாற் றத்தால் விளையக்கூடிய தீமையின் விருக்ஷமானது 'ஜ:க்:கூம்' என்னும் மரத்துக்கு இணையாகக் கூறப்பட்டிருக்கிறது: ذالك خير نزلا ام شجرة الزقوم انا جعلناها فتنة للظالمين انها شجرة

تخرج فی اصل الجحیم طلعها کانه رءوس الشیاطین ÷ ان شجرة الزقوم طعام الاثیم کالمهل یغلی فی البطون کغلی الحمیم...... ذق انک انت العزیز الکریم "சுவர்க்கத்திலுள்ள உய்யானங்கள் உயர்ந்தனவா? அல்லது 'ஜ:க்:கூம் விருக்ஷமே உயர்ந்ததா? நிச்சயமாகவே நாம் அந்த 'ஜ:க்:கூமைக் கெட்டவர்களுக்குரிய உணவாக ஏற்படுத்தியிருக்கிறோம்; நரகத்தின் மூல வேரிலிருந்து அந்த 'ஜ:க்:கூம் மரமானது முளைத்தெழுகின்றது. (அஃதாவது, நரகத்துக்கு மூலகாரணமாய் விளங்கிவரும் வீண் பெருமையும் அகம்பாவமுமே அந்த விருக்ஷத்துக்கு அடிப்படையாய்க் காணப்படுகின்றன;) அதன் கனியோ ஷை(த்)தான்களின் சிரங்களேபோல் இருக்கின்றன"—(37: 62-65). ஷை(த்)தான் என்னும் பதமானது நாசமடைத லென்று பொருள்படுகின்ற ஷ(த்)தன என்னும் பதத்தினின்றும் தோன்றியிருப்பதால், அப்பொருளுக்குரிய ஜீவன் அழிந்து நாசமடையக் கூடியவனாகவேயிருக்கிறான். மேலேகூறிய வார்த்தைகளால் அறியக்கிடக்கின்ற விஷயம் யாதெனின், அவ் விருக்ஷத்தின் பழங்களைப் புசிப்பதால் விநாச காலமும் விபரீத முடிபுமே அவனுக்கு வந்து நேரிட்டுவிடுகின்றன வென்பதாம். "நிச்சயமாகவே 'ஜ:க்:கூம் விருக்ஷமானது வேண்டுமென்றே தீய செய்கையால் உயிர் வாழ்க்கையை நடாத்திவருகிறவர்களுக்கு ஆகாரமாய் அமைந்திருக்கிறது; அஃது உருக்கிவைக்கப்பட்ட செப்புத் திரவத்தைப்போல் இருந்துகொண்டு, அவர்களுடைய வயிற்றுக்குள் தஹிக்கின்ற கொதிநீரைப்போல் பொங்கிக்கொண் டிருக்கும்." அவ்வாறு நாசமாய்ப்போன மனிதனைப் பார்த்து அது பின்வருமாறு சொல்லிக் கொண்டிருக்கும்: "இவ் விருக்ஷத்தின் பழத்

தைப் புசித்துப் பாருங்கள்; ஏனெனின், நிச்சயமாகவே நீங்கள் பலசாலிகளாகவும் கண்ணியசாலிகளாகவும் அமைந்திருக்கிறீர்கள்"—(44:43—49). இதன் இறுதி வார்த்தைகள் அல்லா(ஹ்)வின் கோபாக்கினியைக் குறித்துக் காட்டக்கூடிய அழகிய திருவசனங்களாக அமைந்திருக்கின்றன. இவ்வார்த்தைகளால் நாம் அறிந்து கொள்வது யாதெனின், அந்தப் பாபம்செய்த அடியான் தற்பெருமையாலும் அகம்பாவத்தாலும் தன்னுடைய வெளி வேஷமான கௌரவத்துக்காகவும் பெருமைக்காகவும் சத்தியத்தைக் கண்டு தன் முதுகைத் திருப்பிக் கொள்ளாம லிருந்திருப்பானாயின், அவன் தன் கருமத்தின் பலனை அந்தக் கனியையும் துன்பத்தையும் ருசிபார்த்திருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிராதென்பதேயாம். மேலும் 'ஜ:க்:கூம் என்னும் சொல்லானது து:க், உம் என்னும் இரண்டு பதங்களின் சேர்க்கையால் உண்டாக்கப்பட் டிருக்கிறது. அவற்றுள் 'து:க் கென்பது "ருசிபார்" என்று பொருள்படும். இரண்டாவது பதமானது ذُقْ إِنَّكَ أَنتَ الْعَزِيزُ الْكَرِيمُ என்னும் முழு வாக்கியத்தின் சுருக்கமாய்க் காணப்படுகின்றது. இவ்வாக்கியத்தின் முதலெழுத்தும் கடையெழுத்தும் சேர்ந்தே உம் மென்னும் பதத்தைக் கொடுக்கின்றது. அடிக்கடி 'ஜ:க்:கூம் என்னும் பதம் உபயோகிக்கப்பட்டு வருவதனால் அதிலுள்ள 'தால் என்னும் எழுத்தானது ே'ஜயாக மாறி உச்சரிக்கப்பட்டு வருகிறது. ஏனெனின், 'தால் என்னும் எழுத்தானது ே'ஜயின் சப்தத்தை நெருங்கி யிருப்பதனால், அந்த 'தால் ே'ஜயாக மாற்றி உச்சரிக்கப்பட்டு வருகிறது.

சுருக்கிச் சொல்லுமிடத்து, இவ்வுலகத்தில் உச்சரிக்கப்

படும் உறுதியுள்ள நம்பிக்கையின் உத்தம வார்த்தைகளை
யெல்லாம் ஆண்டவன் சுவர்க்கத்தின் விருக்ஷங்களுக்கும்,
மத விரோதமான நம்பிக்கையற்ற மாறான தீயசொற்களையெல்
லாம் நரகத்தின் விருக்ஷமாகிய ‘ஜ:க்:கூமுக்கும் ஒப்பிட்டுக்
காட்டியிருக்கிறான். எனவே, மேற்கூறிய உதாஹரணங்
களால் பரலோகத்துக்கு வேண்டிய சுவர்க்க வாழ்க்கையும்
நரகவாழ்க்கையும் இவ்வுலக வாழ்க்கையிலிருந்தே ஆரம்ப
மாய் விடுகின்றன வென்பதை நாம் நன்கறிந்து கொள்ளு
கிறோம். இப்படிப்பட்ட நரகத்தின் தன்மையைப்பற்றிக்
:குர்ஆன் ஷரீ‘பும் பின்வருமாறு கூறி யிருக்கின்றது:
نار الله الموقدة التى تطلع على الا فئدة “நரகமென்பது ஆண்ட
கையின் கோபாக்கினியினின்றும் மூளைத்தெழக் கூடிய
ஒருவகைத் தீயாயிருக்கிறது ; அது பாபத்தின் வேரினின்
றுமே கிளைத்தெழுகின்றது ; அதன் ஜ்வாலையானது முதன்
முதலில் மனிதனுடைய ஹிருதயத்தைத் தாவிப் பற்றுகின்
றது”—(104: 6,7). உண்மையில் நம்முடைய துன்பமும்
துயரமும் மற்றுமுள்ள கஷ்ட நிஷ்டூரங்களும் நமது ஹிருத
யத்தை மூடிக்கொள்ளுங்கால், அவையனைத்தும் இவ்வுலகத்
திலுள்ள நரகத்தீயால் மூட்டப்படுகின்றன வென்றே அனு
மானிக்கப் படுகின்றன. என்னெனின், எல்லாவிதமான ஆன்
மத் துயரங்களும் துக்கங்களும் வேதனைகளும் முதன் முத
லில் மனிதர்களுடைய ஹிருதயத்தைப் பற்றிய பிறகே சரீர
முழுதையும் தாவிப் பிடிக்கின்றது. மீண்டும் :குர்ஆன் ஷரீ
‘பில் நரகத்தீயைப்பற்றி இவ்வாறும் காண்கின்றோம்: “நரகத்
தீயின் விறகானது (அஃதாவது, அந்நரகத்துக்கு எப்பொழு
தும் உயிரைக் கொடுத்துக் கொண்டிருக்கக் கூடியது) இரண்டு

காரியங்களாகவே காணப்படுகின்றன: முதலில் மனிதர்கள் (அஃதாவது, உண்மையான ஆண்டவனைத் தவிர்த்து மற்ற வஸ்துக்களைத் தெய்வங்களாகக் கொண்டு வணங்குகிறவர்கள்; அல்லது எவர்களுடைய அனுமதியைக் கொண்டு இதர வஸ்துக்கள் அவ்வாறு வணங்கப் படுகின்றனவோ அப்படிப் பட்டவர்கள்.) ஏனெனின், :குர்ஆன் ஷரீஃப மற்றோரிடத்தில் انكم وما تعبدون من دون الله حصب جهنم 'நிச்சயமாக நீங்களும் உங்களுடைய பொய்யான தெய்வங்களும், தாங்களே மற்றொரு தெய்வத்தால் சிருஷ்டிக்கப்பட் டிருக்கும்போது, தங்களுக்குத் தெய்விகத் தன்மை உண்டென்று வாதித்ததற்காக நரகத்திற்குள்ளே தள்ளப்படுவார்கள்,' (21:98) என்று கூறியிருக்கிறது. இரண்டாவதாக, وقودها الناس والحجارة அப்படிப் பட்ட விக்கிரஹங்களும் மனிதர்களும் நரகத்தின் விறகுகளாய்விடுவார்கள். (ஏனெனின், அவற்றின் தன்மையே நரகத் தீயைக் கிளப்பக்கூடியதாய் அமைந்திருக்கிறது)"—(2:24). இத்தகைய வார்த்தைகளிலிருந்து, சுவர்க்கம் நரகம் என்னப் படுபவை யெல்லாம் இங்கிருப்பதே போன்ற ஸ்தூல உலகங்களல்ல வென்பதையும், ஆனால், அங்குள்ள ஸூக்ஷ்ம உலகத்தின் காரியங்களுக்குரிய மூலங்களெல்லாம் நம்முடைய இகலோகத்தின் ஆத்மார்த்த நிலைமைகளையே தமக்கு ஆதார அஸ்திபாரமாகக் கொண்டிருக்கின்றன வென்பதையும் செவ்வனே அறிந்து கொள்ளுகிறோம். ஆனால், இதைப் பற்றிய மற்றொரு விஷயத்தையும் நாம் மறந்து விடுவது கூடாததாகவே காணப்படுகின்றது: அஃதாவது, அவ்வுலகத்திலுள்ள சுகதுக்கங்களனைத்தும் இவ்வுலகத்திலுள்ள ஆத்மார்த்த சம்பந்தமான காரியங்களின் பிரதிபிம்பமாகவே காணப்படுமல்லாது, இவ்

வுலக வாழ்க்கையின் தொடர்ச்சியாகவே அவ்வுலக வாழ்க்கையும் ஸ்தூலமாகவே தென்பட்ட போதினும், இவ்வுலகத்தின் ஸ்தூலமேபோன்ற காட்சியைத்தான் அவைகளு மளிக்குமென்று கருதிவிடுவது சிறிதும் கூடாது.

நாம் மீண்டும் ஈண்டு முதலில் வியவகரித்த விஷயத்தை எடுத்துக் கொள்வோ மாயின், :குர்ஆன் ஷரீ'பானது, ஆண்டானுடன் அடியான் தன்னுடைய பாரமார்த்திகத் துறையில் முழுதும் ஈடுபடுதற்கு இரண்டுவிதமான உபாயங்களை அறிவித்திருக்கிற தென்று தெரிந்து கொள்வோம். அஃதாவது: அடியான் ஆண்டானுடைய அபிப்பிராயத்திற்கு முற்றிலும் தலைசாய்த்து நிற்றல்; இதுதான் இஸ்லாம் என்னும் திருநாமத்தால் வழங்கப் படுகின்றது. இரண்டாவதாக, :குர்ஆன் ஷரீ'பின் ஆரம்ப ஸூராவாகிய 'பா(த்)தி'ஹா என்னும் "திறப்பு" அத்தியாயத்தில் கற்பிக்கப்பட்டிருப்பதே போன்ற பிரார்த்தனைகளை இடைவிடாது பஜித்துக் கொண்டும், வேண்டுதல்களை இடைவிடாது புரிந்துகொண்டும் இருப்பதே யாகும். எனவே, இம்மார்க்கத்துக்குரிய ஒழுக்கத்தின் விழுப்பமனைத்தும் இஸ்லாம், 'பா(த்)தி'ஹா என்னும் இரண்டு சொற்களின் தாத்பரியத்திலேயே முற்றும் பொதிந்திருக்கின்றது. இவ்விரு வழிகளுந்தாம் மோக்ஷத்திற்குரிய வாயிலருகினில் நம்மெல்லோரையும் கொண்டு சேர்க்கின்றது; இவைதாம் ஆண்டகையின் சன்னிதானத்தை அடைதற்குரிய நேரான பத்திரமுள்ள சன்மார்க்கமு மாகும். இவையே எல்லோராலும் விரும்பப்படத்தக்க மகாமேலான ஆத்மார்த்த வாழ்க்கையின் அதி யுச்சஸ்தானத்திற்கு நம்மை ஏற்றிக் கொண்டு சென்று, இறுதியிலே ஆண்டகையின் திருச்சன்னி

தானத்தின் முன்னும் நம்மை நிச்சயமாகச் சேர்ப்பிக்கின்றது. 'பா(த்)தி'ஹாவில் கூறப்பட்டிருப்பதேபோல் இடைவிடாது வணக்கம் புரிந்துகொண்டு, அதன் அந்தரங்கத் தாத்பரிய மனைத்தையும் அடியோடு அறிந்துகொண்டு, இஸ்லாத்தின் முழு இரகசியத்தையும் உள்ளே சென்று உணர்ந்துகொள்ளக் கூடியவரே ஆண்டவனைத் தரிசித்துக் கொள்ளும் பாக்கியம் பெற்றவராவார்.

எனவே, இஸ்லாம் என்ப தென்ன ? "இஸ்லாம்" என்பது எல்லாவிதமான தீய எண்ணங்களையும் தீய்த்து விட்டுப் பொய்க் கடவுளர் முதலியவற்றையும் தஹித்துவிட்டு, நம்முடைய உள்ளத்தை யெல்லாம் பரிசுத்தம் செய்து, நமது உடல் பொருள் ஆவி அனைத்தையும் அவ்வாண்டவைக்காக அர்ப்பணம் செய்யுமாறு நம்மைத் தூண்டும் பொருட்டு ஜ்வலித்துக்கொண் டிருக்கும் ஜோதிப் பிரகாசமே யாகும். அதற்குள் நாம் நுழைந்துவிடுவோ மாயின், ஒருவகை நூதன வாழ்க்கைக்குரிய புதிய இனிய பானத்தையே எப்பொழுதும் பருகிக்கொண் டிருப்போம். அப்பொழுது நமக்குள்ளிருக்கும் ஆத்மார்த்த சக்தியின் அவயவங்களெல்லாம் ஒன்றோடொன்று நன்றாகப் பிணைக்கப்பட்டு இருப்புச் சங்கிலிகளாலாய கரணை களேபோல வலுவடைந்து விடுகின்றன. அதன்பின் ஒருவகை மின்னொளிபோன்ற ஜோதிமயமானது நம்மிடத்திருந்து வெளிக்கிளம்பிப் பிரகாசிக்கின்றது ; அன்றியும் வேறொரு வகை ஜோதியானது ஆகாயத்தினின்றும் நம்மீது தாவு கின்றது. இவ்விரு விதமான அக்கினிகளும் தம்முள்ளே ஒன்றோடொன்று கலக்கும்போது, நம்பாலுள்ள சித்த விகாரம் முதலிய இழிகுணத் தன்மைகளையும், ஆண்டவனைக்

காட்டினும் அன்னியர்பால் வைக்கும் அபிமானங்களையும் சுட்டெரித்துச் சாம்பராக்கி விடுகின்றன. எனவே, அதற்கு முன்னிருந்த உயிர் வாழ்க்கையின்மீது ஒருவகை மரணம் போன்ற திரையே வந்து மூடிக்கொள்கின்றது; இதுதான் இஸ்லா மார்க்கத்தில் மரணமாகுமுன் மரணமடைவ தென்று அதிஸூக்ஷ்மமாகக் கூறப்படுகின்றது. இஸ்லாம் என்பது பஞ்சேந்திரியங்களுக்குரிய ஆசைகளின்மீது ஒருவகை மரணத்தை உண்டுபண்ணிவிட்டு, நம்முடைய பாரமார்த்திக வாழ்க்கையில் ஆத்மார்த்தத்திற்குரிய ஒருவகைப் புத்துயிரையே அளித்துநிற்கின்றது. இதுதான் மெய்யான பாரமார்த்திக சீர்திருத்தம் என்னப்படுவது; அதன்பின்னே இத்தகைய நிலைமையிலிருப்போருடன் ஆண்டவனும் நேரே சல்லாபிக்கத் தொடங்குகிறான். இதுதான் ஆண்டவனது தரிசனத்துக்குரிய அடையாளமாகும்; பிறகுதான் அவ்வாண்டகைக்குரிய சிற்சில விதமான தோற்றங்களை அவ்வடியான் நேருக்கு நேராய்க் கண்டுகொள்ளத் தலைப்படுகிறான்; ஆண்டவனுடன் அவ்வடியானுக்கு ஏற்பட்டுவிடும் ஐக்கியபத்திய நெருக்கத்தால் அவ்வடியான் தன் ஆண்டகையின் முகாரவிந்தத்தையே தன்னிரு நேத்திரங்களாலும் நேரே கண்டு கொண்டதேபோல அத்துணை அதிகமான நேத்திரானந்த மடைகிறான். அவனுக்கு ஆகாயத்தினின்றும் அளவில்லாத மனோதைரியம் அளிக்கப்படுகின்றது; அவனுடைய அந்தரங்க சக்திகளனைத்தும் அதிகமாகத் தீக்ஷண்யம் அடைந்து பிரகாசமடைகின்றன. ஆதலின், ஆண்டவனது சன்னிதானத்துக்குரிய ஒருவகைப் பரிசுத்தமான ஆகர்ஷண சக்தியானது அவனுக்குள்ளே நின்று பலமாகத் தொழில்செய்யத் தலைப்படுகின்றது. அப்படிப்

பட்ட ஆத்மார்த்த மகோன்னதத்தை அடைந்த பிறகுதான் ஆண்டவன் அவ்வடியானுக்குரிய பார்க்கும் விழிகளாகவும், கேட்கும் செவிகளாகவும், பேசும் நாவாகவும், தொழிலியற்றும் கரமாகவும், நடந்துதிரியும் பாதமாகவும் ஆய்விடுகிறான். இக் காரணத்தினால்தான் எமது :குர்ஆன் ஷரீ'பும் பின்வருமாறு இவ்விஷயத்தை வருணித்திருக்கிறது : يد الله فوق أيديهم "அவர்களுடைய கரங்களின்மீது அல்லா(ஹ்)வின் கரமிருக் கிறது"—(48: 10). மீண்டும் அத்திருமறையே இவ்வாறும் வரைந்திருக்கின்றது: وما رميت إذ رميت ولكن الله رمى "நீர் (எதை) எறிந்தபோதினும் அதை நீர் எறியவில்லை; ஆனால், ஆண்டவனே அதை எறிந்திருக்கிறான்"—(8: 17).

சுருங்கச் சொல்லுமிடத்து, இதுதான் மனிதனால் அடையப்படக்கூடிய மகா பரிசுத்தமான உச்சநிலையாகும்; இதுதான் ஆண்டவனுடனே அதிகபலமான ஐக்கியத்தை ஏற் படுத்திக் கொள்வதுமாகும். அதன்பின் அடியானுடைய ஆன்மாவின் தசைகளிலும் நரம்புகளிலும் ஆண்டவனுடைய பொருத்தமான மேலான நாட்டமே மிகைத்து நிற்கின்றது; அதற்குமுன்னம் ஐம்புல ஆசைகளின் தாக்குதல்களை யெல் லாம் தடுத்துக்கொள்ள முடியாமல் கதியற்றுநின்ற சன்மார்க்க ஒழுக்க நிலையானது இப்பொழுது எப்படிப்பட்ட அத்தகைய தாக்குதல்களையும் எதிர்த்து நிற்கக்கூடிய வன்மை பெற்ற மா பெரும் மலைகளேபோல் அமைந்துவிடுகின்றது. இப்படிப் பட்ட பரிசுத்தமான முன்னேற்ற மாறுதல்களால் ஞானமும் பகுத்தறிவும் கூடவே தீக்ஷண்ய மடைந்து விடுகின்றன. இத் தகைய நிலைமையைத்தான், وأيدهم بروح منه "ஆண்டவன் தன்னுடைய பரிசுத்தமான ஆவியைக் கொண்டு அவர்க

ளுக்குத் துணைபுரிந்தான்,” என்னும் திருவாக்கியமானது குறிப்பிட்டுக் காட்டிக்கொண் டிருக்கின்றது. அப்படிப் பட்ட அடியானுக்குத் தன்னுடைய ஆண்டகையின்பால் இருந்துவரும் பக்தி விசுவாசத்துக் கோர் அளவுசொல்லி முடியாது. அவ் வாண்டகைக்காக அறியாத மாக்களிடம் அவமானப்படுவதும், அன்னவர் கையால் எல்லாவிதமான கஷ்ட நிஷ்டூரங்களுக்கும் மகா சந்தோஷத்துடனே உட் படுவதும், இல்லை! அவ் வாண்டகைக்காகத் தன்னுடைய உயிரையே பரித்தியாகம் செய்துவிடுவதும் ஒரு சிறிய சுள்ளியை ஒடித்தெறிவதேபோல் எளிய காரியமாகவே புலப்படுகின்றன; மற்றையோர் பார்வையில் இவ்விஷயங்க ளெல்லாம் எத்துணை வின்னியாசமான காரியங்களாய்ப் புலப் பட்ட போதினும், இவையனைத்தும் அந்தப் பரமபக்தன்முன் சர்வ சாதாரணமான செய்கைகளாகவே காணப்படுகின்றன. ஆண்டவனது மறைவான ஆகர்ஷண கரத்தால் ஈர்க்கப்பட்டு அவ்வடியான் அவன்பால் ஓடத்துணிகின்றான்; ஆனால், யார் தன்னைப் பிடித்து இழுக்கிறா ரென்பதையும் அறிந்துகொள்ளா மலே அத்துணைக் கடுவேகத்துடன் புறப்பட்டோடுகிறான். எல்லாவிதமான கஷ்ட நிஷ்டூரங்களிலும் கண்ணுக்குப் புலப் படாத யாரோஒருவர் தன்னுடைய கரத்தையேந்தி உதவிபுரிவ தேபோன்ற உணர்ச்சியைப்பெற்றுக்கொள்ளுகிறான். எனவே, ஆண்டகையின் நாட்டத்தைப் பூர்த்திசெய்து வைப்பதே அவ் வடியானின் முக்கிய நோக்கமாய்க் காணப்படாநின்றது; அதுதான் அவனுடைய வாழ்க்கையின் அந்தரங்க மூலவிசை யாகவும் அமைந்துவிடுகிறது. نحن اقرب اليه من حبل الوريد "அவனுடைய கழுத்து நரம்பைப் பார்க்கினும் அதி

சமீபத்திலே அவனை நாம் நெருங்கியிருக்கிறோம்,'' என்று :குர்ஆன் ஷரீ'பில் (50:16) கூறப்பட் டிருப்பதேபோல் அவ்வடியான் ஆண்டவனுக்கு அதி சமீபத்திலே தான் நெருங்கியிருப்பதை அறிந்து கொள்ளுகிறான். நன்றாக முதிர்ந்த கனியானது விருக்ஷத்தினின்றும் யாருடைய உதவியுமில்லாமலேயே உதிர்ந்து விழுவதேபோல இப்படிப் பட்ட நல்லடியானின் தீயகுணங்களும், அருவருக்கத்தக்க தாழ்மையான வியவகார சம்பந்தங்களும் கிஞ்சித்தும் சிரம மில்லாமல் சுயமே உதிர்ந்துவிடுகின்றன. இவ்வடியான் ஆண் டவனுடன் சம்பாதித்துக்கொண்ட ஐக்கிய நெருக்கத்தால் மற்றெல்லாச் சிருஷ்டிப் பிராணிகளினின்றும் ஒருவிதத்தில் நெடுந்தூரத்துக் கப்பால் சென்று வேறுபட்டவனாகவே காணப்படுகிறான். இவன் ஆண்டவனுடன் பரஸ்பர சம்பா ஷணையைப் பெற்றுக்கொள்ளுகிறான். இப்படிப்பட்ட சல் லாபத்துக்குரிய மேலான நிலைமையை அடைதற்குரிய வாயிலா னது முற்காலங்களி லிருந்ததுபோலவே இக்காலத்திலும் மிக நன்றாகத்தான் திறந்துவைக்கப்பட் டிருக்கிறது. இக்காலத்தில் உண்மையாயுழைக்கும் மெய்யான நல்லடியார்களுக்கு இத் தகைய தெய்வ கடாக்ஷமென்பது நிறுத்தப்பட்டுப் போய்விட் டதாய்ச் சற்றும் எண்ணிவிட வேண்டாம். ஆனால், இதற்கு மாறாக முற்காலத்தி லிருந்தது போலவே இக்காலத்திலும் தன்னுடைய ஐக்கிய நெருக்கத்தை நல்லடியார்கள் பெற்றுக் கொள்ளலாமென்று ஆண்டவன் அடிக்கடி வற்புறுத்திக் கூறி யிருக்கின்றான். ஆனால், வெறும் வாய்வேதாந்தம் பேசிவரும் வீணர்கள் அப்படிப்பட்ட நல்வாயிலைக் கிஞ்சித்தும் அடை வது முடியாது; அர்த்தமற்ற வீண் பெருமை பேசிக்கொண்

டிருக்கும் சோம்பேறிகளுக்கும் இந்தக் கதவானது ஒருபோதும் திறக்கப்பட மாட்டாதென்பது திண்ணம். பற்பல விதமான மனிதர்களும் இவ் வாயிலினுள்ளே நுழைந்து செல்ல வேண்டுமென்று ஆசித்து வருகின்றனர்; ஆனால், அதையடைந்துகொள்பவர் மிகச் சிலராகவே காணப்படுகின்றனர். ஏனெனின், மெய்யான தியாகமில்லாமலும் சிரத்தையான ஆராய்ச்சி யில்லாமலும் வெறுமையாய் ஆசிப்பவருக்கு அந்த நேர்வழியானது சித்திப்பதில்லை. உண்மையான ஆர்வத்துடனே உயர்ந்தவிதமான ஊக்கமும் நிரம்பியிருத்தல் வேண்டும். தெய்வத்தின் பெயரால் எத்தனை விதமான பஜனைகளையெல்லாம் வாயினால்மட்டுமே பஜிப்பதனால் மட்டும் ஒன்றும் பயன் விளைந்துவிட மாட்டாது. அவாவுடன் கூடிய முயற்சி நிரம்பிய ஊக்கமும் உடன் கலந்திருத்தல் வேண்டும். ஏனெனின், அந்த வாயிலுக்குச் செல்லும் வழியானது கரடு முரடாகவும், அபாயம் நிறைந்ததாகவும் அமைந்திருக்கிறது. ஆதலின், மற்றையோர் கண்டு வெருண்டோடக் கூடிய அந்தத் தகிக்கும் தீயின்மீது உண்மையான பக்தி விசுவாசத்துடனும் உறுதியான கடைப்பிடியுடனும் நாம் நம்முடைய அழுத்தமான பாதத்தை ஊன்றிவைக்கத் தயங்குவோமாயின், அந்தக் கஷ்டம் நிறைந்த பாதையினூடே நடந்துசெல்வது ஒருகாலும் முடியாது. உண்மையான உழைப்பும், அதற்குரிய உற்சாகமும் இல்லாத காலத்து, வீண் பெருமை யடிப்பதால் மட்டும் என்ன விதமான ஞானம் வந்துவிடுமென்று எண்ணியிருக்கின்றீர்கள்? இதன் சம்பந்தமாகக் :குர்ஆன் ஷரீ'பிலுள்ள பின்வரும் திருவாக்கியத்தின் கருத்தை நன்றாக நிதானித்துப் பார்க்கக் கடவீர்களாக:— واذا سئلك عبادى عنى

فانی قریب اجیب دعوةالداع اذادعان فلیستجیبوالی ولیؤمنوبی لعلہم یرشدون“என்னுடைய அடியார்கள் என்னைப் பற்றி உம்மிடம் கேட்பார்களாயின், நான் அவர்களுக் கருகிலே மிகநெருங்கி யிருப்பதாகக் கூறக்கடவீர் ; நல்ல வித மான பிரார்த்தனை புரிவோரின் பிரார்த்தனைகளை நானும் கேட் டுக்கொண்டுதா னிருக்கிறேன். ஆதலின், வணக்கங்களைக் கொண்டும், என்மீதுள்ள நன்னம்பிக்கையைக் கொண்டும் அவர்கள் என் ஐக்கியத்தை நாடவேண்டும் ; எனவே, அவர் கள் அதன்பின் நேரே சென்று சம்பூர்ண ஜயத்தைப் பெற்றுக் கொள்ளுகிறார்கள்”—(2:186). இதுதான் முமுக்ஷுத்தன்மை யென்னப்படுவது.



# மரணத்துக்குப்பின் மனிதவாழ்க்கை யாது?





"மரணத்துக்குப் பின் மனிதனுடைய நிலைமை இன்ன விதமாகத்தான் இருக்குமென்று நமது :குர்ஆன் ஷரீ'பு என்ன கூறியிருக்கின்றது?" என்பதே இனி நாம் கவனிக்க வேண்டிய விஷயமாகும். சுருங்கச் சொல்லுமிடத்து, மரணத்துக்குப் பின்னுள்ள மனிதவாழ்க்கை யென்பது முற்றிலும் ஒருபுதிய வாழ்க்கை அன்றென்பதுதான் இஸ்லாத்தின் ஆழிய படிப்பினையாகும். ஆனால், உண்மையிலே அது நம்முடைய இகலோகப் பாரமார்த்திக வாழ்க்கையின் உருவப் பிரதிபிம்பமாகவும், அதன் தெளிவான தோற்றமாகவுமே வெளிப்பட்டுக் காணப்படாநின்றது. இவ்விடத்தில் மனிதனுடைய நம்பிக்கைக்கும் செய்கைக்கும் உரிய நல்லவிதமான நிலைமைகளும் கெட்ட விதமான நிலைமைகளும் அவனுக்குள்ளேயே ஆழ்ந்து பதுங்கி மறைந்து கிடக்கின்றன; அவற்றின் நன்மை தீமையான முடிபுகளெல்லாம் மனிதனுடைய உள்ளத்துக்குள்ளேயே மகா இரகசியத்துடனேதான் தங்கள் பலா பலன்களைக் காட்டிவருகின்றன; ஆனால், இனிவரும் வாழ்க்கையில் இப்படிப்பட்ட முடிபுகளெல்லாம் பட்டப்பகலின் பிரகாசமுள்ள வெளிச்சமேபோல் மிக்க வெளிப்படையாய்க் காணப்படத் தலைப்பட்டுவிடும். இதற்கு வேண்டிய உதாஹரணம் ஒன்றை ஈண்டு நாம் எடுத்துக் கொள்வோமாயின்—இஃதோர் அதிக திருப்திகரமற்ற உதாஹரணமென்றே கூறியமைதல் வேண்டும்—மனிதனொருவன் ஆழ்ந்த நித்திரையி

விருக்குங் காலையில், அவனுடைய உள்ளத்தின்கண் மாக சிரேஷ்டத்துடனே வேரூன்றிநிற்கும் எண்ணங்களே அவனுடைய கனவின் தோற்றத்தில் உருக்கொண்டு நிற்பதை உவமையாக்கிக் காட்டலாம். ஒருவனுடைய மனோநிலையானது தனக்கு வரப்போகின்ற கடுமையான விஷஜுரத்தின் வேகத்தை முன்னறிந்துகொள்ளக் கூடுமாயின், அவன் தன்னுடைய கனவின்போது ஜ்வாலைவிட்டெரிகின்ற ஒளிப்பிழம்புகளைக் கண்டுகொள்ளலாம்; இவ்வாறே அவனுக்கு ஜல தோஷம் உண்டாகவேண்டி யிருப்பின், அவன் தன்னுடைய கனவின் தோற்றத்தில் தன்னையே பிரளயத்தில் புரண்டுகொண்டிருப்பதாய்க் காணலாம். சுருக்கிக் கூறுமிடத்து, ஒருவகைக் குறிப்பிட்ட வியாதிக்கு ஆளாவதற்காக இந்தச் சரீரமானது தையாரா யிருந்துவரும்போது, அப்படிப்பட்ட வியாதிக்குரிய நிலைமையானது இப்படிப்பட்ட தென்பதை அவனுடைய கனவானது நன்றாக விளக்கிக் காட்டலாம். நம்முடைய உள்ளத்தின்கண் நிகழ்ந்துவரும் ஒருவகை மாறுபாட்டினால் நமக்கு இனிவரும் விஷயங்களைப்பற்றி நம்முடைய கனவின்போது நன்றாக ஸ்தூல உருவிலே கண்டுகொள்ளுகிறோம்; இவ்வாறே மறுஉலக வாழ்க்கையிலும் இவ்வுலக வாழ்க்கையில் நமக்கு நிகழ்ந்து வந்திருக்கும் பாரமார்த்திக நிலைமையின் உருவத் தோற்றத்தை நன்றாகப் பஹிரங்கமாக நாம் உணர்ந்து கொள்ளலாம். நம்முடைய இகலோக வாழ்க்கையானது முடிவடைந்து விட்டதன்பின் நாம் மற்றொரு வாழ்க்கையின் பக்கல் கொண்டு செல்லப்படுகிறோம்; அவ்விடத்திலே நமக்குரிய இகலோகச் செய்கைகளும் அவற்றின் பலாபலன் களும் ஒருவகைப் பிரத்தியக்ஷமான தோற்

றத்தை மேற்கொண்டு நிற்கும்; ஆதலின், இவ்வுலகில் நமக்குள்ளே மறைக்கப்பட்டிருக்கும் விஷயங்களெல்லாம் அவ்விடத்தில் நம்முன் நன்றாகத் திறந்து விரித்து வைக்கப்பட்டிருக்கும். இதுவே அல்லா(ஹ்)வின் (சுன்னத்) மார்க்கமுமாகும். ஆத்மார்த்த வாழ்க்கைக்குரிய விஷயங்களனைத்தும் பிரத்தியக்ஷமான உருவத்தைக் கொண்டு நமது கண்முன்னே ஒரு கனவின் வாழ்க்கையே போல்தான் காணப்படும்; ஆனால், கனவின் காட்சிகளெல்லாம் சிறிது நேரத்திற்குள்ளே மாறிப் போகக் கூடியனவா யிருப்பினும், அந்த ஸ்வப்பனத் தோற்றமானது நிகழ்ந்துகொண்டிருக்குங் காலையில் அதுமுழுதும் உண்மையாகவே புலப்படுகின்றது. இப்படிப்பட்ட உருவப் பிரத்தியக்ஷத் தோற்றமானது ஆண்டகையின் ஒருவகைப் புதிய பரிபூரணமான சாமர்த்தியமாகவே காணப்படுகின்றது. எனவே, அந்தத் தோற்றத்தை அதற்குமுன்னமே நிகழ்ந்துள்ள காரியங்களின் பிரதிபிம்பமென்று கூறாமல், ஆண்டவனுடைய அதிபலமான கரத்தைக் கொண்டு புத்தப்புதிதாகச் சிருஷ்டிக்கப்பட்ட ஒருவகை நூதன வாழ்க்கையென்றே அழைக்கலாம். இதனைக் குறித்துத்தான் :குர்ஆன் ஷரீ‘பானது பின்வருமாறு வியவகரித்திருக்கின்றது: فلا تعلم نفس ما اخفي لهم من قرة اعين "நன்மையைச் செய்யும் ஆத்மாவானது தனக்கு (இவ்வுலகில்) மறைக்கப்பட்டிருக்கும் அவ்வுலக சந்துஷ்டிகளையும் சுகானந்தங்களையும் (ஈண்டுக்) கண்டுகொள்ள மாட்டாது"—(32: 17) என்னும் விஷயமானது மரணத்துக்குப் பின் நன்றாக விளக்கிக் காண்பிக்கப்படும். மறு உலக வாழ்க்கையில் நல்லடியார்கள் கண்டுகொள்ளப்போகும் தெய்வானுக்கிரஹங்க ளெல்லாம் இவ்

வுலக வாழ்க்கையில் இரகசியமாக மறைத்துவைக்கப்பட்டிருக்கின்றனவென்று ஆண்டவன் கூறியிருப்பதன் காரணம், அவ்வனுக்கிரஹத்தின் புதிய அனுபவமெல்லாம் இவ்வுலகத்திலுள்ள எந்தவிதமான பழைய அனுபவத்துடனும் ஒப்பிட்டுக் காட்ட முடியாதனவாகவே இருந்துவருகின்றன என்பது தான்; உண்மையிலே இவ்வுலகி லிருக்குமட்டும் அவ்வுலக வாழ்க்கையின் அனுபவம் இப்படித்தான் இருக்குமென்பதை ஒருவராலும் உணர்ந்துகொள்வது முடியாது. இவ்வுலகத்தில் காணப்படும் வஸ்துக்களுள் நமக்குத் தெரியாமல் இரகசியமாக மறைத்து வைக்கப்பட்டிருக்கும் வஸ்து ஒன்றையும் நாம் காண்பதில்லை; எனவே, மாதுளையும், வாதுமையும், பேரீச்சங் கனிகளும், தேனும், பாலும் ஆதியவெல்லாம் நமக்குத் தெரியாத பொருள்களென்று ஒருவரும் கூறத் துணியார். ஏனெனின், இவற்றையெல்லாம் நாம் அடிக்கடி ருசி பார்த்துக்கொண்டுதா னிருக்கிறோம்; ஆதலின், இப்படிப் பட்ட பொருள்களை நமக்கு இகலோகத்தில் மறைத்துவைக்கப்பட் டிருக்கும் இரகசியமான வஸ்துக்களென்று எவரே கூறத் துணிவார்? எனவே, சுவர்க்க லோகத்தில் கிடைப்பதாகக் கூறப்படும் கனிவர்க்கங்களும் பான வகைகளும் பெயரளவிலே மட்டுமல்லாது, இவ்வுலகத்தில் காணப்படும் அப்படிப்பட்ட எந்தப் பொருள்களுடனும் சற்றும் சம்பந்தப்பட்டிராவென்றே கொள்ளுதல் வேண்டும். ஆதலின், சுவர்க்கலோக மென்பது இவ்வுலகத்தில் காணப்படும் வஸ்துக்களே போன்றவைதாம் ஏராளமாய்க் காணப்படக்கூடிய ஓரிடமென்று கொள்ளுகிறவன் :குர்ஆன் ஷரீ‘பின் உண்மைக் கருத்தை ஒருசிறிதும் உணராதவனே யாவான். மேற்கூறிய

:குர்ஆன் ஆயத்தைப்பற்றி வியவகரிக்குங்கால், நபிகள் பெருமானார்[ஸல்] சுவர்க்கமும் அதிலுள்ள சுகபோகங்களும், 'இந்த ஊனக் கண்ணால் காணமுடியாதனவும் இந்தச் செவியால் கேட்க முடியாதனவும் இந்த ஹிருதயத்தால் உணர்ந்து கொள்ள முடியாதனவுமாய் அமைந்திருக்கின்றன' வென்று திருவாய் மலர்ந்தருளி யிருக்கின்றார்கள். ஆனால், இவ்வுலகத்திலே காணப்படும் வஸ்துக்களைப்பற்றிப் பேசப்புகுங்கால், இவற்றை நம்முடைய புறக்கண்களால் காணமுடியாதென்று ஒருவராலும் சொல்வது முடியாது; அல்லது இவற்றை நம்முடைய புறச் செவிகளாலும் கேட்க முடியாதென்றும் ஒருவராலும் வாதிப்பது முடியாது; அல்லது இவை நம்முடைய ஹிருதயத்துக்குள்ளே நுழைய முடியாவென்றும் எவரே விவாதிக்கத் துணிவார்? அல்லா(ஹ்)வும் அவனுடைய ரஸூலும் மறுஉலக வாழ்க்கையில், இவ்வுலகில் நம்முடைய பஞ்சேந்திரியங்களுக்கும் அந்தரங்க இந்திரியத்துக்கும் புலனாகாத விஷயங்களே காணப்படுமென்று கூறியிருக்குங்கால், நாம் இகலோகத்தில் சர்வ சாதாரணமாய்ப் பருகிக்கொண்டிருக்கும் தேன்களாலும் பால்களாலும் நிரப்பப்பெற்ற இங்குள்ள நதிகளேதாம் அங்கும் ஓடிக்கொண் டிருக்குமென்று எண்ணத் துணிவோமாயின், ஆண்டவனின் அழகிய போதனைக்கும் அவனுடைய ரஸூல் நாயகத்தின்[ஸல்] அரிய வியாக்யானத்துக்கும் மாறான கொள்கைகளையே ஏற்றுக் கொண்ட குற்றத்திற்கு ஆளாய்விடுவோ மென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை. எனவே, தெய்வத்திற்கும் தெய்வத் திருத்தூதருக்கும் முற்றிலும் மாற்றமாய், சுவர்க்கலோகத்தில் கணக்கற்ற பசுக்களும் எருமைகளும் அங்குள்ள புற்றரை

களில் மேய்க்கப்பட்டு வருகின்றனவென்றும், எண்ணிறந்த தேன்கூண்டுகளெல்லாம் அளவிறந்த தேனீக்களால் தேன் சேகரம் செய்யப்பட்டு அங்குள்ள விருக்ஷங்களில் தொங்கிக் கொண் டிருக்கின்றன வென்றும், அந்த லோகத்திலுள்ள திரள் திரளான வானவர்களெல்லாம் அங்குள்ள நதிகளின் பிரவாகத்தை ஓயாமல் பெருக்கிக்கொண்டே யிருக்கும் பொருட்டுப் பால்களைக் கறந்தும் தேன்களைத் திரட்டியும் அல்லும்பகலுமாக அவற்றின் தலைப்பிலே ஊற்றிக்கொண் டிருக்கிறார்களென்றும் யாரே கூறத் துணிவார்? அவ்வுலக வாழ்க்கையானது இவ்வுலக வாழ்க்கையினின்றும் முழுதும் வேறுபட்டிருக்குமென்று கூறுவதற்கு ஈண்டுக் கூறிய அபிப் பிராயமானது எவ்வாறு ஒத்திருத்தல் சாலும்? சுவர்க்க லோகத்திலுள்ள விஷயங்களெல்லாம் ஆத்மாவைப் பிரகா சிக்கச் செய்து, ஆண்டவனைப்பற்றிய ஞானத்தையும் விருத்தி யடையச் செய்து, ஆத்மார்த்தத்திற்குரிய அவாவையும் தீர்த்து வைப்பதேபோல இவ்வுலகில் காணப்படும் பால்களும் பழங்களும் தேன்களும் தீர்த்துவைத்தல் சாத்தியமாமோ? ஆனால், அவ்வுலகில் காணப்படும் வஸ்துக்களெல்லாம் ஸ்தூல மயமான வஸ்துக்களென்று கூறப்பட்டிருப்பது வாஸ்தவந் தான். ஆயினும், அவற்றின் மூலமானது சன்மார்க்க ஒழுக்க மென்றும் ஆத்மார்த்த வாழ்க்கையென்றும் உடன் கூறப் படாமலு மில்லை.

:குர்ஆன் ஷரீ'பிலுள்ள கீழ்வரும் ஆயத்தானது வெளி நோக்காய்ப் பார்க்கப்படுங்கால், சிலருடைய உள்ளத்தின்கண் அபிப்பிராயபேதத்தை உண்டுபண்ணக் கூடியதாகவே அமைந் திருந்தபோதினும், அந்தத் திருவாக்கியமானது ஆண்டவனால்

அளிக்கப்படும் பரலோக சுகானந்தங்களெல்லாம் இவ்வுலகில் எளிதில் காணப்படும் வஸ்துக்களாகவே அமைந்திருக்கின்றன வென்பதைச் சற்றும் ஆமோதிக்க வில்லையென்னும் ஆழிய கருத்தானது சற்றே நிதானித்துப் பார்ப்போருக்கெல்லாம் மிக்க நன்முக விளங்காமற் போகாதென்பது திண்ணம்: وبشر الذين آمنوا وعملوا الصالحات أن لهم جنات تجري من تحتها الأنهار كلما رزقوا منها من ثمرة رزقا قالوا هذا الذي رزقنا من قبل وأتوا به متشابها "மேலும் நன்னம்பிக்கை கொண்டு நற்கருமங்களைச் செய்கிறவர்களுக்கு, கீழே நீரருவிகள் ஓடுகின்ற உத்தியான வனங்களை அவர்கள் பெற்றுக்கொள்வார்க ளென்று நற்செய்தி கூறுவீராக; அவற்றின் கனிவர்க்கங்களினின்று ஒன்று அவர்களுக்குப் புசிக்கக் கொடுக்கப்படும்போ தெல்லாம், 'முன்னமே நமக்குக் கொடுக்கப்பட் டிருந்ததும் இதுதானே' யென்று அவர்கள் சொல்லுவார்கள்; என்னெனின், மறுவுலக வாழ்க்கையின் கனிவர்க்கங்களெல்லாம் இவ்வுலக வாழ்க்கையின்போது அளிக்கப்பட்ட ஆத்மார்த்த கனிகளையே நிகர்த்து நிற்பதைக் காண்பார்கள்"—(2: 25). இத் திருவாக்கியத்தையும் இதன் கருத்தையும் ஆழ்ந்து நோக்குவோமாயின், நல்லடியார்களால் அவ்வுலக வாழ்க்கையில் ருசிபார்க்கப் போவதாகக் கூறப்படும் கனிவர்க்கங்களெல்லாம் ஒருவாற்றானும் இவ்வுலகினில் முளைத்திருக்கும் விருக்ஷங்களினின்றும் தோன்றிய இகலோகக் கனிகளேயென்று கொள்வதற்கு ஒன்றும் இடமில்லை யென்பதை நன்முகத் தெரிந்துகொள்வோம். உண்மையிலே மேற்கூறிய வாக்கியத்தின் கருத்தாவது: "நன்னம்பிக்கை கொண்டு நற்கருமங்களைச் செய்

கிறவர்கள்” இவ்வுலகத்தி லிருக்கும்போதே தங்களுக்கு வேண்டிய சுவர்க்கலோக வாழ்க்கையைத் தங்களுடைய சொந்தக் கரங்களைக்கொண்டே சிருஷ்டித்துக் கொள்ளு கிறார்கள் ; அவர்களுடைய நன்னம்பிக்கை யென்பது சுவர்க்க லோக விருக்ஷங்களாகவும், அவர்களுடைய நற்கருமங்களே அவற்றின் கனிவர்க்கங்களாகவும் வந்துவிளைகின்றன. எனவே, அவர்களுடைய பரிசுத்தமான பாரமார்த்திக வாழ்க்கையால் உண்டுபண்ணப்பட் டிருக்கும் ஆத்மார்த்த சுவர்க்கத்தின் கனி களையே அவர்கள் இவ்விடத்திலும் ருசிபார்க்கிறார்கள் ; இப் படிப்பட்ட ஆத்மார்த்தக் கனிகளையே மறுஉலகிலும் அவர்கள் அதிகமாகப் புசித்துக்கொள்வார்கள். ஆனால், இவ் வுலக வாழ்க்கையில் ஆத்மார்த்தமாய் அனுபவிக்கப்படும் பாரமார்த் திகக் கனிவர்க்கங்களே மறுஉலக வாழ்க்கையில் இன்னமும் பிரத்தியக்ஷமானவும் அதிக ருசிகரமானவுமா யுள்ள பழ வர்க்கங்களாக மாற்றப்பட்டிருப்பதைக் கண்டுகொள்வார்கள். ஆனால், அவர்கள் அப்படிப்பட்ட ஆத்மார்த்தக் கனி வர்க்கங் களை இவ்வுலகிலேயே ஒருவாறு ருசிபார்த் திருப்பதனால், அவ்வுலகில் காணப்படும் பழங்களும் இப்படித்தான் இருக்கு மென்று நன்கு தெரிந்துகொள்வார்கள் ; இங்குள்ள ஆத் மார்த்தக் கனிகளுக்கும் அங்கே கொடுக்கப்படும் அத்தன் மைத்தாகிய பழ வர்க்கங்களுக்கும் அதிகமான ஒற்றுமை யிருப்பதைக் கண்டு அந்த நல்லடியார்களெல்லாரும், “ முன் னமே பூலோக வாழ்க்கையின்போது நமக்குக் கொடுக்கப்பட் டிருந்ததும் இதுதானே ! ” என்று கூவுவார்கள். ஆதலின், மேற்கூறிய திருவாக்கியத்தினால், இவ்வுலக வாழ்க்கையில் ஆண்டவனுடைய அனுக்கிரஹத்தை ஆத்மார்த்தத் துறை

யிலே அனுபவித்து வந்தவர்கள் மறுவுலக வாழ்க்கையிலும் அதேவிதமான பிரத்தியக்ஷ ஆகாரத்தைக்கொண்டே போஷிக் கப்படுவார்களென்பதை நாம் கண்கூடாகக் கண்டுகொள்ளு கிறோம். அவர்கள் மறு உலக வாழ்க்கையில் காணப்போகும் தேவானுக்கிரஹங்க ளெல்லாம் அவர்களால் இவ்வுலகினில் அனுபவிக்கப்பட்டிருக்கும் ஆத்மார்த்தமான தேவானுக்கிர ஹங்களையே முற்ற முற்ற ஒத்திருப்பதைக் கண்டுகொள்வார் கள். இப்படிப்பட்ட ஆத்மார்த்த அனுபவமென்பது நள்ளிர விலே தனித்திருந்து விழித்திருந்து தேவ தியானத்துள் மௌனத்துடனே மூழ்கியிருப்பவருக்கேதான் கிட்டுதல்கூடும்; இவர்களால் இவ்வாறு மானஸீகமாய் அனுபவிக்கப்படும் ஆத்மார்த்தக்கனி வர்க்கங்களே அவ்வுலகிலும் ஆண்டவனால் அளிக்கப்படும் கருணைநிதியாய்க் காணப்படுமென்பதில் கிஞ் சித்தும் சந்தேகமில்லை. இவையேதாம் உண்மையிலே சுவர்க்க லோகக் கனிகளாம்.

சுருங்கச் சொல்லுமிடத்து, மேற்கூறிய திருவாக்கிய மானது எவ்வாற்றானும் இவ்வுலகத்தில் காணப்படும் வஸ்துக் களைப்பற்றியேனும், இத்தரணியின்மீது அவர்கள் புசித்து வந்திருக்கும் ஆகாராதிகளைப்பற்றியேனும் ஒரு சிறிதும் கூறி யிருக்கவில்லை யென்பதுதான், நாம் ஈண்டுத் தெரிந்துகொள்ள வேண்டிய அந்தரங்கத் தாத்பரியமாகும். முன்னமே கூறப் பட்டிருப்பதே போல் நபிகள் நாயகத்தின்[ஸல்] திருவசனத்தில் காணப்படும் வண்ணம் அவ்வுலக வாழ்க்கையின் அனுபவங்க ளெல்லாம் இவ்வுலக வாழ்க்கைக்குரிய புறக் கண்களால் காண முடியாதனவாகவும், புறச் செவிகளால் கேட்கக்கூடா தனவாகவும், இங்குள்ள மனத்தினாலும் ஒருசிறிதும் அறிந்து

கொள்ளக் கூடாதனவாகவும் அமைக்கப் பட்டிருக்கின்றன வென்று கூறப்படும் தாத்பரியமானது மேற்கூறிய 2:25-வது ;குர்ஆன் ஆயத்துக்கு மாற்றமா யிருக்கிறதென்று எவரேனும் கூறத் துணிவராயின், அவருடைய மனத்தின் கண் காணப் படும் மாறுபாடான அபிப்பிராயமானது அவருடைய சொந்த அர்த்த வித்தியாசத்தினாலேயே ஏற்படக்கூடியதா யிருக்கிற தென்பதை நீங்கள் நன்கறிந்து கொள்ளலாம். ஏனெனின், "முன்னமே நமக்குக் கொடுக்கப்பட்டிருந்ததும் இதுதானே! என்று அவர்கள் சொல்லுவார்கள்," என்னும் திருவாக்கியத் தின் பொருளை இவ்வுலகத்திலுள்ள எல்லா மனிதர்களாலும்— அவர்கள் நல்லோர்களே யாயினும், தீயோர்களே யாயினும், எவ்வகை வேறுபாடு மில்லாமல் சமமான ருசியுடன் அனு பவிக்கப்பட்டுவரும் இவ்வுலக வஸ்துக்களைக் குறிக்குமென்றே கொள்வதனால்தான் இப்படிப்பட்ட தடுமாற்றம் உண்டாகின் றது. ஆனால், அவ்வாயத்தில் "கனி வர்க்கங்கள்" என்று கூறப்பட்டிருக்கும் பிரயோகமானது இவ் வுலகத்திலுள்ள சாதாரணமான பழவர்க்கங்க ளல்ல வென்றும், இவ்வுலக வாழ்க்கையில் பரிசுத்தமுள்ள நல்லடியார்களால் இழைக்கப் பட்டிருக்கும் நற்கிரியைகளின் பாரமார்த்திகப் பலன்களே யென்றும் கொள்ளப்படுமாயின், பிறகு ஆண்டவனுடைய அருள் வாக்குக்கும் நபிகள் பிரானின் திருவாக்கியத்துக்கும் இடையிலே யாதொரு விதமான வேற்றுமையும் காணப்பட மாட்டாதென்பது திண்ணம். நல்லடியார்கள் இவ்வுலகத்தி லிருக்குங்காலையில் ஆத்மார்த்த முறையிலே அனுபவித்துவரும் சுகானந்தங்களெல்லாம் மறு உலகத்துக்குரிய நித்தியானந்தத் தின் ஏகதேசமாகவே அமைந்து கிடக்கின்றன ; மறு உலக

வாழ்க்கையில் அவர்களுக்காகச் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் ஆத்மார்த்த நித்தியானந்தத்தின் சிற்சில பகுதியான ஏகதேச அம்சங்களே, அப்படிப்பட்ட ஆனந்தத்தின்மீது அன்னவரின் ஆர்வமானது அதிகரித்தெழும்பொருட்டு இவ்வுலக வாழ்க்கையிலும் அவர்களுடைய அந்தக்கரணத்தின்கண்ணே போடப்படுகின்றன. அவை இவ்வுலகத்துக்குரிய சொந்த அநுபவமென்று எண்ணிவிட வேண்டாம். ஏனெனின், உண்மையான மெய்யடியார்கள் இவ்வுலக வாழ்க்கையில் ஈடுபட்டவர்களா யிருப்பதில்லை ; அவர்கள் இத்தரணியின்மீது தாமரையிலை நீர்போல இருந்து வருதலினால்தான் அவரைக் கண்ட இவ்வுலக வாசிகள் அன்னவரை வெறுப்புடனே நடாத்தத் தலைப்பட்டு விடுகின்றார்கள். இவ்வுலக வாசிகள் இங்குள்ள வாழ்க்கைக்கு வேண்டிய ஜலம், காற்று, அக்கினி, மற்றுமுள்ள ஆகாராதிகள் முதலியவெல்லாம் கிடைக்கப்பெறுவதே போல் அவர்களும் அவ்வுலகுக்கு வேண்டிய ஆத்மார்த்த பாரமார்த்திக அநுபவங்களை யெல்லாம் இவ்வுலகத்திலேயே ஒரு சிறிது அநுபவித்துப் பார்க்கின்றார்கள். அவர்களுடைய அந்தக்கரண அநுபவங்களெல்லாம் மற்ற மனிதர்களின் புறக் கண்களினின்றும், புறச் செவிகளினின்றும் மறைக்கப்பட்டிருப்பதல்லாமல், அவை இவ்வுலகத்திலுள்ள எந்த மானிடனது ஹிருதயத்துக்குள்ளும் நுழையக் கூடாதவிதமாக அத்துணை அபூர்வமுள்ள அநுபவங்களாய்க் காணப்படுகின்றன. இவ்வுலகத்தின் உலோகாயத வாழ்க்கையையே பற்றிக்கொண்டிருப்பவர்கள் பரலோகத்துக்குரிய நித்தியானந்தம் இன்னதென்பதை ஒருபோதும் தியானித்துக்கொள்வது முடியாது ; ஆனால், இவ்வுலக வாழ்க்கையைக் காட்டினும் அவ்வுலகுக்

குரிய ஆத்மார்த்த வாழ்க்கையை அதிகம் மிகைக்கும்படியாய் ஆக்கிக் கொண்டவர்களே ஆங்குச் சென்றபின் அனுபவிக்கக் கூடிய நித்தியானந்தத்தின் ஏகதேசத்தை இவ்வுலகத்திலேயே ஒருவாறு அனுபவித்துப் பார்க்கின்றார்கள். இப்படிப்பட்டவர்கள்தாம் "அவற்றின் கனிவர்க்கங்களி னின்று ஒன்று அவர்களுக்குப் புசிக்கக் கொடுக்கப்படும்போ தெல்லாம், 'முன்னமே நமக்குக் கொடுக்கப்பட்டிருந்ததும் இதுதானே!' என்று சொல்லுவார்கள்." இவர்களுடைய அனுபவத்தைத் தான் ரஸூல்நாயகத்தின்ஸல் இனியவசனங்களும் ஊர்ஜிதப் படுத்துகின்றன. ஏனெனின், அவர்களுடைய ஆத்மார்த்த நித்தியானந்த அனுபவங்களெல்லாம் வேறு சாதாரண மக்களின் கண்களிலும் காதுகளிலும் ஹிருதயங்களிலும் புலப்படக் கூடாதனவாகவே உண்மையில் அத்துணை விசேஷத்துடனே அருமையாக அமைக்கப்பட் டிருக்கின்றன வென்பதை நன்கறிந்து கொள்வார்கள். அப்படிப்பட்ட நல்லடியார்களும் இவ்வுலகத்திலேயே பிறந்து இவ்வுலகத்திலேயே, இதனுடன் ஒட்டாமல் வசித்து வந்தவர்களாதலின், அவர்களே தங்களுடைய அந்தக்கரண அனுபவமெல்லாம் சாமான்ய மக்களின் நேத்திரங்களுக்குள்ளும் செவிகளுக்குள்ளும் ஹிருதய கமலங்களுக்குள்ளும் நுழையக் கூடாத வண்ணமாய் அமைக்கப்பட் டிருக்கின்றன வென்பதற்கு நன்றாகச் சாக்ஷியம் கூறுவார்கள். அவர்களுடைய வாழ்க்கையும் சாமான்யமான பௌதிக வாழ்க்கையா யிருந்துவந்த காலத்தில் இப்படிப்பட்ட ஆன்ம சுகத்திற்குரிய அனுபவங்களை ஒருபோதும் அடைந்திருக்க மாட்டார்கள். ஆனால், அவர்கள் தங்களுடைய உலோகாயதத்தினின்றும் விடுபட்டுக்கொண்டு பார

மார்த்திகத் துறையிலே இறங்கிய பிறகே அவர்களுக்கு இப்படிப்பட்ட ஆத்மார்த்தப் பரமானந்த இன்பங்கள் ஜனிக்கத் தலைப்பட்டிருத்தல் கூடும்; இதுவும் அவர்களுடைய உலக சம்பந்தமான பஞ்சேந்திரிய இன்ப நுகர்ச்சிகளின் நிக்கிரஹம் ஏற்பட்ட பிறகேதான் உண்டாயிருத்தல் கூடும். என்னெனின், பஞ்சேந்திரிய இச்சைகளுக்குரிய இகலோக வாழ்க்கையுள் இறங்கித் திரிவோருக்கு அப்படிப்பட்ட ஆத்மார்த்த ஆனந்தங்கள் ஒருபோதும் ஜனிப்பது சாலாது.

:குர்ஆன்ஷரீ'பானது மறுவுலக வாழ்க்கையைப் பற்றி மூன்று முக்கியமான விஷயங்களை எடுத்தோதி யிருக்கின்றது: முதன்முதலாக மரணத்துக்குப் பின்னுள்ள வாழ்க்கையானது ஒரு நூதனமான வாழ்க்கை யல்லவென்றும், இவ்வுலக வாழ்க்கையின் ஆத்மார்த்தப் பிரதிபிம்பமாகவே அங்குள்ள வாழ்க்கையானது முற்றிலும் அமைந்திருக்கிறதென்றும் அடிக்கடி நந் திருமறையானது வற்புறுத்திக்கொண்டே வருகின்றது. ஏனெனின், :குர்ஆன்ஷரீ'பில் இப்படிப்பட்ட திருவாக்கிய மொன்று காணப்படுகின்றது: وكل انسان الزمناه طائره في عنقه ونخرج له يوم القيامة كتابا يلقاه منشورا “இவ்வுலக வாழ்க்கையிலேயே நாம் மனிதர்களுடைய செய்கைகளின் பலாபலன்களையெல்லாம் அவர்களுடைய கழுத்தைச்சுற்றிக் கட்டி வைத்திருக்கிறோம்; இந்த மறை முகமான காரியங்களை யெல்லாம் இறுதித் தீர்ப்பு நாளன்று திறந்து வைக்கப்பட்ட புத்தக ரூபத்தில் நாம் வெளியிலே கொண்டுவருவோம்”—(17:13)— இவ்வாக்கியத்தில் காணப்படும் :தா'இர் என்னும் பதத்தின் பொருளை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுதல் வேண்டும்; :தா'இர் என்னும் பதமானது தன்னுடைய மூலப்

பொருளில் பக்ஷி யென்பதைக் குறிக்கும்; அஃது இவ்விடத்தில் மனிதர்களுடைய செய்கைகளைக் குறிப்பிடுமாறு உருவகமாக உபயோகிக்கப் பட்டிருக்கிறது. ஏனெனின், மனிதனுடைய ஒவ்வொரு செய்கையும், அது நல்லதேயாயினும் தீயதேயாயினும் அது நிகழ்ந்தபின் ஒரு பறவையைப்போல உடனே பறந்து சென்றுவிடுகிறது. ஒரு காரியத்தைச் செய்வதனால் அதினின்றுண்டாகும் சுகமேனும் துக்கமேனும் சிறிதுபோழ்தைக்குள் நம்முடைய மனத்தை விட்டுப் பக்ஷியைப்போல் பறந்து மறைந்துவிடுகின்றது; ஆனால், அதனால் விளையும் நல்லவிதமான அல்லது தீயவிதமான முத்திரை மட்டும் நமது ஹிருதயத்தின்மீது நன்றாகப் பதிந்துவிடுகின்றது. இக்காரணத்தினாலேதான் :குர்ஆன் ஷரீ'பானது நம்முடைய ஒவ்வொரு செய்கையும் தன் தனக்குரிய ஒருவகை இரகசிய முத்திரையை நமது ஹிருதயத்தின் மீது பதிய வைத்து விடுகிறதென்னும் அந்த முக்கியமான அம்சத்தை நன்றாக எடுத்துக் காட்டியிருக்கின்றது. மனிதனுடைய ஒவ்வொரு செய்கையும் உண்மையிலே ஆண்டவனுடைய ஒவ்வொரு செய்கையினால் பின்தொடரப்பட்டுத் தன் தனக்குரிய பலா பலனை அவ்வடியானின் ஹிருதயத்தின் மீது மட்டுமல்லாமல், கைகளின்மீதும், கால்களின்மீதும், செவிகளின்மீதும், கண்களின்மீதும் நிலை பெறச் செய்து கொண்டு வருகின்றது. நம்முடைய ஒவ்வொரு செய்கையின் பிரதி பிம்பத்தையும் பதிவு செய்து வைத்துக்கொள்ளும் புத்தகமானது (கிரியைகளின் பட்டோலை) ஈண்டு நமது புறக் கண்ணினின்றும் மறைக்கப்பட்டிருந்தபோதினும், அந்தக் கிரந்தத்திலுள்ள பதிவுகளனைத்தும் இவ்வுலக வாழ்க்கையி

லேயே தையாரிக்கப்பட்டு வருகின்றன ; ஆனால், இந்தப் புத்தகத்தின் முழு விவரமும் பகிரங்கமாக மறு உலக வாழ்க்கையிலேதான் நன்ருக நமது பார்வைக்குக் கொண்டு வரப்படும்.

சுவர்க்க லோகத்தின் வாழ்க்கையைப்பற்றிக் கூறிவருங் கால், :குர்ஆன் ஷரீ'பானது மற்ருரிடத்தில் இவ்வாறு வருணித்திருக்கின்றது: يوم ترى المؤمنين والمؤمنات يسعى نورهم بين أيديهم وبأيمانهم "இவ்விடத்திலும் நன்னம்பிக்கை கொண்டுள்ள ஆடவர்களும் பெண்டிரும் தங்களுக்குக் கொடுக்கப்பட் டிருக்கும் ஈமானின் ஒளியானது அந்நாளில் அவர்களுக்கு முன்புறமாகவும் அவர்களுடைய வலப்புறமாகவும் ஓடிக்கொண்டிருப்பதைப் பிரத்தியக்ஷமாகக் காண் பார்கள்"—(57:12). பின்னர்த் தீயடியார்களைப்பற்றி நம்முடைய திருவேதமானது இவ்வாறு வருணித்திருக்கின்றது: الهكم التكاثر حتى زرتم المقابر كلا سوف تعلمون ثم كلا سوف تعلمون كلا لو تعلمون علم اليقين لترون الجحيم ثم لترونها عين اليقين ثم لتسئلن يومئذ عن النعيم "உங்களுடைய ஆவல்களும், ஆர்வங்களும், உங்களுடைய பிரேதம் புதைகுழியுள் வைக்கப்படு மட்டும் (மறு உலகுக்கு வேண்டியதைத் தேடிக்கொள்வதினின்றும்) உங்களைத் திருப்பி விட்டுவிடுகின் றன. (நீங்கள் இவ்வுலக சம்பந்தமான காரியங்களில் அத்துணை அதிகமாக ஈடுபட்டுவிடாம லிருப்பீர்களாக. ஏனெனின்) இவ் வுலக சம்பந்தமான இச்சையானது நன்மையான முடிபுகளை உண்டுபண்ணப் போவதில்லை யென்பதை நீங்கள் அதிசீக்கிரம் அறிந்துகொள்ளப் போகின்றீர்கள் ; இவ்வுலக இச்சையின்

காரணத்தினு லேற்படும் தீயமுடிபுகளை நீங்கள் சீக்கிரம் அறிந்துகொள்ளப் போகின்றீர்களென்று மீண்டும் நான் உங்களுக்கு அறிவிக்கிறேன். நீங்கள் திடமான ஞானத்தையடைந்திருப்பீர்களாயின், இவ்வுலக வாழ்க்கையிலேயே நரகத்தைப் பார்த்திருப்பீர்கள்; ஆனுல் (மரணத்துக்கும் இறுதித் தீர்ப்பு நாளுக்கும் இடையிட்ட காலத்தில்) நீங்கள் அதை நிச்சயமான கண்களைக் கொண்டு பிரத்தியக்ஷமாகப் பார்த்துக் கொள்வீர்கள்; கடைசியில் இறுதித் தீர்ப்பு நாளன்று இவ்வுண்மையை நீங்கள் சுயமே அனுபவித்துக்கொள்வதனுல் நன்கறிந்துகொள்ளப் போகின்றீர்கள்"—(அத். 102). இத் திருவாக்கியங்களை நன்கு நிதானித்துப் பார்ப்போமாயின், தீயோர்களுக்கு இவ்வுலக வாழ்க்கையிலேயே நரக வேதனை ஆரம்பித்துவிடுகிறதென்பதை நாம் நன்கு தெரிந்துகொள்வோம். மறு உலகுக்கு வேண்டிய நரக லோகமானது இவ்வுலகத்திலேயே தையாரிக்கப்படுகின்றது; ஆனுல், அது நம்முடைய புறக்கண்களுக்குப் புலனுவதில்லை; ஆயினும், அதைப்பற்றி ஆழமாகச் சிந்தித்துப் பார்ப்பவர்கள் திடமான ஞானத்தைக் கொண்டு அதைத் தெரிந்து கொள்வார்கள். இவ்விடத்தில் ஆண்டவன் அதற்குரிய ஞானம் மூவகைப் பிரமாணமாயிருப்பதைப்பற்றி நன்முக விஸ்தரித்துக் கூறியிருக்கிறுன். அவையாவன: முதற் பிரமாணம் علم اليقين அஃதாவது, அனுமானத்தினுல் ஏற்படும் உறுதி யென்பதாகும்; இரண்டாவது பிரமாணம் عين اليقين அஃதாவது, பிரத்தியக்ஷத்தினுல் ஏற்படும் பூர்ண உறுதியாகும்; மூன்றுவது பிரமாணம் حق اليقين அஃதாவது, அனுபவத்தினுல் ஏற்படும் உறுதியாகும். இதைப்பற்றி இன்னம் நன்முக விளக்கிக்காட்ட

வேண்டுமாயின், இதற்கோர் உதாஹரணத்தை எண்டெடுத்துக் கூறலாம் : நெடுந் தூரத்திலிருந்து புகைத்திரளொன்று ஆகாயத்தை நோக்கிக் கிளம்பக் காண்பானாயின், அம்மனிதன் அவ்விடத்தில் தீ யிருக்கிறதென்பதை உடனே அனுமானித்துக் கொள்ளுகிறான். ஏனெனின், நெருப்பைத் தவிர்த்து வேறொன்றும் அவ்விடத்தில் அப்படிப்பட்ட புகையை உண்டு பண்ணி யிருக்கமாட்டாது. எனவே, அனுமானப் பிரமாணத்தால் அவ்விடத்தில் நெருப்பிருக்கிறதென்பதை அவன் உறுதியாக அறிந்துகொள்ளுகிறான். இதுதான் மேற்கூறிய ஆயத்தில் இ'ல்முல் ய(க்):கீன் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆனால், அவன் அவ்விடத்தை நோக்கிச் சென்று அந்தப் புகை உண்டானவிடத்தை நெருங்கியவுடனே அங்குள்ள அக்கினியைத் தன் கண்ணாரக் கண்டுகொள்ளுகிறான். இது தான் அவனுடைய பிரத்தியக்ஷப் பிரமாணத்தினால் ஏற்படும் (ஐ'னுல்ய:கீன்) உறுதியாகும். இன்னமும் அந்த அக்கினியின் உண்மைத் தன்மையை அவன் உணர்ந்து கொள்ள வேண்டுமாயின், தன்னுடைய ஒரு சிறு விரலை அந்த ஒளிப் பிழம்பில் நீட்டினமாத்திரத்திலே அதை நன்கறிந்துகொள்வான். இதுதான் அவனுடைய சொந்த அனுபவத்தினால் ஏற்படக் கூடிய உறுதிப்பாடாய்க் காணப்படாநின்றது. இம்மூவகையான பிரமாணப் படித்தரங்களே நரகத்தின் சார்பாகவும் நமக்கு எடுத்துக் காண்பிக்கப்பட்டிருக்கின்றன. என்னெனின், இவ்வுலக வாழ்க்கையில் நன்றாகத் தங்கள் சிந்தனையைச் செலுத்தக் கூடியவர்கள் நரகத்தின் ஆரம்பத்தை இங்கேயே கண்டுகொள்ளுகிறார்கள் ; மரணமடைந்த பின் எல்லா மனிதர்களும் இறுதித் தீர்ப்பு நாளைக்கு

முன் நரகத் தீயின் கொடுமை இன்னதென்பதை நேருக்கு நேராகக் கண்டுகொள்ளுகிறார்கள். ஆனால், இறுதித் தீர்ப்பு நாளன்று நரகத்துக்குரியவர்கள் சுயமே அதற்குள் நுழைந்து பார்ப்பதால் சொந்தமான அனுபவ ஞானத்தையும் நேரே அடைந்து கொள்ளுகிறார்கள்.

மேற்குறிப்பிட்ட விஷயங்களினால் :குர்ஆன் ஷரீ'பானது மறு உலக வாழ்க்கைக்காக மனிதருடைய நிலைமையில் மூவகை உலகங்கள் அல்லது மூவகை வெவ்வேறான படித்தரங்கள் அமைக்கப்பட் டிருக்கின்றனவென்று கூறியிருப்பதை நன்றாக ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுதல்வேண்டும் ; அவற்றுள் முதல் உலகமானது இவ்வுலக வாழ்க்கை யாகும் ; இதில்தான் நமக்குரிய நன்மை தீமையான காரியங்களனைத்தும் சம்பாதிக்கப்படுகின்றன. இவ்விடத்தில் நடைபெறும் காரியங்களின் பலாபலனே மறு உலகத்தில் ஒவ்வொருவராலும் அனுபவிக்கப் படுகின்றன. எனவே, அவரவர்க்குரிய நன்மை தீமைகளுக்கு வேண்டிய முடிபுகளெல்லாம் இவ்வுலக வாழ்க்கையிலேயே முடிவடைந்து விடுகின்றன. இறுதித் தீர்ப்பு நாளைக்குப் பின் நல்லடியார்கள் மேன்மேலும் அபிவிருத்தி யடைந்துகொண்டே செல்லுதற்குரிய படித்தரங்கள் பலவாகக் காணப்பட்ட போதினும், அந்த அபிவிருத்திக்குரிய நிலைமைகளனைத்தும் இறைவனது சொந்தக் கருணையினால் சுயமே அளிக்கப்படுகின்றன வல்லாது, அவை ஒருசிறிதும் மனிதப் பிரயத்தனத்தின்மீது சுயமே சார்ந்திருக்கவில்லை.

இரண்டாவது உலகம் ப'ர்'ஜக்' என்று அழைக்கப்படுகிறது. இந்த அரபுப் பதமானது தன்னுடைய மூலப்பொரு

னில் "இடையிட்ட நிலைமை" என்று பொருள்படும். ஏனெனின், இந்த இரண்டாவது உலகமானது, இவ்வுலக வாழ்க்கைக்கும் இறுதித் தீர்ப்பு நாளைக்கும் இடையில் நிகழ்வுறுவதால் இதற்கு ப'ர்'ஜக்' என்று பெயர் வைக்கப்பட்டிருக்கிறது. இப்பதமானது புராதன காலந்தொட்டே ஒருவகைப் பட்ட இடை நிலையான தன்மையைத்தான் குறித்துக்கொண்டு வருகிறது. ஆதலின், இப்பதத்தின் பொருளே மரணத்துக்கும் இறுதித் தீர்ப்பு நாளைக்கும் இடையிலுள்ள ஒருவகை நிலைமையை உணர்த்தக் கூடியதாய் அமைந்திருக்கிறது.

அரபு பாஷைதான் ஆண்டவனுடைய திருவாயினின்றும் உதயமான பாஷை யென்றும், இஃதொன்றேதான் இறைவனுடைய பாஷை யென்று உரிமை பாராட்டக் கூடியதென்றும், இதிலிருந்தேதான் எல்லாவிதமான ஞானங்களும் உதயமா யிருக்கின்றனவென்றும், இதுதான் இவ்வுலகிலுள்ள எல்லாப் பாஷைகளுக்கும் தாய் மொழியாய் விளங்கி வருகிறதென்றும், இதுதான் இறைவனுடைய முதல் வேதத்தையும், இறுதி வேதத்தையும் வெளிப்படுத்திக் கொடுத்த தெய்வீக மொழியாய் விளங்குகிறதென்றும் "மினனுர் ரஹ்மான்" என்னும் நூலில் நாம் நன்கெடுத்து விளக்கி யிருக்கின்றோம். அரபு பாஷைதான் இவ்வுலகின் முதன்மொழியா யிருக்கிறது. என்னெனின், இதுதான் ஆண்டவன்பால் இருந்து வந்த "கலாமுல்லா"வா யிருந்து, பிறகுஇறுதியாக இவ்வுலகினுக் கருளப்பட்டது; இப்படிப்பட்ட ஆதி பாஷையிலிருந்துதான் மனிதர்கள் மற்றெல்லாப் பாஷைகளையும் கற்றுக்கொள்ளத் தலைப்பட்டார்கள். இதுதான் இவ்வுலகிலுள்ள பாஷைகளுக்குள் இறுதி மொழியாகவும் அமைந்திருக்கிறது; என்னெனின்,

ஆண்டகையின் இறுதி வேதமாகிய :குர்ஆன் ஷரீ'பும் இந்த அரபு பாஷையிலேயே வெளியாயிருக்கிறது. எனவே, இப் படிப்பட்ட அரபு பாஷைக்குரிய ப'ர்'ஜக்' என்னும் பத மானது ப'ர் என்றும், 'ஜக்' என்றும் கூறப்படும் இரண்டு மூலப் பதங்களின் சேர்க்கையால் உண்டாக்கப்பட்டிருக் கிறது. இவ்விரு பதங்களின் கருத்தும், "செய்கைகளைக் கொண்டு நன்மையையேனும் தீமையையேனும் அடையக் கூடிய எல்லையைக் கடந்த காலம்" என்று பொருள்படும்.

ஆதலின், ப'ர் 'ஜகி'ன் நிலைமையில் ஆத்மாவானது இச் சரீரத்தை விட்டு நீங்கிவிட்டபின், அழிந்து போகக்கூடிய இப் பௌதிக உடம்பானது மண்ணுடனே கலந்து மடிந்துபோ கின்றது. மரணத்துக்குப் பின் இந்தச் சரீரமானது ஒரு குழிக் குள்ளே போட்டுப் புதைக்கப்படுகிறது; அப்பொழுது ஆத் மாவும் ஒரு வகையான புதை குழியுள் புகுத்தப்பட்டதே போலத்தான் காணப்படுகின்றது. ஏனெனின், ப'ர்'ஜக்' என்னும் அந்த இடைநிலை ஸ்தானத்தில் இருந்து வரும் போது இந்த ஆத்மாவுக்கு நன்மையையேனும், தீமையை யேனும் புரிதற்குரிய சக்தியொன்றும் காணப்படுவ தில்லை; அதுவேயுமன்றி, அந்நிலைமையில் அந்த ஆத்மாவுக்குத் தன் சரீரத்தின்மீது எப்படிப்பட்ட அதிகாரத்தையும் வகிக்க முடி யாமற் போய்விடுகின்றது. இன்னமும், ஆத்மாவின் நல்ல நிலைமை யென்பது சரீரத்தின் நல்ல நிலைமையையே சார்ந் திருக்கிறது. மூளையின் ஒரு குறிப்பிட்ட ஸ்தானத்தில் ஏதே னும் ஒருவகை அதிர்ச்சி உண்டாய் விடுமாயின், அதன் கொடுமையால் ஞாபக சக்தி யென்பது மறக்கப்பட்டுவிடு கிறது; இவ்வாறே மூளையின் மற்றோரிடத்தில் ஏதேனும்

அபாயம் விளைந்துவிடுமாயின், அதனால் பகுத்தறிவென்பதும், ஸ்மரணை யென்பதனுடனுங் கூடப் பாதிக்கப்பட்டு விடுகின் றது. இவ்வாறே மூளைத் தசைகளுக்குண்டாகும் ஒரு வித வலிப்பாலேனும், அல்லது மூளைக்குள் இரத்தக் குழாய்கள் வெடித்து விடுவதனாலேனும், அல்லது மூளை நோயாலேனும், தடைகள் ஏற்படுவதனால் பிரக்ஞாபங்கம், அல்லது காக்கை வலி, அல்லது மூளை ஜன்னி உண்டாய்விடுதல் கூடும். ஆத லின், நம்முடைய மனித அனுபவத்தைக் கொண்டு தெரிந்து கொள்ளும் விஷயம் யாதெனின், ஆத்மாவின் சம்பந்தமானது சரீரத்தினின்றும் முற்றிலும் பிரிக்கப்பட்டு விடுமாயின், அது சுயமே நின்றுகொண்டு ஒரு காரியத்தையும் தனியாகச் செய்துவிட முடியாதென்று மிகச் செம்மையாக எவ்விதச் சந்தேகமு மில்லாது தெரிந்துகொள்ளுகிறோம் என்பதேதான். ஆத்மாவானது தனக்குரிய சரீரத்துடனே சம்பந்தப்பட் டிருக்கு மட்டுந்தான் தன்னுடைய தொழில்களைச் செவ்வனே நிகழ்த்தி வருகின்றது. எனவே, ஆத்மாவானது யாதொரு விதமான சரீர சம்பந்தத்தையும் பெற்றுக்கொள்ளாது தனியே நின்றுகொண்டு எக்காலத்திலும் இன்ப துன்பங் களை அனுபவிக்க முடியுமென்று கூறுவதானது ஒரு சிறிதும் பொருத்தமற்றதாகவே காணப்படா நின்றது.

ஆத்மாவானது சுயமே நின்று தனித்தியங்க முடியு மென்பது ஒருவகை ருசிகரமுள்ள கதையேபோல் காணப் பட்டபோதினும், மனித அனுபவமும் பகுத்தறிவும் அதற் குப் பொருத்தமாய்க் காணப்படவில்லை. சரீரத் தொடர்பி னின்றும் எல்லா விதமான சம்பந்தங்களையும் அறுத்துக் கொண்டுவிட்டபின் ஆத்மாவானது சுயமே தனக்குரிய பரி

பூரணமான நிலைமையைப் பெற்றுக்கொள்ள முடியுமென்று நம்புவதானது நம்முடைய அனுபவத்திற்கு முற்றிலும் மாற்றமாகவே காணப்படாநின்றது. என்னெனின், இப் பௌதிக சரீரத்திற்குண்டாகும் எப்படிப்பட்ட நிலைக் குலைவும் ஆத்மாவின் தொழில்களையும் பாதித்து வருகிறதென்பதை நாம் ஒவ்வொரு நாளும் கண்கூடாகக் கண்டுகொண்டேதான் வருகிறோம். ஆதலின், ஆத்மாவின் நல்லவிதமான நிலைமையானது நல்லவிதமான சரீர நிலைமையையே சார்ந்திருக்கின்றது. என்னெனின், வயோதிகத்தன்மை வந்து தேகத்தைப் பற்றிக்கொள்ளுங்கால், அதனுடனே ஆத்மாவும் பலஹீனமடைந்து வருவதைக் காண்கின்றோம்; அன்றியும், வயோதிகமென்னும் கள்வன் ஞாபகசக்தியையும், புத்திக் கூர்மையையும் முற்றிலும் கொள்ளைகொண்டு விடுகிறான். இதைக் குறித்துக் :குர்ஆன் ஷ‘ரீபும் பின்வருமாறு கூறியிருக்கிறது: لِكَيْلَا يَعْلَمَ مِنْ بَعْدِ عِلْمٍ شَيْئًا “மனிதன் தன்னுடைய பூர்வ ஞான முழுதும் அடியோடு மறந்துவிடக் கூடிய அத்துணை வயோதிகம் வரை ஜீவித்து வருகிறான்”—(22: 5). இவற்றாலெல்லாம் நாம் தெரிந்துகொள்ளக் கடவது யாதெனின், ஆத்மாவென்பது ஏதேனுமோர் சரீரத்தைப் பற்றிக்கொண்டிருந்தா லல்லாது சுயமே எப்படிப்பட்ட காரியத்தையும் செய்யக் கூடாததாகவே அமைந்திருக்கிறதென்பதுதான். ஆத்மாவென்பது எப்பொழுதும் தனியே நின்று இயங்கக் கூடுமாயின், அதை ஒரு சிறிது காலத்திற்குமட்டுமே சேர்ந்திருக்குமாறு இந்தப் பூத வுடம்புடனே பிணைத்து வைத்திருக்கும் சர்வ ஞானம் மிக்க ஆண்டவனின் காரியமானது வெறும் அர்த்தமற்றதாகவே காணப்படுகின்றது.

இன்னமும், மனிதனென்பான் மேன்மேலும் எப்பொழுதும் அபிவிருத்தி யடையக் கூடியவனாகவே அமைந்திருக்கிறான் ; அவனுடைய ஆத்மாவானது அடையவேண்டிய லக்ஷியமும் அளவிடற்கரியதாகவே காணப்படுகிறது. ஆகவே, சிற்சில முன்னேற்ற வாழ்க்கையை யுடைய இத்தரணியிலேயே ஆத்மாவானது சரீரத்தை விட்டுச் சுயமே அபிவிருத்தி யடைய முடியாமலிருந்து வருங்காலையிலே, மரணத்துக்குப் பின்னுள்ள நெடுங்கால அளவற்ற முன்னேற்ற வாழ்க்கையில் மட்டும் இந்த ஆத்மாவானது எவ்வாறு சுயமே தனித்தியங்குதல் சாலும் ?

சுருங்கச் சொல்லுமிடத்து, இஸ்லாத்தின் படிப்பினைகளையெல்லாம் ஆழ்ந்து நோக்குங்கால், ஆத்மாவின் சம்பூர்ண பரிபக்குவமானது ஒரு சரீரத்தின் சேர்க்கையையே முற்றும் எக்காலும் சார்ந்திருப்பதாய்க் காணப்படாநின்றது. ஆனால், மரணத்துக்குப் பின் இந்தப் பூவுடம்பானது ஆத்மாவை விட்டுத் தனியே பிரிந்து விடுகின்றது. ஆயினும், ப'ர்'ஜகி'ல் ஒவ்வோர் ஆன்மாவும் தாற்காலிகமாக ஒரு புதிய சரீரத்தைப் பெற்றுக்கொள்ளுகிறது ; அந்தச் சரீரத்தைக் கொண்டுதான் அவ்வான்மாவானது தன் செய்கைகளுக்குரிய சுக துக்கத்தையெல்லாம் அடைந்து கொள்ளுகிறது. அந்தச் சரீரமானது இங்குள்ளதேபோன்ற பௌதிக ஸ்தூல சரீரமென்று எண்ணிவிடவேண்டாம் ; ஆனால், அச்சரீரம் அவரவருடைய இகலோகச் செய்கைகளுக்குத் தக்கவாறு அவற்றுலாய ஒரு பிரகாசமுள்ள, அல்லது ஓர் இருண்ட சரீரத்தையே எடுத்துக்கொள்ளுகிறது. இதுதான் இஸ்லாத்தில் கூறப்பட்டிருக்கும் ப'ர்'ஜகி'ன் சரீரமாகும். அஃதாவது, இந்தச் சரீரமானது அவரவருடைய நன்மைக்கும் தீமைக்கும் தக்கவாறுன பிர

காசமுள்ள அல்லது இருண்ட சரீரத்தைப் பெற்றுக்கொள்ளு மென்று நமது வேதமே அறைந்திருக்கிறது. இதை நோக்குங் கால் சிலர் அதிசயத்தால் சந்தேகிக்கலாம்; ஆனால், இத் தகைய விவாதமானது புத்திக்கும் பொருத்தமற்றதாயிருக்கிற தென்று ஒருவராலும் கூறுவது முடியாது. இவ்வுலக வாழ்க் கையில் முழுப்பரிபக்குவ மடைந்திருக்கும் மனிதர்கள் இவ் வுலகிலேயே அப்படிப்பட்ட சரீரமொன்று அமைக்கப்பட் டிருப்பதை அறிந்துகொள்ளுகிறார்கள். ஆனால், சாதாரண மான அறிவையுடைய சாமான்யர்களுக்கு இஃதொரு புத்திக் கெட்டாத நூதன அதிசயமாகவே காணப்படுதல்கூடும். ஆயி னும், அவரவருடைய இகலோக நன்மை தீமைகளின்பயனாக விளைந்திருக்கும் மரணத்துக்குப் பின் காணப்படும் பிரகாச மான அல்லது இருண்ட சரீரத்தின் உண்மையை உணர்ந்து கொள்வதில் ஆத்ம ஞான முதிர்ச்சியிலே தக்க பரிபக்குவ மடைந்திருக்கும் எவருக்கும் எவ்விதச் சங்கடமும் ஏற்பட மாட்டாதென்பது திண்ணம். ஆனால், இதற்கெதிராக இவ் விஷயத்தைக்கொண்டு அவர்கள்(இவ் வுலகிலிருந்துகொண்டே உட்பொருள் வெளிப்படும் உலக ரகசியங்களை உணர்ந்து கொண்டவர்கள்) அதிகமதிகம் இன்பத்தையேதான் பெற்றுக் கொள்ளவேண்டி யிருப்பார்கள். சுருக்கிச் சொல்லுமளவில், ப'ர்'ஜகி'ல் அளிக்கப்படும் அந்தப் புதிய சரீரமானது நன்மை தீமைகளின் பலாபலன்களை அனுபவித்தற்குரிய சாதனமாக அமைந்துவிடுகிறது. இவ்விஷயத்தில் எனக்குச் சொந்தமான அனுபவமுண்டு: விழித்த விழிப்பு நிலையி லிருக்கும்போதே, பலப் பல சமயங்களில் இறந்து போயிருந்த மனிதர்களின் தோற்றங்களை உவமதரிசனங்களாக யான் கண்டிருக்கிறேன்.

அனேக விதமான கெட்ட மனிதர்களைக் கறும்புகை போன்ற இருண்ட சரீரத்துடனே நான் பலமுறை பார்த்திருக்கிறேன். எனவேதான் இத்தகைய விஷயங்களில் எனக்குச் சுயமான அனுபவ முண்டென்று அறைந்துகொள்ளுகின்றேன் ; எல் லாம் வல்ல இறைவன் இயம்பியுள்ள வண்ணம் ஒவ்வொரு வருக்கும் ஒவ்வொரு விதமான பிரகாசமுள்ள அல்லது இரு ண்ட சரீரம் கொடுக்கப்படுகிறதென்றே யான் ஊர்ஜிதமாக அழுத்திக் கூறுகின்றேன். பரிபக்குவ மடையாத வெறும் பகுத்தறிவு மட்டுமே இப்படிப்பட்ட இரகசிய விஷயங்களை யெல்லாம் அறிந்து கொள்வதென்பது ஒரு சிறிதும் சாலாது. நேத்திரமென்பது வஸ்துக்களைப் பார்த்துக்கொண்டு வரு கிறது ; ஆனால், அதனை ஒரு ருசி பார்க்கும் கருவியாக அமைத்துவிடுவ தென்பது வீண் மனோராஜ்யமே யாகும். இவ்வாறே நாவின் தசைநார்க ளெல்லாம் வஸ்துக்களின் உரு சியை உணர்ந்துகொள்ள உபயோகிக்கப்படலாம் ; ஆனால், பார்வை யென்னும் தொழிலைச் செய்தற்கு அவை ஒருகாலும் உபயோக மாவதில்லை ; இப்படியே உவம தரிசனங்களால் மட்டுமே உணர்ந்து கொள்ளுதற்குரிய மறுவுலக ஆதிய இரகசியங்களை யெல்லாம் வெறும் பகுத்தறிவைக் கொண்டு மட்டுமே அறிந்து கொள்ளுதல் எக்காலத்தும் எளிதன்று. எல்லாம் வல்ல இறைவன் இவ்வுலகினில் சிற்சில விதமான சட்டங்களை ஏற்படுத்தி வைத்துள்ளான்; ஒவ்வொரு விதமான விஷயத்தை ஒவ்வொரு விதமான ஞானத்தைக் கொண்டே அறிந்துகொள்ள வேண்டுமென்றும் சட்டங் கண்டுள்ளான். ஆதலின், ஒரு விஷயத்தைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டு மாயின், அதற்குரிய துறையை முதன்முதலாக நண்ணுதல்

வேண்டும்; அதன்பின்னர்த்தான் அவ்விஷயத்தின் உண்மையை ஓர்ந்துகொள்ளுதல் சாலும்.

இதுவிஷயத்தைப்பற்றி எழுதிவருங்கால், அல்லாஹுத் தஆலாவின் திருவசனமானது, தவறான ஒழுக்கத்திலும், தீய வழக்கத்திலும் நடந்து செல்பவர்களை உயிரற்று மரித்துப் போனவர்களென்றும், அதற்குமாறாக நல்லடியார்களை உயிருள்ளவர்களென்றும் வருணித்திருப்பதை ஒருபோதும் மறந்துவிடுதல் கூடாது. இதன் அந்தரங்கத் தாத்பரியம் யாதெனின், தெய்வஞானத்தை அருளப்பெறாது ஆண்டவனையே மறந்து கிடப்பவர் வாழ்ந்துவரும் வாழ்க்கையானது வெறும் போனகம் புசித்தலும், பானகம் பருகலும், இவை போன்ற இன்னம் பல மிருக இச்சைகளுள் மூழ்கிக் கிடப்பதுமாகவே இருந்து வருதலினால், அவர்களுடைய மரணத்துடனே அப்போனகபானக வைபவங்களனைத்தும் துண்டிக்கப்பட்டுப் போகின்றன என்பதேயாம். ஏனெனின், ஆத்மார்த்த வாழ்க்கைக்குரிய ஆகாரத்தில் அவர்களுக்குச் சிறிதும் பங்கு கிடைப்பதில்லை; ஆதலின், இறுதித் தீர்ப்புநாளன்று அவர்கள் எழுப்பப்படுவதென்பது, தங்களுக்குரிய தண்டனையைப் பெற்றுக்கொள்வதற்காகவேயாம். இதைப்பற்றித்தான் இறைவனும் தன்னுடைய திருமறையில் இவ்வாறு எடுத்தோதி யிருக்கின்றான்: ومن يات ربه مجرما فان له جهنم لا يموت فيها ولا يحيى "பாபியாகத் தன்னுடைய ரப்'பி'னிடம் வந்து சேருகிற மனிதன் நரகத்திலேயே தனக்குரிய வாஸஸ்தலத்தைப் பெற்றுக் கொள்வான்; அவன் அங்கே சாகவுமாட்டான், பிழைக்கவுமாட்டான்"—(20: 74). ஆனால், அல்லாஹுத் தஆலாவின் நல்லடியார்கள் (நேயர்கள்) தங்களுடைய பௌதிக லோக

மரணத்துடனே மரித்துப் போவதில்லை ; என்னெனின், அவர்கள் தங்களுடைய ஜீவித வாழ்க்கைக்குரிய மூலாதாரத்தைத் தங்களிடம் நிரம்பப் பெற்றிருக்கிறார்கள்.

மூன்றாவது உலகமென்பது இறுதித் தீர்ப்புநாளின் வாழ்க்கைக்குரிய உலகமாகும். அவ்வுலகத்தில் ஒவ்வோர் ஆன்மாவும்—அது நல்லதேயாயினும் தீயதேயாயினும், ஒழுக்கமுள்ளதேயாயினும், ஒழுக்கக் கேடானதேயாயினும், தன் தனக்குரிய ஒரு பிரத்தியக்ஷமான சரீரத்தைப் பெற்றுக் கொள்ளும். இறுதித் தீர்ப்புநாளென்பது, இறைவனது சகல விதமான மேன்மைகளையும் பெருமைகளையும் வெளிக்குக் கொண்டுவரக்கூடிய காலமாய்க் காணப்படுகின்றது ; அப்பொழுது ஒவ்வோர் ஆன்மாவும் ஆண்டவனுடைய உண்மையை முழுக்க முழுக்க நன்றாக அறிந்துகொண்டுவிடும் ; அன்றுதான் ஒவ்வொரு மனிதனும் தன் தனக்குரிய பூர்த்தியான பஹிரங்க சன்மானங்களைத் தன்னுடைய இகலோகச் செய்கைகளின் பிரதிபலனாகப் பெற்றுக்கொள்வான். இவ் விஷயம் எவ்வாறு ஆண்டவனால் நடைபெறப்போகிறதென்பதைக் குறித்து ஒருவரும் ஆச்சரியம் கொள்ளத் தேவையில்லை; என்னெனின், ஆண்டவன் சர்வசக்தி வாய்ந்தவனாயிருக்கிறான். எனவே, அவனால் ஆகாத காரியம் ஒன்றுமிருப்பது முடியாது. அவ்விறைவனே தனது திருமறையில் இவ்வாறு எடுத்தோதி யிருக்கிறான் :—

اولم يرى الا نسان اناخلقناه من نطفة فاذا هو خصيم مبين وضرب لنا مثلا ونسى خلقه قال من يحى العظام وهى رميم قل يحييها الذي انشاها اول مرة وهو بكل خلق عليم ...... اوليس الذي خلق السموات والا رض بقادر على ان يخلق مثلهم بلى وهو الخلا ق العليم انما امره اذا

أراد شيئًا أن يقول له كن فيكون فسبحان الذي بيده ملكوت كل شيء
وإليه ترجعون

“*நாம் உயிர்வாழ்க்கைக்குரிய உயிருள்ள கிருமிகளைக் கொண்டுள்ள இந்திரியத்தினுல் மனிதனைப் படைத்திருக்கிறே மென்பதை அவன் அறிந்திருக்கவில்லையா? பிறகு, அவன் ஒரு பஹிரங்கமான குதர்க்கக்காரனுய் விட்டான். அவன் நம்மைப் பற்றி வீணுகப் பேசிக்கொண்டு தன்னுடைய சொந்த சிருஷ்டி (யின் உண்மை)யையே மறந்திருக்கிறுன். ‘மனிதனுடைய எலும்புகள் மக்கிப்போய் அதன்பின் ஒரு திவலை அடையாளம் கூடக் காணப்படாம லிருக்கும்போது அவனுக்கு உயிரைக் கொடுத்து எழுப்புவதற்கு யாருக்குச் சக்தியிருக்கிறது?’ என்று அவன் சொல்கிறுன். அப்படிப்பட்டவனை நோக்கி, ‘முதன் முதலில் அவர்களுக்குச் சிருஷ்டியைக் கொடுத்தவனே பின்னும் உயிரைக் கொடுப்பான்; அவன் ஒவ்வொரு விதமான சிருஷ்டித் துறையிலும் சாமர்த்தியமுள்ளவனு யிருக்கிறுன்,’ என்று சொல்வீராக. பூமியையும் வானங்களையும் சிருஷ்டித் தவன் உங்களைப்போன்ற ஜீவப்பிராணிகளைச் சிருஷ்டிக்கச் சக்தி யுடைவனுயிருக்க மாட்டானு? வாஸ்தவந்தான்; நிச்சய மாகவே சிருஷ்டிப்பான்; ஏனெனின், அவனே மகா ஞான முள்ள சிருஷ்டிகர்த்தாவாய் விளங்குகிறுன். அவன் ஒரு வஸ்துவைச் சிருஷ்டிக்க நாடுவானுயின், அதை நோக்கி, அவன் ‘ஆகு’ என்று கட்டளையிடுகிறுன்; உடனே அஃது அப்படியே அமைந்துவிடுகிறது. ஆதலின், தன்னுடைய அதிகாரத்தை எல்லா வஸ்துக்களின் மீதும் செலுத்தக்கூடிய அவனுக்கே எல்லாத் தூய்மையும் தகும்; அவன்மாட்டே நீங்களெல்லீ ரும் மீண்டும் செல்வீர்கள்*”—(36: 77—83). இத்திருவாக்கி

யங்களைக் கொண்டு ஆண்டவனையால் முடியாத காரியம் ஒன்று மில்லை யென்பதை நாம் நன்றாகத் தெரிந்துகொள்ளுகிறோம். ஏனெனின், முதன் முதலில் ஒரு மகா மகா சிறிய உயிர்க்கிருமியிலிருந்து இத்துணைப் பெரிய மனிதனைப் படைக்கக்கூடிய அத்துணைப் பெரிய சக்தியுடைய ஆண்டவனுக்கு இவ்வடியானை மீண்டும் உயிர்ப்பிக்கச் செய்வதென்பது ஒருமுடியாத காரியமென்று எவரே கூறத்துணிவர்?

இதற்குமேல் எழுதத் துணியுமுன் இதைப்பற்றிக் கிளப்பப்படும் ஒருவகை ஆக்ஷேபத்தைச் சிறிது ஆராய்ச்சி செய்து பார்ப்பது அத்தியாவசியமாகும். மரணத்துக்குப் பின் இறுதித் தீர்ப்புநாள் மட்டும் மிக்க நெடு நெடுங்காலமொன்று நிகழவேண்டி யிருப்பதால், அதுவரை நல்ல ஆன்மாக்களும் தீய ஆன்மாக்களும் தங்கியிருக்குமென்று கூறப்படுகின்ற ப'ர்'ஜக்' என்னும் இரண்டாவது உலக நிலைமை யென்பது அந்த ஆன்மாக்களை வெறுமையாக அடைத்து வைத்திருக்கக்கூடிய ஒரு பிரயோஜனமற்ற சிறைக்கூடமே போல் காணப்படுகிறதென்று ஒருசிலர் ஆக்ஷேபம் செய்யத் துணியலாம். ஆனால், இப்படிப்பட்ட ஆக்ஷேபமானது அறியாமையைக் கொண்டே நிலைநிறுத்தப்பட் டிருக்கிறதென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை. ஏனெனின், இறுதித் தீர்ப்புநாளைப் போலவே ப'ர்'ஜகு'ம் நன்மை தீமைக்குரிய பலாபலனைப் பெறுதற்குரிய ஒருவகை இடமாகவே அமைந்திருக்கின்றது. ஆனால், இறுதித் தீர்ப்புக்குப்பின் அளிக்கப்படுவதேபோன்ற அத்துணைப் பிரத்தியக்ஷமான தண்டனைகளும் சன்மானங்களும் கொடுக்கப்படாமற் போயினும், ஸ்தூலமான பலாபலன்கள் அவரவருடைய செய்கைகளுக்

குத் தக்கவாருகக் கொடுக்கப்படும் உலகமே ப'ர்'ஜக்' என்று ஆண்டவனது திருவேதமே அறைந்திருக்கிறது. மரணத் துக்குப்பின் உடனே மனிதன் தனக்குரிய பலாபலனைப் பெற்றுக்கொள்கிரு னென்று கூறுதற்குரிய திருவாக்கியங்கள் நமது :குர்ஆன் ஷரீ'பில் அதிகம் மலிந்துகிடக்கின்றன. ஒரு மனிதனைக் குறித்து வியவகரித்துக்கொண்டு வருங்கால், அவ்வேதத்தில் இவ்வாறு காணப்படுகிறது : قِيلَ ادْخُلِ الْجَنَّةَ "சுவர்க்கத்திற்குள் நுழைந்துகொள் என்று அவனுக்குச்சொல் லப்பட்டது"—(36: 26). மற்ருெரு மனிதனைப்பற்றியும் இவ் வாறு காணப்படுகிறது: ஒரு நல்ல மனிதனுக்கு இஸ்லாத்தில் நம்பிக்கையில்லாத நண்பனெருவன் இவ்வுலக வாழ்க்கையில் இருந்துவந்தான் ; அவ்விருவரும் இறந்துபோனபின் அந்த நல்லடியான் தன்னுடைய நண்பனது நிலைமையை அறிந்து கொள்ள வேண்டுமென விரும்பியதால் அவன் இவனுடைய தோற்றத்தில் காண்பிக்கப்பட்டான். فَرَآهُ فِي سَوَاءِ الْجَحِيمِ அப் பொழுதுஅந்த நன்னம்பிக்கையற்ற நண்பன் நரகத்துமத்தியில் இருப்பதாகக் கண்டான்—(37: 55). ஆதலின்,செய்கைகளுக் கேற்ற நன்மை தீமை யென்னும் பலாபலன்கள் மரணத்துக் குப்பின் உடனேயே அளிக்கப்படுகின்றன வென்றும், நரகத் துக்கு அருகதையுள்ளவர்கள் அவ்விடத்திற்குக் கொண்டுசெல் லப் படுகிருர்களென்றும், சுவர்க்கத்துக்கு அருகதையுள்ளவர் கள் அந்தச்சுவர்க்கத்திற்கே கொண்டுசெல்லப் படுகிருர்களென் றும் இப்பொழுது நாம் நன்கு தெரிந்துகொண்டு விட்டோம். ஆனல், ஆண்டவனுடைய அதிஸூக்ஷ்மமான ஞானமுதிர்ச்சி யின் பயனுக இறுதியிலே வெளிப்படுத்தப்பட வேண்டு மென்று ஆக்ஞாபிக்கப்படும் அவனுடைய மகாமேலான

பெருமைக ளனைத்தும் நன்கு வெளியாகக்கூடிய தின மாகவே அவ்விறுதிநாள் அமைந்திருக்கிறது. என்னெனின், ஆண்டவன் தன்னுடைய சிருஷ்டித் தன்மையை ஏனைப் பிராணிகள் உணர்ந்துகொள்ளும் பொருட்டே மனிதனைச் சிருஷ்டித்திருக்கிறான். இவ்வாறே சிருஷ்டிப் பொருள்க ளனைத்தையும் தன்னால் அழித்துவிட முடியுமென்னும் மகா சக்தியை வெளிக்காட்டும் பொருட்டே அவையனைத்தையும் அவன் அழித்தும் விடுவான். இறுதியாக எல்லோருக்கும் அவன் ஒரு பூர்த்தியான உயிரைக் கொடுத்துத் தன்னுடைய சர்வ வல்லமையின் பெருமையை எல்லோருக்கும் எடுத்துக் காட்டும்பொருட்டு அவர்களை ஓரிடத்தில் ஒன்று திரட்டிச் சேர்த்து வைப்பான்.

மறு உலக வாழ்க்கையைப்பற்றிக் :குர்ஆன் ஷரீ'பானது விவரித்திருக்கும் மற்றொரு (இரண்டாவது) முக்கியமான விஷயம் யாதெனின், இவ்வுலக வாழ்க்கையின் ஆத்மார்த்த விஷயமெல்லாம் மறு உலக வாழ்க்கையில் (அது ப'ர்'ஜக'ரயி னும் இறுதித் தீர்ப்பு நாளேயாயினும்) ஸ்தூல உருவங்களா கக் காண்பிக்கப்படும். இதன் சார்பான சில :குர்ஆன் ஆயாத்துக்களை இவ்விடத்தில் நாம் எடுத்துக் காட்டுவோம்: من كان في هذه أعمى فهو في الآخرة أعمى وأضل سبيلا " இவ்வுலக வாழ்க்கையில் குருடா யிருப்பவன் அவ்வுலக வாழ்க்கையிலும் குருடாகவே காணப்படுவான் "—(17: 72). அஃதாவது, இவ் வுலகத்தின் பாரமார்த்திகக் குருட்டுத்தனமென்பது,மறு உலக வாழ்க்கையில் ஸ்பஷ்டமாகத் தோன்றி உண்மையான குருட் டுத்தனமாகவே காணப்படும். خذوه فغلوه ثم الجحيم صلوه ثم في سلسلة ذرعها سبعون ذراعا فاسلكوه " நீங்கள் அவனைப் பற்றிப்

பிடியுங்கள் ; பிறகு அவன் கழுத்தில் சங்கிலிகளை மாட்டுங்கள்; அதன்பின் நரகத்திற்குள் வேகும் பொருட்டுத் தள்ளுங்கள். அதன்பின் எழுபது முழ நீளமுள்ள ஒரு சங்கிலிக்குள்ளே திணியுங்கள்"—(69: 30-32). இவ்வுலக வாழ்க்கையில் ஆத்மார்த்தமாய்க் காணப்படும் அவஸ்தைகளெல்லாம் மறு உலக வாழ்க்கையிலே உண்மையான பிரத்தியக்ஷமுள்ள ஸ்தூல தண்டனைகளாகவே காணப்படுமென்னும் உண்மை மேற்கூறிய திருவாக்கியங்களில் மறைந்து கிடக்கின்றது. உதாஹரணமாக, அவனுடைய கழுத்தில் மாட்டப்படும் சங்கிலியென்பது இவ்வுலக இச்சைகளைக் குறித்து நிற்கும்; ஏனெனின், இப்படிப்பட்ட இச்சைகளே மனிதனை இவ்வுலகத்தின்மீது குப்புறுக் கிடக்குமாறு செய்துவிடுகின்றன. எனவே, இவைதாம் அந்தச் சங்கிலியின் உருவத்தை அடைந்து விடுகின்றன. அப்படிப்பட்ட இவ்வுலகப் பிணிப்புக்களே மறு உலக வாழ்க்கையில் மனிதனுடைய கால்களிலும் தளையப்பட்டிருக்கும் சங்கிலிகளாய்க் காணப்படும். இவ்வண்ணமாகவே இவ்வுலகிலிருந்துவரும் மனக் கொதிப்பென்பதுதான் மறுஉலக வாழ்க்கையில் எரிந்து கொண்டிருக்கும் அக்கினிப் பிழம்புகளாய்க் காணப்படும். உண்மையிலே இவ்வுலக வாழ்க்கையில் கெட்ட மனிதனுக்கு அவனுடைய உள்ளத்தின்கண் நரகம்போன்ற அத்துணைப் பெரிய ஆசைகளும், அணைக்க முடியாத ஆவல்களும் குடிகொண்டிருக்கின்றன. இப்படிப்பட்ட அடக்க முடியாத ஆர்வங்களில் தோல்வியுறும் போதெல்லாம் அவனுடைய உள்ளத்தின்கண் அந்தநரகத்தின் ஜுவாலைதான் அனல் விட்டெரியத் தலைப்படுகிறதென்பதை நன்குணர்ந்து கொள்ளுகிறான். ஆதலின், அவனுடைய இகலோக இச்சைகளில்

வெற்றி பெறுமல் தோல்வியுடனே நெடுந் தூரத்தில் ஒதுக்கி வைக்கப்படும்போதெல்லாம், அவன்றனக்கு இனி என்செய்வதென்னும் இடைவிடா ஏக்கத்தின் தோற்றமே காணப்பட்டு, தன்னரிய விருப்பங்கள் நிறைவேறவில்லையே யென்னும் அவனுடைய மனவெரிச்சலும், கொடிய பெரு மூச்சுக்களும் எரிகின்ற அக்கினியின் ஸ்வரூபத்தையே அடைந்துவிடுகின்றன. :குர்ஆன் ஷரீ'பும் இது குறித்து இவ்வாறு கூறியிருக்கின்றது: وحيل بينهم وبين ما يشتهون "மேலும் அவர்களுக்கும், அவர்களுடைய இச்சைக்குமிடையில் ஒருவகைத் தடையானது உண்டுபண்ணப் பட்டுவிடும்"—(35:54). இதுதான் அவர்களுக்குரிய நரக வேதனையின் ஆரம்பமாகும்.

எழுபதுமுழ நீளமுள்ள சங்கிலிக்குள் திணித்துவைப்பதென்பதும் அதேவிதமான ஆழிய இரகசியத்தைத்தான் அறிவித்து நிற்கின்றது. சராசரியாகப் பார்க்கப் புகுங்கால், மனிதனுடைய வயதானது சுமார் எழுபதாகவே இருக்கிறதென்று ஒருவாறு செப்பலாம். எனவே, தீய மனிதனொருவன் தன்னுடைய தீக்கருமத்தில் அத்துணை வயதுமட்டுமே கொடுங்காலங் கழித்து வருகிறுன். சிற்சில வேளைகளில் அவன் தன்னுடைய இளமைப் பருவத்தையும், வயோதிகம் நிறைந்த முதுமைப் பருவத்தையும் நீக்கிவிட்டு, அவ்விரண்டற்கும் இடையிட்ட காலத்தையே அந்த எழுபது ஆண்டுகளாகக் கழித்து வருவான். நல்லெண்ணத்துடனும், ஞானவளத்துடனும், உண்மையான உழைப்புடனும் தனக்கும் பிறருக்கும் பயன்தரத் தக்கவிதமாய் உழைத்துவரக் கூடிய அப்படிப்பட்ட ஆயுட்காலமாகிய அந்த எழுபது வருஷத்தையும் இவ்வுலகத்தின் சன்னல் பின்னல்களிலும், தன்

னுடைய ஐம்பொறிக்குமுரிய சித்தவிகாரங்களிலுமேதாம் வீணாகக் கழித்துவிடுகிறான். இப்படிப்பட்டவன் இகலோக இச்சைகளென்னும் அந்தச் சங்கிலியிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள ஒரு சிறிதும் முயற்சி யெடுத்துக்கொள்வதில்லை; ஆதலின், மறு உலக வாழ்க்கையில், அவனால் இவ்வுலக வாழ்க்கையின்போது எழுபது வருஷகாலமட்டும் அனுபவிக்கப்பட்டுவந்த பேராசைக ளென்னும் பெரிய சங்கிலியானது எழுபது முழ நீளமுள்ளதாக அமைக்கப்பட்டு விடுகிறது; இவ்வுலகத்தில் அவனால் தீய வழியில் கழிக்கப்பட்டுவந்த ஒவ்வோர் ஆண்டும் அந்தச் சங்கிலியின் ஒவ்வொரு முழமாகக் கருதப்படுகிறது; இதில்தான் அவன் சிக்குண்டு கிடப்பான். எனவே, ஆண்டவன்தான் சுயமே இப்படிப்பட்ட கஷ்டங்களை யெல்லாம் மனிதர்களுக்குக் காரண மில்லாமல் கொடுத்துக்கொண் டிருக்கிறான் என்று எண்ணிவிட வேண்டாம். ஆனால், அவனுக்கு அளிக்கப்படும் சங்கிலி யென்னும் அத்தண்டனையானது அவனுடைய கரங்களினாலேயே இழைக்கப்பட் டிருக்கின்றதென்பதில் கிஞ்சித்தும் சந்தேக மில்லை. ஆதலின், அவனவனுடைய செய்கைளின் பலாபலனே அவனவனுக்கு முரிய தண்டனையாக வந்து மூண்டுவிடுகின்றது. இவ்விஷயமானது :குர்ஆன் ஷரீ'பில் இவ்வாறும் வருணிக்கப்பட் டிருக்கிறது: انطلقوا الى ظل ذي ثلث شعب لا ظليل ولا يغني من اللهب "ஏ தீய மனிதர்காள்! உங்களை உஷ்ணத்திலிருந்து காப்பாற்ற முடியாத அப்படிப்பட்ட மூன்று கிளைகளின் நிழலுக்குள் ஒதுங்குவீர்களாக; ஆனால், தீயின் ஜ்வாலையை விட்டுக் காப்பாற்றுவதற்கு அஃதொன்றும் பயன்படமாட்டாது"—(77:30,31) இவ்விடத்தில்

குறிப்பிடப்பட் டிருக்கும் மூன்று கிளைகளென்பன தீய அடியானின் மிருக சுபாவத்தையும், காட்டு மிருகாண்டித் தனத்தையும், விவேக சூன்யத்தையுமே சுட்டிக் காட்டுகின்றன ; இம்மூவகையான குண விசேஷங்களே தமக்குள் சீர்திருத்த மடையாமல் அவ்வடியானைத் தவறான வழியிலும், தீய காரியத்திலும் நுழைத்துவிடுகின்றன. இம்மூவகையான குணக் கேடுகளே இறுதித் தீர்ப்பு நாளன்று மூன்று விதக் கிளைகளாகத் தோன்றி நிற்கும் ; அவற்றில் இலைகளும், தழைகளும் ஒரு சிறிதும் காணப்பட மாட்டா வாதலின், அவற்றால் நிழல் உண்டாய்க் கிஞ்சித்தும் பிரயோஜனம் உண்டாகப் போவதில்லை யென்பது வெள்ளிடைமலை. இப்படியே அக்கிளைகள்மீது அதிக உஷ்ணம் தாக்கி அவற்றை நாசப் படுத்திவிடப் போவது மில்லை.

ஆனால், அதற்கு மாறான தன்மையை யுடைய சுவனபதிக்குரிய நல்லடியார்களைப்பற்றி நமது திருவேதமானது பின் வருமாறு வரைந்திருக்கின்றது: يوم ترى المؤمنين والمؤمنات يسعى نورهم بين ايديهم وبايمانهم "அன்றைத் தினத்தில் நன்னம்பிக்கைகொண்ட ஆடவர்களையும் நன்னம்பிக்கைகொண்ட பெண்டிர்களையும் நீர் காண்பீர் ; அவ்வமயம் அவர்களுடைய பிரகாசமானது—இவ்வுலக வாழ்க்கையில் மறைத்து வைக்கப் பட்டிருந்தது—முழு ஜோதியுடனே அவர்களுக்கு முன்னாகவும் வலப் புறமாகவும் ஓடிக்கொண்டிருக்கும் "—(57: 12). மற்றோரிடத்தில் இவ்வாறும் காணப்படுகின்றது: يوم تبيض وجوه وتسود وجوه " அந்நாளின்போது சில வதனங்கள் வெளுத்துக் காணப்படும் ; மற்றும் சில வதனங்கள் கறுத்துக் காணப்படும் "—(3: 105). இன்னமும் இவ்வாறு காணப்படுகிறது:

مثل الجنة التى وعد المتقون فيها انهار من ماء غير اسن وانهار من لبن لم يتغير طعمه.... وانهار من عسل مصفى "கெட்டுப் போகாதஜலத்தையுடைய நீராறுகளும், மாறுபாடடையாத ருசியையுடைய பாலாறுகளும், மயக்கத்தை உண்டுபண்ணக் கூடாத—ஆனால், பருகுபவருக்கு ஆனந்தத்தையே அளிக்கவல்ல மது ததும்பும் ஆறுகளும், பரிசுத்தமாக்கப்பட்ட தேனையுடைய ஆறுகளும் நிரம்பி யிருக்கும் உய்யானமொன்று இருப்பதாக நினைத்துக் கொள்ளுங்கள். இதுதான் சன்மார்க்க ஒழுக்கத்திலே நடந்து செல்பவருக்கு அளிக்கப்படும் சுவர்க்கானந்தத்தின் வருணனையா யிருக்கின்றது"—(47: 15). இத்திருவாக்கியத்திலிருந்து நாம் தெரிந்து கொள்ளக் கடவது யாதெனின், நல்லடியார்களுக்கு அளிக்கப்படுவதாய்க் கூறப்படும் சுவர்க்கானந்த மென்னப்படுவது மேற்கூறிய சகலவித இனிய வஸ்துக்களாலும் நிரம்பப் பெற்ற எல்லையில்லாத மகா சமுத்திரங்களையே சுட்டிக் காட்டுகின்றது என்பதுதான். இவ்வுலக வாழ்க்கையிலே ஆத்மார்த்தத் துறையில் நல்லடியார்கள் பருகிவரும் பாரமார்த்திக நீரொழுக்கே அவ்வுலகத்தில் அந்தப் பரிசுத்த முள்ள நீரருவிகளாய்ப் பகிரங்கமாகக் காணப்படுகின்றது; இவ்வுலக வாழ்க்கையில் குழந்தைகள் நல்ல பசுவின் பாலைப் பருகுவதே போல் பாரமார்த்திகத் துறையின் ஆத்மார்த்தப் பாலை அருந்தி யிருக்கும் நல்லடியார்கள் அவ்வுலக வாழ்க்கையிலும் அப்படிப்பட்ட பாலாறுகளை நிதரிசனமாகக் கண்டு கொள்ளுகிறார்கள்; இவ்வுலக வாழ்க்கையில் ஆண்டவனுடைய பக்தி விசுவாசமென்னும் அழகிய மதுவை ஆத்மார்த்தமாக உட்கொண்டு ஆனந்தப்பெருவாரிதியுள்ளே மூழ்கியிருந்தவர்கள் அவ்வுலக வாழ்க்கையிலும் அப்படிப்பட்ட மது

கிரம்பிய ஆறுகளைக் கண்டு கொள்ளுகின்றார்கள்; இவ்வுலக வாழ்க்கையின் பாரமார்த்திகத் துறையிலே ஆத்மார்த்தமாய் அருந்தப்படும் நன்னம்பிக்கை யென்னும் இனிய தேனே அவ்வுலக வாழ்க்கையிலும் அப்படிப்பட்ட பிரத்தியக்ஷ ஆறுகளாய்க் காணப்படும். இவ்வுலகத்திலுள்ள ஒவ்வொரு நல்லடியானின் சன்மார்க்கப் பாரமார்த்திக ஒழுக்கமும் அந்நாளில் அனைவருடைய பார்வையிலும் உய்யானங்களாகவும், ஆங்குள்ள அழகிய அருவிகளாகவுமே காணப்படும். அன்றைப் பொழுதிலே தான் எல்லாம் வல்ல அல்லாஹுத் தஆ'லாவும் சன்மார்க்க ஒழுக்க முடையார் முன்னே தனக்குரிய முழுக்கம்பீரத்துடனே வெளித்தோற்றத்தில் காணப்படுவான். சுருக்கிச் சொல்ல வேண்டுமாயின், ஈங்குள்ள ஆத்மார்த்த வாழ்க்கை யென்பது அவ்வுலகிலே மறைவாகக் காணப்படாமல் அகக்கண்ணுக்குப் பிரத்தியக்ஷமான பகிரங்கத் தோற்றங்களாகவே திகழ்ந்துகொண் டிருக்கும்.

மறு உலக வாழ்க்கையைக் குறித்து நமது குர்ஆன் ஷரீபானது மூன்றாவது விஷயமாகக் கூறும் முக்கியமான அம்சம் யாதெனின், அவ்வுலக வாழ்க்கையில் அபிவிருத்தி யென்பது எல்லை யில்லாமல் உயர்ந்தோங்கிக்கொண்டே வளர்ந்தோங்கிக்கொண்டே யிருக்கக்கூடியதாகவே அமைந்திருக்கிறது என்பதுதான். அல்லா(ஹ்)வின் திருவசனம் இவ்வாறு அறைந்துகொண் டிருக்கிறது: والذين امنوا معه نورهم يسعى بين ايديهم وبايمانهم يقولون ربنا اتمم لنا نورنا واغفر لنا انك على كل شيء قدير "இவ்வுலக வாழ்க்கையிலே நன்னம்பிக்கையின் பிரகாசத்தை (அதிகம்) அடைந்திருக்கிறவர்கள், இறுதித் தீர்ப்பு நாளன்று தங்கள் முன்புறமாகவும் வலப்புறமாகவும்

தங்கள் ஜோதி ஓடிக்கொண்டிருப்பதைக் கண்டுகொள்வார்கள்; அவர்கள் இவ்வாறும் சதா சொல்லிக்கொண்டே யிருப்பார்கள்: 'எங்கள் ரக்ஷகனே! எங்கள் ஜோதியைப் பரிபூரணமாக்கி வைத்து, எங்களையும் நின்னுடைய பாதுகாப்பினுள்ளே அழைத்துக் கொள்வாயாக. நிச்சயமாகவே, எல்லாவற்றின் மீதும் நினக்குப் பேராண்மை யிருக்கின்றது''—(66:8). இத்தகைய ஆர்வம் அவர்களுக்குச் சதா இருந்து வருமென்பது, சுவர்க்கத்தின் அபிவிருத்தியானது எப்பொழுதுமே முடிவடையாமலேதான் மேன்மேலும் வளர்ந்தோங்கிக் கொண்டே வரக்கூடியதா யிருக்கிறதென்பதை நன்றாக எடுத்துக் காட்டியிருக்கிறது. ஏனெனின், அவ்வுலக வாழ்க்கையிலே ஒருவிதமான மேன்மையை அந்த நல்லடியார்கள் அடைந்து விடுவார்களாயின், அவர்கள் அவ்வளவோடு திருப்தியடையாது மேன்மேலும் அபிவிருத்தி யடையவே விருப்பங்கொண்டிருப்பார்கள். எனவே, அவர்கள் ஒவ்வொரு படித்தரத்தையும் தாண்டித் தாண்டிக்கொண்டு மேன் மேலும் ஏறிச்செல்லுங்கால், அவர்கள் அதற்கு முன் அனுபவித்து வந்த படித்தரத்தைத் தாழ்மையுற்றதாகவே கண்டுகொள்வார்கள்; இவ்வாறே அவர்கள் மேன்மேலும் அபிவிருத்தி யடைந்துகொண்டே செல்வார்கள். அவர்கள் அதிக ஆவலுடன் ஒருவகைப் படித்தரத்தை அடைந்தவுடனே அதற்கும் மேலுள்ள இன்னம் பெரிய படித்தரத்தையே அடைய வேண்டு மென்னும் ஆவலைக் கொண்டுவிடுவார்கள். எனவே, இவ்வாறாக அவர்கள் மேன்மேலும் ஓயாமலே அபிவிருத்தி யடைந்துகொண்டே சென்றுகொண் டிருக்கச் சதா பிரார்த்தனை புரிந்துகொண்டே யிருப்பார்கள். இவ்வாறு மேன்

மேலும் பரிபூரண மடைய வேண்டுமென்னும் இச்சையானது அவர்கள்பால் ஓயாமலே இருந்துகொண்டே யிருப்பதனால், அவர்களுடைய மேன்மையும் ஒரு போதும் முடிவடையாமலே அபிவிருத்தி யடைந்து கொண்டேதான் இருந்துவருமென்று நாம் நன்கு தெரிந்துகொள்ளுகிறோம்.

சுருக்கிச் சொல்லுமிடத்து, சன்மார்க்க நல்லொழுக்கமுடையார்கள் அவ்வுலக வாழ்க்கையிலே மேன்மேலும் அளவில்லாத விதமாக அபிவிருத்தியை அடைந்துகொண்டேதான் செல்வார்கள் ; அவர்கள் ஒருபோதும் திரும்பி இறங்கமாட்டார்கள் ; அன்றியும், அவர்களுக் களிக்கப்படும் சுவர்க்கானந்தமும் ஒருபோதும் பிடுங்கப்பட்டும் போகமாட்டாது. ஆனால், مغفرة (மஃக்‘பிரத்) என்னும் ‘மன்னிப்பை’ அடைவதென்பதன் தாத்பரியம் என்னவென்று சிலர் ஈண்டுச் சந்தேகித்தல் சாலும். என்னெனின், சுவர்க்கத்துக்குள்ளே நுழைந்து இறைவனது மன்னிப்பையும் அடைந்து கொண்டதன் பின் மஃக்‘பிரத்தின் அவசியம் ஏதென்று அவர்கள் கேட்கின்றார்கள். ஆனால், அவர்கள் விடுப்பது வியர்த்தமான வீண் வினாவாகவே காணப்படாநின்றது. ஏனெனின், مغفرة மஃக்‘பிரத், இன்னும் استغفار இஸ்தி‘:க்‘பார் என்னும் பதங்களின் உண்மையான உட்கருத்தை அவர்கள் ஒரு சிறிதும் உணர்ந்து கொள்வதில்லை. மஃக்‘பிரத் தென்பது எப்படிப்பட்ட குறையையும் அழுத்தி மறைத்துவைப்ப தென்பாகும். ஆனால், நல்லடியார்களின் பிரார்த்தனையானது, ஆண்டவனுடைய அன்பானந்தத்தை ஆதியோடந்தம் வரை அதிகமாக அளித்தருள வேண்டுமென்றும், அவனது ஜோதியிலே தங்களை முற்றும்

ஆழ்த்தி வைக்க வேண்டுமென்றும் குறையிரந்து நிற்பதே யாகும். அவர்கள் ஒவ்வொரு படியின்மீதும் ஏறிச் சதா மேன்மேலும் செல்லுங்கால், அதற்கு மேலே தாங்கள் அடை தற்கு விரும்பும் படித்தரத்துடனே ஒப்பு நோக்குங்கால், அஃது இப்பொழுது இருந்து வரும் படித்தரத்தைப் பார்க்கினும் தாழ்வான படித்தரமென்றே அறிந்துகொண்டு, மேன் மேலும் அபிவிருத்தி யடைய ஆசை கொள்ளுங்காலே இக் கீழான படித்தரத்தில் காணப்படக் கூடிய குறைபாடுகளை அழுத்திவிடுமாறு ஆண்டவனின் பால் பிரார்த்தனை புரி வார்கள். எனவே, அவர்கள் அடையவேண்டிய அபிவிருத்தி யானது அளவில்லாமலே இருந்து வருதலினால், பார மார்த்திக மேலான படித்தரத்தை யடைந்து கொண்டு செல்லச் செல்லக் கீழே காணப்படும் அவ்வப்படித்தரத்தின் குறைபாடுகளையும் நீக்கி வைக்குமாறு அவர்களால் விரும்பப் படும் ம'க்'பிரத்தும் ஒழிவற்றதாகவே காணப்படும். ஆதலின், இப்பொழுது நாம் இஸ்தி'க்'பாரின் உண்மையான கருத்து இன்னதுதா னென்பதை நன்றாகத் தெரிந்து கொண்டு விட்டோம். ஆனால்,சில அறிவற்ற மாக்கள், எமது வள்ளல்ஸல் அவர்களும் பாபத்தில் வீழ்ந்துவிட்ட காரணத்தினாலேதான் ஆண்டவனிடம் இஸ்தி'க்'பார் (பாப மன்னிப்பைத்) தேடி நிற்கின்றார்கள் எனப் புலம்பிக்கொண் டிருக்கின்றனர். எனி னும், இதுகாறும் நாம் சொல்லிக்கொண்டு வந்ததிலிருந்து இஸ்தி'க்'பாரின் இச்சைதான் மனிதனுக்குப் பெருமையை அளிக்கத்தக்கதா யிருக்கின்றது என்பதை நன்கு தெரிந்து கொள்ளுதல் வேண்டும். ஏனெனின், இதுதான் மனிதனால் அடையப்பட வேண்டிய மகாமேலான உச்ச நிலைகளுக்கெல்

லாம் உய்த்துக்கொண்டு செல்லக் கூடியதாக அமைந்திருக்கிறது. பெண் வயிற்றினின்று தோன்றிய மனிதனொருவன் அடிக்கடி இஸ்தி:க்'பாரின் பக்கல் திரும்பானாயின், அவன் ஒரு மனிதனுகான்; ஆனால், ஒரு புழுவாகவே யிருக்கிறான். அவன் குருடா யிருக்கிறான்; நேத்திரங்க ளுடையவனல்லன். அவனது ஹிருதயமும் பரிசுத்தக் குறைவுள்ளதா யிருக்கின்றது.

சுருங்கச் சொல்லி விளங்க வைக்க வேண்டுமாயின், :குர்ஆன் ஷரீ'பின் போதனையின் பிரகாரம் சுவர்க்கமென்பதும், நரகமென்பதும் மனிதர்களால் இவ்வுலக வாழ்க்கையின்போது சுயமே உண்டு பண்ணிக் கொள்ளப்படும் அவரவருடைய பாரமார்த்திகத்துக்குரிய பிரதி பிம்ப உருவமாகவே காணப் படுகின்றன. எனவே, நம்முடைய செய்கைகளை விட்டு நமக்குரிய சுவர்க்க நரகங்களெல்லாம் வெளியிலே வேறோ ரிடத்திலிருந்து வந்து முளைக்கும் புதிய பௌதிக உலகங்க ளல்ல. நம்முடைய இகலோகச் செய்கைகளின் பலா பலன்களுக்குரிய நிலைமைகளே அப் பரலோகத்தின் சுவர்க்க நரகங்களாக அமைந்துவிடுகின்றன ; அவை பிரத்தியக்ஷமாகவும் கண்கூடாகவும் ஆங்குக் காணப்படும். உங்களுக்கு விருப்பமிருப்பின், அவற்றினை ஸ்தூல உலகங்க ளென்று அழைத்துக் கொள்க. ஆனால், அவையனைத்தும் இவ்வுலக வாழ்க்கையிலே காணப்பட்டு வந்த ஆத்மார்த்த விஷயங்களின் பிரதிநிலையான உருவங்களாகவே அமைந்திருக்கின்றன. சுவர்க்க லோகக் கழனிகளில், இகலோகத்திலுள்ள விருக்ஷங்களை போன்ற தருக்களே நடப்பட்டிருக்கு மென்றும், நரக லோகத்தில் நெருப்புக் கற்களும், கந்தகமும் நிரம்பியிருக்கு மென்றும் சொல்லக் கூடிய முறையிலே நாம் அவற்றினை

ஸ்தூல உலகங்களென்று கூறுவது கிடையாது. ஆனால், நம்முடைய இக லோகப் பாரமார்த்திகச் செய்கைகளின் பிரதி பிம்பங்களையே நாம் அங்கே காண்போ மென்னும் பொருளிலேயே அவற்றைப் பௌதிக வஸ்துக்களென்று கொள்ளுகிறோம். ஏனெனின், இஸ்லாத்தின் போதனையின் படி சுவர்க்க நரகங்கள் என்பன நாம் இகலோகத்தி லிழைத்து வரும் காரியாதிகளின் சரியான பிரதிபிம்பமாகவே அமைந்து கிடக்கின்றன.



## இவ்வுலக மனிதவாழ்க்கையின் நோக்கமும், அதனைப் பூர்த்தி செய்துகொள்ளும் மார்க்கமும்





மஹாநாட்டில் விடுக்கப்பட்டுள்ள மூன்றாவது வினாவானது, இவ்வுலகில் மனித வாழ்க்கையின் நோக்கம் யாதாயிருக்கின்றதென்பதும், அப்படிப்பட்ட நோக்கத்தை அடையவேண்டிய மார்க்கம் யாதாயிருக்கின்றதென்பது மாகும். பற்பல விதமான மனிதர்கள், தங்கள் தங்கள் மேற்போக்கான நோக்கத்தினாலேனும் குறுகிய மனப்பான்மையினாலேனும் கயமையான இச்சைகளையும், இவ்வுலக வாழ்க்கைக்குரிய இழிய இன்பங்களையும் நிறைவேற்றிக் கொள்வதையே பொதுவாகத் தங்கருத்தாகக் கொண்டுள்ள காரியங்களையே தங்களுடைய இவ்வுலக முக்கிய நோக்கமென்று எண்ணிக்கொண்டிருக்கிறார்களென்பதை ஈண்டு எடுத்துரைக்கவும் வேண்டுவதின்று. ஆனால், எல்லாம்வல்ல இறைவன் தன்னுடைய பரிசுத்தத் திருமறையிலே மனிதவாழ்க்கையின் நோக்கத்தை மகா இலாக்கிய முள்ளதென்று கூறியிருக்கிறான்; :குர்ஆன் ஷரீ'ப் இவ்வாறு அதனை வருணித்திருக்கின்றது: — ماخلقت الجن والانس الا ليعبدون "ஜின்களையும் மனிதர்களையும், அவர்கள் என்னை அறிந்துகொண்டு என்னை வணங்குவதற்காகவே யல்லாமல், நான் வீணாகப் படைக்கவில்லை"—(51: 56). ஆதலின், :குர்ஆன் ஷரீ'பின் கொள்கையின்

பிரகாரம் மனித வாழ்க்கையின் உண்மையான நோக்க மானது, ஆண்டவனைப்பற்றிய மெய்யான ஞானத்தைப் பெற்றுக்கொண்டு, அவனை வணங்கி வருவதே யாகும். எனவே, என்னகாரியம் சொல்லப்பட்ட அல்லது செய்யப் பட்டபோதினும், எல்லாம் அவனுக்காகவே சொல்லப்படுகிற தென்றும் செய்யப்படுகிறதென்றும் பரிபூரணமாக நம்பிய மனத்துடன் அவனுடைய நாட்டத்துக்கே முற்றிலும் தலை சாய்த்துவிட வேண்டுவதுதான் அத்தியாவசியமாய்க் காணப் படா நின்றது. குறைந்தபக்ஷம் ஒரு விஷயம் மட்டுமேனும் பிரத்தியக்ஷமாக விளங்காமற் போகவில்லை. அஃதாவது, தன் னுடைய உயிர்வாழ்க்கையின் நோக்கம் இன்னதுதா னென்று நிச்சயப்படுத்திக்கொள்வதில் மனிதனுக்கொன்றும் சொந்த மான சுயேச்சை அமைந்திருக்கவில்லை என்பதுதான். அவன் தன் இஷ்டப்பிரகாரம் இவ்வுலக வாழ்க்கையுள் நுழைவ தில்லை; அல்லது தன் இஷ்டப்பிரகாரம் இவ்வுலக வாழ்க் கையைவிட்டு நீங்குவதுமில்லை. அவன் ஒரு சிருஷ்டிக்கப்பட்ட பிராணியாகவே காணப்படுகிறான்; அவனை இவ்வாறு சிருஷ் டித்து, மற்றைப் பிராணிகளுக்கு அளித்திருப்பனவற்றைக் காட்டினும் மேலானவும் நேர்த்தியானவுமான சக்திகளையும் சாமர்த்தியங்களையும் கொடுத்தருளியிருக்கும் சிருஷ்டிகர்த்தா வானவன் அவனுடைய சிருஷ்டியில் ஒருவித உயர்தரமான நோக்கத்தையே அமைத்திருக்கிறா னென்பது நன்கு புலனு காமற் போகவில்லை.

இத்தன்மைத் தாய மானிட வாழ்க்கையின் ஆழிய அந் தரங்க நோக்கத்தை ஒருவன் உணர்ந்து கொள்ளட்டும்; அல்லது அதனை அவன் உணர்ந்துகொள்ளாமலே போகட்டும்;

அல்லது அவன் அவ்வுயரிய நோக்கை உணர்ந்துகொள்ள முடியாம லிருக்குமாறு அனேகவிதமான வேறுபல நோக்கங் கள் அவனுடைய மூளைக்குள் வந்து நுழைந்துகொண்டிருக் கட்டும். யார் என்னவிதமான காரணத்தைக் கொண்டேனும் தனது சிருஷ்டியின் நோக்கத்தை அறிந்துகொள்ளாமற் போயி னும், மனித சிருஷ்டியின் முக்கிய நோக்கமானது, எல்லாம் வல்ல அல்லாஹு தஆ'லாவை அறிந்து, அவனையே வணங்கி, அவனுக்காகவே உயிர்வாழ்க்கை செய்வதே யாகு மென்பதில் கிஞ்சித்தும் சந்தேக மென்பதில்லை. எமது :குர்ஆன் ஷரீ'பும் இதுகுறித்து இவ்வாறு கூறியிருக் கின்றது: ان الدين عند الله الاسلام "நிச்சயமாகவே ஆண் டவனைப்பற்றிய உண்மையான ஞானத்தைக் கொடுத்து, அவனை வணங்குதற்குரிய மகா சிலாக்கிய மான மார்க்கத் தையும் காட்டக்கூடிய மதமானது இஸ்லாமாகவே அமைந் திருக்கிறது"-(3: 18). فطرة الله التى فطر الناس عليها... ذالك الدين القيم " இஸ்லாமார்க்கம் மனித இயற்கைக்கு வேண்டிய எல்லாத் தேவைகளையும் அறிந்து கொடுக் கக்கூடியதா யிருக்கிறது ; ஆண்டவனும் அப்படிப்பட்ட இஸ்லாத்தின் மாதிரிக் கொத்தவாறாகவே அவ்விஸ்லாத்திற் காகவே மனிதனைப் படைத்திருக்கிறான். அஃதாவது, மனிதன் தன் சக்திகளையும், சாமர்த்தியங்களையும் ஆண்ட வன் மாட்டு அன்பையும், அடக்கத்தையும், வணக் கத்தையும் காட்டுதற்காகவே பெற்றிருக்கிறா னென்று வற் புறுத்தும் வண்ணமாகவே அவன் அவ்வடியானைப் படைத் திருக்கிறான். இக் காரணத்தினாலேதான் அவ்வெல்லாம்வல்ல அல்லாஹு தஆ'லாவானவன் இஸ்லாத்திற்கு ஒத்தவா

றுண சர்வ சக்திகளையும் சாமர்த்தியங்களையும் தன் அடியான் மாட்டு அமைத்து வைத்திருக்கிறுன் ''—(30: 30).

மேற்கூறிய இரண்டு திருவாக்கியங்களின் ஆழிய தாத்பரியத்தைக் குறித்து நாம் ஈண்டு அதிகம் எழுதிக்கொண்டிருக்கத் தேவையில்லை. முதல் விஞவின் மூன்ருவது பாகத்துக்கு விடையிறுக்குங்கால் இதைப்பற்றிய விவரம் சிறிது இதற்கு முன்னமே கூறப்பட்டிருக்கிறது. எனினும், இஸ்லாத்துக் கொத்தவாறு மனித சக்திகள் எவ்வாறு அமைக்கப் பட்டிருக்கின்றன வென்னும் அந்த ஆச்சரியகரமான அழகிய பொருத்தத்தைக் குறித்து யாம் இவ்விடத்தில் இன்னம் சில விஷயங்களை எடுத்தோதலாம். மனித ஸ்வபாவத்தில் அந்தரங்கமாகவும் பகிரங்கமாகவும் காணப்படாநின்ற சக்திகளும் சாமர்த்தியங்களும், அவற்றைச் சிருஷ்டித்திருக்கும் மகா மேலான நோக்கமானது ஆண்டவன்மாட்டு அபிமானம் பாராட்டி அவனையே வணங்குவதா யிருக்கின்ற தென்றே நமக்கு நன்ருக அறிவுறுத்திக்கொண் டிருக்கின்றன. உண்மையான இன்பவாழ் வென்பது—இதுதான் உயிர் வாழ்க்கையின் உயரிய நோக்கமென்று எல்லோராலும் பொதுவாகக் கருதப்பட்டு வருகின்றது—மனிதர்களால் பின்பற்றப்பட்டு வரும் வெவ்வேறுவிதமான துறைகளிலிருந்து ஒருசிறிதும் பெற்றுக்கொள்ளப் படுவதென்பது முடியாது; ஆனல், ஆண்டவன் மூலமாகத்தான் அப்படிப்பட்ட ஆனந்தத்தை அடைந்துகொள்வது சாலும். இவ்வுலக வாழ்க்கையிலே ஒருவன் அடைந்து வரும் எல்லாவிதமான இன்பங்களும் சேர்ந்து, அவன் இத்தரணியைவிட்டு நீங்குதற்குரிய இறுதி நிமிடங்களில் அவனுடைய உள்ளத்தின்கண் சதா துன்

புறுத்திக்கொண்டிருக்கும் துயரத்தினின்றும் அவனை நீக்கி வைப்பதற்குரிய யோக்கியதையைப் பெற்றில்லை யென்பது திண்ணமே யாம். மகா பெரிய குபேரதனம் படைத்த ஐசுவரியவானும், மிகப் பெரிய கெய்ஸர் பதவியை வகித்த உயர்தர உத்தியோகஸ்தனும், மாபெரும் வர்த்தகச் சிரேஷ்டனை ராக் பெல்லரைப்போன்ற வியாபாரச் சிங்கமும், மிக மிகப் பெரிய அரசனும், இவ்வுலகில் காணப்படும் மகா மகா ஞானவானான தத்துவ சாஸ்திரியும், ஆதிய இன்னோரன்ன பற்பல விதமான மகான்களும் தங்கள் இறுதி வேளையிலே மனச் சாந்தியைப் பெற்றுக் கொள்வதில்லை ; அவர்களெல்லாரும் பற்பல விதமான ஏமாற்றத்திற்குரிய உக்கிரக் கழிவிரக்கத்திற்கு இரையானவர்களாகவே இவ்வுலக வாழ்க்கையை விட்டு மறைந்து போகிறார்கள். அம் மரணத்தறுவாயில் அவனுடைய மனமானது, அவன் ஏன் இவ்வுலக வியவகாரங்களில் ஈடுபட்டிருந்தானென்று அவனைக் கண்டிக்கின்றது ; இவ்வுலக வாழ்க்கையில் ஜயம்பெறும் பொருட்டுத் தான் இழைத்து வந்த ஏமாற்றங்களும், செய்து வந்த சதி மோசங்களும் தவறான காரியங்களென்றே அவனுடைய மனச் சாக்ஷி யென்பது அவ்வேளையிலே ஒரு குற்றச் சாட்டைச் சுமத்தி விடுகின்றது.

இவ்விஷயத்தை மற்றொரு விதமாகவும் யாம் ஈண்டுப் பரிசீலனை செய்து பார்க்கலாம். கீழ்த்தரமான பிராணி வர்க்கத்தில், அவ்வவற்றிற்குரிய ஒரு குறிப்பிட்ட காரியத்திற்காகவல்லாது வேறு எத்தகைய உயரிய நோக்கத்தைக்கொண்டும் தங்கள் தங்கள் சக்திகளைச் சிருஷ்டிக்கப் பெற்றில்லை யென்பதை நாம் கண்கூடாகக் கண்டு வருகிறோம். ஆகவே,

ஒரு குறிப்பிட்ட எல்லைக்கு மேல் அந்தப் பிராணிகளால் முன்னேறிச் செல்வதென்பது ஒருபோதும் முடியாத காரியமே யாம். ஆதலின், ஒரு பிராணியின் சிருஷ்டி நோக்கத்திற்குரிய மிக உயரிய எல்லையானது, அப்பிராணியின் சக்திகளால் அடையப்படக் கூடிய உயரிய எல்லையின் முகடாகவே அமைந்து கிடக்கிறது. உதாஹரணமாக, ஓர் எருதை எடுத்துக் கொள்ளலாம். அம்மிருகம் பூமியை உழுதற்கும், ஜலத்தை இறைத்தற்கும் சுமையைச் சுமத்தற்குமே உபயோகிக்கப்பட்டு வருகிறது. ஆனால், அந்தப்பிராணிக்குரிய இதுபோதுள்ளசக்திகளையும் சாமர்த்தியங்களையும் வைத்துக்கொண்டே அவற்றைப் பார்க்கினும் வேறு விதமான உயர்தர நோக்கத்திற்காக அதனை ஒருபோதும் உபயோகிப்பது முடியாது. ஆதலின், மேற்கூறிய காரியங்களைச் செய்வதே அம்மிருகத்தின் சிருஷ்டி நோக்கமாகவும் காணப் படாநின்றது. ஆனால், மனித சிருஷ்டியின் நோக்கத்தையும் அவ்வாறே உற்று நோக்குவோமாயின், இவன்பால் இயற்கையாகவே அமைக்கப்பட்டிருக்கும் சக்திகளுக்குள்ளெல்லாம் மகா மேலானதாய்க் காணப்படுவது, அவ்வடியான் தன் ஆண்டானை அறிதற்குரிய ஆர்வத்தைக் கிளப்பி, அவனை ஆண்டகையின் அபிமானத்திற்குள்ளே தன்னையே ஆழ்த்தி மூழ்கச் செய்துகொள்ளுமாறான அபிலாஷையுள் ஈர்த்துச் சென்று, தன்னை அவ்வாண்டவனது நாட்டத்திற்கு முற்ற முற்றக் கீழ்ப்படிந்து நடந்து கொள்ளுமாறு செய்துவிடுவதாகவே காணப்படுகிறது. ஸ்தூல சம்பந்தமான தேவைகளில் இம்மனிதனும் மற்றைக் கீழ்த்தரப் பிராணிகளின் நிலையிலேயே இருந்து வருகிறான். ஆனால், சிற்சிலவிதமான அரிய வேலைகளில் சிற்சில விதமான

பிராணிகள் மனித வர்க்கத்தைக் காட்டினும் மகா மேலான சாமர்த்தியத்தைக் காட்டிக்கொண்டு வருகின்றன. கேவலம் ஓர் அற்ப ஜந்துவென்று இகழ்ச்சியாகக் கருதப்பட்டு வரும் தேனீயும், மனிதனுல் தன்னுடைய ஞானத்தையும் மேதாவித்தனத்தையும் கொண்டெல்லாம் ஒரு சிறிதும் செய்துவிடமுடியாத அப்படிப்பட்ட அழகிய இனிய நறுமண முள்ள தேனை மகா சாமர்த்தியத்துடனே பற்பலவிதமான புஷ்பங்களி லிருந்தெல்லாம் சேகரம்செய்து தருகின்றது. ஆதலின், மனிதன் பரிபக்குவமடைவ தென்பதும், மனிதனு டைய இவ்வுலக வாழ்க்கையின் முக்கியநோக்கமும் இப்படிப் பட்ட காரியாதிகளில் தேர்ச்சி பெறுவதைக் குறிப்பிட்டுக் காட்ட மாட்டா. ஆனுல், இவனுடைய பரிபக்குவமெல் லாம் மற்ருெரு திசையிலேதான் காணப்படுகின்றது: ஆண் டானுடன் அடியான் ஐக்கியமாய்விடும்படி செய்துவிடக் கூடிய அத்தன்மைத்தாய ஆத்மார்த்த முன்னேற்றத்தில் பார மார்த்திகத்துக்குரிய பெருமைக ளனைத்தையும் அடைந்து கொள்வதிலேதான் இவனுடைய இலக்ஷிய முழுதும் அமைந் திருக்கின்றது. எனவே, இவ்வடியான் இவ்வுலகினில் தோன்றி யிருப்பதன் முக்கிய நோக்கம் யாதெனின், இவனுடைய அந்தக்கரணச் சாளரங்களெல்லாம் அந்த ஆண்டான்பக்கல் திறந்துவைக்கப்பட் டிருக்கவேண்டு மென்பதேதா னுகும்.

நாம் இப்பொழுது அப்படிப்பட்ட நோக்கத்தை எப்படி எங்கிருந்து அடைவதென்னும் மார்க்கத்தைப் பற்றிச் சிறிது ஆராய்ந்து பார்க்கக்கடவோம். நம்முடைய அந்தக்கரண வாயில்களை ஆண்டவன் பக்கல் திறந்து வைப்பதை அடைதற்குரிய முக்கிய முதல் வழியானது, நாம் அவ்வாண்ட-

வனை ஏற்றுக்கொண்டு சரியான சன்மார்க்கத்திலே நடந்து சென்று, உண்மையான உயிருள்ள தெய்வத்தின் மீதே முழு நன்னம்பிக்கையும் வைத்தலாகும். தனக்குரிய முதலடியைத் தவறான மார்க்கத்திலே எடுத்துவைத்து, ஏதேனுமொரு கல்லையேனும், பிராணியையேனும், இயற்கையின் பூதத்தையேனும் தன்னுடைய தெய்வமென்று ஏற்றுக்கொள்பவனால் அவனுக்குரிய லக்ஷியத்தை அடைந்து விடுவது ஒருபோதும் சாலாது. மெய்யான உயிர்க்கடவுளே தன்னை நாடி வருபவருக்கு உதவி புரிகின்றான்; ஆனால், ஓர் உயிரற்ற பொருள், மற்ற உயிரில்லாப் பொருளுக்கு ஒரு விதமான உதவியும் புரிவது முடியாது. இவ்விஷயத்தை எல்லாம் வல்ல இறைவன் ஓர் உவமைக் கதையைக்கொண்டே மிக நன்றாக விளக்கிக் காண்பித்துள்ளான்: لهُ دعوة الحق والذين يدعون من دونه لا يستجيبون لهم بشيء الا كباسط كفيه الى الماء ليبلغ فاه وما هو ببالغه وما دعاء الكفرين الا فى ضلال "பிரார்த்தனையென்பது மெய்யான இறைவனை நோக்கிச் செய்யப்படுங் காரியத்திலேதான் சரியான விதத்தில் பிரார்த்திக்கப்படுகின்றது; ஏனெனின், அவனுக்கே எல்லா வஸ்துக்களின் மீதும் சர்வாதிகாரம் இருந்து வருகின்றது; ஆனால், அவனைத் தவிர்த்து மக்கள்களால் தியானிக்கப்படும் வேறு தெய்வங்களெல்லாம் அவர்களுக்கு எவ்விதமான மறுமொழியையும் தருவது கிடையாது. அவர்களுடைய காரியம், தன்னுடைய கரங்களை நீரின்பக்கல் நீட்டி, தன்னுடைய வாய்க்குள் வந்து சுயமே நுழைந்துகொள்ளுமாறு அந்நீரின்பால் பிரார்த்தனை புரியும் மனிதனுடைய செய்கையையே நிகர்த்து நிற்கின்றது. இவ்வாறாயின், அந்தத் தண்ணீர் அவனது வாய்க்குள்ளே

சென்று நுழைந்து கொள்ளுமா? அப்படி ஒரு போதும் அது நுழையமாட்டாது. உண்மையான உயிருள்ள தெய்வத்தை அறிந்துகொள்ள முடியாதவர்கள் வீணுகவே தங்கள் பொய்க் கடவுளரை நோக்கிப் பிரார்த்தனை புரிகின்றார்கள்; அவர்களுடைய பிராத்தனைக ளெல்லாம் தவறான மார்க்கத்திலேயே யிருக்கின்றன''—(13:14).

ஜீவிதவாழ்க்கையின் மெய்யான லக்ஷியத்தைப் பெற்றுக்கொள்ளுதற்குரிய இரண்டாவது வழியானது, ஆண்டவனால் அடையப் பெற்றிருக்கும் பரிபூரணமான அழகினைக் குறித்து அறிந்துகொள்வதேயாகும். அழகென்பது இயற்கையாகவே மனத்தைக் கவர்ந்து, அதற்குள்ளே நேசமென்னும் வித்தைத் தெளிக்கின்றது. ஆண்டவனுடைய அழகெனப்படுவது, அவனது ஏகத்துவம், அவனது மாட்சிமை, அவனது பெருமை, இன்னம் இவைபோன்ற வேறு பல உயரிய குணாதிசயங்களைக் குறித்துக் காட்டுகின்றது. குர்ஆன் ஷரீபும் இவ்விஷயத்தைக் குறித்துக் கீழ்க்காணும் பிரசித்திபெற்ற திருவாக்கியங்களிலே விளக்கிக் காண்பித் திருக்கின்றது:

قل هو الله احد الله الصمد لم يلد ولم يولد ولم يكن له كفوا احد

"அல்லா(ஹ்) தன் திருமேனியிலும், குணாதிசயங்களிலும் மாட்சிமையிலும் தனித்தவனா யிருக்கிறான்; அவனுக்கு இணை யாருமில்லை; எல்லாம் அவனுடைய உதவியையே நாடி நின்கின்றன; ஒவ்வொரு சிறுசிறு பரமாணுவும் அவனைக் கொண்டே உற்பத்தியா யிருக்கின்றது; அவன் எவரிடத்திருந்தும் எத்தகைய தயையையும் பெற்றுக் கொள்வதில்லை; ஆனால், எல்லாருக்கும் தன் தயையையே அளித்தருளுகிறான்; அவன் குமாரனாகவுமில்லை, தந்தையாகவு மில்லை; ஏனெனின்,

அவனைப் போன்றதொன்றும் ஈங்கில்லை''—(அத்:112). ஆண்டகையின் சர்வ வல்லமைத் தன்மை, மாட்சிமைத் தன்மை, கௌரவத் தன்மை ஆகியவற்றைக் குறித்து அதிகம் கூறக் கூடிய ஆயாத்துக்கள் பலப்பல :குர்ஆன் ஷரீபிலே நிரம்பிக் கிடக்கின்றன. அவ்வேதமானது, அவனுடைய அழகு, மாட்சி முதலியவற்றின் காரணத்தினால் அடியாரின் ஹிருதயத்தை வசீகரிக்கக்கூடிய ஆண்டவனையே ஏற்றுக்கொண்டு, பொய்யான மதங்களின் உயிரற்ற, பலஹீனமுள்ள, இரக்கமற்ற சக்தியற்ற கடவுள்க ளனைத்தையும் ஒதுக்கித் தள்ளிவிட்டிருக்கின்றது.

மனித சிருஷ்டியின் இறுதி நோக்கத்தை எய்தற்குரிய மூன்றாவது வழியானது, இறைவனது இணையற்ற நன்றி இன்னதென்பதை உணர்ந்து கொள்வதேயாகும். அழகும் நன்மையுமே அடியாரின் பக்திவிசுவாசத்தைத் தூண்டி விடக் கூடியனவாக அமைந்திருக்கின்றன. ஆண்டகையின் நன்றியான தன்மைக்குரிய குணாதிசயங்கள் 'பாத்தி'ஹா' என்னும் முதல் அத்தியாயத்திலே வருணிக்கப்பட்டிருக்கின்றன. அந்தத் திறப் பென்னும் அத்தியாயம் இவ்வாறு காணப்படுகின்றது:

الحمد لله رب العالمين الرحمان الرحيم مالك يوم الدين

"எல்லா உலகங்களின் சிருஷ்டி கர்த்தாவும், போஷித்து வளர்ப்பவனும், உதவி புரிந்துகொண்டு நிற்பவனுமாகிய அல்லா(ஹ்)வுக்கே எல்லாப் புகழும் தகும்; அவனுடைய இரக்கமும் நன்மையும் அளவிறந்து காணப்படுகின்றன; நியாயத்தீர்ப்பு நாளின் எஜமானாக அவன் அமைந்திருக்கிறான்.''
ஆண்டவன் முதன் முதலில் ஒவ்வொரு பொருளையும் ஒன்றுமற்ற சூன்யத்தினின்றே சிருஷ்டி செய்து, எல்லாவிதமான

சந்தர்ப்பங்களிலும் அதற்கு வேண்டிய ஆகாராதிகளை அளித்து, அதற்குரிய பலஹீன முற்ற வேளைகளில் தானே உதவி புரிந்துகொண்டும் இல்லாதவரை அவனுடைய நன்மை யான தன்மை யென்பது ஒருபோதும் பரிபூரணமா யிருப் பது முடியாதென்பது பிரத்தியக்ஷம். அவனுடைய எல்லா விதமான கருணைகளும் அவனுடைய சிருஷ்டிகளின் நன்மையின் பொருட்டு வெளியாக்கப்பட்டிருத்தல் வேண் டும்; அவனுடைய நன்மையான தன்மை எந்த விதமான வரைதுறைகளுக் குள்ளும் கட்டுண்டு கிடக்காமல் பரந்து கிடத்தல் வேண்டும். இத்தன்மைத்தாய பரிபூரண நன்மை யைக்குறித்து நமது :குர்ஆன் ஷரீபில் எமதாண்டவன் மீண் டும் மீண்டும் எத்தனையோமுறை வற்புறுத்திக் கொண்டே வருவதை நன்கு கண்டு கொள்ளலாம். அவனேரிடத்தில் இவ் வாறு கூறியிருக்கின்றான்: وان تعدوا نعمة الله لا تحصوها "ஆண்டவையின் அனுக்கிரஹங்களையும் காருண்யங்களையும் நீங்கள் கணிக்கத் துணிவீர்களாயின், நீங்கள் அவற்றினை ஒருகாலும் செய்து முடிப்பது முடியாது"—(14: 34).

நமது வாழ்க்கையின் லட்சியத்தை அடைதற்குரிய நான்காவது மார்க்கம் பிரார்த்தனையாகும். :குர்ஆன்ஷரீ'பும் இவ்வாறு இயம்பி யிருக்கின்றது: ادعوني استجب لكم "என்னை நீங்கள் கூப்பிடுங்கள்; நான் உங்களுடைய கூப் பாட்டுக்கு மறுமொழி கூறுவேன்"—(40: 60). இதைக் குறித்துக் :குர்ஆன் ஷரீ'பில் அவ்விஷயம் அடிக்கடி வற் புறுத்திக் கூறப்பட்டிருக்கின்றது; என்னெனின், அடியான் ஆண்டவனைத் தன்னுடைய சொந்த முயற்சியாலும் பிரயாசை யாலும் அடைவது முடியாது. ஆனால், அடியான் ஏக பரம்

பொருளை அவனுடைய உதவியைக்கொண்டே தான் நெருங்கிக்கொள்ளுதல் சாலும்.

ஐந்தாவது மார்க்கம் முஜாஹத’ா என்பதாகும். ஒருவர் தம்முடைய ஐசுவரியங்களைச் செலவிட்டும், தமக்குரிய எல்லா வல்லமைகளையும் உபயோகப்படுத்தியும், தம்முடைய உயிரையும் தியாகம் செய்தும், தமது ஞானத்தை யெல்லாம் கொண்டு செலுத்தியும் அல்லா(ஹ்)வின் பாதையிலே பிரயாசை யெடுத்துக்கொண்டு அவனை நாடி நிற்பதுதான் முஜாஹத’ா என்று அழைக்கப்படுகின்றது. :குர்ஆன் ஷரீ‘பும் இது குறித்து இவ்வாறு கூறியிருக்கின்றது: جاهدوا باموالكم وانفسكم "உங்களுடைய ஐசுவரியத்தைக் கொண்டும், ஆன்மாக்களைக் கொண்டும் ஆண்டவன் பாதையிலே முழுக்க முழுக்கப் பிரயாசை யெடுத்துக் கொள்ளுங்கள்" — (9 : 41). ومما رزقناهم ينفقون "ஞானம், அறிவு, பகுத்துணர்வு, அருங்கலை, நுண்கலை முதலிய எம்மால் அவர்களுக்கு அருளப்பட்டிருக்கும் வஸ்துக்களை யெல்லாம் அல்லா(ஹ்)வின் பாதையிலே அர்ப்பணம் செய்கிறவர்கள்......இப்படிப்பட்ட குணமுடையவர்களே ஜயசீலர்களா யிருக்கின்றார்கள்"— (2: 3). والذين جاهدوا فينا لنهدينهم سبلنا "மேலும் நம் விஷயத்தில் எல்லாவிதமான பிரயாசைகளும் எடுத்துக் கொண் டிருப்பவர்களை நாம் நிச்சயமாகவே நம்முடைய வழிகளிலே நடாத்திச் செல்வோம்"—(29: 69).

மனிதன் தனக்குரிய லக்ஷியத்தின் எல்லையைப் பத்திரமாகக் கிட்டுதற்குரிய ஆறாவது வழி விடாமுயற்சியாகும். அஃதாவது, அவன் நடந்து செல்லக்கூடிய பாதையினூடே குறுக்கிடுகின்ற எப்படிப்பட்ட மாகொடிய சோதனைகளை

யெல்லாங் கண்டு சற்றும் மனந்துளங்காது விடாக் கடைப் பிடியுடனே அவன் துணிந்து நிற்றல் வேண்டும். எல்லாம் வல்ல அல்லாஹுத் தஆ'லாவும், ان الذين قالوا ربنا الله ثم استقاموا تتنزل عليهم الملائكة الا تخافوا ولا تحزنوا وابشروا بالجنة التى كنتم توعدون نحن اولياؤكم في الحيوة الدنيا وفي الاخرة "'எங்கள் ரக்ஷகன் உண்மையுள்ள கடவுளாகிய அல்லா(ஹ்)வா யிருக்கிறான்' என்று சொல்லி, பொய்யான தெய்வங்களை யெல் லாம் வெறுத்துத்தள்ளி, அதன்பின்னே விடா முயற்சியையும் காண்பிப்பவர்கள், அஃதாவது, வெவ்வேறு வகைப்பட்ட சங் கடங்களின் காலங்களிலும் சோதனைகளின் காலங்களிலும் நன்னம்பிக்கையுடனே சற்றும் மனந்துளங்காது உறுதியாய் நிற்பவர்கள் மீது வானவர்கள் வந்திறங்கி, 'நீங்கள் ஒன்றுக் கும் அஞ்சவேண்டாம்! நீங்கள் துயருறவும் வேண்டாம்! ஆனல், உங்களுக்கு வாக்களிக்கப் பட்டிருந்த பேரானந்தத் தைப் பெற்றுக்கொள்ளுதற்குரிய வாரிஸ்களாக ஆய்விட்டீர்க ளென்று ஆனந்தங் கொண்டிருங்கள். இவ்வுலக வாழ்க்கையி லும், மறுவுலக வாழ்க்கையிலும் நாங்கள் உங்கள் பாதுகாவ லர் களா யிருக்கிறோம்', என்று கூறுகிறார்கள்"—(41: 30) என்று இயம்பியுள்ளான்.

மேற்கூறிய திருவாக்கியங்களில், நன்னம்பிக்கையில் விடாக் கடைப் பிடியுடனே இருந்து வருவதுதான் அல் லா(ஹ்)வின் ஆனந்தத்தை ஈர்த்துக்கொண்டு வருகிறது என்று நாம் அறிவிக்கப்படுகிறோம். ஒரு பழமொழி கூறு வதே போல, 'விடா முயற்சி யென்பது ஓர் அற்புதத்தைப் பார்க்கினும் சிறந்து விளங்குகிறது' என்னும் விஷயம் மெய் யாகவே காணப்படா நின்றது. கஷ்ட நிஷ்டூரங்கள் ஒரு

வனைச் சுற்றி நான்கு புறத்தும் சூழ்ந்துகொள்ளும்போது, அல்லா(ஹ்)வின் பாதையில் உயிர்ச் சேதமும், பொருள் விரயமும், கண்ணிய நஷ்டமும் உண்டாய்விடுதல் கூடுமோ வென்று பயமுறுத்தாட்டப் படுங்கால், மனத்திற்குச் சிறிது சாந்தியும், சமாதானமும் அளித்துக்கொண்டிருந்த விஷயங் கூட விட்டு நீங்கிச் செல்லும் வேளையிலே தான்—அதுபோது ஆண்டவனும் தைரியம் கொடுக்கக் கூடிய கனத் தோற்றங் களுக்கும், உவம தரிசனங்களுக்கும், ஞானேதையத்திற்கும் உரிய வாயிலைச் சிறிது நேரம் அடைத்துவிட்டு அவனைப் பரிசோதிக்கும் போதுதான் விடாமுயற்சியின் மகா உற்சாக மான கடைப் பிடி அதிகம் வேண்டப்படுகின்றது. அப்ப டிப்பட்ட துன்பங்களும் துயரங்களும் நேரிடும்போதுதான் மனிதன் இக்கடைப் பிடியை உறுதிப்படுத்தல் வேண்டும்; தன்னுடைய நேர்வழியைவிட்டு அப்புறம் இப்புறம் நழுவு வது கூடாது; வழியில் குறுக்கிடுவது நெருப்பே யாயினும் நீரே யாயினும் அவற்றுள்ளெல்லாம் தைரியமாக நுழைந்து செல்லுதல் வேண்டும். எல்லாவிதமான அவமானங்களையும் சகித்துக் கொண்டிருக்க விருப்பம் காட்டுதல் வேண்டும்; எவ்விதமான ஆதரவையும் உதவியையும் எதிர்நோக்கி நிற்றல் கூடாது; எல்லாம் வல்ல அல்லாஹுத் தஆ'லா விடத் திருந்து எந்தவிதமான நற்செய்திகளையுங்கூட எதிர்நோக்கி யிருத்தல் தகாது. எந்த விதமான சங்கடங்களும் உதவி யின்மைகளும், சாந்தி யளிக்கும் சமாசாரங்களும் அறவே இல்லாமற் போய்விடினும், தன் கைகளைப் பிசைந்துகொண்டு நிற்காமலும் மார்பின்மீது அறைந்துகொண்டு ஓலமிட் டழா மலும், அல்லா(ஹ்)வின் விருப்பத்திற்கு முற்றிலும் கீழ்ப்

படிந்து, அம்முயற்சியில் வெற்றி பெற்றாலும் சரி, தோல்வி யுற்றொழிந்தாலும் சரி யென்ற திண்ணிய எண்ணத்துடனே உறுதிபெற்று நின்றிடுதல் வேண்டும். இதுதான் ஆண்டவனின் திருமுக விலாஸத்தை வெளிக்குக் கொண்டு வருதற்குரிய உண்மையான விடாக் கடைப்பிடி யாகும். இத்தகைய உயரிய குணாதிசயத்தைத்தான் திருத்தூதர்களின், தீர்க்கதரிசிகளின், சன்மார்க்கர்களின், நன்னம்பிக்கை கொண்டவர்களின் புழுதியும் இன்னமும் வீசிக்கொண்டிருக் கிறது. இதனைக் குறித்து எல்லாம் வல்ல இறைவன் நன் னம்பிக்கை கொண்டவர்களை நோக்கி அடியிற் காணுமாறு தன்னை நோக்கிப் பிரார்த்தனை புரியுமாறு கட்டளையிட்டிருக் கிறான்: اهدنا الصراط المستقيم صراط الذين انعمت عليهم "ஏ இறைவனே! விடா முயற்சிக்குரிய வழியிலே, எந்த வழியே நடந்து சென்று உன்னுடைய அனுக்கிரஹங்களை யும், கருணை மாரிகளையும், உன்னுடைய ஆனந்தவாரிதி களையும் நாங்கள் பெற்றுக்கொள்ளுதல் கூடுமோ அந்த வழி யிலே எங்களை நடத்திச் செல்வாய்!" மீண்டும், ربنا افرغ علينا صبرا وتوفنا مسلمين "ஏ எங்கள் ரக்ஷகனே! இத்தகைய சங்கடத்தின்போது எங்களுக்குப் பொறுமையை அளிக்க வல்ல மனச் சாந்தியை அளித்து, எங்களுடைய மரணமும் இஸ்லாத்திலேயே அஃதாவது, அல்லா(ஹ்)வின் விருப்பத் திற்கு முழுதும் தலை சாய்த்துவிடுதற்குரிய மார்க்கத்திலேயே யிருக்குமாறு செய்து வைக்கக் கடவாய்!"—(7: 126).

சங்கடங்களும் சோதனைகளும் நேரிடுங் காலங்களில் ஆண்டவன் தன்னுடைய நல்லடியார்களின் ஹிருதயங்களின் மீது ஒருவகைப் பிரகாசத்தை இறக்கி வைக்கிறான்; அத

ளைக் கண்டு பலங்கொண்டு நிற்கும் அந்நல்லடியார்க ளெல்லாரும் அந்தப் பரம சங்கடங்க ளனைத்தையும் சாந்தத்துடனும் சமாதானத்துடனுமே சகித்துக்கொண்டு, தங்களுக்குரிய நன்னம்பிக்கையால் விளையும் இனிமையின் காரணத்தால், அவ்வாண்டவனையின் பாதையிலே செல்லுதற்காகத் தங்களைப் பிணித்து வைத்திருக்கும் சங்கிலிகளையே முத்தமிடுகிறார்கள். ஆண்டவனுடைய நல்லடியார்கள் பற்பலவிதமான கொடிய சோதனைக்குள்ளும் சங்கடங்களுக்குள்ளும் ஆழ்த்தப்பட்டு நேருக்கு நேராக மரணத்தையும் நோக்கி நிற்கும்போது, அவர்கள் தங்களுக்கு விளைந்திருக்கும் துன்பங்களை யெல்லாம் விலக்கிவிட வேண்டுமென்று தங்கள் ரக்ஷகனுடனே தர்க்கமாடிக் கொண்டிருக்க மாட்டார்கள். தங்களுடைய கொடிய சோதனைகளை நீக்கிவிடுமாறு ஆண்டவன்பால் பிரார்த்தனை புரிதலென்பது அவனுடைய விருப்பத்தை எதிர்த்து நிற்பதாகு மென்றும், அவனுடைய விருப்பத்திற்கு முற்றிலும் தலைசாய்த்து நிற்பதாக ஆகாதென்றும் அவர்கள் தெரிந்துகொண் டிருக்கிறார்கள். உண்மையான பக்தன், சோதனைகளும் சங்கடங்களும் தன்னை எதிர்த்து வருங்கால், பின்னோக்கி ஓரடியும் எடுத்து வைக்கத் துணியாது முன்னோக்கியே தன்னடியை எடுத்து வைக்கிறான்; தனது சொந்த உயிரையே ஒரு திரணமாக மதித்துக் கொண்டு அல்லா(ஹ்)வின் விருப்பத்திற்கே முழுக்க முழுக்க மன இணக்கத்துடனே தலை சாய்த்து, எப்படிப்பட்ட பரம கஷ்ட நிஷ்டூரங்களையும் பொறுமையுடனே சகித்துக்கொள்ளத் தயாராகிவிடுகிறான். இத்தகைய அடியார்களைக் குறித்து அல்லாஹுத் தஆ'லாவும் இவ்வாறு கூறி யிருக்கிறான்:

ومن الناس من يشري نفسه ابتغاء مرضات الله والله رءوف بالعباد
"ஆண்டகையின்பால் விசுவாசங் கொண்ட உண்மையான பக்தன் அவ்வாண்டகையின் பாதையிலே தன்னரும் பிராணனைத் தியாகம் செய்துவிட்டு அதற்கீடாக அவ்விறைவனது அபிமானத்தையே பெற்றுக்கொள்கிறான்; இவர்கள்மாட்டே ஆண்டவனும் குறிப்பாகக் கருணை பாலிப்பவனு யிருந்து வருகிறான்"—(2: 207). சுருக்கிச் சொல்லுமளவில், இதுதான் அல்லா(ஹ்)வின்மாட்டுக் கொண்டு செல்லுதற்குரிய விடாப் பிடியின் நோக்கமென்று கூறப்படுகிறது.

மனித லக்ஷியத்தை அடைதற்குரிய ஏழாவது மார்க்கம், சன்மார்க்கர் சங்கத்தில் சேர்ந்துகொண்டு, அத்தகையோரின் பரிபூரணமான முன் மாதிரியைப் பின்பற்றி ஒழுகுவதேயாகும். நபிமார்கள் அவதரிக்க வேண்டிய மகா பெரிய அத்தியாவசியங்களுள் உண்மையிலேயே இஃதொன்று யிருந்து வருகிறது. மனிதன் இயற்கையாகவே ஒரு முன்மாதிரியைப் பின்பற்றி நடக்கக்கூடியவனு யிருக்கிறான்; ஆகவே, அதனை அவன் வேண்டியும் நிற்கின்றான். ஒரு பரிபூரணமான முன்மாதிரி என்பது மனிதனுக்குள்ளே ஒருவகைப் புத்துயிரை அளித்து, சன்மார்க்கத்திற்குரிய நன்மார்க்கத்தின் வழியே நடந்து செல்லுமாறு உற்சாகத்தை அளிக்கின்றது; ஆனால், ஒரு பரிபூரணமான முன் மாதிரியைப் பின்பற்றி நடக்காதவன் நன்மையான காரியங்களைச் செய்ய வேண்டுமென்னும் எல்லாவிதமான ஊக்கத்தையும் சிறிது சிறிதாக இழந்து, இறுதியாகத் தீய வழியுள்ளே இழிந்துவிடுகிறான். இதைக் குறித்துத்தான் :குர்ஆன் ஷரீ'பும் இவ்வாறு கட்டளை யிட்டிருக்கின்றது: وكونوا مع الصادقين "சன்

மார்க்கர்களின் சங்கத்திலே யிருந்துகொள்ளுங்கள் !"—
(9: 120). صراط الذين انعمت عليهم "உங்களுக்கு முன்னே
ஆண்டவனால் கருணை பாலிக்கப் பெற்றிருக்கும் மனிதர்களின்
பாதையினூடே செல்லுங்கள் !"

நமது லக்ஷியத்திற்குரிய எட்டாவது மார்க்கமானது
பரிசுத்தக் கனாத் தோற்றங்களும், உவம தரிசனங்களும்,
அல்லா(ஹ்)வி னிடத்திலிருந்துண்டாகும் ஞானவெளிப்பாடு
களுமே யாகும். ஆண்டகைபால் செல்லுகின்ற பாதை
யானது இரகசியமாகவும் கூடார்த்தமாகவும் காணப்படுகின்ற
ரஸ்தாவா யிருத்தலினாலும், அதில் கஷ்டங்களும் அபாயங்
களும் நிரம்பி யிருத்தலினாலும், பாரமார்த்திக வழிப்போக்
கன் நேரான பாதையைவிட்டு விலகிச் சென்றுவிடலாம்;
அல்லது இறுதி எல்லை கிட்டுமோ மாட்டாதோ வென்னும்
ஆசங்கையுள்ளும் வீழ்ந்துவிடலாம். ஆதலின், ஆண்டகையின்
அருளென்பது அவனுடைய பாரமார்த்திகப் பாட்டையிலே
அவனுக்குத் தைரியத்தை யூட்டிப் பலத்தைக் கொடுத்
தருளும் பொருட்டு உற்சாகத்திற்குரிய உவம தரிசனங்
களைக் கொண்டும், ஞான வெளிப்பாடுகளைக் கொண்டும்
ஊக்கிக்கொண்டே சென்று துக்ககாலங்களில் அவனுக்கு
மனச்சாந்தியை யளித்துத் தனக்குரிய பிரயாணத்தை மிக்க
ஓர்ப்புடன் விடாமல் மேற்கொண்டு அதிக உற்சாகத்துடனே
நடாத்திக்கொண்டு போகுமாறும் பேருக்கத்தை யளிக்
கின்றது. ஆண்டவனுடைய பாதையில் நடந்து செல்வோ
ருக்காக அவனால் நிர்மாணிக்கப்பட்டிருக்கும் தெய்விக சட்
டங்கள் இன்னவைகளாகும். அவன் அந்த நல்லடியார்க
ளுடனே இருந்துவரும் விஷயத்தை அவர்களுக்கு அறி

வித்தற்பொருட்டு அவன் தன்னுடைய திருவசனங்களைக் கொண்டு அடிக்கடி அவர்களுடைய ஹிருதய கமலங்களைச் சந்துஷ்டி யடையுமாறு தொடர்ந்து செய்துகொண்டே வருகிறான். இவ்வாறு தைரிய மடைந்திருக்கும் அவர்கள் தங்கள் யாத்திரையை இன்னம் அதிக பேருக்கத்துடனே செய்துவருகிறார்கள். எனவேதான் அல்லாஹுத் தஆ'லா :குர்ஆன் ஷரீ'பிலே இவ்வாறு கூறியிருக்கிறான்: لهم البشرى في الحيوة الدنيا وفي الآخرة "அவர்களுக்கு இவ்வுலகத்திலும் மறு உலகத்திலும் நல்லவிதமான சுபசமாசாரங்கள் இருந்து வருகின்றன"—(10: 64). மனித வாழ்க்கையின் இறுதி லக்ஷியத்தை எய்துதற்குரிய மற்றும் பலப்பல மார்க்கங்களை யெல்லாம் :குர்ஆன் ஷரீ'பு வெவ்வேறிடங்களில் வெளிக்காட்டாமலில்லை; ஆனால், அதிகமான இடமில்லாதது கண்டு யாம் அவற்றினை யெல்லாம் அதிகமாக கண்டு விஸ்தரித் தெழுதுவதை நிறுத்திக்கொண்டோம்.



# இவ்வுலக வாழ்க்கையிலும் மறுவுலக வாழ்க்கையிலும் அனுஷ்டான பூர்வ சட்டங்களால் விளையும் பயன்



அல்லாஹுத் தஆ'லாவினால் வெளியாக்கப்பட்டுள்ள சத்தியமான பரிபூரணச் சட்டத்தினால் மனிதனுடைய மனமானது அனுஷ்டான பூர்வமான விஷயங்களில் எவ்வாறு தொழில் செய்யப்பட்டு வருகிறதென்பதே நாம் இதுபோது சுருக்கமாக விளக்கி வைத்தற்குரிய நான்காவது வினாவாகும். இவ்விஷயம் முதல் வினா பரிசீலனை செய்யப்பட்டு வந்த அப்போதே ஒருவாறு ஆராய்ச்சி செய்யப்பட்டுள்ளது. பரிபூரணமான தெய்விக சட்டமென்னப்படுவது, மனிதனை மகாபாதாளமான அக்ஞானத்தினின்று கிளப்பி ஞானமும் ஜோதியும் நிரம்பப்பெற்ற மகாபெரிய உச்சஸ்தானத்துக்கு உயர்த்திச் செல்லக்கூடியதாகவே அமைக்கப்பட் டிருக்கின்றது; காட்டு மிருகாண்டியை அது மனிதப் பிராணியாக மாற்றுகின்றது; அத்தகைய மனிதனை அஃதொரு மகா ஒழுக்கமுள்ள உயரிய ஜீவனாக மேலெழச் செய்கின்றது; இறுதியாக அவனுடைய நல்லொழுக்க மனத்தினையும் ஆத்மார்த்த விஷயமாகவும், அதன்பின்னர்த் தெய்விக விஷயமாகவுமே பரிணமிக்கச் செய்துவிடுகின்றது. இன்னமும், இம்மார்க்கச் சட்டங்களனைத்தும், மனிதன் மற்றைச் சோதர மக்களுடனெல்லாம் எவ்வாறு ஒழுகிவருதல் வேண்டுமென்

னும் நியதியைக் கற்றுக்கொடுத்து, அவர்கள் மாட்டு அவனுக்குள்ள பக்ஷத்தினையும் அதிகம் வளர்ந்தோங்குமாறு செய்து வைக்கின்றன. அவற்றின் உதவியைக் கொண்டு அவன் சிறுகச் சிறுக ஏனைச்சோதரரின் உரிமைகள் இன்ன இன்னவை யென்று உணர்ந்துகொள்ளத் தலைப்படுகிறான்; பிறகு அவர்களுடன் தனக்கு நேரிடும் வியவகாரங்களிலெல்லாம் தன்பாலுள்ள நியதி, நன்மை, பக்ஷம் முதலிய நற்குணங்களனைத்தையும் அது அதற்குரிய காலத்திலே மேற்கொண்டொழுகத் தலைப்பட்டு விடுகிறான். அவன் ஆண்டவன்பா லிருந்து அருளப்பெற்றுள்ள அறிவு, அரும்பொருள், ஆனந்தம், மற்றும் இன்னோரன்ன அருட்கொடைகள் ஆதியவற்றிலிருந்து ஏகதேசத்தை ஒவ்வொருவருக்கும் அவரவரின் அருகதைக்குத் தக்கவாறு இனமாக அளித்துவருகிறான்.

சூரியனைப்போல அவன் தன்பாலுள்ள ஜோதியை எல்லார்மீதும் சுயமே சொரிகின்றான்; சந்திரனைப் போல அவன், எல்லா ஜோதிக்கும் மூலாதாரமாகவுள்ள அந்தப் பெரிய ஜோதியிலிருந்து தான் இனமாகப் பெற்றுள்ள ஜோதியையும் ஏனையோருக் கெல்லாம் எளிதாகவே எடுத்துச் சொரிகின்றான். அவன் பகற் பொழுதைப் போலப் பிரகாசத்தை யளித்து, சத்தியத்திற்கும் சன்மார்க்கத்திற்கும் உரிய பாதைகளை விளக்கிவைக்கிறான்; இன்னமும் இராப்பொழுதைப்போல ஏனமக்களின் குற்றங் குறைகளையும் தப்புத் தவறுகளையும் மூடிமறைத்து, அயர்ச்சி யடைந்தவருக்கும் களைத்துப்போனவர்களுக்கும் வேண்டிய ஒய்வையும் இளைப்பாறுதலையும் அளித்து வைக்கிறான். வானத்தைப் போல அவன் இடுக்கணுற்றோரைத் தனது பாதுகாவலின் கீழ்க்

கொணர்ந்து, அந்த உயிரற்ற மண்ணின்மீது தனது கருணை மாரியைப் பொழிந்து அதனை வளமுறுமாறு திடம்பெறச் செய்கிறான்; பூமியைப்போல அவன் இதரர்களின் பாதங்களின் கீழே அன்னவர்கட்கொரு பரிசோதனையாக அவர்களால் மிதித்துத் தொகைக்கப்படும்பொருட்டு எல்லாவித மான தாழ்மையுடனும் பணிவுடனுமே தன்னைக் கீழானவனாக ஆக்கிக்கொள்ளுகிறான். ஆதலின், பரிபூரணமான சட்ட திட்டங்களுக்கு முற்றிலும் கட்டுப்பட்டு நடந்துவருதலினால், மனிதன் அல்லா(ஹ்)வின் மாட்டுத் தான் காட்டவேண்டிய கடமைகளிலும், மனிதர்களின் மாட்டுத் தான் காட்டவேண்டிய கடமைகளிலும் சர்வஜாக்ரதையுடனும் மிக்க நல்ல முறையிலுமே ஒழுகிவருகிறான். அவன் அல்லா(ஹ்)வின் சட்டத்திற்கு முற்றமுற்றத் தலை சாய்த்து, அடியார்களின் பணிவிடைகளிலேயே தன் காலத்தை யெல்லாம் கழித்து வருகிறான். இதுதான் ஆண்டகையின் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு நடத்தலினால் மனிதன்மாட்டு இவ்வுலக வாழ்க்கையிலே கொண்டுவரப்படும் சீர்திருத்தமாகும். மறுவுலக வாழ்க்கையிலோ, ஆண்டவனது பார்வையிலே ஆண்டான் அடியானின் ஆத்மார்த்த ஐக்கிய மென்னப்படுவது மகா பிரத்தியக்ஷமாகவே காணப்படும்; அடியான் ஆண்டான்மாட்டு வைத்துள்ள பக்தி விசுவாசத்தின் காரணமாக—இவற்றின் மூலாதாரம் நன்னம்பிக்கையும் நற்கரும விருப்பமுமே யாகும்—ஏனை அடியார்களுக்கெல்லாம் பணி செய்துவந்த பேருழியமானது சுவர்க்கலோகத்தின் விருக்ஷங்களாகவும் யாறுகளாகவுமே பிரதிபலித்து நிற்கும். எல்லாம்வல்ல அல்லாஹு தஆ'லாவும் தனது திருமறையாம் :குர்ஆன் ஷரீ'பில் இவ்

வாறு வருணித்துள்ளான்: والشمس وضحها والقمر اذا تلها والنهار اذا جلها والليل اذا يغشها والسماء وما بنها والارض وما طحها ونفس وما سوها فالهمها فجورها وتقوها قد افلح من زكها وقد خاب من دسها كذبت ثمود بطغوها اذ انبعث اشقها فقال لهم رسول الله ناقة الله وسقيها فكذبوه فعقروها فدمدم عليهم ربهم بذنبهم فسوها ولا يخاف عقبها

"சூரியன்மீதும் அதன் ஜோதியின்மீதும் பிரமாணமாக! சந்திரன் சூரியனைப் பின்தொடர்ந்து செல்லும்போது (அஃதாவது, சூரியனிடத்திருந்து அதன் ஜோதியைப் பெற்றுப் பின்னர் அச்சூரியனைப்போலவே தானும் தன் பிரகாசத்தை வெளிப்படுத்திக்கொண் டிருக்கும்போது) அச்சந்திரன்மீதும் பிரமாணமாக! பகற்பொழுது சூரியனது பிரகாசத்தைக் காண்பித்து வழிகளைத் துலக்கும்போது, அப்பகற்பொழுதின்மீதும் பிரமாணமாக! இராப்பொழுது ஒவ்வொரு வஸ்துவையும் இருள்மயமாகச் செய்து, அவ்விருளின் போர்வைக்குள்ளே மறைத்து வைக்கும்போது, அந்த இராப்பொழுதின்மீதும் பிரமாணமாக! வானத்தின்மீதும், அதனைச் சிருஷ்டித்திருக்கும் முதற் காரணத்தின்மீதும் பிரமாணமாக! பூமியின்மீதும், இதை (சாதாரண வெளித் தோற்றத்தின் பிரகாரம்) விரித்து வைத்திருக்கும் முதற்காரணத்தின்மீதும் பிரமாணமாக! ஆன்மாவின்மீதும், இக்கூறிய எல்லாவற்றையும் சமன் செய்து வைத்திருக்கும் அதன் பெருமையின்மீதும் பிரமாணமாக! (அஃதாவது, மேற்கூறிய வஸ்துக்களி லெல்லாம் தனித் தனியாக அமைக்கப்பட் டிருக்கும் எல்லாவித மேன்மைகளும் பரிபூரண மனிதனது

ஆத்மாவினிடத்தே ஒருமிக்கத் திரண்டு சம்பூர்ணமாக நிரம்பிக்கிடத்தலினாலும், அவ்வஸ்துக்களனைத்தும் மனித வர்க்கத்தின் சேவகத்திற்காகவே தனித்தனியாக அமைக்கப்பட்டிருத்தலினாலும் பரிபூரண மனிதன்மட்டுமேதான் அத்தகைய எல்லாவித ஊழியங்களையும் செய்து முடித்தல் சாலும்.) இவ்வாறு தன்னுடைய ஆன்மாவைப் பரிசுத்தம் செய்துகொண்டிருக்கும் மனிதனே மரணத்தினின்று இரக்ஷிக்கப்படுகிறான்." (அஃதாவது, இவன் ஆண்டகையின் நாட்டத்திற்கு முழுக்கமுழுக்கச் சிரஞ்சாய்த்தவனா யிருந்துகொண்டு, சூரியனைப்போலவும், சந்திரனைப் போலவும், மற்றும் மேற்கூறப்பட்ட பொருள்க ளெல்லாவற்றைப் போலவும், மானிட வர்க்கத்திற்குச் செய்யவேண்டிய ஊழியத்திலேயே தன்னைப் பரித்தியாகம் செய்துகொண்டும் விடுகிறான்.) மரணத்தினின்று இரக்ஷிக்கப்படுவ தென்பது பரிபூரண மனிதனொருவனுக்கு மறு உலக வாழ்க்கையிலே அளிக்கப்படும் முடிவற்ற பேரின்ப வாழ்க்கையையே சுட்டிக் காட்டாநின்றது. ஆண்டகையின் சட்ட திட்டங்களுக்கு முற்றிலும் தலைசாய்த்து உயிர் வாழ்க்கை நடாத்திவரும் சன்மார்க்க வாழ்க்கை என்பதே இனிவரும் எல்லையற்ற நெடிய வாழ்க்கைக்கு வழிகோலியாயிருக்கிற தென்பதே இதனால் போதரும் தாத்பரிய மாகும்; அப்பரலோக வாழ்க்கைக்குப் பேரின்பத்தை அளிக்க வல்லது அவ் வாண்டகையின் தரிசனமாகவே இருந்துவருகின்றது.

மேற்கூறிய ஸூறாவானது மேலும் சென்று இவ்வாறு கூறுகின்றது: "தன்னுடைய ஆத்மாவைக் கெடுத்துக் கொண்டு (பரிசுத்தக் குறைவான உயிர்வாழ்க்கையையே நடத்திவிட்டு, ஆண்டவனால் அவனுக் களிக்கப்பட் டிருக்கும்

சக்திகளின் பயனாக விளையவேண்டியிருந்த மேன்மைகளை யெல்லாம் இழந்துவிட்டு இவ்வுலகைவிட்டுப் பிரிந்து செல்லுகிறவன்) பாழாய்ப் போனவனாகவே இருந்து வருகிறான்; அவன் தன் உயிர்வாழ்க்கையைக் குறித்து அதிகம் பச்சாதாபப்பட வேண்டியவனாகவும் காணப்பட்டு வருகிறான்." இதற்குவேண்டிய உதாஹரண மொன்றும் அவ்வத்தியாயத்திலேயே இவ்வாறு குறிக்கப்பட்டிருக்கின்றது: "அந்தக் கொடிய பாவியின் கதியானது, 'ஆண்டகையின் ஒட்டகம்' என்று அழைக்கப்பட்ட அவ்வொட்டகத்தினைக் கழுத்தில் சுருக்கு மாட்டி, அவர்களுடைய நீரூற்றினின்று அதனைப் பருகவொட்டாமற் றடுத்துக் கொன்ற 'தமூத்' வர்க்கத்தாரின் கதியாகவேதான் போய் முடிந்துவிடும்." தன்னுடைய ஆன்மாவைப் பரிசுத்தம் பண்ணிக்கொள்ளாத பாபியொருவன் உண்மையிலேயே ஆண்டவனுடைய ஒட்டகத்தை ஹிம்ஸித்து, தன்னுடைய ஊற்றினின்று நீரைப் பருகவொட்டாது தடுத்து வைத்தவனாகவே இருந்துவருகிறான். இதனால் மனிதனுடைய ஆன்மாவானது ஆண்டகையின் ஒட்டகமாகவே உருவகப்படுத்தப்பட்டிருக்கிறதென்று மிகச் செவ்விதாக உணர்ந்துகொண்டிருக்கிறோம்; இவ்வொட்டகமே அவனுடைய பிரயாணத்திற்குரிய சவாரி வாகனமாக அமைந்திருக்கின்றது. மனிதனுடைய ஹிருதயமானது ஆண்டவனுடைய மேன்மைகளின் வெளிப்பாட்டிற் கெல்லாம் ஒரு ஸிம்மாஸனமாகவே அமைக்கப்பட்டிருக்கின்றது; அவ்வொட்டகத்தின் உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாததாகக் காணப்படும் தண்ணீரென்னப் படுவது அல்லாஹுத் தஆலாவின்மாட்டுக் காண்பிக்கப்படும் பக்தி விசுவாசத்தையும்,

அவனைக் குறித்து அறிந்து கொள்ளப்படும் ஞானத்தையுமே நன்கு குறித்துக் காட்டுகின்றது. :தமூத்' வர்க்கத்தினர் அவ்வாறு செய்துவிட்ட கொடுமையின் பயனானது, "அவர்கள் அவ்வொட்டகத்தைப் புண்படுத்தி நீரருந்தவும் வொட்டாது தடுத்துவிட்ட போது, அவர்களனைவரும் அழிக்கப்பட்டே போயினர்; அல்லாஹுத் தஆ'லாவும் அவர்களுடைய குழந்தை குட்டிகளுக்காகவும், அவர்களுடைய விதவைகளுக்காகவும்கூட ஒரு சிறிதும் கவலை கொள்ளவில்லை," என்றே ஆயிற்றென்று நாம் அறிவிக்கப் படுகிறோம். தன்னுடைய ஆத்மாவாகிய ஒட்டகத்தைப் புண்படுத்தி, அதன் பரிபூரணத்திற்காக ஒரு சிறிதும் கவலைகொள்ளாது, அதனை உயிர்வாழ்க்கை யென்னும் நீரையும் பருகவொட்டாது தடுத்துவைக்கும் ஒவ்வொரு மனிதனது கதியும் இவ்வாறாகத்தான் போய் முடிந்துவிடும்; அஃதாவது, அவனும் அவ்வாறாக ஒழிக்கப்பட்டே போய்விடக் கடவன்.

அல்லாஹுத் தஆ'லா வானவன் தன்னுடைய சிருஷ்டிப் பொருள்களைக் கொண்டே சத்தியம் செய்வது :குர்ஆன் ஷரீ'பில் காணப்பட்டுவரும் ஒருவகை விசேஷமாகும்; இதைக்கண்டு இஸ்லாத்தின் விரோதிகள் அடிக்கடி தவறிழைத்து விடுவதுண்டு; ஆனால், அவர்களுடைய ஆக்ஷேபங்களெல்லாம் அறியாமை யென்னும் அஸ்திபாரத்தின் மீதே தான் கிளப்பப்பட்டு வருகின்றன. :குர்ஆன் ஷரீ'பில் குறிப்பிடப் பட்டிருக்கும் சத்தியங்களுக்குள்ளே மிக மிக ஆழமான மகா இரகசியங்களெல்லாம் பொதிந்தில்லாமற் போகவில்லை; எனினும், விரோத மனப்பான்மை கொண்ட எதிர் மதவாதிகள், ஆண்டவன்பா லிருந்து பிரகாசமுள்ள ஞானவிகாசத்

தை அடையப் பெற்றிராத காரணத்தினாலே அந்த மஹா ரஹஸியங்களின் தாத்பரியத்தை உணர்ந்துகொள்ள முடியாது, அவற்றினை யெல்லாம் ஒரு குற்றமென்றே கொண்டு விட்டார்கள். இவ் விஷயத்தின் அந்தரங்கத்தை அறிந்து கொள்ள விழைவோமாயின், நாம் பிரமாணம் செய்வதன் தாத்பரிய முழுதையும் நன்குணர்ந்து கொள்ளுதல் அத்தியாவசியமாய்க் காணப்படும்.

சாதாரணமான காரியங்களிலும், சட்டபூர்வமான வியவகாரங்களிலும் ஒரு மனிதன் சத்தியம் செய்வதனால், அறை குறையான சாக்ஷியத்திலுள்ள குறைகளைப் பூர்த்திசெய்து வைப்பதே அவனுடைய அந்தரங்க நோக்கமாய்க் காணப் படாநின்றது. அவ் வியவகாரத்தில் வேறு விதமான சாக்ஷியமொன்று மில்லாதபோது, அவன் ஆண்டவனையே தனக்குரிய சாக்ஷியாகச் சத்தியம்செய்து கோரிக் கொள்ளுகிறான்; என்னெனின், அந்த ஆண்டவனே எல்லா இரகஸியங்களையும் அறிந்திருப்பவனாகவும், ஆகவே, ஒவ்வொரு விஷயத்திற்கும் அவனே மகா சிலாக்கியமான சாக்ஷியாகவும் அமைந்திருக்கிறான். அவ்வடியான் தனக்குரிய வியவகாரத்தில் ஆண்டவனைச் சாக்ஷியாகக் கோருவதென்பது அவனுடைய நியாயத் தீர்ப்பையே எதிர்பார்த்து நிற்பதாகும். எவ்வாறெனின், அம்மனிதன் பொய்ச் சத்தியம் செய்திருப்பானாயின், ஆண்டவன் தன்னுடைய கோபத்தின் அடையாளமாக அப் பொய்ச் சத்தியத்திற்குப் பின்னே அவ் வடியான்மீது தன்னுடைய தண்டனையை இறக்காமற் போய்விடுவானாயின், அப்பொழுது அம் மனிதனுடைய உறுதிமொழியானது சத்தியமானதென்றே நிரூபிக்கப்பட்டு விடுகின்றது.

இத்தகைய காரணத்தினுலேதான் மனிதன் வேறெந்தச் சிருஷ்டிப் பொருள்களையுங் கொண்டு பிரமாணம் செய்வதினின்றும் தடுக்கப்பட் டிருக்கிறான்; ஏனெனின், ஆண்டவனைத் தவிர்த்து வேறெந்தச் சிருஷ்டிப் பொருளும் மனிதர்களுடைய இரகஸியங்களை அறிந்துகொள்ளக் கூடியதாக வேனும், அல்லது பொய்ச் சத்தியத்துக்காக அவர்களைத் தண்டிக்கக் கூடியதாகவேனும் அமைந்திருக்க வில்லை. ஆதலின், ஆண்டவன் கூறிவரும் சத்தியங்களின் அந்தரங்க நோக்கமானது மனிதர்கள் செய்துவரும் சத்தியத்தினின்று வேறுபட்டதாகவே ஏற்பட்டிருத்தல் வேண்டும். ஆண்டவனுடைய காரியங்களில் இரண்டு விதமான தன்மைகள்—பிரத்தியக்ஷமானவை, அனுமானத்தால் ஏற்படுவன—காணப்பட்டு வருவதை அவனுடைய இயற்கைச் சட்டங்களிலிருந்தே உணர்ந்து கொள்ளுகிறோம். பிரத்தியக்ஷமான வஸ்துக்கள் மிக எளிதாகவே புலப்பட்டு விடுகின்றன; அவற்றுள்ளெல்லாம் அதிகமான வித்தியாசங்கள் காணப்படுவது வழக்கமில்லை. ஆனல், அனுமானப் பிரமாணத்தால் அறிந்து கொள்ளுதற்குரிய காரியங்களிலேதான் தவறுகள் நுழைந்து கொள்ளுதற்கு அதிகமான இடம்பா டுண்டாயிருக்கின்றது; இவ் விஷயத்திலேதான் அபிப்பிராய பேதங்களும் அதிகம் காணப்பட்டு வருகின்றன. எனவே, பிரத்தியக்ஷமான விஷயங்களிலிருந்து அனுமான பூர்வமாக அறிந்துகொள்ள வேண்டிய விஷயங்களின்பக்கல் நமது கவனத்தை ஈர்க்கும்பொருட்டே தான் எல்லாம்வல்ல அல்லாஹுத் தஆலா அவ்வாறு சத்தியம் செய்துவருகிறான்.

மேற்கூறிய திருவாக்கியங்களில் குறிப்பிடப்பட் டிருக்

கும் பிரமாணங்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு பார்ப்போ மாயின், சூரியனும் சந்திரனும், பகலும் இரவும், வானமும் பூமியும் முதலிற்கூறிய பிரத்தியக்ஷ வஸ்துக்களில் சேர்ந்திருப் பதையும், அவற்றின் குணாதிசயங்க ளெல்லாமும்—அந்தத் திருவாக்கியங்களிலேயே வருணிக்கப்பட் டிருப்பன—அப் படிப்பட்ட பிரத்தியக்ஷ பிரமாணத்திலேயே சேர்ந்திருப் பதையும் நன்கு தெரிந்துகொள்ளுகிறோம். ஆனால், மனித னுடைய ஆன்மாவில் பொதிந்து கிடக்கும் அப்படிப்பட்ட குண குணங்களெல்லாம் வெளிப்படையாக நமக்குத் தோ ன்றுவ தில்லை. ஆதலின், மனிதனுடைய ஆன்மாவி னுள்ளும் அத்தகைய குணாதிசயங்க ளெல்லாம் அமைந்திருக்கின்றன வென்னும் அனுமானத்தை எண்பிக்கும்பொருட்டே அவ் வேக வல்லோன் தன்னுடைய பிரத்தியக்ஷமான சிருஷ்டிப் பொருள்களைச் சாக்ஷியத்திற் கழைக்கிறான். அவ்விடத்தில் சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கும் பிரமாணங்க ளனைத்தையும் தொடர்ச்சியான ஒருபெருந் தர்க்கமாகவே நீடித்துக்கொண்டு செல்லலாம். மனிதனுடைய ஆன்மாவினுள்ளே மறைத்து வைக்கப்பட்டிருக்கும் மேன்மைகளெல்லாம், சூரியன் சந் திரன், வானம் பூமி முதலிய சிருஷ்டிப் பொருள்களின் பிரத் தியக்ஷத்தி லிருந்தே அனுமான பூர்வமாக அறிவிக்கப் படுகின் றன. மனிதன் ஒருசிறிய பிரபஞ்சமாகவே அமைக்கப்பட் டுள்ளான்; ஆகவே, அவனது ஆன்மசக்தியினுள்ளே இப் பகிரங்க பிரபஞ்சத்தில் காணப்பட்டுவரும் எல்லாவிதமான விஷயங்களும் சிறிய உருவத்திலே செறிந்தில்லாமற் போக வில்லை. மனிதனைச் சிருஷ்டி செய்திருத்தலினால் ஆண்டவன், இத்தரணியிலுள்ள எல்லாவிதமான சக்திகளையும் அவன்பால்

ஒருசிறிய வடிவத்தினுள்ளே செறித்தினிது விளக்கி வைத்துள்ளதே போலத்தான் அவ்விஷயம் காணப்படாநின்றது. உதாஹரணமாக, இப்பிரபஞ்சத்திலுள்ள பெரும் பெரும் படைப்புக்களெல்லாம், ஆண்டவனுடைய சிருஷ்டிப் பொருள்களின் சேவகத்தி னிமித்தம் தம்பாலுள்ள சிற்சில விதமான சக்திகளையும் தத்துவங்களையும் உபயோகித்து வருகின்றன வென்பது ஒரு வெளிப்படையான விஷயமே யாகும். ஆதலின், அவை யெல்லாவற்றைப் பார்க்கினும் மேலானவனாகவும் சிறந்தவனாகவும் அமைக்கப்பட்டுள்ள மனிதன் மட்டும் அவற்றினால் மற்றைப் படைப்பினங்கட்குக் கிடைத்து வரும் உபகாரத்தைப்போன்ற உபகாரத்தை அளிக்கமுடியாத விதமாகவே அமைக்கப்பட் டிருக்கிறானென்று கூறத்துணிவதானது நமது பகுத்தறிவிற்கு முற்றும் முரணாகவே காணப்படுகின்றது.

சூரியனைப்போன்று மனிதன் ஒருவகை ஜோதியை—அறிவும் ஞானமுமாகிய பிரகாசத்தை—ப்பெற்றுக் கொண்டிருக்கிறான்; எனவே, அவன் அதனுதவி கொண்டு இப்பூவுலகத்தையே பிரகாசமடையச் செய்துவிடுதல் சாலும். சந்திரனைப் போன்று அவன், ஜோதிக்கெல்லாம்—ஞான ஜோதிக்கும், ஞானோதயத்திற்கும், ஞான வெளிப்பாட்டிற்கும் மூலகாரணமாய் விளங்காநிற்கும் எல்லாம்வல்ல இறைவனிடத்திருந்து ஒருவகை ஜோதியைப் பெற்றுக்கொள்ளுகிறான்; ஆகவே, அவன் இதனுதவிகொண்டு, இன்னமும் அக்ஞானாந்த காரத்துள் ளிருந்துகொண்டே மனிதனது பரிபூரணத் தன்மையை அடையமுடியாது அவஸ்தையுற்றுத் திரியும் மாந்தர்க்கு அளித்து வருகிறான். எனவே, நபித்து

வம்—தீர்க்கதரிசித்துவம்—என்னப்படுவது ஒரு புரட்டென்றும், பிரபஞ்சகர்த்தா விடத்திருந்து நன்மாராயம், தெய்வ நியதி, வானவேதம் ஆகியவை வெளியாக்கப் படுவதுண்டென்பது ஒருசில சுயநயக் கருத்தைக்கொண்டு நடிக்கப்பட்டு வரும் பொய்ந்நடிப் பென்றுமே இயம்பத் துணிவதானது வெறும் அறியாமையே யல்லாது வேறென்னவா யிருத்தல் கூடும்?

பகற் பொழுதானது எவ்வாறு ஒவ்வொரு மார்க்கத்தினையும் விளக்கிக்காட்டி, அதிலுள்ள மேடுபள்ளங்களையும் துலக்கிக் காண்பிக்கின்ற தென்பதைச் சற்றே சிந்தித்துப் பார்க்கக் கடவீர்கள். அவ்வாறே பரிபூரண மடைந்துள்ள மனிதனும் பாரமார்த்திகத் துறைக்கொரு பிரகாசமுள்ள பகற்பொழுதாகவே அமைந்து கிடக்கின்றான். அவனது தோற்றமானது வெவ்வேறு விதமான பாதைக ளனைத்தையும் வெளிப்பார்வைக்குக் கொண்டுவந்து சேர்ப்பிக்கின்றது; அதன்பயனாகத் தீமையினின்று நன்மை வேறு பிரித்துக் காண்பிக்கப் படுகின்றது. என்னெனின், அவனே சத்தியத்திற்கும் சன்மார்க்க ஒழுக்கத்திற்கு முரிய பிரகாசம் மிக்க பகற்பொழுதா யமைந்துள்ளான். இவ் வண்ணமாகவே இராப்பொழுதானது எவ்வாறு களைத்துப்போனவர்களுக்கும் அயர்ச்சியடைந் துள்ளவர்களுக்கும் இளைப்பாறுதலை அளித்து வருகிற தென்றும் கண்கூடாகக் கண்டுவருகிறோம். பகற்பொழுதின்போது அதிக வேலைசெய்து அலுத்துப் போயிருக்கும் தொழிலாளி இராவேளையை ஆவலுடனே எதிர்பார்த்திருந்து, பகற்பொழுதின் தொழிற் சிரமத்தினின்று விடுபட்டு இளைப்பாறப் போகிறான். இன்னமும், இராப்பொழு

தானது குற்றங் குறைகளின் மீதெல்லாம் ஒருவகைப் போர் வையைப் போர்த்து, மனிதனை அவமானமுள்ள காரியங்களி னின்று காப்பாற்றி வைக்கின்றது. இவ்வாறே பரிபூரண மனிதனும் இவ்வுலகினுக்கு இளைப்பாறுதலை யளித்து, மனித வர்க்கத்தாரின் பளுவையும் இலேசாக்க முயலுகிறான். எல்லா ஞானங்களுக்கும் மூலாதாரமாயுள்ள இடத்திலிருந்து அவனுக்கருளப்படும் ஞானோதயத்தைக் கொண்டும் ஞான வெளிப்பாட்டைக் கொண்டும் எல்லா ஞானமுள்ள மக்களின் ஆன்மாக்களின் மீதும் ஒரு நன்மருந்தை ஊற்றுகிறான். ஞானவான்கள் தங்களுக்குரிய சொந்த முயற்சியை மட்டுமே கொண்டு அறிந்துகொள்ள முடியாத உண்மைகளனைத்தும் ஞான வெளிப்பாட்டை அருளப்பெற்றுள்ள ஒரு பரிபூரண மனிதனது மூலமாக மிக எளிதிலே வெளியாய் விடுகின்றன. அதுவேயுமன்றி, ஞான வெளிப்பாடென்பது பகுத்தறிவைப் பலப்படுத்தி, அதன்பாலுள்ள குற்றங் குறைகளை யெல்லாம் மறைத்துவைத்து விடுகின்றது; என்னெனின், அதன்மாட்டுள்ள பலஹீனங்களை வெளியுலகத்தை விட்டு அழுத்தி வைத்து விடுகின்றது. ஞான வெளிப்பாட்டின் வழிகாட்டுந் தன்மையையும் பிரகாசத்தையுங்கொண்டு ஞானவான் தன்பாலுள்ள குற்றங் குறைகளனைத்தையும் திருத்திக்கொண்டு தன்னையே சீர்திருத்தம் செய்துகொள்ளுகிறான்; இவ் வாறாக அதனுதவிகொண்டு அவன் பஹிரங்கப் பழிப்பினின்று தன்னைக் காப்பாற்றிக் கொள்ளுகிறான். இதனால்தான் பிளேட்டோ (அபலாத்தூன்) என்னும் கிரேக்க தத்துவ சாஸ்திரியானவர் ஒரு விக்கிரஹத்துக்கு அவமானம் மிக்க அறிவீனத்தனமான நைவேத்தியக் கடனை நிறைவேற்ற முன்வந்தார்; ஆனால், எந்த

விதமான முஸ்லிம் தத்துவ சாஸ்திரியும் இவ்வாறு செய்திருப்பதாக எங்கும் எழுதிவைக்கப்பட்டில்லை. என்னெனின், முஸ்லிம் தத்துவ சாஸ்திரிகளுக்கு இவர்களது பகுத்தறிவுக்கு நல்வழி காட்டுதற்கென்று நபிகள் நாயகத்தின் ஸல் பரிபூரணமான ஞானவெளிப்பாடு அமைந்து கிடக்கின்றது. இதனால், இராப்பொழுதின் மூடுந்தன்மையைக் குறித்து அல்லா(ஹ்) ஏன் சத்தியத்தின் மூலமாக நமது கவனத்தை ஈர்க்கின்றானென்னும் உண்மை மிக விளக்கமாகவே அறியக் கிடக்கின்றது.

இன்னமும், அல்லாஹுத் தஆ'லாவின் பரிபூரண நல்லடியார்கள் ஒவ்வொரு துன்புற்றுழலும் அல்லது களைப்புற்றுத் திரியும் மனிதனையும் வானமேபோன்று தம்முடைய நிழலின் கீழ்க் கொணர்ந்து அணைத்துக் கொள்ளுகிறார்கள். வானுலகு தன்னுடைய மாரி வெள்ளத்தைக் கொண்டு செய்துவருவதே போன்று அல்லா(ஹ்)வின் நபிமார்களும் தங்களுக் களிக்கப்பட்டிருக்கும் அருட் கொடைகளைக் கொண்டும் கருணைமாரியைக் கொண்டும் இத்தரணிக்கு நன்மையே புரிந்து வருகின்றார்கள். இன்னமும் அவ்வாறே இவர்கள் இத்தரணியின் தன்மையையும் பெற்றுக்கொண் டிருக்கிறார்கள்; எவ்வாறெனின், இவர்கள் தங்களுடைய பரிசுத்தமாக்கப்பட்ட ஆன்மாக்களைக் கொண்டு அறிவு உண்மை ஆதியவற்றின் பற்பல விதமான விருக்ஷங்களை யெல்லாம் ஏராளமாக வளரச்செய்து, அவற்றினுதவியால் விளைந்துவரும் நிழல், புஷ்பம், கனிகள் ஆதியவற்றால் இவ்வவனிக்கே பேருபகாரம் புரிந்து வருகிறார்கள். ஆகவே, இயற்கை யென்னும் திறந்த சுவடியில் நாம் படித்துவரும் சட்டதிட்டங்களே மறைவான சட்டதிட்டங்

களுக் கொரு சாக்ஷியமாய்க் காணப்படாநின்றன ; அத்தகைய சாக்ஷியமே மேலேகூறப்பட்டுள்ள :குர்ஆன் திருவாக்கியங்களில் சத்தியத்தின் பாவனையாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. அல்லா(ஹ்)வின் திருவசனத்தில் காண்பிக்கப் பட்டுள்ள ஞானத்தின் பெருமையே பெருமை. இத்தகைய திருவசனமானது பாலைவனத்தில் அவதாரம் புரிந்துள்ள எழுதப்படிக்கத் தெரியாத ஓர் "உம்மீ"யின் திருவாய் மொழி வழியே வெளியாக்கப்பட் டுள்ளது. இது சர்வஞான சிகா மணியாகிய அல்லாஹுத் தஆ'லாவின் திருவசனமா யில்லாவிடின்,கல்விமான்களும் உலக அனுபவம் முதிர்ந்தவர்களும் தத்தமக்குரிய அறிவின் முதிர்ச்சியனைத்தையும் செலவு செய்து பார்த்தும், தங்களுடைய அறைகுறையான பகுத்தறிவைக்கொண்டு மட்டுமே உண்மையான கருத்தை ஓர்ந்து கொள்ள முடியாது போய், ஞானப் பொக்கிஷங்க ளனைத்தும் கரந்துறையும் அத் திருவாக்கியங்களைக் குறித்து ஆக்ஷேபங்கிளப்பத் தலைப்பட்டிருக்க மாட்டார்கள். இதனால் நாம் தெரிந்துகொள்வது யாதெனின், உலகஞான மென்பது அத் திருவாக்கியத்தின் மெய்யான தாத்பரியத்தை விளங்கிக் கொள்ள முடியாதுபோய், அதன் சரியான பொருள் அதிக ஆழமான கருத்தை நிரம்பப் பெற்றுள்ளதென்று பின்னர் விவரித்துக் காட்டப்படுவதி லிருந்து அத்தகைய திருவாக்கியங்க ளெல்லாம் அடியார்களுக் கப்பாற்பட்ட ஆண்டானிடத் திருந்தேதான் உற்பத்தியா யிருத்தல் வேண்டுமென்பதே உறுதியாகும் என்பதுதான். பலஹீன முள்ளனவென்றும், தாக்குதற்கு எளிதான இடங்களென்றும் கருதப்பட்டு வந்த :குர்ஆன் ஷரீபின் சத்தியங்களின் சார்பான

வியவகார மானது இவ் வாறாகக் காணப்படாநின்றது. ஆனால், இப்பொழுது அவற்றின்சார்பான இரகசியங்க ளனைத் தும் நன்கு விளக்கப்பட்டு, அவற்றால் போதரும் உண்மை யான கருத்தும் இத்தன்மைய தாகுமென்று துலக்கப்பட்ட தன்பின் எல்லாப் புத்திமான்களும் இதனைக் குறித்துச் சிந் தித்துப் பார்த்து இன்புற்று நிற்பார்க ளென்றே எண்ணு கின்றேம்.

:குர்ஆன் ஷரீபானது, இயற்கைச் சட்டங்களை எடுத்துக் காட்டி ஞான வெளிப்பாட்டின் அவசியத்தையும் உண்மை யையும் எடுத்தியம்புங் காலத்திலும் வேறோரிடத்தில் மற் ெறாரு விதமான சத்தியத்தை மேற்கொண் டிருக்கிறது; அது வருமாறு: "மழையை இறக்கித்தரும் வானத்தின் மீதும், அம்மழையைக் கொண்டு தாவர பதார்த்தங்களை வெளியாக்கும் பொருட்டுத் தனது அகடுதிறக்கும் பூமியின் மீதும், இந்தக் :குர்ஆன் அல்லா(ஹ்)வின் திருவசன மென் றும், மெய்யையும் பொய்யையும் வேறு பிரித்துக் காண்பிக் கும் அவனது ஞான வெளிப்பா டென்றும், இது வீணான தும் வியர்த்தமானதுமான தன்றென்றும் யான் சத்தியம் செய்கின்றேன்"—(86: 11-14) அஃதாவது, அனுவசியமான தாகவும் தேவைப்படாததாகவும் இஃது அமைந்திருக்க வில்லை; ஆனால், உரியகாலத்தில் வருஷிக்கும் மழையே போல இது தனக்குரிய காலத்திலேயே வந்திருக்கிறது. இவ்விடத்திலே, எல்லாம் வல்ல அல்லாஹுத் தஆ'லாவான வன் :குர்ஆன் ஷரீ'பின் வெளிப்பாட்டிற்குரிய மெய்ம்மை யைக் குறிக்கும் சாக்ஷியமாகத் தன்னுடைய சட்டமொன் றைச் சத்தியம் செய்து நமது கவனத்தை ஈர்க்கின்றான்.

அவசியமான வேளையிலே ஆகாயத்திலிருந்து மழை பெய்வதை இயற்கையின் சட்டங்களிலே நாம் பிரத்தியக்ஷமாகக் கண்டுகொண்டுதான் வருகிறோம்.

பூமியின் மீதுள்ள பசுமையும் தளதளப்பும் வானத்தின் மழைமீதே சார்ந்திருக்கின்றன; அத்தகைய மழை சிறிது காலம் நின்றுவிடுமாயின், பூமியின் மேற்பரப்பிலுள்ள நீரானது சிறிது சிறிதாக வறண்டுவிடுகின்றது. இவ்வாறு யாம், வானத்தின் தண்ணீருக்கும் பூமியின் தண்ணீருக்கும் இடையிலே ஒரு விதமான தொடர் பிருப்பதைக் கண்டு வருகின்றோம். ஆகவே, ஆகாயத்தின் மழை நீர் பூமியின் தண்ணீருடன் வைத்துக்கொண் டிருக்கும் சம்பந்தம் போன்ற சம்பந்தத்தையேதான் மனிதப் பகுத்தறிவுடனே ஞான வெளிப்பாடு வைத்துக்கொண் டிருக்கின்றது. வானலோக மழை நின்று விடுதலினால் பூமியின் ஜலமும் வறள ஆரம்பிப்பதே போலத்தான் மனிதப் பகுத்தறிவும் வானுலகிலிருந்து இறங்குதற்குரிய ஞான வெளிப்பாட்டின் தொடர்பைப் பெற்றுக் கொள்வதினின்று தனித்துவிடுமாயின், தனக்குரிய பரிசுத்தத்தையும் பலத்தையும் இழக்க ஆரம்பித்துவிடுகின்றது. ஆதலின், அல்லா(ஹ்)வின் ஞான வெளிப்பாட்டை அருளப்பெற்ற மனிதனொருவன் இத்தரணியின்கண் தோன்றாது நெடுங்காலம் கழிந்துவிடுமாயின், மனிதனது பகுத்தறிவானது பூமியின் தண்ணீரே போன்று அசுத்தமுள்ளதாகவும் துர்நாற்றமுள்ளதாகவும் மாறிவிடுவ தென்பது ஓர் இயற்கையேயன்றோ?

இதற்கு வேண்டிய உதாஹரண மொன்றை நாடுவோமாயின், இஸ்லாத்திற்கு முற்பட்ட காலத்தைக் குறித்து ஒரு

சிறிது ஆராய்ந்து பார்க்கக் கடவோம்: நபிகள் நாயகம்ஸல் திருவவதாரம் புரிதற்குச் சற்று முன்னே எங்குப் பார்த்தாலும் இருள்மயமாகவே காணப்பட்டு வந்தது. இயேசு கிறிஸ்து வந்துவிட்டுப் போய்ச் சுமார் அறுநூறு வருட காலம் கழிந்திருந்தது; அந்த நெடிய இடையிட்ட காலத்திலே வேறெவ்விதப் பெரிய வசீகர சக்தி வாய்ந்தவரும் ஆண்டகையின் அருட் பிரகாசத்தைப் பெற்று இத்தரணியின் கண்ணே தோன்றிப் போந்தனரில்லை. இவ்வுலக முழுதுமே பரிசுத்தத் தன்மையி னின்றும் சன்மார்க்க ஒழுக்கத்தினின்றும் வீழ்ந்துகொண் டிருந்ததைக் காண்கின்றோம்; பரிசுத்த மிழந்திருந்த அபிப்பிராயங்களே எங்கும் பொதுவாகப் பரவிக் கிடந்தன. இதற்குக் காரணம் அத்துணை நெடியகாலம் வரை ஆண்டகையின் ஞான வெளிப்பாடு நிறுத்தப்பட்டிருந்ததே யல்லாது வேறொன்று மில்லை. தேவலோக ராஜ்யத்தை ஆண்டகையின் ஞானவெளிப்பா டல்லாது வெறும் பகுத்தறிவு மட்டுமேதான் ஆண்டுகொண்டு வந்தது; அத்தகைய பகுத்தறிவின் குறைபாட்டினாலும் பரிசுத்தக் கேட்டினாலும் அது மனிதர்களைத் தவறான வழியிலேயே செலுத்திக் கொண் டிருந்தது. அத்துணை நெடுங்காலமட்டும் பூமியின்மீது வானலோகத்தின் ஞான வெளிப்பாட்டின் மாரி வருஷிக்காது நின்றுவிட்ட காரணத்தினால் மனிதப் பகுத்தறிவென்னும் பூலோகத் தண்ணீரும் வறண்டுபோய்விட்ட தென்னலாம்.

இதுதான் :குர்ஆன் ஷரீபிலுள்ள சத்தியங்களின் கீழே மறைந்து கிடக்கும் இரகசியமாகக் காணப்படா நின்றது. பூமியினின்று தாவர வர்க்கமும் புற்பூண்டு வகைகளும் முளைத்தெழுவ தென்பது வானின்று பெய்யும் மழையின்

மீதே சார்ந்திருக்கிற தென்னும் ஆண்டகையின் வெளிப் படையான சட்டத்தின் பக்கலே எல்லாம் வல்ல இறைவன் மனிதர்களுடைய கவனத்தை ஈர்த்து வைக்கின்றான். இத் தகைய பகிரங்கச் சட்டமே ஞானவெளிப்பாட்டிற் குரிய அந்தரங்கச் சட்டத்தை வெளிப்படுத்திக் காண்பிக்கின்றது. பகுத்தறிவு மட்டும் சுயமே நம்பப்படத் தக்கதாயில்லை; என் னெனின், ஞானவெளிப்பா டென்பது அதற்கு வேண்டிய போஷணையைக் கொடுத்து வளர்க்காவிடின், அந்தப் பகுத்தறி வென்பதே இல்லாம லொழிந்து போய்விடும். ஆண்டவனது ஞான வெளிப்பாட்டை அருளப்பெற்ற ஒருவர் இத்தரணியின் மீது வசித்துவரும் கால பரியந்தம் அவருடைய கருணை மாரியென்பது எல்லார்மாட்டும் பரத்தப்பட்டே வருகின்றது; அதுபோது மனிதப் பகுத்தறிவானது பொதுவாகவே பிர காசமடையச் செய்யப்பட்டு, பிரத்தியக்ஷமான முறையிலே சுறுசுறுப்படையவும் செய்யப்பட்டு விடுகின்றது. அப் பொழுது உண்மையை உணர்ந்துகொள்ள வேண்டுமென்னும் ஏற்பாடு பலமாகக் காணப்பட்டு, அதற்குமுன் மழுங்கிப் போய்க்கிடந்த மனிதசக்திக ளனைத்தும் ஒருவகைப் புத்தூக் கத்தையும் புத்துணர்ச்சியையும் வெளிக்காட்டத் தலைப்படுகின் றன. இப்படிப்பட்ட மூளையின் பகுத்தறிவுக்கும், மனத் தின் உத்வேகத்திற்கும் ஆண்டகையின் ஞான வெளிப் பாட்டை அருளப்பெற்ற ஒருவர் அவதாரம் புரிந்திருக்கும் அதிருஷ்டமே காரணமாகும். ஆதலின், உண்மையை யறிந்து கொள்ள ஒருவகைப் பொதுப்படையான உத்வேகம் கிளம்பி, ஒவ்வொருவரும் ஒரு சன்மார்க்கத்தையே அடைதற்கு நாடிப் புறப்பட்டார்க ளென்பதை நீங்கள் காணுந்தோறும் விண்ணு

லகமாரியானது இத்தரணியின்மீது வருஷிக்கப்பட்டு, ஆண்டகையின் ஞானவெளிப்பா டென்பது ஒரு பரிசுத்தமான ஹிருதயத்துக்குள் ஜோதியைக் கிளப்பிவிட் டிருக்கிற தென்பதை நிச்சயமாக நீங்கள் அறிந்துகொள்ளக் கடவீர்கள்.



# ஆண்டவனை அறியும் ஞானத்தின் மூலங்கள் யாவை?



இம் மகாநாட்டில் எனக் களிக்கப்பட்டிருக்கும் காலத்தின் சுருக்கத்தையும், இவ்விஷயத்தைக் குறித்துக் :குர்ஆன் ஷரீ 'பானது விவரித்திருக்கும் விசாலமான தன்மையையும் நோக்கி நான் என்றால் இயன்றவரை மிகச் சுருக்கமாகவே முடித்துக்கொள்ளப் போகின்றேன். "த(க்)காதுர் ஸூரா" வைக் குறித்து இதற்கு முன்னமே விளக்கப்பட் டிருப்பதே போல், இ'ல்முல் ய(க்):கீன், ஐ'னுல் ய(க்):கீன், 'ஹ:க் :குல் ய(க்):கீன் என்று மூன்று விதமாகக் :குர்ஆன் ஷரீ 'பானது ஞானத்தைப் பாகுபாடு செய்து கூறியிருக்கின்றது. அவற்றுள் இ'ல்முல் ய(க்):கீ னென்பது, ஓரிடத்தில் காணப் படும் புகையைக்கொண்டே அங்குள்ள நெருப்பைக் காணுமலே அவ்விடத்தில் அக்கினி இருக்கிறதென்று நாம் தீர்மானம் செய்துகொள்வதே போன்ற அனுமானத்தினுல் ஏற் படும் ஞானமாகும். ஆனால், நாம் அந்த நெருப்பையே கண்டுவிடுவோ மாயின், அதன் உண்மையைக் குறித்த நமது ஞானமானது இரண்டாவது படித்தர மென்னப்படும் ஐ'னுல் ய(க்):கீன் என்று அழைக்கப்படுகின்றது. ஆயினும், நம் நேத்திரங்களைக்கொண்டு பார்க்கப்படும் ஒரு பொருளின் சார்பான நமது ஞானம் நம்முடைய சொந்த அனுபவத்தின் மூலமாக இன்னம் நன்ருக அறிந்துகொள்ளப்படலாம்; உதா

ஹாரணமாக, நமது கரத்தை அவ்வக்கினியில் நீட்டுவதால் அத்தகைய அனுபவ ஞானம் உண்டாய்விடுகின்றது. இது தான் மகா நிச்சயமான உறுதியை நமக் களிக்கின்றது; இதைத் தான் :குர்ஆன் ஷரீ'பும் 'ஹ:க்:குல் ய(க்):கீன் என்று கூறியிருக்கின்றது. இவ்வகையான ஞானத்தின் படித்தரங்களைப் பற்றியெல்லாம் விவரித்திருக்கும் அந்த ஸூராவை முன்னமே எடுத்துக்கூறி, அதற்கு வேண்டிய வியாக்கியானத்தையும் நாம் விரித்துரைத் திருக்கின்றோம்.

நிச்சயமான ஞானத்தைப் பெறுதற்குரிய அஸ்திபாரங் கள் பகுத்தறிவாகவும் சரியான கல்வியறிவாகவும் காணப்படு கின்றன. நரகத்துள் வசிப்பவர்களைக் குறித்துக் :குர்ஆன்ஷரீ 'பானது இவ்வாறு கூறியிருக்கின்றது: "மேலும் அவர்கள் சொல்வார்கள்: 'ஞானவான்களின் அறிவுரைகளை நாம் கேட்டிருந்தால், அல்லது நாமே புத்திமான்களா யிருந்து பகுத்தறிவைக்கொண்டு சன்மார்க்கத்தையும் நன்னம்பிக்கை யையும் பரீக்ஷித்திருந்தால், நரகத்தில் வசித்திருப்பவர்களின் மத்தியிலே நாம் இருந்திருக்க மாட்டோம்' "—(67:10). இதே கருத்துத்தான் :குர்ஆன் ஷரீ'பின் மற்றோ ரிடத்திலும் இவ்வாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது: "எந்த ஆன்மாவையும் தன் சக்திக்கு மேற்பட்ட சுமையைச் சுமக்கவேண்டு மென்று ஆண்டவன் கட்டளையிடுகிற தில்லை"—(2:286). இத் திரு வாக்கியத்தில் ஆண்டவன், மனிதர்களைத் தன் திருத்தூதர் களைக்கொண்டு நன்னம்பிக்கையின் பக்கலும் நற்கொள்கை களின் பக்கலும் அவன் அழைக்கும்போது, அவை யனைத் தும் மனிதனுடைய அறிவுக்கும் பகுத்தறிவுக்கு முரிய சக் திக்குட்பட்டன வாகவே இருக்கின்றன வென்றும், அவர்களு

டைய சக்திக்கு மேற்பட்ட யாதொரு விதமான சுமையையும் அவர்கள் மீது அவன் பலவந்தப் படுத்துவதில்லை யென்றும் நமக்கு மிகச் செம்மையாக விளக்கிக் காண்பிக்கின்றான். மனிதன் சரியான அறிவைக்கொண்டு நிச்சயமான ஞானத்தை அடைந்து கொள்ளுதல் சாலுமென்று மேற்கூறிய திருவாக்கியங்கள் சுட்டிக் காட்டிக்கொண் டிருக்கின்றன. உதாஹரணமாக, நாம் லண்டன் மாநகரை நேரில்கண்டதில்லை; எனினும், இப்படிப்பட்ட நாமம் வகித்துள்ள நகரமொன்று உண்டென்பதைக் குறித்து நமக்கு நிச்சயமான ஞானமுண்டு; என்னெனின், அதனை நேரில் சென்று கண்டு வந்திருக்கும் எல்லா நல்ல மனிதர்களையும் நாம் அவநம்பிக்கையால் உதாசினம் செய்து விடுவது முடியாது. அல்லது ஔரங்கஜேபின் காலத்திலே நாம் வசித்திருக்க வில்லை; நாமும் ஒரு போதும் அவரைக் கண்ணால் கண்டதே யில்லை; எனினும், ஔரங்கஜேப் இந்தியாவில் ஆண்ட முகல் சக்ரவர்த்திகளுள் ஒருவராயிருந்து வந்தாரென்பதில் கிஞ்சித்தும் சந்தேகத்தின் சாயைகூட இருப்பதற்கு ஞாயமில்லை.

எனவே, சாக்ஷியத்தின் சங்கிலித் தொடரானது தறிக்கப்படாமல் இருந்திருந்தால் செவியுரைகளைக்கொண்டே ஒரு விஷயத்தின் உண்மையையேனும் அல்லது ஒரு பொருளின் உண்மையையேனும் அறிந்துகொள்ளக்கூடிய நிச்சயமான முடிபிற்கு நாம் நன்றாக வந்துசேரல் கூடும். நபிமார்களுக்கு அருளப்படும் ஞானவெளிப்பா டென்பது, தலைமுறை தலைமுறையாக வந்த விஷயத்தில் இடையிலே துண்டிக்கப் படாமலும், அதனை நமக்குக் கொண்டுவந்து சேர்க்கும் கிரந்தமானது பரிபூரணக் குறைவற்றதாக இராமலும் இருந்து

வரும் காலம் வரை அஃதொரு ஞானத்திற்குரிய மூலமாகவே அமைந்திருக்கிறது. ஆனால், ஒரே விஷயத்தைக் குறித்து ஐம்பது அல்லது எழுபது வெவ்வேறு விதமான விவரங்கள் ஒன்றோடொன்று மாறுபாடாகக் காணப்பட்டு, அவற்றைப் பற்றிக் கூறும் தஸ்தாவேஜ்களனைத்துமே ஆண்டவையின் ஞானவெளிப்பாட்டின் மீதுதான் வரையப்பட்டிருக்கின்றன வென்று உரிமை பாராட்டிக்கொள்ளுமாயின், ஏதேனும் ஒரு வகையார் அந்தத் தஸ்தாவேஜ்களுள் சிலவற்றை மட்டுமே ஆண்டவையின் மூலத்திலிருந்து வந்தனவென்று ஏற்றுக் கொண்டு, ஏனையவற்றை யெல்லாம் பொய்யான போர்ஜரி ரிகார்டுகளென்று ஒதுக்கித் தள்ளுவதானது, இப்படிப்பட்ட தீர்மானம் பரிபூரண பூர்வபக்ஷத்துடன் கூடிய விசாரணையின் மீது நிறுவப்படாவிடின், அவர்கள் தேர்ந்தெடுத்துக்கொண்ட தஸ்தாவேஜ்களில் காணப்படும் உண்மை என்னப்படுவது குறித்து ஓர் உறுதியான அறிவின் பக்கல் நடத்திச்செல்ல மாட்டாது. அப்படிப்பட்ட ஒன்றோடொன்று மாறுபட்டுக் கிடக்கும் விருத்தாந்தங்களெல்லாம் முற்றும் நம்பத்தகாதன வாகவே காணப்படுகின்றன; அவற்றைப் பொய்யென்று வெறுத்துத் தள்ளுவதற்கு நமக்கு வேறு விதமான சாக்ஷிய மொன்றும் தேவையில்லை. அவைகள் ஒன்றோடொன்று மாறுபட்டுக் கிடக்குங்கால்—ஒரு விஷயத்தின் உண்மையை அறிதற்குப் பெரிய வழி ஒற்றுமையான சாக்ஷியமே யாகும்—அவை உண்மையான ஞானத்திற்குரிய மூலமாகவும் அமைந்து விடுதல் சாலாது. ஏனெனின், அவற்றின் துணையைக்கொண்டு நிச்சயமாகக் கொள்ளப்படும் எந்த விதமான முடிபும், அந்த மூல தஸ்தாவேஜ்களே முரண்பட்டுக் கிடக்

குங்கால், நிச்சயமான ஞானத்தை அளித்திடுதல் சாலாது.

மேற்கூறிய விஷயங்களைக்குறித்து வியவகரித்து வருங்கால், :குர்ஆன் ஷரீ'பின் மெய்ம்மைத் தன்மை அதன் இடையறு ஆற்றொழுக்கே போன்ற வரலாற்று முறையாலும் அதன் ஆதார பூர்வமான உறுதிப்பாட்டாலும் மட்டுமென்றே கருதுவது கூடாதென்பதை நன்கு ஞாபகத்தி லிருத்திக் கொள்ளுதல் வேண்டும். என்னெனின், இவ்வேதமானது முழுக்க முழுக்கக் காரணகாரிய முறைமையைக் கொண்டே தனது விஷயத்தை நடாத்திச் செல்கின்றது. ஆண்டவனது ஞான வெளிப்பாடென்னுங் காரணத்தைக்கொண்டே :குர்ஆன் தன்னகத்தேயுள்ள கொள்கைகளையும் தத்துவங்களையும் கட்டளைகளையும் நாம் ஒத்துக்கொள்ள வேண்டுமென்று பலவந்தம் செய்வது கிடையாது; ஆனால், மனிதனது பகுத்தறிவைக்கொண்டு ஆராய்ச்சி செய்து பார்க்குமாறு கூறி, அவ்வேதம் போதிக்கும் விஷயங்களுக்கெல்லாம் காரணகாரியப் பொருத்தமும் போதியவரை எடுத்துக் காண்பிக்கின்றது. கீழ்க்காணும் திருவாக்கியத்தில் காணப்படுமாறு, :குர்ஆன் ஷரீ'பால் உபதேசிக்கப்படும் உண்மைகளனைத்தும் மனிதனது இயற்கைத் தன்மையிலேயே சுவடுபடிந்து கிடக்கின்றன வென்று கூறிவருங்கால், மேற்கூறிய விஷயத்தையே இவ்வேதம் வலியுறுத்திக் காண்பிக்கின்றது: هـذا ذكر مبارك
"இந்த ஆசிர்வதிக்கப்பெற்ற கிரந்தமானது நூதனமான புதிய கொள்கைகளை உபதேசிக்க வில்லை; ஆனால், மனிதனது இயற்கையிலேயே சுவடுபடிந்துள்ள தன்மையையும், இயற்கையின் சட்டங்களையுமே ஞாபக மூட்டக்கூடியதா யிருக்கிறது"— (21 : 50). இன்னமும் இவ்வாறும் ஒரு வேத வாக்கியம்

காணப்படாநின்றது: لا اكراه في الدين "இம்மார்க்கத்தில் (அஃதாவது, இஸ்லா மார்க்கத்தில்) பலவந்தம் ஒன்றுமில்லை" —(2 : 256). அஃதாவது, இதன் கொள்கைகளை அங்கீ கரித்துக்கொள்ளுமாறு இஸ்லாம் ஒருவரையும் கட்டாயப் படுத்துவது கிடையாது; ஆனால், அவற்றினை அங்கீகரித்துக் கொள்ளுதற்குரிய காரணகாரியங்களையே நன்கெடுத் தோது கின்றது. அதுவேயுமன்றி, :குர் ஆன்ஷரீ'பானது ஹிருதய த்திற்குப் பிரகாசத்தை யூட்டவல்ல பாரமார்த்திகத் தன்மை யையும் இவ்வாறு எடுத்தோதுகின்றது: شفاء لما في الصدور "(:குர்ஆன் ஷரீ'பானது) எல்லா விதமான ஆத்மார்த்த வியாதிகளுக்கும் ஒரு சௌஸ்தமாக அமைந்திருக்கிறது" —(10 : 57). ஆகவே, :குர்ஆன் ஷரீ'பானது நமது கரத்திடை ஒரு பத்திரமான இடையறு வரலாற்று முறை யான் அளிக்கப்பட்டிருக்கும் ஒரு பிராசீன கிரந்தமென்னுங் காரணத்தைக் கொண்டே தனக்குரிய வன்மை முழுதையும் பெற்றுக்கொண் டிருக்கிற தென்று எண்ணிவிடற்க; ஆனால், அதன் உண்மையான பல முழுதும், அதனால் எண்பிக்கப் படும் புத்திசாலித்தனமான காரணகாரியப் பொருத்த விவாதத்தின் மீதும், அதனால் சொரியப்படும் பரிசுத்தமான பிரகாசத்தின் மீதுமே சார்ந்திருக்கிறது.

இவ்வாறே நியாயமான அஸ்திபாரத்தின் மீது நிர்மா ணிக்கப்பட்டுள்ள புத்திசாலித்தனமான காரணகாரிய விவா தமும் மனிதனை நிச்சயமான ஞானத்தின் பக்கல் கொண்டு சேர்ப்பிக்கின்றது. இது குறித்துக் :குர்ஆன் ஷரீ'பும் பின் வரு மாறு வியவகரித்திருக்கின்றது: ان في خلق السموات والارض

واختلاف الليل والنهار لآيات لأولي الألباب الذين يذكرون الله قياما وقعودا وعلى جنوبهم ويتفكرون في خلق السموات والأرض ربنا ما خلقت هذا باطلا سبحانك فقنا عذاب النار " ஞானமுள்ளவர் களும் பகுத்தறிவு வாய்ந்தவர்களும் பூமியும் வான கோளங் களும் சிருஷ்டிக்கப்பட் டிருப்பதைக் கவனித்துப் பார்த்து, பகற் பொழுதிலும் இராப் பொழுதிலும் மாறுபாட்டைக் கொண்டுவரும் காரணங்கள் யாவையென்று ஆழச் சிந்தித்துப் பார்ப்பார்களாயின், அவற்றினுள்ளே அவர்கள் கடவுளின் உண்மையைக் குறித்துத் துலக்கமான காரணகாரிய விளக்கங் களைக் கண்டுகொள்வார்கள். துலக்கமான பகுத்தறிவிற்காக வும், ஞானத்திற்காகவும் அவர்கள் அல்லா(ஹ்)வின் உதவியை நாடி, நின்றுகொண்டும், உட்கார்ந்து கொண்டும், சாய்ந்து கொண்டும் எல்லாவித நிலைமைகளிலும் அவனையே தியானம் புரிந்து வருகிறார்கள். இதனால், அவர்களுடைய பகுத்தறி வும் அதிக விளக்கமடைந்து, வான மண்டலங்களும் பூமண் டலமும் பரிபூரணமாகப் படைக்கப்பட் டிருப்பதைக் கூர்ந்து நோக்க நோக்க, இத்தகைய பிரகாச கோளங்களி லெல்லாம் காணப்பட்டு வரும் பரிபூரணமான ஏற்பாடும், மஹா புத்தி சாலித்தனமான சிருஷ்டி தத்துவமும் வீணான காரியங்க ளல்ல வென்றும், அவற்றின் சிருஷ்டிகர்த்தாவின் ஜோதிமய மான முகாரவிந்தத்தையே வெளிக்காட்டுகின்றன வென்றும் அவர்கள் அறிந்து கொள்ளுகிறார்கள். (இவ்வாறு சிருஷ்டி கர்த்தாவின் உண்மைக்குரிய ஞானத்தைப் பெற்றுக்கொண்டு, பின் வருமாறு அவர்கள் அவனைக் குறித்து ஸ்தோத்திரம் புரியத் தலைப்பட்டு விடுகிறார்கள்:) 'ஏ எங்கள் ரக்ஷகனே! எல்லாப் புகழும் நினக்கே தகும்; நினது இருக்கையை மறுப்

பவனும், நினக்கு உரியனவல்லாக் குணங்களை நின்பால் சுமத்துபவனும் நின்னை விடுத்து நெடுந்தூரத்தி லிருக்கக் கடவர். நீ எங்களை நரகத் தீயைவிட்டுக் காப்பாற்றிவை! ஏனெனின், நின்னை மறுப்பதே நரகமாகும்; உண்மையான ஆனந்தமும் இன்பமும் நின்மாட்டும் நினது ஞானத்தின் மாட்டுமே நிரம்பிக் கிடக்கின்றன. எனவே, நின்னை உண்மை யிலே உணர்ந்து கொள்ளத் தவறியவன் இவ்வுலக வாழ்க்கை யிலே நரகத் தீயுள்ளே நிச்சயமாகக் கிடக்கிறான்' ''— (3: 189,190).

அல்லாஹுத் தஆ'லாவின் திருவசனத்தில் மனித இயற்கை யென்று கூறப்படும் மனச்சாக்ஷியும் ஞான மடை தற்குரிய ஒரு மூலாதாரமா யிருக்கிறது. ஆண்டவன் தன் :குர்ஆன் ஷரீ'பில் இதை இவ்வாறு விளக்கி யிருக்கிறான்: فطرة الله التي فطر الناس عليها இயற்கையின்மீது அழுத்தப் படும் அல்லா(ஹ்)வின் முத்திரையைக் கொண்டே எல்லா மனிதர்களும் சிருஷ்டிக்கப்படுகிறார்கள்''—(30 : 30). மனித இயற்கையின்மீது அழுத்தப்படும் இந்த முத்திரையே எல்லாம்வல்ல இறைவனை இணைதுணை யற்றவ னென்றும், எல்லாவற்றின் சிருஷ்டி கர்த்தா வென்றும், ஜனன மரண மற்றவ னென்றும் அங்கீகரிக்குமாறு செய்து விடுகின்றது. மனித இயற்கையிலிருந்து பெறப்படும் ஞானமானது அனு மானப் பிரமாணத்திற்குரிய சரியான மூலமேபோல் காணப் படாமற் போயினும், நாம் இம்மனித இயற்கையை ஒரு ஞானத்திற்குரிய மூலமென்றே கூறியது எற்றுக்கெனின், இவ்வியற்கை யென்னப்படுவது அனுமானப் பிரமாணத்திற் குரிய ஒரு மெல்லிய ரஸ்தாவினூடே ஒருவகைத் திட்ட

மான முடிபுக்கு ஈர்த்துச் செல்லுதலினாலே யாம். எல்லாம்வல்ல அல்லாஹுத் தஆ'லாவானவன் ஒவ்வொரு சிருஷ்டிப் பொருளுக்கும் ஒவ்வொருவிதமான தன்மையை யளித்திருக்கின்றான்; அத்தகைய தன்மை இத்தகைமைத் தென்று குறிப்பிட்ட வார்த்தை விவரங்களைக் கொண்டு விளக்கிவைப்பது சாலாது; ஆனால், அதன்மீது நமது கவனத்தைச் செலுத்திச் சிந்தித்துப் பார்ப்போ மாயின், அதற்குள்ளே மறைந்து கிடக்கும் குணாதிசய மென்ன வென்பது உடனே நமது மனத்தின் கண்ணோ குறுக்கிட்டு வருகின்றது. சுருங்கச் சொல்லுமிடத்து, அக்கினிக்குப் புகையானது ஒரு முக்கிய அறிவிப்பாய்க் காணப்படுவதே போல், மனித உண்மை நிலைக்கு இக் குணாதிசயம் இடை யறா விஷயமாய் நிற்கின்ற தென்பதைத் தெரிந்து கொள்ளல் வேண்டும். உதாஹரணமாக, எல்லாம் வல்ல இறைவனது 'தாத்' இன்னவாறுதான் இருக்குமென்று நாம் மனோராஜ்யம் செய்துகொண்டு, அவன் மாட்டு இருத்தற் குரிய குணாதிசயங்கள் இன்ன இன்னவைதா மென்று நாம் நாடியவண்ணம் நிர்மாணித்துக் கொண்டு, அப்படிப்பட்ட கடவுள் நம்மைப்போலவே ஜனன மரணத் துன்பங் கட்கெல்லாம் ஆளாதல் கூடுமென்று நினைத்த மாத்திரத்தி லேயே அவ்வெண்ணம் நம்மைத் திடுக்கமடையச் செய்து விடுகின்றது. மனித மனச்சாக்ஷி யென்பது அத்தகைய எண்ணத்தின்பால் வெறுப்புக்காட்டி, அதனைச் சகித்துக் கொள்ள முடியாது பின்னிடைந்து விடுகின்றது. மேற்கூறிய எண்ணமே மஹாவெறுப்பா யிருக்கிறது. உடனே நமக்குள் ளிருக்கும் அந்த மௌனமுள்ள சிறிய தொனியானது,

நம்மால் முழுக்க முழுக்க நம்பப்படவேண்டிய சக்திகளை யுடைய கடவுளானவன் எல்லாவிதமான குற்றங் குறைகளை யும் விட்டு அப்பாற் பட்டுள்ள எல்லாம்வல்ல பரிபூரண இறைவ னாகவேதான் இருக்க வேண்டு மென்று கூறத் துணிகின்றது. தெய்வத்தின் எண்ணமும் ஏக தெய்வத்தின் உறுதியும் மனித இயற்கையில் ஒருமிக்கவே பதிந்து கிடக்கின்றன; எனவே, இவ்விரண்டும் ஒன்றைவிட் டொன்று பிரிக்கப்படக் கூடாதன வாகவே அமைந்திருக்கின்றன. இக்காரணத்தைக் கொண்டே தான் மனச்சாக்ஷி யென்னப்படுவதும், இன்னம் தெளிவாகச் சொல்ல வேண்டுமாயின், மனித இயற்கையும் ஞானத்திற் கொரு மூலமென்று யான் விவரித்திருக்கின்றேன்.

ஆனால், மேலே ஐ'னுல்ய(க்):கீன் அஃதாவது, பிரத்தி யக்ஷ பிரமாணம் என்று கூறப்பட்டிருப்பதன் மூலம் பெறப் படும் ஞானத்தைப் பார்க்கினும் நிச்சயமான ஞானத்தையும் நாம் பெற்றுக்கொள்ளுதல் சாலும். பிரத்தியக்ஷ பிரமாண மென்னப்படுவது ஒரு வஸ்துவிலிருந்து நேரே பெறப்படும் ஞானத்தை யூட்டுவதாகும். உதாஹரணமாக, இப்பௌதிக உலகத்திலே மோப்பம் பிடிக்கும் மூக்கைக் கொண்டே வாசனை யென்னும் ஞானத்தைப் பெறுகிறோம்; இவ்வாறே உருசிக்குரிய கருவிகளைக் கொண்டே சுவையென்னும் ஞானத்தையும், ஸ்பரிசத்துக்குரிய அவயவங்களைக் கொண்டே ஊறென்னும் உணர்ச்சியையும் எய்துகின்றோம். இத்தன் மைத்தாய பஞ்சேந்திரிய நுகர்ச்சிக ளனைத்தும் அந்த ஐ'னுல் ய(க்):கீன் என்னும் பிரத்தியக்ஷ ஞானத்தையே சாரும். ஆனால், மறுவுலக வாழ்க்கையைக் குறித்து இப்படிப் பட்ட ஞானம், நாம் ஆண்டவனிடத்திருந்து நேரே ஞானே

தயம் பெறுவதனுலும், அவனது இனிய குரலைக் கேட்பதனுலும், அவனுடைய அழகிய ஞான வெளிப்பாடுகளைக் கஷ்பினுல் பார்ப்பதனுலுமே உதயமாதல் கூடும். ஞானேதயத்தின் மூலமாயல்லாது ஆண்டவனுடைய உண்மையை உள்ளவண்ணம் பரிபூரணமாக நாம் நிச்சயமாக அடைந்துவிடுதல் சாலாது. இன்னமும், இந்த அவாவினை, ஞானேதயத்திற்குரிய இவ்வேட்கையினை நம்முடைய ஹிருதயங்களுக்குள்ளே உணர்ந்து கொள்ளுகிறேம்; எல்லாம் வல்ல இறைவன் இப்படிப்பட்ட வேணவாவைத் தீர்த்து வைத்தற்குரிய மார்க்கத்தை இதற்குமுன்னமே ஏற்படுத்தி வைத்துள்ளா னென்பதை நாம் ஏற்றுக்கொண்டா லல்லாது, அந்த வேட்கையின் தன்மை விவரித்துக் கூற முடியாததாகவே காணப்படாநின்றது. மறுவுலக வாழ்க்கைக்கு ஓர் அளவைக் கருவியாகவும், அதற்கோர் ஆயத்த ஸ்தலமாகவுமே யிருந்துவரும் இவ்வுலக வாழ்க்கையிலே சத்தியமான சம்பூர்ணமுள்ள எல்லாம்வல்ல உயிர்க் கடவுளின் உண்மையைக் குறித்துக் கட்டுக் கதைகளின்மீதும் புராணப் புலம்பல்களின் மீதும் சார்ந்துள்ள ஒருவகைக் குருட்டு நம்பிக்கையின்மீது சார்ந்திருப்பதுடனேனும் அல்லது அவ்விறைவனைக் குறித்து இதுகாறும் இவ்வுலகினுக்குப் பூர்த்தியில்லாத பரிபூரணமற்ற அறிவையே யளித்துள்ள சம்பூர்ணமடையாத பகுத்தறிவின் முயற்சியுடனேனும் நாம் ஈமான் கொண்டு திருப்தியடைந்துவிடுதல் கூடுமோ? ஆண்டவன்மாட்டு அளவிறந்த அபிமானம் பூண்டவர்கள், அவ் வருள்மயமான கருணமூர்த்தியோடு கலந்து சம்பாஷிக்கும் பேரானந்தத்தைப் பெற அத்தியந்த ஆவல்கொண் டிருப்ப தில்லையா? அல்லா(ஹ்)வி னி மித்தம்

தங்களுக்குரிய உலகத்தின் எல்லாவற்றையும் பரித்தியாகம் புரிந்து, தங்களுடைய உலக வியவகாரங்க ளனைத்தையும் விட்டுக்கொடுத்திருக்கும், இல்லை, தங்கள் தெய்விகத் தலைவன் பொருட்டுத் தங்களுக்குச் சொந்தமான உடலையும், ஹிருதய கமலத்தையும், பொருளையு மெல்லாம் அர்ப்பணம் செய் திருக்கும் அவர்கள் பிரகாசம் மிக்க சன்மார்க்க சூரியனது ஜோதிமயமான திருமுக விலாசத்தை எப்பொழுதுமே காண முடியாது சதா ஒரு மங்கலான வெளிச்சத்திலேதான் நிற்க வேண்டு மென்பதுடனே திருப்தியடைந்து விடுவார்களா? உயிருள்ள தெய்வம் கூறும் 'நா னிருக்கின்றேன்' என்னும் இனிய வசனங்கள், தத்துவ சாஸ்திரிகளின் எல்லாவிதமான தர்க்கவாதங்களைப் பார்க்கினும் மேலான ஞானத்தையே அவனது உண்மை குறித்து அளிக்கக் கூடியனவா யிருக் கின்றன வென்பது உண்மையல்லவா? ஆகவே, அவர்க ளுடைய பரிபூரணமற்ற பகுத்தறிவு கொண்டு ஆண்டவனது உண்மையை ருஜூப்பிப்பான் வேண்டித் தத்துவ சாஸ்திரி களால் வரையப்பட்டுள்ள எல்லாவிதமான மலைபோன்ற கிரந் தங்களை யெல்லாம் ஒருபுறம் வைப்போம். மற்றொருபுறம் உண்மைக் கடவுள் உரைத்த 'நானிருக்கிறேன்' என்னும் ஒரு சொல்லை வைத்துப் பின்னர் ஒப்பு நோக்கப்படுங்கால், அந்தத் தத்துவ சாஸ்திரிகளின் எல்லையில்லாக் கிரந்தங்களெல்லாம், இந்தச் சொல்லொன்றின் முன்னே வெறும் சூன்யமாகவே போய் முடியுமென்பது திண்ணம். அக்ஞானாந்தகாரத்தை ஒரு போதும் விட்டு வெளியே வர முடியாத அவர்களிடத்திருந்து என்னவிதமான ஞானப்பிரகாசத்தை நாம் எதிர்பார்த்தல்கூடும்?

சுருக்கிக் கூறுமிடத்து, எல்லாம் வல்ல அல்லாஹூத்

தஆ'லா வானவன், உண்மையை உணர ஆவல் கொண்டு நிற்பவர்கட்குத் தன்னைக் குறித்துப் பரிபூரணமான ஞானத்தை யருள நாடி யிருக்கிறான். எனவே, அவனுடைய திருவசனத்தையும் ஞான வெளிப்பாட்டையுங் கொண்டு அவர்கட்குப் பிரகாசத்தை யளித்தற்குரிய வாயில்களை அடைத்து விடமாட்டான். இதன் சார்பாகக் :குர்ஆன் ஷரீ'பானது உண்மையை உசாவி நிற்பவர்க்குக் கீழ்க் காணும் பிரார்த்தனையைக் கற்றுக் கொடுக்கின்றது : اهدنا الصراط المستقيم صراط الذين انعمت عليهم "எங்கள் ரக்ஷகனே! விடா முயற்சிக்குரிய பாதையிலே எங்களை நடத்தி வைப்பாய்! உன்னுடைய அருட்பெருஞ் சோதிக்கும் கருணைப் பிரகாசத்திற்கும் பாத்திரர்களா யுள்ளவர்களின் பாதை." இவ்விடத்தில் அல்லா(ஹ்)வின் அருட் கொடைகளென்று குறிப்பிடப்பட்டுள்ள விஷயங்கள், அன்னவன்மாட்டிருந்து நேரே அடியான் அருளப்பெறுகின்ற ஞானோதயம், ஞான வெளிப்பாடு முதலிய ஆசீர்வாதங்களையே குறிக்கும். எல்லாம் வல்ல இறைவன் தனது :குர்ஆன் ஷரீ'பின் மற்றோரிடத்தில் இவ்வாறு விளக்கி யுள்ளான் : ان الذين قالوا ربنا الله ثم استقاموا تتنزل عليهم الملائكة الا تخافوا ولا تحزنوا وابشروا بالجنة التى كنتم توعدون "சத்தியமான தெய்வத்திடத்து நன்னம்பிக்கை கொண்டு, பிறகு உண்மையுடனும் உறுதியுடனும் இருந்து வருபவர்கள்—அத்தன்மையாளர் மீது அல்லா(ஹ்)வின் அமரர்கள் இறங்கி வந்து, 'நீங்கள் அஞ்ச வேண்டாம்! நீங்கள் துயருறவும் வேண்டாம்! ஆனால், உங்கட்கு வாக்களிக்கப் பட்டுள்ள சுவர்க்கமே உங்களுக்குண்டென்று அறிந்து ஆனந்தமா யிருங்கள்,' என்று

நற்செய்தி கூறுவார்கள் "—(41: 30). இதனால் துலக்க மாக விளக்கமாவது யாதெனின், அல்லா(ஹ்)வின் நல்லடி யார்கள் பயத்தின் காலங்களிலும் வருத்தத்தின் வேளைகளி லும் அந்த ஆண்டவனாலேயே ஞான விளக்கம் பெறு கிறார்க ளென்பதும், அவர்களுடைய மனச் சாந்தியின் பொருட்டு அமரர்கள் அனுப்பப்படுகிறார்க ளென்பதுமே யாகும். இதனால்தான் அல்லாஹு-த் தஆ'லாவும் தனது திருமறையில் பிறிதோரிடத்து இவ்வாறும் கூறியுள்ளான்: لهم البشرى فى الحيوة الدنيا وفى الاخرة "அல்லா(ஹ்)வின் பக்தர்களுக்கு அவனது திருவசனத்தைக் கொண்டும், ஞான விளக்கத்தைக் கொண்டும் இவ்வுலக வாழ்க்கையிலும் மறு வுலக வாழ்க்கையிலும் நன்மாராயம் அருளப்படுகின்றது"— (10: 64).

இனி மேலே செல்லுமுன் இல்ஹாம் (ஞானோதயம்) என்பது குறித்து எழுதற்குரிய ஒரு வகைச் சந்தேகத்தை நிவர்த்தி செய்து வைக்க வேண்டுவது அத்தியாவசியமாய்க் காணப்படாநின்றது. இல்ஹா மென்பது, யாதேனு மொரு விஷயங் கருதிச் சிந்திக்கத் தொடங்கும் ஒரு மனிதனு டைய ஹிருதயத்துள்ளே எழுந்து முளைக்கும் எந்த வித மான எண்ணமு மாகமாட்டாது. ஒரு சாதாரணக் கவி ராயன் கவிகளை யாக்க வேண்டுமென்னும் நோக்கத்துடனே உட்கார்ந்துகொண் டிருக்கும்போது மகா நேர்த்தியான எண்ணங்களெல்லாம் அவனது உள்ளத்தின்கண்ணே உதித் தெழுங்கால் அவற்றினை நாம் மத சம்பந்தமான இல்ஹா மென்று ஒருபோதும் கூறத் துணிவதில்லை. இக் காரியத் தில் நல்லதற்கும் கெட்டதற்கும் இடையிலே வித்தியாசம்

தோன்றுவது கிடையாது. ஒரு விஷயங் கருதித் தம்மு டைய மனோ சக்திகளனைத்தையும் அதன்மீது செலுத்தத் தொடங்குவராயின், அவ்வாறு நினைப்பவரது புத்திசாலித் தனத்துக்குத் தக்கவாறு, அவ்விஷயத்தின் நல்ல தன்மை அல்லது கெட்ட தன்மை என்னும் பாகுபாடில்லாது புதுப் புது எண்ணங்க ளெல்லாம் உதயமாகின்றன. ஒவ்வொரு சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு உதயமாகும் இத்தகைய எண் ணங்களுக் கெல்லாம் "இல்ஹாம்" என்று பெயரிடக் கூடு மாயின், பின்னர்த் திருடன் அல்லது கொள்ளைக்காரன் அல்லது கொலைக்காரன்கூடத் தானிழைக்க வேண்டிய தீய காரியங்களினிமித்தம் அவனது கொடிய மனத்தின் குறுக்கே ஓடிவரும் மகா புத்திசாலித் தனமான யுக்திகளுக்காக முல்ஹம் (இல்ஹாமைப் பெறுபவன்) என்றே தன்னை அழைத்துக் கொள்ளுதல் கூடும். ஆத்மார்த்த உண்மைகள் இன்னவென் றறிந்துகொண் டிராத அத்தகைய மாந்தர் கட்கு அந்த உண்மைகளின் ஞானத்தை ஊட்டி, தன் னுடைய திருவசனங் கொண்டு அப்படிப்பட்ட ஹிருதயங் கட்குச் சாந்தியும் சமாதானமும் அளிக்கவல்ல மெய்யான அல்லா(ஹ்)வைப்பற்றி ஒருசிறிதும் அறிந்துகொண் டிராத அவ்வாறுய மாக்களாலேயே இல்ஹாமுக்கு இப்படிப்பட்ட வியாக்யானம் கொடுக்கப்பட்டு வருகின்றது.

அவ்வாறுயின், பிறகு இல்ஹாம் (ஞானோதயம்) என்பது தான் என்ன? இதுதான் அல்லாஹுத் தஆ'லாவின் உயி ருள்ள சக்தி நிரம்பிய வார்த்தையாகும்; இதைக்கொண்டே தான் அவன், எல்லா மக்களுள்ளிருந்தும் தான் தேர்ந்தெடுத் துக்கொண்டிருக்கும் அல்லது தேர்ந்தெடுத்துக் கொள்ளப்

போகும் தன்னுடைய நல்லடியா ரொருவருடனே சல்லா பித்து வருகிறான்; இதுகொண்டு தான் அவன் அவ்வடி யாரை விளித்தும் வருகிறான். எனவே, இப்படிப்பட்ட சம்பாஷணை அல்லது பேச்சுக்களே போதுமானவற்றிற்குக் குறைவா யில்லாமல் அல்லது துண்டுதுண்டா யில்லாமல் அல்லது தீய எண்ணங்க ளென்னும் அக்ஞானத்தினால் மூடப்படாமல் யாற்றொழுக்கே போல் தொடர்ச்சியாக நிகழ்ந்து கொண்டும், அல்லா(ஹ்)வின் ஆசீர்வாதமும் ஞான மும் சக்தியும் நிறையப் பெற்றுக் கொண்டு மிருக்கு மாயின், அவை ஆண்டவனின் திருவசனங்களா யிருக் கின்றன; இவற்றினைக் கொண்டேதான் அவன் தன் நல் லடியானுக்குத் தேறுதலை யளித்து, தன்னையே அவன் முன் வெளிப்படுத்திக் காண்பிக்கின்றான். பரீக்ஷார்த்தமாக ஒரு மனிதனுக்கு வசனங்கள் சிற்சில வேளைகளில் அனுப்பப் படுவ துண்டென்பதில் கிஞ்சித்தும் சந்தேகமில்லை; பின்னர் அவை ஒரு ஞானோதயத்திற்குரிய பரிபூரணத்துடனும் அவசியமான ஆசீர்வாதத்துடனும் மிசிரமா யில்லாமலும் போய்விடுவதுண்டு. இத்தகைய ஆரம்பப் படியிலே ஓரடியான் பரீக்ஷிக்கப் படுங்கால், அவன் தனது திடதேகமற்ற பலக் குறைவால் ஒருகால் காலிடறிக் கீழே வீழ்ந்து விடுதல் கூடும்; அல்லது அந்த இனிய நித்திய ஜீவனுக்குரிய ஞானோதய மென்னும் பேரூற்றினின்று பருகிய காரணத்தால் தன்னையே மாற்றிக்கொண்டு, மெய்யான ஞானோதயம் அருளப்பெற்றவரே போன்றும் ஆய்விடுதல் சாலும். பிறகவன் சத்தியமான சன்மார்க்கத்தினூடே, நன்றி யறிதலுள்ள அல்லா(ஹ்)வின் நல்லடியார்களே போல நடக்கத் தவறி

விடுவானாயின், அவனுக் களிக்கப்பட்டிருந்த அருட்கொடை முழுதும் பறிக்கப்பட்டு, தன் மனத்தின்கண்ணே வீண் அகம்பாவமே குடிகொண்டவனாக மாறிவிடுகிறான்.

அதுவேயுமன்றி, இத்தகைய ஞானோதயம் அருளப் பெறுகின்ற எல்லா அடியார்களும் அல்லா(ஹ்)வின் பார்வையிலே ஒரேவிதமான படித்தரத்தை அடையப் பெற்றவர்களல்லவென்பதும் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளப் படுதற்குரிய ஒரு விஷயமாகும். ஞானோதயத்தின் தெளிவினாலும், அதன் உத்வேகத்தினாலும், சிறப்பினாலும் தங்களுக் கருளப் பெற்றுள்ள ஞானோதயத்தை ஏனையோருக் களிக்கப் பட்டுள்ள ஞானோதயத்தை யெல்லாம் பார்க்கினும் மகா மேலான அந்தஸ்திலேயே வாய்க்கப்பெற்றுள்ள நபிமார்கள் கூட எல்லாரும் ஒரேவிதமான படித்தரத்தி லிருப்பதில்லை. இது குறித்து எமதிறைவனும் இவ்வாறு கூறியிருக்கிறான்: تلك الرسل فضلنا بعضهم على بعض "சில நபிமார்கள் ஏனையோரினும் மேலாகவே உயர்த்தப்பட்டுள்ளார்கள்"—(2:253). இதனால் விளக்கமாவது யாதெனின், ஞானோதய மென்னப் படுவது ஆண்டவனின் ஒரு சாதாரணக் கருணையாகவே காணப்பட்டு, அந்தஸ்தின் உயர்வு தாழ்வுகளை ஒரு சிறிதும் பாதிக்கக் கூடாததாகவே அமைந்து கிடக்கின்றது; என்னெனின், அந்தஸ்தின் உயர்வு தாழ்வு என்பது ஆண்டான் மாட்டு அடியான் வைத்துள்ள நல்லெண்ணம், பக்தி, விசுவாசம், நன்றி மறவாமை ஆகியவற்றின்மீது சார்ந்திருக்கின்றது. ஆண்டவனால் அருளப்படும் ஞானோதயமானது, அதற்குரிய இலக்ஷணங்களுட னெல்லாம் தொடரப்பெற்றிருக்குமாயின், சந்தேகமில்லாது மேற்கூறிய குணாதிசயங்

களின் பலனாகவே அமைந்திருக்கின்றது. அடியான் தன்னுடைய ஆண்டான் மாட்டுப் பிரார்த்தனை புரியுங்கால், அதற்குரிய விடை கிடைத்துவிடின், அவ் வாண்டானால் அடியானுக் கருளப்படும் அத்தன்மைத்தாய விடைகள் இடையறாமலும் விட்டு விட்டு வாராமலும் தொடர்ச்சியா யிருந்து கொண்டு, அவ் வார்த்தைகளில் அல்லாஹு தஆ'லாவின் பெருந்தன்மை தேஜஸ் ஆகிய இரண்டுங் காணப்பட்டு, எதிர்காலத்துக் குரியதாகவும் மறைக்கப்பட்டு மிருக்கும் உண்மைகளின் ஆழிய இரகசியங்க ளனைத்தும் வெளிப்படுமாயின், அப்பொழுது அவ்வார்த்தைகள் ஆண்டானின் ஞானோதயத் திருவசன மென்பதில் சற்றும் சந்தேகமில்லை.

இப்படிப்பட்ட ஞானோதயத்தை அருளப்பெறும் நல்லடியாருக்கும் எல்லாம் வல்ல அல்லாஹு த் தஆ'லாவுக்கும் இடையிலே, இரண்டு அத்தியந்த சினேகிதர்கட் கிடையே நிகழும் சம்பாஷணையில் காணப்பட்டு வரும் சம்பந்தம் போன்ற நெருங்கிய சம்பந்தமே இருந்துவருதல் அத்தியாவசியமாகும். அந்த நல்லடியார் அல்லா(ஹ்)வை நோக்கித் தமது பிரார்த்தனையைப் புரியும்போது, அவ்வேகவல்லோனிடத்திருந்து புறப்படும் இனிய இலக்கண அழகுவாய்ந்த வார்த்தைகளைக் கொண்டே அதற்குரிய விடைகிடைக்கும்; இத்தகைய விடையானது அவ்வடியாரது சொந்த இச்சைகளின், அல்லது அவரது தியானத்தின் அல்லது யோகத்தின் பயனாகத்தான் கிடைப்பதென்பதில்லை. இப்படிப்பட்ட வசனங்களைக்கொண்டும் விடைகளைக் கொண்டும் அவர் தொடர்ச்சியாகவே ஆசிர்வதிக்கப்படல் வேண்டும். அப்பொழுதுதான் அவருக் கனுப்பப்படும் அத்தகைய வசனங்கள் அல்லாஹு த்

தஆ’லாவினால் அருளப்படும் திருவசனங்களென்று நிச்சயமாகக் கூறுதல் முடியும்; அதன்பின் அந்த நல்லடியார்க்கும் அவ்வெல்லாம் வல்ல இறைவனது திருச் சன்னிதானத்தில் தக்க கௌரவம் ஏற்படுதல் கூடும். ஆனால், ஆண்டவனிடத்திருந்து மிகத் துலக்கமாகவும், கீழ்மையான இச்சைகளுடனே மிசிரமாகாமலும் அனுப்பப்படும் பரிசுத்தமான உயிருள்ள திருவசனங்கள் கொடுக்கப்படுதலென்பது, மகா உயரிய நன்னம்பிக்கையாலும், நல்லெண்ணத்தாலும், நற்செய்கைகளாலும் வார்த்தைகளைக் கொண்டு விவரித்துரைக்க முடியாத மற்றொன்றினாலும் பரிசுத்த மடைந்துள்ள ஹிருதயங்களைப் பெற்றிராத எவருக்கும் அருளப்படுவதில்லை. உண்மையான பரிசுத்தம் மிக்க ஞானோதயமென்னப்படுவது ஆண்டகையின் மகா ஆச்சரியகரமான அற்புதங்களை யெல்லாம் வெளியாக்குகின்றன. அனேகமாக ஒரு வகை ஜோதி வீசும் தேஜஸ் உண்டு பண்ணப்பட்டு, அதனுடனே பிரகாசம் மிக்க கம்பீரமான ஞானோதயமும் வந்துகொண்டே யிருக்கும். வானங்களையும் பூமியையும் உண்டுபண்ணி யிருக்கும் சிருஷ்டி கர்த்தாவுடனே சம்பாஷித்துக் கொண்டும், அன்னவனால் சம்பாஷிக்கப்பட்டுக்கொண்டும் இருப்பதைப் பார்க்கினும் வேறென்ன சிறந்த அருட்கொடையும் ஆனந்தமும் உண்டென்று ஊகித்தல் சாலும் ?

எனினும், ஆண்டகையின்பா லிருந்து அனுப்பப்பட்டுள்ளன வென்று திட்டமாக அறிந்துகொள்ள முடியாத சில வார்த்தைகளேனும் வாக்கியப் பகுதிகளேனும் உச்சரிக்கப் படுவதிலிருந்து, அத்தகைய செயலானது ஆண்

டவனால் அருளப்பெறும் ஞானோதயத்தின் பாற்படுமென்று கொள்ளப்படுதல் கூடாது. இப்படிப்பட்ட நிலையிலே தன்னைக் கண்டுகொள்ளும் அடியான் உண்மையிலேயே அல்லாஹுத் தஆ'லாவினால் சோதிக்கப்படுகிறான். என்னெனின், எல்லாம் வல்ல இறைவன் சிற்சில சமயங்களில், தன் மாட்டுச் செய்ய வேண்டிய கடமைகளில் அலக்ஷியமாகவும் அசிரத்தையாகவும் இருந்து வரும் மனிதர்களின் ஹிருதயங்களுள் சில வார்த்தைகளையேனும் வாக்கிய பாகங்களையேனும் உதயமாகச் செய்வதனாலேனும் அல்லது அவர்களுடைய உதடுகளை அவற்றினை உச்சரிக்குமாறு தூண்டுவதனாலேனும் பரிசோதிப்ப துண்டு; அதுசமயம் அத்தகைய வசனங்கள் அல்லா(ஹ்)வின்பா லிருந்து வந்தனவோ அல்லது ஷைத்தா னிடமிருந்து வந்தனவோ வென்று கூட அறிந்துகொள்ள முடியாத குருடர்களே போலத்தான் அவர்கள் காணப்படுகிறார்கள். ஏனெனின், ஆண்டவனால் அவ்வாறு சோதிக்கப்படுபவன் பச்சாதாபப்பட்டு அவ்வாண்டவன்பால் முகந் திரும்பித் தன்னையே சீர்திருத்திக் கொள்ள வேண்டுமென்பது ஓர் அத்தியாவசியமான காரியமாகவே காணப்படாநின்றது. ஆனால், எவருக்கு அல்லா(ஹ்)வின் அருள் மயமான ஞானோதயத்தின் வாயில்கள் விசாலமாகத் திறந்துவிடப் படுகின்றனவோ, எவருடனே ஆண்டவனும் வெளிப்படையாக ஜோதி, இனிமை, பெருமை, ஆழிய கருத்து, மனிதப் பகுத்தறிவுக்கு மேற்பட்ட ஞானம் ஆகியவை நிரம்பிய வசனங்களைக் கொண்டு சம்பாஷிக்கின்றானோ, எவருடைய மன்றாட்டங்களும் வேண்டுதல்களும் அவை பிரார்த்திக்கப் படுந்தோறும் அல்லாஹுத்

த்'ஆலாவினால் அங்கீகரிக்கப்பட்டு விடையளிக்கப் படுகின்றனவோ, எவர் விழித்த விழிப்பி லிருக்கும்போதே அல்லா(ஹ்)வின் மாட்டு அடிக்கடி—ஒரே சமயத்திலே பத்து அல்லது இருபது முறைகள் மட்டுங் கூட—தம்முடைய பிரார்த்தனைகளைப் புரிந்து அவற்றினுக்குரிய விடைகளைப் பெற்றுக் கொள்ளுகின்றனரோ, எவருடைய வேண்டுதல்கள் நூற்றுக் கணக்கான சமயங்களிலே அங்கீகரிக்கப்படுகின்றனவோ, எவருக்கு எண்ணிறந்த முறைகளிலே அவருக்கருளப்படும் ஞானோதயத்தின் மூலம் மகா நேர்த்தியான உண்மைகளும், மகா நா'ஜூக்கான விஷயங்களும், எதிர் காலத்தைக் குறித்து மகா ஆழமான இரகசியங்களும் வெளியாக்கப் படுகின்றனவோ, எவர்மீது இத்தகைய அருட்கொடைக ளனைத்தும் சொரியப்பட்டு வருகின்றனவோ, அத்தகைய நல்லடியார் ஆண்டவன் மாட்டு நன்றி செலுத்துபவராக மாறி, அவ்வாண்டவன் பாதையிலேயே தம்மை முழுக்கமுழுக்கப் பரித்தியாகம் பண்ணிக் கொள்ளுதல் வேண்டும். ஏனெனின், இவரையே அவன் தனது கண்ணியமான காருண்யத்தைக் கொண்டும் பக்ஷத்தைக் கொண்டும் தன்னடியார்களுள் ளிருந்து தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கிறான்; இதற்கு முன்னம் அவன் அருளியுள்ள அருட்கொடைக் குரியார்களான நல்லடியார்கட்கு இவரையும் ஒரு வாரிஸாகப் பொறுக்கி யெடுத்துக்கொண் டிருக்கின்றான். ஆனால், இத்தகைய ஆண்டகையின் மஹா பெரிய கிருபா கடாக்ஷம் அடிக்கடி அருளப்படாது, மஹா அபூர்வமாகவே மிக மிகச் சிலருக்கே அளிக்கப்பட்டு வருகின்றது; இதைப் பெற்றவரோ மகா பெரிய பாக்கியசாலி யாவார். இப்படிப்

பட்ட அருட்பிரகாசத்தை யடைந்துள்ள நல்லடியார்கள் இந்த ஆனந்தத்துடனே ஒப்புநோக்கி மற்றெல்லா இன்பங் களையும் ஒரு பொருளாகவே கருதத்துணியார்.

இப்படிப்பட்ட பாரமார்த்திக உச்சத்திற்கு முஸ்லிம் களுக் குள்ளேதான் பற்பலவிதமான மகான்கள் எப்பொழுது மே உயர்த்தப்பட் டிருக்கிறார்கள். ஆண்டான் அடியானை நெருங்கி அவனுடனும் அவனுக்குள்ளிருந்தும் சம்பாஷிக்கக் கூடிய சமயம் மெய்யாகவே தீனுலிஸ்லா மாகவேதான் சமைந்து கிடக்கின்றது. ஆண்டான் அத்தகைய அடியானது ஹிருதயத்திற்குள்ளே குடிபுகுந்து, அவனை வானுலகின் பக்கல் உயர்த்துகிறான். இதற்கு முன்னம் சன்மார்க்கர் களுக்கு ஆண்டவனு லளிக்கப்பட்டுள்ள அத்தகைய எல்லா அருட்கொடை களையுமே அவன் இந்த நல்லடியாருக்கும் அருளி வைக்கின்றான். ஆ! இவ்வுலகு குருடாகவே யிருந்து கொண்டு, மனிதன் ஆண்டவனுக்கு அண்மையிலே அண்மையிலே நெருங்க நெருங்க என்னவிதமான மேன்மை களை யெல்லாம் அடையப் பெறுதல் சாலுமென்பதை அறிந்துகொள்ளாமலே இருந்து வருகிறது. இவ்வவனியி லுள்ள மாந்தர்கள் அல்லா(ஹ்)வின் அண்மையை யடைய யாதொரு விதமான முயற்சியும் எடுத்துக் கொள்ளாமலே இருந்து வருகிறார்கள். ஆனால், இதற்குமாறாக அப்படிப் பட்ட பாட்டையினூடே நடந்துசெல்லும் யாத்திரீகரைக் கண்டு இவர்கள் தெய்வமென்றோ அல்லது தெய்வத்தை மறுக்கும் நாஸ்திகரென்றோ பூஜிக்கவோ அல்லது கூறவோ துணிந்து விடுகின்றனர். இவ் விருவகையான விஷயங்க ளும் நியாய விரோதமாகவே நடந்து வருகின்றன; நாஸ்திகர்

கள் தங்களுடைய அளவுகடந்த வெறுப்பினாலும், தெய்வமாகப் பூஜிப்பவர்கள் தங்களுடைய அளவிறந்த அபிமானத்தினாலும் அநியாயம் செய்து விடுகிறார்கள். ஆனால், புத்திசாலியாயுள்ளவன், ஆண்டவன் இப்படிப்பட்ட உன்னதத்தின் பொருட்டுப் பொறுக்கி யெடுத்துக்கொண்டிருக்கும் மனிதனை வெறுத்துத் தள்ளாமலும், ஆண்டவனால் சிருஷ்டிக்கப்பட்டுள்ள அம்மனிதன் முன்னே சிருஷ்டி கர்த்தாவின் முன் சிரஞ்சாய்த்தலே போலச் சிரஞ்சாய்த்து நிற்காமலும் மத்திபமான மார்க்கத்தையே தேர்ந்தெடுத்தல் வேண்டும். இவ்வாறு அல்லாஹுத் தஆ'லாவினால் அருள்பாலிக்கப் பட்டுள்ள மனிதன்மீது தெய்விகத் தன்மையென்பது இறக்கப்படுகிறது; இக்காரணத்தினால் அம்மனிதன் ஆண்டவனது உருவத்திற்குரிய முகம்பார்க்கும் கண்ணாடியாக மாறிவிடுகிறான். இதுதான், "என்னைக் காண்பவன் இறைவனையே காண்கிறான்," என்று நபிகள்நாயகம்[ஸல்] அவர்கள் கூறிப் போந்துள்ள வசனங்களின் இரகசியமாகும். இதுதான் மனிதனது பாரமார்த்திக வாழ்க்கையின் இறுதிஎல்லையாக,—அவனுடைய உழைப்புக்களனைத்தும் இந்த முகட்டை நோக்கியே முடிவடைகின்றன—அமைந்து கிடக்கின்றது; பின்னர், சாந்தியும் சமாதானமும் அந்த யாத்திரீகனுக்கு நல்கப்படுகின்றன.

இத்தன்மைத்தாய ஆத்மார்த்த உன்னதத்திற்கு யான் உயர்த்தப்பட்டுள்ளே னென்னும் உண்மையை மறைப்பேனாயின், யானொரு பெரிய அநீதியிழைத்த குற்றத்தையே செய்தவனாவேன். எல்லாம் வல்ல அல்லாஹுத் தஆ'லாவானவன் தனக்குரிய ஓர் அருளைக் கொண்டு எனக்கு அருள் பாலித்துள்ளான்; கண்ணில்லாதவர்கட்குக் கண்பார்வை

யளித்தற்பொருட்டு, தேடித்திரிபவர்கட்கு அவர்கள் தேடி யலையும் வஸ்துவின்பக்கல் கொண்டு சென்று, சத்தியத்தை ஏற்றுக்கொள்பவர்கட்கு, பல்லோர்களாலும் பேசப்பட்டுச் சில்லோர்களாலேயே கண்டு பிடிக்கப்பட்டு வருகின்ற அந்தப் பரிசுத்த ஊற்றைப் பற்றிய சுப செய்தியை யான் அறிவிப் பேன். :குர்ஆன்ஷரீபை முற்றமுற்றப் பின்பற்றினு லல்லாது, மனித ஈடேற்றத்திற்கும் மேலேகூறியவாறு எல்லையற்ற பேரா னந்தத்திற்கும் மூலகாரணமா யுள்ள உண்மையான கடவுளை ஒருவரும் கண்டுகொள்வது முடியாது என்று யான் இம் மகா நாட்டிலுள்ள நுங்கட்கு உறுதிகூறுகின்றேன். யான் கண்டிருப் பதையும் கேட்டிருப்பதையும் ஏனையோரும் காணவேண்டு மென்பதும் கேட்கவேண்டு மென்பதுமே என் அந்தக்கர ணத்திலுள்ள ஆர்வமாகும்; அவர்கள் வீணை கட்டுக்கதைகளை யெல்லாம் விடுத்து, சத்தியத்தையே ஏற்றுக்கொள்ள ஓடி வருவார்களாக. ஒருவனை அல்லா(ஹ்)வின் திருச் சன்னிதா னத்திற்கு ஈர்த்துச் செல்லக்கூடிய அந்த ஞானத்தின் பரிசுத்த மூலம், எல்லாவிதமான ஐயப்பாடுகளையும் அலம்பி விடுதற் குரிய அந்தப் பரிசுத்தமான ஆகாய நீரானது, அல்லாஹுத் தஆ'லாவின் திருமுகவிலாசத்தை வெளிக்காட்டக் கூடிய முகம்பார்க்கும் கண்ணாடியானது அந்த அல்லா(ஹ்)வின் திருவசனமா யிருக்கிறது; அதுதான் யான் மேலே குறிப்பிட் டுள்ள அல்லா(ஹ்)வின் ஞானவெளிப்பாடாகும். மனிதனது ஆன்மா அதனை மெய்யாகவே ஆசிக்குமாயின், அவனது ஹிருதயமும் அதனைத் தேடித்திரிவதாயின், மனிதர்கள் இந்த ரஸ்தாவைக் கண்டுபிடிக்காடி இதனையே தேடிப் புறப்படல் வேண்டும்.

ஆனால், இந்தப் பாதையானது எவ்வாறு திறக்கப்பட்டு, அஞ்ஞான மென்னும் திரையானது எவ்வாறு நீக்கப்படுதல் கூடும்? வழிப்போக்கனுக்கு இந்த ஆனந்தமயமான எல்லையைக் காட்டக்கூடியதும், ஈடேற்றத்தின் இந்தப் பாட்டைக்குரிய சுப சமாசாரத்தை அறிவிக்கக் கூடியதுமா யிருப்பது இஸ்லாம் ஒன்றுதா னென்றே யான் எல்லாச் சத்தியவிசாரணைக்காரர்கட்கும் உறுதி கூறுகின்றேன். மற்றெல்லா இதர சமூக மனிதர்கட்கும் ஆண்டவனது ஞானோதயம் பெறுதற்குரிய வாயிலானது சார்த்தப்பட்டே கிடக்கின்றது; ஆனால், நபிகள் நாயகத்தின்[ஸல்] வழிபற்றி நிற்பவருக்கு மட்டுமேதான் அத்தகைய வாயிலானது திறந்துவைக்கப்பட் டிருக்கின்றது. என்னெனின், எல்லாம்வல்ல அல்லாஹுத் தஆ'லாவானவன் இவ்வழிக்குரிய வாயிலை அடைத்துவிடவில்லை. எனினும், அது கைகூடாமையான் பல மனிதர்கள் அதுதைக்குக் கிட்டும் விஷயமன்றென்றே கொள்ளத் துணிந்துவிடுகின்றனர் என்பதைத் திட்டமாக அறிந்துகொள்ளக் கடவீர்கள்; ஆனால், அவ்வாறில்லாது அவ்வாயில் எல்லாத்துறைகளிலும் அடைக்கப்பட்டே விட்டதென்று எவரேனும் இட்டுக் கட்டிக் கூறத் துணிவராயின், அப்படிப்பட்டவர் அப்படிப் பட்ட ஆண்டகையின் அருட்பெருஞ் சோதியை அருளப் பெறுதவ ரென்றே கொள்ளப்படுதல் வேண்டும். நீங்கள் கண்களில்லாது காண முடியாதுபோலும், செவிகளில்லாது கேட்க முடியாதுபோலும், நாவில்லாது பேச முடியாது போலும் அந்தப் பரந்தாமனுக்குரிய முகாரவிந்தத்தைக் :குர்ஆன் ஷரீ'பின் உதவிகொண்டல்லாது நீங்கள் பார்க்க முடியா தென்பதை நிச்சயமாக உணர்ந்துகொள்ளக் கட

வீர்கள். யான் முன்னொரு சமயம் யௌவனப் பிராயத்தனு யிருந்தேன்; இப்பொழுதோ எனக்கு வயது முதிர்ந்து விட்டது. ஆனால், இந்த மூலத்திலிருந்தல்லாது, ஞானத்தின் பரிசுத்தமான ஊற்றிலிருந்து திருப்திகரமாகப் பேரானந்தப் பானகத்தைப் பருகிய எந்த மனிதனையும் யான் கண்டதே யில்லை.

ஏ சோதரீர்! எவரும் கடவுளுடனே சண்டை செய்ய முடியுமென்றாவது அவனுடைய ஏற்பாடுகளைக் குலைத்துவிட முடியுமென்றாவது எண்ணிவிடா திருப்பீர்களாக. ஆண்டவன் சார்பான பரிபூரண ஞானத்தைப் பெறுதற்குரிய ஒரேவழி யானது அல்லா(ஹ்)வின் திருத்தூதர்கட்கு அருளப்பட்டுள்ள ஆசீர்வாதமென்னப்படும் ஆண்டகையின்(வஹீ) ஞானவெளிப் பாடாகவே இருக்கிறதென்பதை நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ளக் கடவீர்கள். ஆனால், கரைகடந்த கருணைக்குப் பாத்திரனாகிய எல்லாம்வல்ல அல்லாஹுத் தஆலாவானவன் இத்தன்மைத்தாகிய இறைவனது அருட்கொடைக் குரிய வாயிலையடைத்து, அதனால் இவ்வுலகத்தையே பாழாக்கிவிட வேண்டுமென்று ஒருபோதும் விரும்பியிருக்க மாட்டான். ஆண்டகையின் ஞானோதயம் ஞான வெளிப்பாடு என்னப் படும் அல்லா(ஹ்)வின் அருட்கொடைகளுக்குரிய ஸ்தானத் திற்குள்ளே ஒரு மனிதன் நுழைதற்குரிய கதவுகள் விசால மாக இன்னம் திறந்தே வைக்கப்பட்டே யிருக்கின்றன. ஆனால், அவ்வாயிலைத் தேடிச் சரியான பாதையினூடே நடந்து செல்லுங்கள்; அப்பொழுது அதனை நீங்கள் கண்டுகொள் வீர்கள். அந்த ஜீவ நீரானது ஆகாயத்திலிருந்து வருஷிக்கப் பட்டு, ஒரு பெரிய நீர்நிலையில் தேக்கி வைக்கப்பட்டிருக்

கிறது. அதிலிருந்து பருகுவதற்கு நீங்கள் தட்டுக்கெட்டுத் தடுமாறி அதனருகினிலே சென்று, அந்தக் குளிர்ச்சியான 'ஜில்லென்' றிருக்கும் ஜீவ நீரின்பக்கல் நெருங்கி உங்கள் உதடுகளை நீட்டுங்கள். ஆண்டவையின் ஜோதிக்குரிய ஏதேனு மொரு கிரணம் காணப்படக்கூடிய ஸ்தலத்திற்கோடி, தான் தேடிக்கொண்டிருந்த நண்பனது ஏதேனுமோர் அடையாளம் கிடைத்தற்குரிய பாதையினூடே நடந்து செல்வதிலேதான் ஒருவனுக்குப் பேரானந்த மிருக்கிறது. வெளிச்ச மென்பது வானத்திலிருந்து வந்து தன்னுடைய பிரகாசத்தைப் பூமியின் மீது சொரிவதே போல நேர்வழிக்குரிய உண்மையான ஜோதியும் அந்த ஆகாயத்திலிருந்தே இறங்கி வருகின்றது. ஒரு மனிதன் உண்மையான இறைவனது ஞானத்தின் மூலத்தை அடையப்பெறுவ தென்பது வெறும் பேச்சைக் கொண்டேனும் வெறும் ஊகங்களைக் கொண்டேனும் முடியாது..........நீங்கள் அல்லா(ஹ்)வின் ஜோதியைக் கொண்டல்லாது அதனைப் பெற்றுக்கொள்ளல் சாலுமா? காரிருள் கம்மிக்கொண் டிருக்கும்போது நுங்கள் நேத்திரங்கள் எவ்வாற்றானும் பயன்படுவதுண்டா? அவ்வாறு அவை பயன் படக் கூடுமாயின், பின்னர் நுங்களது பகுத்தறிவுமட்டுமே ஆண்டவையின் பரிபூரண ஞானத்தை அடைதற்குரிய ஒரு வழிகாட்டியாயிருத்தல் முடியும். ஆனால், நம்முடைய கண்கள் குருடாயிருப்பினும் வானுலகப் பிரகாசத்தின்பக்கல் தேவையுடையனவாகவே யிருக்கின்றன; அவ்வாறே நம்முடைய காதுகள் செவிடேயாயினும் ஆண்டவன் புறமிருந்து நடமாடும் காற்றின் பக்கல் தேவைப்பட்டனவாகவே நிற்கின்றன. உண்மையான கடவுளென்பான் தன் உதடுகளின் மீது முத்திரை

யிடப் பெற்றுள்ள ஓர் ஊமைக் கடவுளா யில்லை; ஆகவே, அவனைக் குறித்து நாமே ஏதேனும் நமக்குரிய வெறும் ஊகங் களைச் செய்துகொண்டு கிடக்கட்டுமென்று விட்டுவிடுவ தில்லை. ஆனால், பரிபூரணமான உயிருள்ள ஆண்டவன் எப்பொழு துமே தனதுண்மை குறித்து ஐயத்திற் கிடமில்லாத அடை யாளங்களைத் தானே கொடுத்துக்கொண்டுவருகிறான்; எனவே, இக்காலத் தலைமுறையார்க்கும் அப்படிப்பட்ட அடையாளங் களை அனுப்பிவைத்தற்கே இப்பொழுதும் அவன் நாடியிருக் கிறான். வானத்தின் வாயில்கள் திறக்கப்பட்டு, வைகறையும் வெளிச்சமாதற்குரிய வேளை வந்துவிட்டது. எனவே, இது சமயம் எழுந்து நின்று சத்தியமான கடவுளை—எதிரி யொரு வனாலும் தோற்கடிக்க முடியாத கடவுளை, காலத்தின் சுழற் சியால் மாறுபாடடையாக் கடவுளை, எப்பொழுதுமே மங் காத சீரும் சிறப்புமுள்ள கடவுளை—நாடிப் புறப்படுகின்ற மனிதர்களே ஆசீர்வதிக்கப்பட்டவர்களா யிருக்கிறார்கள். அவன் :குர்ஆன் ஷரீ'பில் இவ்வாறு கூறியிருக்கின்றான்: اللہ نور السموات والارض "அல்லா(ஹ்)வே வானங்களின் ஜோதியாகவும் பூமியின்ஜோதியாகவும் இருந்துவருகிறான்"— (24: 35). எனவே, அவன் மாட் டிருந்தே எல்லாப் பிரகாச மும் உதயமாகின்றது. அவனே சூரியனுக்குச் சூரியனாக வும், எல்லா உயிர்ப்பிராணிகளுக்கும் உயிராகவும், உண்மை யான உயிருள்ள இறைவனாகவும் இருந்துவருகிறான். ஆத லின், அவனை அங்கீகரித்துக் கொண்டவன் ஆசீர்வதிக்கப் பட்டவனா யிருக்கிறான்.

ஞானத்திற்குரிய மூன்றாவது மூலமானது, மகா மேலான முறையிலே பரிபூரண மடைந்துள்ள தாகவும்,

அல்லா(ஹ்)வின் உண்மையைக் குறித்து நிச்சயமான சத்தியத்தை மனிதன் உணர்ந்துகொள்ளக் கூடியதாகவுமே காணப்படா நின்றது. அவைதாம், அல்லா(ஹ்)வின் நபிமார்களும் ஏனைச் சன்மார்க்கர்களும் அவர்களுடைய விரோதிகளின் கரத்திடத்திருந்தேனும் அல்லது அல்லா(ஹ்)வின் ஆணையின்படியேனும் அனுபவிக்கும் துன்பங்களும் சங்கடங்களுமாகும். துன்பங்களே, மனிதனுடைய பிரத்தியக்ஷ வாழ்க்கையிலே உதஹரித்துக் காட்டப்படுகின்ற சட்ட பூர்வமான கட்டளைகளின் முழுச் சக்தியையும் அவனை உணர்ந்துகொள்ளுமாறு செய்துவைக்கின்றன. மதக் கொள்கைகளென்பன வெறும் ஞானசித்தாந்தங்களாகவே முதன் முதலில் மனிதர்களின் மனத்தில் பதிந்து கிடக்கின்றன. எனவே, இதுசமயம் அவை அனுஷ்டான ரூபத்தில் வெளியாகின்றன. அதிகமான சங்கடங்களுக்கெல்லாம் ஆளாகியிருப்பவர், தமது ஹிருதயத்துள்ளே சேமித்து வைக்கப்பட்டுள்ள அறிவின் கருவூலத்தை உயிர் வாழ்க்கையின் சரியான அனுஷ்டான சந்தர்ப்பங்களின் கீழ்க் கொண்டுவந்து பரீக்ஷித்துப் பார்ப்பதற்கு ஓர் அரிய தருணத்தை அடையப் பெறுகின்றார்; இவ்வாறு அன்னவர் தமது ஞானத்தைச் சரியான துறையிலே உபயோகித்து வருவராயின், அல்லா(ஹ்)வின் வழிகாட்டிக்குரிய ஒரு பரிபூரணமான உதாஹரணமாகவே அவர் மாறிவிடுகின்றார். முதலிலே மூளையினுள்ளும் ஹிருதயத்தினுள்ளும் மட்டுமே அறியப்பட்டுக் கிடந்த ஒழுக்க சம்பந்தமான குணநிசயங்களெல்லாம் மெய்யான அனுஷ்டான பூர்வமாய் பஹிரங்கச் சக்திகளாகவும் அந்தரங்கச் சக்திகளாகவும் வெளிக்காட்டப்படுகின்றன; ஆகவே, மன்

ணித்தல், பழிவாங்கல், பொறுமை, இரக்கம் ஆதியவெல்லாம் அவர்மாட்டு வெறும் பெயர்களாகவே யிராமல் அன்னவ ரால் உணரப்பட்டும் பார்க்கப்பட்டும் வந்த உண்மைகளா கவே காணப்படாநின்றன; எனவே, அவை அவ்வாருக அவரது பஹிரங்க நிலையிலும் அந்தரங்க நிலையிலும் தமக் குரிய முத்திரையை அழுத்திவிடுகின்றன. இவ்விஷயங் குறித்து எல்லாம்வல்ல அல்லாஹுத் தஆ'லா தனது :குர்ஆன் ஷரீ'பிலே இவ்வாறு கூறியிருக்கின்ருன் :—

ولنبلونكم بشيئ من الخوف والجوع ونقص من الاموال والانفس والثمرات وبشر الصابرين الذين اذا اصابتهم مصيبة قالوا انا لله وانا اليه راجعون اولئك عليهم صلوات من ربهم ورحمة واولئك هم المهتدون

"அச்சத்தைக் கொண்டும், பசியைக்கொண்டும், பொருள் நஷ்டத்தைக் கொண்டும், உயிர் நஷ்டத்தைக் கொண்டும், உங்கள் பிரயத்தனங்களுள் சிலவற்றைப் பிரயோஜனமில்லாது போய்விடுமாறு செய்வது கொண்டும், உங்கள் குழந்தைகளை இழந்து விடுமாறு ஆக்குவது கொண்டும், நாம் உங்களைப் பரிசோதிப்போம்." அஃதாவது, இக் கூறிய சங்கடங்க ளெல்லாம் உங்கள் எதிரிகளின் கரத்தைக் கொண்டேனும் அல்லது ஆண்டவனது கட்டளையின் பிரகாரமேனும் உங்க ளுக்கு விளைந்துநிற்கும். "தங்களுக்கு விளைந்திடும் சங்கடத் தின்போது 'நிச்சயமாகவே நாம் அல்லா(ஹ்)வி னிடத்தி லிருந்து தோன்றியிருக்கிறோம்; நிச்சயமாகவே நாம் அந்த அல்லா(ஹ்)வி னிடத்திற்கே மீண்டும் திரும்பிச் செல்வோம்' என்று கூறும் பொறுமை சாலிகளுக்குச் சுபசெய்தி கூறு வீர்களாக. இப்படிப்பட்ட மனிதர்கள் மீதுதான் அல்லா(ஹ்)

வின் ஆசிர்வாதமும் கிருபாகடாக்ஷமும் இறங்குகின்றன; இவர்களே உண்மையான வழியில் பூரணமாய் நடாத்திச் செல்லப்பட்டவர்களாவர்"-(2:155-157). இவ்விடத்தில், ஹிருதயத்துக்குள்ளேனும் மூளைக்குள்ளேனுமட்டுமே சேகரித்து வைக்கப்படும் வெறும் அறிவில் மட்டும் எவ்விதமான பெரிய சிலாக்கியமு மில்லையென்றே நாம் அறிவிக்கப்படுகிறோம்; ஆனால், நன்கு மதித்தற்குரிய மெய்யான அறிவானது, உயிர்வாழ்க்கையின் சரியான அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரப்பட்ட காரணத்தினால் அம்மனிதனது முழு உருவத்திற்குமே ஒரு வித வர்ணத்தை யளித்துவிடக் கூடியதாகவே காணப்படா நின்றது. ஆகலின், ஒருவருடைய ஞானத்தை உறுதிப்படுத்தி அபிவிருத்தி யடையச் செய்யவேண்டுமாயின், அஃது அனுஷ்டான பூர்வமான அமலில் கொண்டுவரப்படல் வேண்டும்; இவ்வாறு செய்வதால் அதன் முத்திரையானது அவனது மூளையின் மீது மட்டுமல்லாது அவனுடைய ஒவ்வொரு சக்தியின்மீதும் ஒவ்வோர் அவயவத்தின்மீதும் அழுத்தப் படுகிறது. உண்மையிலே ஒவ்வொரு விதமான அறிவும், அதனை ஏனை ஞானங்களுடனே ஒப்புநோக்குங்கால் எத்துணைத் தாழ்மையானதாகக் காணப்படினும், அனுஷ்டான பூர்வமான அமலுக்குக் கொண்டுவரப்படாதவரை ஒருவகைக் குறைவுள்ளதாகவே காணப்படும். சர்வ சாதாரணமான சிறிய சிறிய விஷயங்களின் ஞானமும் பரிபூரணத்துக் கெய்த வேண்டுமாயின் அமலில் தெரிந்துகொள்ளவேண்டியதா யிருக்கும்போது, மாபெரும் பெரிய விஷயமான பேரானந்தத்தை யடைவது மாத்திரம் அமலில் செய்து காட்டாமல் அல்லது இதன் குணங்கள் பகிரங்கமாய் வெளியாகாமல் எங்ஙனம்

பரிபூரணத்தை யெய்தல் சாலும் ? இவ்விஷயத்தின் பக்கலிலே தான் மேற்கூறிய திருவாக்கியங்களில் எல்லாம்வல்ல இறைவன் நமது கவனத்தை ஈர்த்திருக்கிறான். நம்முடைய சன்மார்க்க ஒழுக்கங்கள் சார்பான சித்தாந்தங்க ளனைத்தும், சங்கடங்களைக் கொண்டும் சோதனைகளைக் கொண்டும் ருஜுப்பிக்கப்பட்டா லல்லாது அனுஷ்டான பூர்வமான காரியங்களாக மாறுவதில்லை. அறிவிற்கு அனுஷ்டான ஞானத்தை ஊட்டுதற்கு அத்தகைய சங்கடங்களும் சோதனைகளும் அத்தியாவசியமாகவே காணப்படா நின்றன. மேலே கூறப்பட்டுள்ள திருவாக்கியத்திற் கொப்பான மற்றோர் ஆயத்தை நாம் இவ்வாறு மொழிபெயர்த்துக் கொள்ளலாம்: لتبلون في اموالكم وانفسكم ولتسمعن من الذين اوتوا الكتاب من قبلكم ومن الذين اشركوا اذى كثيرا وان تصبروا وتتقوا فان ذالك من عزم الامور "நீங்கள் நிச்சயமாகவே உங்களுடைய பொருள்களைக் கொண்டும் உயிர்களைக் கொண்டும் சோதிக்கப் படுவீர்கள்; (அஃதாவது, உங்கள் முதல்களும் கொள்ளையிடப்பட்டு உங்கள் உயிர்களும் பறிக்கப்படும்.) அதுவேயுமன்றி, பற்பலவிதமான துன்பங்களை யெல்லாம் யூதர்கள் மூலமாகவும் கிறிஸ்துவர்கள் மூலமாகவும் வேறுவிக்ரஹத் தொழும்பர்கள் மூலமாகவும் நீங்கள் செவியேற்பீர்கள்; (அஃதாவது, நீங்கள் அவர்கள்கரங்களில் துன்புறுவீர்கள்.) ஆனால், நீங்கள் பொறுமையுடனே யிருந்துகொண்டு அசப்பியமான வார்த்தைகளையும் விட்டுவிடுவீர்களாயின், இதுவே ஒருபெரிய உன்னதச் செய்கையாகும்"-(3: 185). இந்தத் திருவாக்கியங்களெல்லாம், அறிவென்பது அனுபவ பூர்வமான அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரப்பட்டா லல்லாது பரிபூரண முள்ளதாக

வும் பயன் தரக் கூடியதாகவும் இருக்கமுடியா தென்பதையே முடிவாக ருஜூப்பித்து நிற்கின்றன. அறிவென்பது அனுஷ்டானத்தில் மிகநன்றாகக் கொண்டு வரப்படும் போதுதான் ஒரு பிரயோஜனகரமான ஆசீர்வாதமா யிருக்கின்றது; ஆனால், அனுஷ்டான பூர்வமான செய்கையின் எல்லைக்குள்ளே நுழைந்து செல்லாத எத்தகைய அறிவும் எப்படிப்பட்ட பிரயோஜனத்தையும் அளிக்கக் கூடாததாகவே அமைந்து கிடக்கின்றது.

அறிவென்பதை அனுஷ்டானத்தில் கொண்டு வரும் பொழுதுதான் மனிதன் தன்னுடைய ஞானத்தில் 'ஹ:க்:குல் ய(க்):கீன் என்னும் நிலைமையை அடைந்து விடுகிறான்; என்னெனின், ஒரு பொருளின் நிச்சயமான அறிவென்பது, அதன் ஒவ்வொரு பகுதியும் அனுபவ பூர்வமான அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரப்பட்டா லல்லாமல் ஒருகாலும் முற்ற உணர்ந்து கொள்ளப் படுவதில்லை. இதுதான் இஸ்லாத்தில் நிகழ்ந்திருக்கும் விஷய மாகும். :குர்ஆன் ஷரீ'பில் கூறப்பட்டிருக்கும் கட்டளைக ளனைத்தும் நபிகள் நாயகத்தின் உயிர் வாழ்க்கையிலும், அப் பெருமானாரின் தோழர்களுடைய உயிர் வாழ்க்கையிலும் அனுபவ பூர்வமாகவே மிக அழகாக அனுஷ்டிக்கப்பட்டு உதஹரித்துக் காண்பிக்கப் பட்டிருக்கின்றன; இக் காரணத்தினாலே அவர்களெல்லாரும் உண்மையான ஞானப் பிரகாசத்தையே அடைந்திருந்தார்கள். இத்தகைய கருத்து நிறைவேற்றப் படும் பொருட்டே எல்லாம் வல்ல இறைவன் நபிகள் திலகத்தின் ஜீவித காலத்தை இரு பெரும் பிரிவாகப் பிரித்து வைத்திருக்கிறான்: அவை, இடுக்கண்களும் இடையூறு

களும், கஷ்டங்களும் நிஷ்டூரங்களும் நிறைந்த காலம்; வெற்றியும் க்ஷேமமும் ததும்பிய காலம் என்பனவாம். ஒழுக்கத்திற்குரிய இரு வகை மனப் பான்மைகளை, அவை யாவன, துன்பப்படும் காலத்திலே வெளியாக வேண்டி யிருந்த குணாதிசயங்கள், ஜய பேரிகையின் போதும் க்ஷேமத் தின்போது மல்லாது மற்றைக் காலங்களில் வெளிப்படுத்த முடியாத குணாதிசயங்கள் ஆகியவைகளை வெளிக்குக் கொணருவதற்கு அப் பெருமானாருக்கு வேண்டிய சந்தர்ப் பங்களை அளித்தற் பொருட்டே அவ்வாறு அவ்வாழ்க்கை யின் காலம் பகுக்கப்பட்டிருந்தது. இவ்வாறாக நபிகள் திலகத்தின் சன்மார்க்க குணாதிசயங்க ளனைத்தும் அனுஷ் டான பூர்வமென்னும் பரிசோதனையின் கீழே கொண்டுவரப் பட்டே பரீக்ஷிக்கப் பட்டன; இதனால்தான் நபிகள் திலகம் அவர்கள் மக்காவில் 13 ஆண்டுகள் மட்டும் சகிக்கொணுக் கஷ்ட நஷ்டங்களுள் சிக்குண்டவர்களாய்க் காணப்படுகின்றார் கள். அப் பெருமானாரின் அவ்விரு வகைப்பட்ட வாழ்க்கை யின் நிலைகளும் எல்லாவிதமான உயரிய சன்மார்க்க குணங் களையும் மகா உன்னதமான உச்ச ஸ்தானத்திற்கு உயர்த்திச் செல்லுதற்கு வேண்டிய அவகாசங்களை அளித்து நின்றன. அம்மகானுபாவர் அப்பொழுதெல்லாம் நடாத்திவந்த உயிர் வாழ்க்கையின் நிலைமைகளை நீங்கள் ஊன்றிப் படிப்பீர்க ளாயின், நபிகள் நாயகமவர்களால் அக்காலத்திலே வெளிக் காட்டப்படாத எந்தவிதமான சிறந்த குணத்தையும் சன் மார்க்கர்களால் கஷ்ட காலங்களில் வெளிக்காட்டப்படக் கூடியதென்று நிச்சயமாகவே அறிந்துகொள்ள மாட்டீர்கள். ஆண்டவன்மீது அவர்கள் வைத்திருந்த ஆணித்தரமான

நம்பிக்கை, எப்படிப்பட்ட மாபெரும் பொறுமையற்ற தன்மையினின்றும் விலகிப் பொறுத்திருத்தல், அவர்களுடைய சாந்தமான களங்கமற்ற தன்மை, அவர்களுடைய மேன்மையான கண்ணியம்மிக்க நடையுடை பாவனைகள், தங்கள்பால் ஒப்படைக்கப்பட் டிருந்த கடமைகளை நிறைவேற்றி வைப்பதில் அவர்களுடைய தளராத ஊக்கமும் உலையாத சுறுசுறுப்பும், அவர்களுடைய விடாக் கடைப்பிடியும், தங்கள் பகைவர்களைக் கண்டு கிஞ்சித்தும் அஞ்சாதிருத்தற்குரிய நெஞ்சுடைமையும், இன்னம் இவைபோன்ற வேறு பல சன்மார்க்க சத்தொழுக்கங்களும், இவையனைத்தும் மகா கொடிய சோதனைகளின்போதும் இடுக்கண்களின் போதும் அவர்களுக் கிருந்துவந்த ஓர்ப்பையும் கடைப்பிடியையும் எண்பித்தற்குரிய மகாபெரிய அற்புதங்களா யிருந்தனவென்று அக்கால எதிர்மத வாதிகளையும் அழுத்தமாக நம்பும்படி செய்துவிட்டன ; அவ்வெதிரிக ளெல்லாரும், அப் பெருமானாருக்கு ஆண்டவன்மீ திருந்துவந்த ஆழ்ந்த நம்பிக்கையையே இது குறித்துக் காட்டுகிற தென்றும் எண்ணத் துணிந்துவிட்டார்கள்.

அதன் பிறகு நபிகள் நாயகத்தின் மதீனு வாழ்க்கையானது ஆரம்பமாயிற்று; அதுதான் ஜயகரமாகவும், வெற்றிக் கொடிநாட்டியதாகவும், க்ஷேமத்திற் குரியதாகவும், அப்பெருமானாரின் இரண்டாவது விதமான குணாதிசயங்களை வெளியிற் கொணரக் கூடியதாகவும் அமைந்து கிடக்கின்றது. துன்பம் இழைத்தவர்களை மன்னித்தல், தயாளகுணம், தானதருமம், தைரியம் ஆதியவை யெல்லாம் இப்பகுதியில் மிக நன்றாக அனுஷ்டிக்கப்பட்டு வந்ததனால், அவற்றினைக்கண்ட எண்

ணிறந்த எதிர்மதவாதிக ளெல்லாம் இஸ்லாத்தில் வந்து சேர்ந்து கொண்டு விட்டார்கள். அவர்களைத் துன்புறுத்தி வருத்தியவர்களையெல்லாம் தாராளமாக மன்னித்து விட்டார்கள்; அவர்களை மக்காவைவிட்டு வெளிக்கிளப்பிய மனிதர்களுக்கெல்லாம் அபயம் அளித்தார்கள்; அவர்களுள் ஏழைகளா யிருந்தவர்களைப் பணக்காரர்களாக்கி விட்டார்கள். தங்களுடைய மகா பொல்லாத பகைவர்களை யெல்லாம் அவர்களுடைய உயிர்களனைத்தும் இவர்களுடைய தாக்ஷண்யத்திலே சிக்கிக்கொண் டிருந்தபோதும் அடியோடு மன்னித்து விட்டார்கள். நபிகள் பெருமானால் உதஹரித்துக் காண்பிக்கப்பட்டு வந்த தெய்விக குணங்களைக் கண்டே இவற்றினுக்குரியார் ஆண்டவனிடத்தி லிருந்தல்லாமல் வேறு விதமாக அவதரித்திருக்க முடியாதென்றும், இவர்கள் ஓர் உண்மையான சன்மார்க்க ராகவேதான் இருக்கவேண்டுமென்றும் அந்த அரபிகளெல்லாரும் நம்பத் துணிந்துவிட்டார்கள். அவர்களுக் கிருந்துவந்த அடக்க முடியாத அசூயைகளனைத்தும் இப்படிப் பட்ட உயரிய சற்குணங்களால் ஒரே விநாடியில் மகா நேசமுள்ள நட்புரிமையாக மாற்றப்பட்டு விட்டன.

எமது வள்ளல்ஸல் அவர்களினின்றும் வெளியான இத் தன்மைத்தாய அரும்பெருங் குணநிதி சயங்களுள் ஒன்று இவ்வாறு :குர்ஆன் ஷரீ'பிலே வருணிக்கப்பட்டுள்ளது: قل ان صلاتي ونسكي ومحياي ومماتي لله رب العلمين " 'என்னுடைய தொழுகைகளும், என்னுடைய தியாகமும், எனதாருயிரும், எனது மரணமும் ஆகியவெல்லாம் சர்வலோக ரக்ஷகனுகிய அல்லா(ஹ்)வுக்கே உரியனவாகும்' என்று

அவர்கட்குக் கூறக் கடவீர்''—(6: 163). அஃதாவது ஆண்டவனுடைய மேலான பெருமையைப் பஹிரங்கப் படுத்தற்கும், மனிதவர்க்கத்தின் சுகத்திற்காகவும் நன்மைக் காகவும், அஃதாவது, அப்பெருமானுரின் மரணத்தைக் கொண்டு அம் மனிதர்கள் உஜ்ஜீவிப்பான் வேண்டி அப் பரமாத்மாவானவர் அவ்வாறு ஒழுகிவரல் வேண்டும். இவ்விடத்தில் கூறப்பட்டுள்ள, அல்லா(ஹ்)வின் பாதையிலும் மனிதவர்க்கத்தின் நன்மையின் பொருட்டும் மரணமடைத லென்பதனுல், நபிகள் திலகம் அறிவில்லாத பைத்தியக்காரர் களே போன்று, தங்கள் உயிரையே தற்கொலை புரிந்து மாய்த்துக்கொள்வதால் ஏனையோருக்கெல்லாம் ஒருவிதமான நன்மை விளையுமென்று மனப்பிராந்தி கொண்டலைந்தார்க ளென்று தவருக எண்ணி விடுதல் கூடாது. ஆனல், இதற்கு மாருக நபிகள் திலகம் அத்தகைய தற்கொலை விஷயங்களை யெல்லாம் வெறுத்தே வந்திருக்கிருர்கள்; இப்படிப்பட்ட எண்ணங்களை வைத்துக்கொண் டிருப்பவன் ஒரு மகா பொல்லாத குற்றத்தை இழைப்பவனு யிருக்கிருனென்று :குர்ஆன் ஷரீ'பும் கண்டித்து இவ்வாறு வெளிப்படையாகக் கூறியிருக்கிறது: ولا تلقوا بايديكم الى التهلكة " நீங்கள் தற்கொலை புரிந்து கொண்டு, உங்கள் கரங்களையே உங்கள் அழிவிற்குரிய ஆயுதங்களாக ஆக்கிக்கொள்ளாதீர்கள்"—(2:195). ஒருவன் தன் சொந்த மண்டையை உடைத்துக் கொள்வதால் மற்ெருரு மனிதனுடைய தலைவலியை நிவர்த் திக்க முடியாதென்பது ஒரு வெளிப்படையான உண்மை யாகும்; இவ்வாறு ஒருவன் செய்யத் துணிவனுயின், அவ ெனுரு முட்டா ளென்றே கருதப்படுவான். உதாஹரணமாக,

காலித் என்பவனுடைய உதரத்தில் உபாதை யுண்டு. ஜைத் என்பவன் அவன்மீது கொண்டுள்ள அன்புப் பெருக்கால் தன் தலையை உடைத்துக் கொண்டான் என்றால், ஜைத் என்பவன் காலித் என்பவன் விஷயத்தில் நன்மை யொன்றும் செய்துவிட வில்லை. ஆனால், தன் தலையை அறியாத்தனத்தால் உடைத்துக் கொண்டான் என்றுதான் கொள்ளப்படும். இங்ஙன மில்லாது, ஜைத் என்பவன் காலித் என்பவன் விஷயத்தில் உண்மையான அபிமானம் வைத்து, அவன் நோவினைக்காகச் சரியான மருந்துகளைக் கொண்டும் வைத்தியத்தின் சரியான முறையைக் கொண்டும் காரியங்களைச் செய்வானாயின், இவன் மகா உபகாரமான காரியத்தைச் செய்தவனாவான். இப்படி யில்லாது, ஜைத் தன் தலையைத் தகர்த்துக் கொள்வதால் காலிதுக் கொன்றும் பிரயோஜனம் உண்டாவதில்லை. ஆனால், தன்னுடைய அவயவங்களுள் பிரதமமான ஒன்றுக்கும் தன்னுடைய உண்மைக்குமே உபத்திரவத்தை உண்டுபண்ணிக் கொண்டவனா யிருக்கிறான். எனவே, சுருக்கிக் கூறுமிடத்து, அல்லா(ஹ்)வின் பாதையிலும் மன்பதையின் க்ஷேமத்தின்பொருட்டும் நபிகள் திலகம் உயிர்விடுதலென்பது, அப்பெருமானாரவர்கள் மனிதவர்க்கத்தின் நன்மையினிமித்தம் பரிந்தொழுகித் தங்கள் ஜீவதசையையே தத்தம் செய்திருந்தார்களென்பதையே தான் குறிக்குமென்பது வெளிப்படையாம்; அப்பெருந் தகையாளர் தங்கள் தொழுகையைக் கொண்டும், உபதேசப் பிரசாரத்தைக் கொண்டும், இறைஞ்சுதலைக்கொண்டும் மன்பதைகளின் உஜ்ஜீவிப்பிற்குரிய எல்லாவிதமான புத்திசாலித்தனமுள்ள முறைகளையும் மேற்கொண் டொழுகுவதுகொண்டும்,

அம்மனிதர்களால் இழைக்கப்பட்டு வந்த எல்லாவிதமான இன்னல்களையும் இடுக்கண்களையும் பொறுமையுடனே சகித்திருந்தது கொண்டும் தங்கள் உயிரையும் மற்றெல்லாவிதமான சுகசௌகரியங்களையும் இந்தப் பாதையிலேயே தியாகம் செய்திருக்கிறார்கள்.

நபிகள் திலகத்தின் ஜீவிதவாழ்க்கையை இவ்வாறு அர்ப்பணம்செய்த விஷயத்தைக் குறித்துக் :குர்ஆன் ஷரீ'பும் மற்றோரிடத்தில் இவ்வாறு கூறியிருக்கின்றது: لعلك باخع نفسك الا يكونوا مؤمنين "நன்னம்பிக்கை கொள்ளமாட்டோமென்று கூறும் இம்மனிதர்கட்காகத் துக்கத்தினாலும் கடிய ஊழியத்தினாலும் நீர் உம்மையே நசிக்கச் செய்துகொண்டு விடுவீர் போலும் "—(26:3). فلا تذهب نفسك عليهم حسرات "மேலும் சத்தியத்தை அங்கீகரிக்க மாட்டோமென்று மறுக்கும் இம்மக்களுக்காக நீர் நமது ஆன்மாவைத் துக்கத்தில் போக்கிக்கொண்டு விடுவீர்போலும்"—(35:8). ஆதலின், ஒருவர் தமதுயிரை மக்கள்களுக்காகத் தியாகம் செய்தற்குரிய மார்க்க மென்னப்படுவது, அன்னவர்களின் நிலைமையை முன்னேறச் செய்தற்குரிய எல்லா விதமான ஏற்பாடுகளையும் மேற்போட்டுக்கொண்டு, அவர்களுடைய க்ஷேமத்தின் பொருட்டுச் சகலவிதமான சங்கடங்களையும் கடுமையான ஊழியங்களையும் எதிர்த்து நிற்பதாகும். பாபத்துள் ஆழ மூழ்கிப்போய்க் கிடக்கும் அல்லது குற்றத்துள்ளே சிக்குண்டுழலும் ஜனங்களுக்காகச் செய்யப்படும் மெய்யான தியாக மென்னப்படுவது அச் சீர்திருத்தக்காரர் தம்மையே தற்கொலை செய்து கொள்வது, அல்லது ஒரு சிறிது ஸ்ட்ரிச்னின் (எட்டிப் பாஷாணம்) உட்கொண்டு

விட்டு இவ்வுலகத்தை விட்டுச் சென்று விடுவது வெறும் முட்டாட்டனமே யாகும். இத்தகைய முட்டாட்டனமே வழிவிலகிச் சென்ற மானிடர்கட் கெல்லாம் ரக்ஷண்யம் கொடுக்கக் கூடுமென்று கருதத்துணிவது அந்த முட்டாட் டனத்தின் உச்சநிலை யாகும். இது பகுத்தறிவற்ற மூடத் தனத்தைச் சுட்டிக்காட்டாவிடினும், குணநிசயத்தின் ஒரு வகைப் பலஹீனத்தையும் மனோதிட மின்மையையுமே வெளிக்காட்டுகின்றது. திடசித்தமற்ற மனிதனே, தன்னால் எதிர்த்து நிற்க முடியாத சங்கடங்களைக் கண்டஞ்சி இவ் வாறு தன்னைத் தற்கொலை புரிந்துகொண்டு தப்பிக்கொள்ளப் பார்க்கிறான். அத்தகைய தற்கொலையானது பின்னர் எத் தகைய சாமர்த்தியத்தைக் கொண்டேனும் வியாக்யானம் செய்யப்பட்ட போதினும், அது திடசித்தமற்ற தன்மை யுடன்கூடிய ஒரு முட்டாட்டனமான செய்கை யென்பதில் மட்டும் சிறிதும் சந்தேகமே யில்லை.

இப்பொழுது, மேலான குணநிசயங்களை முழுக்க முழுக்க வெளிக்காட்ட வேண்டுமாயின், ஒரு மனிதன் நல்ல விதமான நிலைமை கெட்டவிதமான நிலைமை ஆகிய இரண்டு விதமான நிலைகளிலும் நுழைந்து வந்திருத்தல் வேண்டும். அவன் எப்பொழுதும் துன்புறுத்தப்பட்டும், இடுக்கண்களுக் கும் இடையூறுகளுக்கும் அடிமையாக்கப்பட்டுமே வந்து, தன்னுடைய எதிரிகளின்மீது பழிதீர்த்துக் கொள்ளுதற்குரிய சந்தர்ப்பத்தை ஒரு பொழுதும் அடையப் பெற்றிரானாயின், அவன்பால் தீமைகளை மன்னித்தற்குரிய மனப்பான்மை யிருக்குமென்று நம்மால் கூறுவது முடியாது. அவனுக்குத் தன் எதிரிகளின்மீது பழிதீர்த்துக் கொள்ளக்கூடிய சக்தி யிருந்

திருக்குமாயின், அவன் என்ன செய்திருப்பானென்று ஊகித்துணர்தல் சாலாது. ஆகலின், ஒருவன் உயர்தரமான குணாதிசயங்களை அடையப்பெற்றிருந்தானென்று தெரிந்துகொள்வதற்கு, அவனுடைய பகைஞர்களால் பலவழியாலும் துன்புறுத்தப்பட்டு அவர்கள்மீது யாதொருவிதமான சக்தியும் அடையப் பெறாதபோது அவன் சாந்த குணத்தையும் சகிப்புத் தன்மையையுமே காண்பித்து வந்தானென்று கூறுவதுமட்டும் போதாது; ஆனால், அப் பகைஞர்கள்மீது அவனுக்கு முழு வெற்றியும்கிடைத்து, அவர்களெல்லாரும் அவனது தாக்ஷிண்யத்திற்கே முழுதும் கட்டுப்பட்டு நிற்கும் சந்தர்ப்பம் வாய்த்து, அதுசமயம் அவன் அவர்களனைவரையும் தாராளமாக மன்னித்து மிருத்தல் வேண்டும். அவன் யுத்தகளத்திற்கு எப்பொழுதுமே சென்றிரானாயின், அவனது மனோதைரியம் எத்துணையென்று கண்டுபிடிப்பது முடியாது; அவன் அவ்வாறு சென்று யுத்தங்களில் கலந்துகொள்ள நேர்ந்துவிடுமாயின், அவன் அதுகாலை யுத்த வீரத்திற்குரிய மனோதைரியத்தை வெளிக்காட்டி யிருப்பானா? அல்லது வெறுங் கோழையாகப் போயிருப்பானா? என்று நம்மால் கூறிவிடுதல் சாலாது. அவனுக்கு ஐசுவரியப் பெருக்கம் ஒருகாலும் ஏற்பட்டிராவிடின், அவ்வாறு ஒருசமயம் நிதிக் குவியல் கிடைத்திருக்குமாயின் அதுபோது அவன் அத் திரவியத்தை யெல்லாம் திரட்டி வைத்துக்கொண்டு ஓர் உலோபியா யிருந்திருப்பானா? அல்லது அவற்றினைத் தானதர்மங்களில் செலவிட்டிருப்பானா? என்று தீர்மானிப்பதும் கடினமாகும். ஆனால், ஆண்டவது அருட்பெருஞ்சோதி அவனது திருத் தூதருக்கு, சாந்தம் தர்மம் தைரியம் மன்னிப்பு நியாயம் முதலிய

எல்லாவிதமான சற்குணங்களையும், தேச சரித்திரங்களில் வேறெங்குமே காணமுடியாத அத்துணைப் பெரிய அழகிய நல்ல முறையிலே வெளிக் கொணருதற்குரிய அத்தியாவசிய மான சந்தர்ப்பங்களை யெல்லாம் அளித்துதவி யிருக்கின்றது. இதனால்தான் எமது நபிகள்ஸல் அவர்கள் இரண்டுவிதமான குணத்தையும் காலத்தையும் பரிபூரணமாய்ப் பெற்றிருந்தார் கள் என்று கூறுகிறோம். அஃதாவது, எளிமையையும் வலிமை யையும், ஆதரவற்ற தன்மையையும் அதிகாரத்தையும் இவ்வுல கில் நன்கு நிரூபணம் செய்து சென்றார்கள். சுருக்கிச் சொல்லு மிடத்து, மேலான சற்குணங்கள் எத்தனையுளவோ அத்தனை யும் நமது நபிகள் திலகத்தி னிடத்திருந்தும் அததற்குரிய சந்தர்ப்பத்தில் வெளியா யிருக்கின்றன வென்றே கூறி யமைதல் வேண்டும்.

இஸ்லாத்தை இங்கில்லாதவாறு ஒழித்துவிடுவ தென்றே கங்கணம் கட்டிக்கொண்டும், யாதொரு குற்றமு மிழைக்காத முஸ்லிம்களைச் சற்றும் இரக்கமில்லாது ஹதம் செய்து கொண்டும், அல்லது சகிக்கமுடியாத ஹிம்ஸைகளையும் மாகொடிய துன்பங்களையும் அவர்களுக்கெல்லாம் அளித்துக் கொண்டும் இருந்துவந்த இஸ்லாத்தின் க்ஷமித்தற்கரிய பகைவர்கட்கு மன்னிப் பென்பது கொடுக்கப்பட வில்லை யென்பது வாஸ்தவமே யாகும். அவர்கட்கும் மன்னிப் பளிப்ப தென்பது சன்மார்க்கர்களையே அடியோடு அழித்து விடுவதாகவே அர்த்தப்பட்டிருக்கும். நபிகள் நாயகத்தின் ஏவலின்மீது முஸ்லிம்களால் நிகழ்த்தப்பட்ட யுத்தங்களின் நோக்கமெல்லாம் இரத்த வெள்ளத்தை ஓட்டுவதாகமாட்டாது. அவர்கள் தங்களுடைய தாய் தந்தையர்களுடைய இல்லங்களை

விட்டு விரட்டப்பட்டு, வேற்றார் சென்று புகலிடம் தேடிக் கொள்ளுமாறு துன்புறுத்தப்பட்டார்கள்; பல குற்றமற்ற முஸ்லிம் ஆண்களும் பெண்களும் அகாரணமாகக் கொடுங் கொலை புரியப்பட்டே போயினர். ஆனால், அவர்களுடைய இரக்கமற்ற துன்பங்களனைத்தும் அம்மட்டோடு நின்றுவிட வில்லை. அன்றியும் இஸ்லாத்தின் போதனையையும் இதன் பிரசாரத்தையும் பற்பல துறைகளிலும் நின்று தடுத்துக் கொண்டுமிருந்தனர். எனவே, இறைவனது தற்காப்புக் கட்டளைக்குக் கீழ்ப்படிந்தே, இஸ்லாத்தை வேருடனே கல்லி யெறிந்துவிடுவ தென்று தீர்மானித்து வாளை யுருவி நின்ற மனிதர்களுக் கெதிராகவே வாளை யுருவுமாறு அனுமதி யளிக்கப்பட்டது. ஆதலின், இத்தகைய யுத்தங்களின் கருத் தானது, முஸ்லிம்களைத் துன்புறுத்தி வந்த மனிதர்களால் சிந்தப்பட்டுவந்த உதிரத்தைத் தடுப்பான் வேண்டியே அவ் வாறு அனுமதி யளிக்கப்பட்ட தென்பதாகும். அப்படிப் பட்ட சந்தர்ப்பங்களில் இஸ்லாத்திற்கு இன்னல் விளைத்து வந்த மனிதர்களின் இடுக்கண்களைத் தடுத்து நிற்பான் வேண்டி இம்மார்க்கம் தன்னையே தற்காத்திராமற் போயிருக்கு மாயின், அதன் பயனாக ஆணும் பெண்ணுங் கலந்த அனேக நூற்றுக் கணக்கான குற்றமற்ற மனிதர்கள் கொல்லப்பட்டே போயி ருப்பார்கள்; அதனால் இஸ்லாம் அவ்வாரம்ப காலத்திலேயே அடியோடு அழிக்கப்பட்டே போயிருக்கும்.

நம்முடைய எதிர் கக்ஷிக்காரர்கள் இழைத்துவரும் பிழையானது, அல்லாஹுத் தஆ'லாவின் அரிய குணாதி சயங்களைத் தவறாக உணர்ந்துகொண் டிருப்பதே யாகும். ண் ஆடவனால் வெளியிடப்பட்டுள்ள சட்டதிட்டங்கள் எக்

காரணத்தை முன்னிட்டும் எந்தவிதமான சந்தர்ப்பத்திலும் தீமையை எதிர்க்குமாறேனும், தீமையிழைப்போரைத் தண்டிக்குமாறேனும் ஞானேதய வெளிப்பாடு அனுமதியளிப்பது கூடாதென்றும், ஆண்டகையின் அன்பென்பதும் இரக்கமென்பதும் சாந்தகுணம் என்னும் தோற்றத்திலல்லாது வேறுவிதமாக இல்ஹாம் வெளிப்படக் கூடாதென்றும் அன்னவர்கள் எண்ணியிருக்கின்றார்கள். எல்லாம்வல்ல இறைவன் மாட்டுக் காட்டப்படுதற்குரிய மகா மேலான பக்தி விசுவாசமென்பது அவர்கள்பால் அவனுடைய பரிபூரண குணநிசயங்களனைத்தையும் பணிவு தாழ்மை என்னப் படும் இரண்டுவிதக் குறுகிய நோக்கங் கொண்ட எல்லைக் குள்ளேயே அடக்கி வைப்பததாகவே காணப்படாநின்றது. ஆழ்ந்து கவனிப்போருக்கு இஃதொரு பெரிய தவறேயாகும் என்பது வெளியாகும். இறைவனது இயற்கைச் சட்டமென்னப்படுபவை, அவை மனித வர்க்கத்திற்கொரு தயாளமாகவே அமைந்திருந்தபோதினும், எப்பொழுதுமே ஒரு சாந்தமான மிருதுவான முறையிலேதான் வெளிப்படுத்தப் படுவனவல்ல வென்பதைச் சுயமே நிதானித்துப் பார்க்கக்கூடிய எந்த மனிதனும் உணர்ந்து கொள்ளுதல் சாலும். ஆண்டவனாகிய ஆயுர்வேதன் தனக்குரிய எல்லையில்லாக் கருணையைக் கொண்டே நமக்குச் சில சமயங்களில் இனிய ஷர்பத்தைப் பருகக் கொடுக்கின்றான்; மற்றுஞ் சில சமயங்களில் அவனுடைய இரக்க சுபாவத்தைக் கொண்டே வேறு 'கசப்பான' மருந்தையும் அருந்தக் கொடுக்கின்றான். இவ்விரண்டுமே அவனுடைய கருணைப் பிரகாசத்தின் வெவ்வேறுவிதமான தோற்றங்களாயிருக்கின்றன.

மேலும் ஆண்டவன் அருளானது, மக்கள்பால் எங்ஙன மிருக்கிற தெனின், மனிதர்களாய நாம் நமது எல்லா அவயவங்களின்மீதும் பொதுவாகக்கொண்டிருக்கும் ஆர்வமே போலத்தானிருக்கிறது. எனவே, மனிதர்களாய நம்முள் ஒவ்வொருவரும் அவரவரின் எல்லா அங்கங்களிலும் பரிபூரண அன்பும் ஆர்வமும் கொண்டிருக்கிறார்க ளென்பது வெளிப்படை. ஆகலான், எவரேனும் ஒருவர்மீ துள்ள கேவலம் உரோமமொன்றை வேறொருவர் அகாரணமாய் ஸம்ஹரிக்கத் துணிவராயின், அவர்மீது அடக்கமுடியாச் சினமுண்டாகின்ற தென்பதும் வெள்ளிடைமலை. மேலும் நாம் நமது சரீரத்தின்மீது பொதுப்படையாக அன்புள்ளவர்களா யிருக்கின்றோ மென்றாலும், இவ்வன்பானது உடம்பின் எல்லா அங்கங்களுக்கும் அணுக்களுக்கும் பங்குசெய்யப்பட்ட தாகவேதா னிருந்து வருகின்றது. இக்காரணம் பற்றியேதான், நம் தேகத்தின் மீதுள்ள ஒரு சிறிய உரோமமும் அன்புக்குரியதா யிருந்துவருகின்றது. இவ்வுறுப்புக்களுள் ஒன்றுக்கும் நோவினை யுண்டு பண்ண நாம் விரும்புவதில்லை. விஷயம் இங்ஙனமாயினும் நம்முளடங்கிக் கிடக்கும் அங்கங்களெல்லாம் சமத்துவமான ஒரே விதத்தில் அன்பைக் கொண்டில்லை யென்பதும் வெளிப்படை. ஆனால், சரீரத்தின் சில உயர்வான அங்கங்கள் மற்றெல்லா உறுப்புக்களைக் காட்டினும் நம்மிடம் மகா அன்பையும் ஆர்வத்தையும் பெற்றுக்கொண் டிருக்கின்றன வென்பதை நாம் சொல்லவேண்டிய தில்லை. என்னெனின், குறிப்பிட்ட ஓர் அங்கத்தைக் காட்டினும் பூரணமாக தேகம் பொதுவாய் நம்மிடம் அதிக அன்பைக் கொண்டிருக்கிற தென்பதை யாரே மறுக்கவல்லார்? உதாஹரணமாக

மனித தேகத்துக்கோர் ஆபத்து வந்துவிட்டதென்று வைத்துக் கொள்வோம். இவ்வபாயம் பிரதம உறுப்பொன்றோ அல்லது சாதாரண ஓர் அங்கமோ காயப்படுவதனாலோ அல்லது துண்டிக்கப் படுவதனாலோ நீங்கிப்போம்; பின்னர் நமது மேனி பொதுவாய்ச் சுகத்துடனிருக்கும் என்று ஏற்படுமாயின், நம் பூரண தேகத்தைப் பாதுகாக்கும் பொருட்டு, ஓர் உறுப்பைக் காயப்படுத்தவோ துண்டிக்கவோ நாம் பின் வாங்குவதில்லை. எனினும், ஓர் அங்கத்தைப் பின்னப்படுத்துவது சம்பந்தமாய் நமக்கு வருத்தமில்லாமலுமில்லை. ஆயினும், இந்த ஓர் அங்கத்தால் தேகத்துக்கே முற்றிலும் இடையூறுண்டாகாம லிருக்க வேண்டுமென்னும் பெரிய நன்னோக்கங்கொண்டே இங்ஙனம் செய்யத் துணிகின்றோம். எனவே, இந்நாட்டம் கொடியதென்றோ கொடிய மனப்பான்மையைக் கொண்டதென்றோ சொல்வதுஇயலாது. எனவே,துஷ்டர்கள்சிஷ்டர்களைஅடியோடொழிக்கப் பார்த்து, பூமியின்மீது தீயவழியிலேயே நடந்துகொண்டு,குற்றமற்றவர்களின் குருதியை ஒட்டிக்கொண் டிருப்பதை ஆண்டவன் காண நேருங்கால், அப்படிப்பட்ட துஷ்டர்கள் நிக்ரஹம் செய்யப்பட் டொழிக்கப்பட வேண்டுவது அவ்விறைவனது காருண்யமாகவே காணப்படா நின்றது. இந்தக் காரியத்திற்காகத்தான் அவன் பூமியி லிருந்தேனும் வானத்தி லிருந்தேனும் துஷ்டர்களின்மீது தண்டனையை இறக்கிவைக்கிறான்; என்னெனின், அவன் இரக்க குணமுள்ளவனாயிருப்பதுடன் புத்திசாலியாகவும் இருக்கிறான். எனவே, எல்லா உலகங் காட்கும் இரக்ஷகனாகிய அல்லாஹுத் தஆலாவுக்கே எல்லாப் புகழும் உரித்தாகுக! الحمد لله رب العلمين



Printed at the Guardian Press, Ltd., Broadway, Madras—3/1933.

# பிழை திருத்தம்



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 19 | 2 | அதன | அதன் |
| 30 | 14 | வதர்க்கு | வதற்கு |
| 68 | 16 | யற்கை | இயற்கை |
| 69 | 10 | நிறைத்திருப்ப | நிறைந்திருப்ப |
| 72 | 8 | கொண்டவர்கள் | கொண்டவர்காள் |
| 77 | 16 | எதிர்ப்பார்ப்ப | எதிர்பார்ப்ப |
| 81 | 20 | நன்குணந்து | நன்குணர்ந்து |
| 85 | 10 | க்ஷாபானது | க்ஷீபானது |
| 88 | 16 | உணந்துகொள்ள | உணர்ந்துகொள்ள |
| 181 | 22 | செல்வதால் | செய்வதால் |
| 252 | 8 | படடுவந்த | பட்டுவந்த |
| 257 | 24 | தென்பாகும் | தென்பதாகும் |
| 322 | 27 | காண்பார்வை | கண்பார்வை |
| 340 | 26 | ஆண்டவது | ஆண்டவனது |